ஸ்ரீ:

# இப்புத்தகத்திலடங்கியவை.

ஸ்ரீ:

# பதிப்புரை.



செய்யுட்கின்றியமையாத குணாலங்காரங்களையும் சொற்பொருளணிகளையும் விரித் தினிதியாக்கப்பெற்றதும், இற்றைக்குப் பதினைன்கு வருடங்கட்குமுன் செந்தமிழ்ப்பிரசுரமாக முதன்முறை வெளியிடப்பட்டதுமான மாறனலங்காரம், முதற்பதிப்புப்பிரதிகள் முழுதும் செலவாய் விட்டமையாலும், மதுரைத்தமிழ்ச்சங்கத்தாரால் பண்டிதபரீக்ஷைக்கும் சென்னைச் சருவகலாசங்கத்தாரால் வித்வான் பரீக்ஷைக்கும் பாடமாக வைக்கப்பட்டிருத்தலாலும் இடையிடையே சிற்சில திருத்தங்களுடன் இதுபொழுது இரண்டாமுறை பதிக்கப்பட்டிருக்கிறது. இந்நூலின் பெருமை நூலாசிரியர் வரலாறு முதலிய பலவும் அடுத்துச் சேர்க்கப்பட்டிருக்கும் இதன் முதற்பதிப்பின் முகவுரை முதலியவற்றால் விளங்கும். இதன் முதற்பதிப்புக்குதவியாயிருந்த செந்தமிழுதவிப் பத்திராதிபர் திரு. கி. இராமாநுஜையங்கார் இப்பதிப்புக்கும் புரூப் முதலிய பார்த்துத் திருத்தங்கள் செய்தற்கு மிகவும் உதவிபுரிந்தமை பாராட்டற்பாலது.

இங்ஙனம்,

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்திராதிபர்.

பிறபாஷைகளிலில்லாத எண்ணிறந்த பலவேறுவகையான பாடல்களையும் பெயர்களையு முடையதாய்ச் செய்யுணடையிற் சிறந்துவிளங்குந் தமிழ்மொழிக்கண்ணே செய்யுளுக்கின்றியமையாத பொருள்யாப்பிலக்கணங்கள் பிறிதொருபாஷையிலிருந்து கொள்ளப்பெறாது தமிழுக்குரியவாய்த் தனியே சுயமாயிருக்கும்பொழுது அவற்றோடொத்த அணியிலக்கணப்பகுதிமட்டு மந்நியபாஷையிலிருந்து வந்ததாகச்சொல்லுவ தநாதரிக்கத்தக்கதே.

அன்றியும், திருவெங்கையுலாவில்,

"................... ........மல்லலுறச்
சந்திபொருத்தித்தருஞ்சீர்கெடாதடுக்கிப்
புந்திமகிழப்புதவணிந்தா—முந்தையோர்
செய்யுள்போற்செய்ததிருக்கோயில்"

என்றதனால், மனமகிழ்ந் ததிசயிக்கவல்ல சிறந்த அலங்காரங்களைப் பழமையானபாசுரங்களே யுடையனவென்றும், அப்பாசுரங்கள் தெய்வசாந்நித்தியம்பெறுதற்கு அலங்காரங்கள் உறுப்பாயமைந்துள்ளனவென்றும், ஆதலா லவை தேவாலயத்துக் குவமிக்கத்தக்கனவென்றும், நன்முறையே செவ்விதிற்செய்யப்பட்டகோயில்போல்விளங்குவதாற் பாசுரங்கள் செய்யுளெனப்படுமென்றும் ஆலங்காரிகசார்வபௌமரான சிவப்பிரகாசமுனிவரு மபிப்பிராயந்தந்துபோந்தனர்.

இதனால், கோயிலுள் நன்முறையானமைக்குங் குணாலங்காரம் (வடிவழகு) போலச் செய்யுளுள்ளும் நன்முறையானமைக்குங் குணாலங்காரங்களுண்டென்றும், கோயிலுள், தெய்வபிம்பம் நீபஜாலம் உத்ஸவபரிகரமுதலியவற்றானமைக்கும் பொருளழகுபோலச் செய்யுளுள்ளும் உவமை உருவகமுதலிய பொருள்வகையானமைக்கும் அர்த்தாலங்காரங்களுண்டென்றும், கோயிலுள் வர்ணவிசேஷங்களாலமைக்கும் சித்திரலாபங்கள்போலச் செய்யுளுள்ளும் வர்ண (அக்ஷர) விசேஷங்களாலமைக்கும் சப்தாலங்காரங்களுண்டென்றும், கோயிலுள் ஜீராவழி நிகழ்ந்தபடிவகையும் விகிருதரூபங்கள்போலச் செய்யுளுள்ளும் ஜீராவழி நிகழ்ந்தபடிவகையும் தோஷாலங்காரங்களுமுண்டென்றுங் குறிக்கப்படுகின்றன. இவையெல்லாம் முந்தையோர்செய்யுளிற் பல இடங்களிலுங் காணப்படுதலா லவற்றிற் கிலக்கணமில்லாதிருந்ததென்று சொல்வது

பொருந்துவதன்று. ஆதலால், ஆதியிற் செய்யுளிலக்கணமாக அகத்திய ராற்செய்யப்பட்டதொரு செய்யுளியல் தனியாயிருந்ததுபோல அலங்கார லக்ஷணமான அணியியல் என்னும் நூலொன்று தனியாயிருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது.

காலக்கிரமத்திற்றோன்றும் ஒவ்வொருவழி நூலும் முதனூலிலிருந்த முறையேகூறாது சிலபகுதியைத் தொகுத்தும், சிலபகுதியை விரித்தும், சிலபகுதியை வேறுபடுத்தியும், சிலபகுதியை யொழித்தும், வேறுசில பகுதியைப் புதிதாகச்சேர்த்துஞ் செய்யப்படுவ தியல்பாதலால், தொல்காப்பியத்தைக்கொண்டு அகத்தியமுதலிய முதனூல்களில் அணியிலக்கணமுறை இவ்வாறிருந்ததென் றறியமுடியாதிருக்கிறது. நன்னூலில் ஓரதிகாரம் அணியிலக்கணஞ்சொல்லப்பட்டிருந்ததாகப் பழையவுரை யொன்றால் ஊகிக்கப்படுகிறது. அதுவும் இதுகாறு மகப்படாமையா லதன்முறையும் விளங்கவில்லை. ஆயினும் பல்காப்பியத்தும் [illegible] அணிவகைபலவுந் தொல்காப்பியத்தும் பலபடியாகச்சொல்லப்பட்டுள்ளன. அவை, உவமவியலால் உவமவகையும், மெய்ப்பாட்டியலாற் சுவையணிவகையும் வெளிப்படையாக விரித்துரைக்கப்பட்டன.

ஒழிந்தன ஒருசில உத்திவகையினும், ஒருசில பொருள்கோள் வகையினும், வேறுசில வனப்புவகையினும், மற்றுஞ்சில வண்ணவகையினும், பின்னுஞ்சில குறிப்புவகையினும், பிறவும்பல சொன்முடிபிலக்கணங்களினும் அமைந்துகிடக்கின்றன. ஆயினு மிவற்றைப் பிறநூன் முடிந்தது தானுடம்படுதலென்னு முத்திபற்றித் தனியெடுத்தோதாது உவமையொன்றேகூறி யொழித்தனர்போலும்.

மத்தியகாலத்தமிழ்ப்பயிற்சி வடமொழிப்பயிற்சியுடன்கூடியிருந்தமையால், பொருள்பற்றியுணர்த்தகும் அணியிலக்கணங்களை எளிதின் வடமொழியிற்பயிலத் தமிழணியிய லருகியதுபோலும். இதற்கு இக்காலத்து ஆங்கிலக்கணிதமுறைப்பயிற்சியாற் றமிழ்க்கணிதமுறைப் பயிற்சி யருகியிருப்பது திருட்டாந்தமாகும்.

வடமொழிப்பயிற்சிகுன்றிய பிற்காலத்து, தொல்காப்பியத்துட் சொல்லப்பட்ட சில பழையதமிழிலக்கணங்களையே சந்தி, காரகம், தத்திதம், தாது, கிரியாபதம் என வடமொழிமுறைதழுவியமைத்தது போல, அணியிலக்கணமும், வீரசோழியமுடையாரால் ஓரதிகாரமாகத்

தொகுத்தும், தமிழ்த்தண்டியலங்காரமுடையாரால் ஒருதனிநூலாகச் சிறிது விரித்தும் வடமொழிமுறைதழுவி வரையப்பட்டிருக்கிறது.

அதுவும் நிரம்புதலின்மையால் அதனை நிரப்பவேண்டித் திருக்குருகைப்பெருமாள்கவிராயரென்னும் புலவர்பெருமானால், அந்நூலைப் பின்பற்றி அதன்கணில்லாதனவாய்ப் பழையவும் புதியவுமாகிய இலக்கியங்களிற்காணும் வேறுசில அணிகளையும்,¹ பிறிதொடுபடான்றன்மதங்கொளலாகச் சில அணிகளையுங் கூட்டித் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் இலக்கணங்கூறிச் சூத்திரங்களைப் பெருக்கி, தம்மாலும் பிறராலும் பாடப்பட்ட பிறகாவியச்செய்யுள்களுடன், கற்பவர்க்குப் பழந்தமிழிலக்கியப்பயிற்சியை எளிதிலுண்டாக்குவனவாய்ப் படிப்பவர்க்குத் தெவிட்டாதிருக்கும்படி வெவ்வேறுசுவையுடையவாயகப்பொருள் புறப்பொருட்டுறைகளையமைத்து மானிடப்பாடலை மறக்கும்படி இட்டதெய்வத்தினேத்துதலாய்ச் செங்கண்மால் கோயில்கொண்டெழுந்தருளியதிருப்பதிகளின்விஷயமாகவும், வேதந்தமிழ்செய்தமாறனென்னுந் திருநாமத்தையுடைய நம்மாழ்வார்விஷயமாகவும் தாமேசெய்த வேறுபலபாடல்களையுமுதாரணமாகச்சேர்த்து மாறனலங்காரமெனப் பெயரிடப்பட்டுத் தமிழ் வல்லார்க் கிந்நூல் வழங்கப்பட்டிருக்கிறது.

இந்நூலின்வரலாறு, நூலாசிரியர்வரலாறு, உரையாசிரியர்வரலாறு முதலியன விரிவுடைமையா லவற்றைத் தனியேயுணருமாறு மாறனலங்காரவரலா*றென்னும்பகுதி யமைத்துச்சேர்க்கப்பெற்றிருக்கிறது.

இந்நூல் தமிழ்ப்புலமையடைவோர்க்குப் பெரிதும் உபகாரமாகத் தக்கதாயிருந்தும் உயர்தரக்கல்விகற்பிக்குங் கலாசாலைகளில்லாமையாற் பயில்வோரும் பயிற்றுவோரு மின்றிப் பாவுதல்குன்றியிருந்தது.

மதுரைத்தமிழ்ச்சங்கஸ்தாபகரான ஸ்ரீமத் பாண்டித்துரைத்தேவரவர்களது நன்முயற்சியாற் சங்கத்துக்குவேண்டும் தமிழேடுகள்தேடும்

---

* இது இந்நூல் பிறந்த திருக்குருகூரிலே பிறந்துவளர்ந்து இப்பொழுது திருச்சி காஷனல்ஹைஸ்கூல்தமிழ்ப்பண்டிதராயிருக்கிற ஸ்ரீமத். ஏ. எம். சடகோபராமாநுஜாசாரியரால் நன்குவிசாரித்து விரிவாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டு முன்னமே மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பன்னிரண்டாம்வருஷக் கூட்டத்து வித்வத்ஸபையிற் படிக்கப்பட்டுச் செந்தமிழில் வெளியிடப்பட்டது.

பொழுது ஆழ்வார்திருநகரியில், தாயவலந்தீர்த்தான்கவிராயர்வீட்டி லிருந்து இதன் ஏட்டுப்பிரதியொன்று கிடைத்தது. அது தமிழ்கற்ப வர்க்குப் பெரிதுமுபகாரமாவதென்றுகருதிச் சங்கப்பிரசுரங்களுள் முதலிற் றொடங்கவேண்டியவற்றுளொன்றாக மதிக்கப்பட்டிருந்தது.

அப்பொழுது பரிசோதனைக்குப் போதுமான வேறுபிரதிகள் கிடையாதிருந்தமையாற் காலந்தாழ்க்கப்பட்டிருந்தது. பின்பு மற்றொரு குறைப்பிரதியும் சங்கத்துக்குக் கிடைத்திருக்கிறது. அது இன்னாரால் கொடுக்கப்பட்டதென்பது தெரியவில்லை.

செந்தமிழ்ப்பத்திராதிபத்தியப்பொறை சிறியேன்மீதேறியபின்பு அதன்பிரசுரத்துக் கவசியமாக இந்நூலெடுத்துக்கொள்ளவேண்டிய தாயிற்று. அப்பொழுது சங்கத்திலிருந்த பிரதிகளிரண்டையும்வைத்துக்கொண்டே யிடர்ப்பாடுற்றச்சிட்டுச் சிலபாரங்கள் வெளியிட்டுவருந்த எளியேன்மீ தன்புகூர்ந்து எனதுவேண்டுகோட்கிணங்கி மஹாமஹோபாத்தியாயர் ப்ரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களும், புதுக்கோட்டைக்காலேஜ் பிரின்ஸிபாலாகவிருந்த ஸ்ரீமத்-எஸ். இராதாகிருஷ்ணையர் B.A., F.M.U., அவர்களும் அருமையாயெழுதிவைத்திருந்த பிரதிகளையருளி யுபகரித்தார்கள். அவர்களது தாராளசிந்தை மிகவும் பாராட்டற்பாலது.

அப்பிரதிகளுள் மஹாமஹோபாத்தியாயரவர்களது பிரதி சிலபிரதிகளோ டொப்புப்பார்த்துப் பிரதிபேதங்குறிக்கப்பட்டதாயிருந்தது மிகவும் சாதகமாயிற்று.

அதன்பின்பு பாங்கிப்பேட்டை ஸ்ரீமத்-இலக்குமணப்பிள்ளையவர்களா லொருபிரதி கொடுக்கப்பட்டது.

ஆக நான்கு பூரணமானபிரதிகளையும் ஒரு குறைப்பிரதியையும் வைத்து மேலே பார்க்கும்பொழுது இதனுரையானது செப்பஞ்செய்யாது முற்படவரைந்தவரைவேபோல ஒருமுறைப்பாடின்றிச் சில இடத்துப் பதவுரையாகவும், சில இடத்துக் குறிப்புரையாகவும், சில இடத்து விரித்துரையாகவும், சில இடத்துக் கருத்துரையாகவும், சில இடங்களிற் பிரதீகங்காட்டியும், சில இடங்களி லவை காட்டாமலும், சில இடங்களிற் சொன்முடிபில்லாமலும், சில இடங்களிற் றிணை

துறைகளின்பெயரெழுதற் கிடம்விட்டும் மேற்கோள்களிற் சிலவற்றிற்கு ஆகரங்காட்டியும் பலவற்றிற்கு அவை காட்டாமலும் பிரதிகளெல்லாம் ஒரேபடியா யெழுதப்பட்டிருந்தன. பிழைபாடில்லாத பெரும்பாகங்களைப் பிரதிகளிலுள்ளவாறெழுதியும், சொன்முடிபு, பிரதீகம் இவையில்லாத இடங்களில் அவற்றையமைத்தும் சில முக்கியமானபிழைகளைத் திருத்தியும், திணை துறைகளின் பெயரெழுதாத இடங்களிற் புள்ளியொற்றியும் ஒருவா றச்சிடப்பட்டிருக்கிறது.

குளகவகையுள், கலாபம் அல்லது கீலாபகம் என்றுவழங்கத்தகும் பெயரை மூலத்துள்ளும் உரையுள்ளும் எல்லாப்பிரதிகளிலும் காபாலிக மென்றெழுதியிருந்தமையால் எழுத்துநிலைமாறி விகாரப்பட்டிருக்கலா மென்றெண்ணியிருந்தபடியே பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

அன்றியும், ஓரிடத்தெடுத்துக்காட்டிய இலக்கணமேற்கோளைப் பின்னும் பல இடங்களிற் காட்டியும், விரிக்கவேண்டாதசிலவிஷயங்களைச் சில இடத்து விரித்தும், விரிக்கவேண்டியவிஷயங்களை ஒ ரே ா வ ழி விரியாதுவிடுத்தும், எழுதியிருக்குமவைகளும் இருந்தபடியே பதிக்கப் பட்டிருக்கின்றன.

ஆயினும், முதலில் தற்சிறப்புப்பாயிரமென்று காட்டப்பட்டிருக்கும் ௫-பாடல்களில், ௪-ஆம்பாட்டின்முன் அவையடக்கமென்றும், ௫-ஆம் பாட்டின் முன் பனுவல்வாழ்த்தென்றும் எழுதிக்கொள்ளவேண்டும். இவற்றுள், "ஆக்கமுறக்காக்க" என்னும் முதலையுடையபாட்டு அதிக பாடமாயிருக்கிறது.

இந்நூலின் மூலசூத்திரங்களைப்பற்றி,

"பதிகம்பொதுவெழுபத்தொன் றிருபத்தொன்
றதிகபொருளூ ற்றிருபத்தைந்தா —முதுசொல்
வணியியலைம்பத்துநாலா தரவாமெச்சங்
கணியிருபத்தெட்டாகுங்காண்"

என ஒரு தொகைச்செய்யுள் இரண்டுபிரதிகளில்மட்டுங் காணப்பட் டது. அவற்றுள் ஒன்று மூலசூத்திரங்கள்மாத்திரம் எழுதியபாகமா யுள்ளது.

*இச்செய்யுளிற் காட்டிய தொகைகள் பதிகத்திற்கும், சொல்லணியியலுக்கும் பொருந்தவில்லை. மூலப்பிரதியில், சொல்லணியியலிற் சித்திரகவிகளைத்தொகுத்துக்கூறியசூத்திரத்தில் "இருபானாறும்" என்ற உம்மையாற்றழுவிய மாத்திரைச்சுருக்கமுதலிய ஆறினுக்கும் மூலசூத்திரங்கள் ஆறு காட்டப்பட்டிருக்கின்றன. அவை உரைப்பிரதிகளிற் காணப்படாமையாலும், உம்மையாற்றழுவியதா யுரையிற் காணப்படுதலாலும் உரையெழுதியபின்பு செய்துசேர்த்திருக்கவேண்டுமென்றும், இச்சூத்திரங்களையும் மூலத்துடன்கூட்டிப் "பதிகம்பொது" வென்னும் வெண்பா, பின்பு பாடப்பட்டிருக்கவேண்டுமென்றுந் தோன்றுகின்றது. ஆதலால் அவை அவ்வவ்விடங்களிற் சேர்க்கப்பெறாது கீழ்க்குறிப்பிற் காட்டப்பட்டுள்ளன. அவ்வாறையுஞ்சேர்த்து "முதுசொல்லணியியலைம்பத்துநா" லென்றும், பாயிரச்சூத்திரம் அறுபத்துநாலொடு, பாயிரவுரையிலும், பொதுவியலின்முதற்சூத்திரவுரையிலும் இந்நூலாசிரியர் கூறியதாக மேற்கோள்காட்டிய* "பொற்புறவிழுமிய," "கடவுள்வணக்கமும்," "உட்கோள்கண்ணழிப்பு" "கருத்துரைசூத்திரம்," "தொகுத்தசொற்றேறும்," "ஒலிகெழுசொற்பொருள்," "மனைதுறும்யாப்பின்" *என்னும் முதற்குறிப்புடைய சூத்திரங்களையுங் கூட்டிப் பதிகமெழுபத்தொன்றென்றும் எண்ணினர்போலும்.*

*சக்கரபெந்தமுதலிய சித்திராலங்காரங்களுக்கு மூலத்தாலும் உரையாலும் நன்குவிளங்காத சித்திரபத்திரங்கள் ஒருவாறு புதிதாகச்செய்து இறுதியிற் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சதுரங்கபெந்தத்தின்கதிவிவரமொன்றும் உரையிற்சொல்லப்படாமையாலும் விளங்காமையாலும், அதற்குச் சித்திரபத்திர மமைக்கப்படவில்லை. சூத்திரம், உதாரணம் முதலியவற்றி னிருப்பிடங்காணுமாறு முதற்குறிப்பகராதிகளும், விஷயசூசிகைமுதலியவு மெழுதிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.*

*இது முதற்பதிப்பாதலால் எனக்குத்தெரியாதுதவறியிருக்கும் பிழைகளைச் சுத்தப்பிரதிவைத்திருக்கும் பண்டிதசிரோமணிகள் கண்டு எனக்குத் தெரிவிப்பார்களாயின், அவைகளை மறுபதிப்பிற் றிருத்திக் கொள்ளவும், அவர்களுக்கு நன்றிபாராட்டவும் உபகாரமாயிருக்குமென் பதூஉம் அறியத்தக்கது.*

# முகவுரை

இப்புத்தகம் அச்சிட்டுவெளிவரும்படிக்குப் பிரதிகளளித்துதவிய மஹோபகாரிகளான ஆழ்வார்திருநகரித் தாயவலந்தீர்த்தான்கவிராயர் குடும்பத்தார்க்கும், மஹாமஹோபாத்தியாயர் ப்ரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களுக்கும், புதுக்கோட்டை மஹாராஜாகாலேஜ் பிரின்ஸிபாலாயிருந்த ஸ்ரீமத்-எஸ். இராதாகிருஷ்ணையர், B.A., F.M.U., அவர்களுக்கும், பரங்கிப்பேட்டை ப. அ. இலக்குமணப்பிள்ளையவர்கள் குடும்பத்தினர்க்கும் தமிழ்ச்சங்கத்தாரும், தமிழபிமானிகளும் நன்றிபாராட்டக்கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இந்நூற் பரிசோதனவிஷயமாகவும், அச்சிடும்விஷயமாகவும் சுறுசுறுப்பாயும் ஜாக்கிரதையாயுமிருந்து பிரதிகளையொப்புநோக்கியும், எழுதியும், பிழைதிருத்தியும், மேற்கோள்களைப் பிறநூல்களினின்று இடங்கண்டு தேடியெடுத்துக்கொடுத்தும், பிரதிகளிலில்லாத சித்திர பத்திரங்களை இவ்வாறிருக்கவேண்டுமென்று ஊகித்தெழுதிக்கொடுத்தும், உதவிபுரிந்துவந்த பத்திராதிபருதவி ராமாநுஜஐயங்காரதுவேலைத்திறமை பாராட்டற்பாலது.

இந்நூலையச்சிடுதற்குரியனென் றெளியேனைமதித்துத் தமிழுலகுக்குக் குற்றேவல்புரியும் பெருவாழ்வுகொடுத்த மதுரைத்தமிழ்ச்சங்கத்தார்க்கு நன்றிபாராட்டக்கடமைப்பட்டிருக்கிறேன்.

அலங்காரசாஸ்திரநிபுணர்களால் ஆராயத்தக்க இந்நூலை யளியேனும் அச்சிட்டுதவுமாறு அறிவாற்றலையளித்துத் தலைக்கட்டிய ஸர்வேசுவரன்றிருவருளைச் சிந்தித்து வந்தித்து வாழ்த்துவேனாக.

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்திராதிபர்.

ஸ்ரீ:

# மாறனலங்கார வரலாறு

அலங்காரமென்பது செய்யுளுக்கு அழகுசெய்யும் லக்ஷணங்களைக் கூறும் சாஸ்திரம். இவ்வலங்காரசாஸ்திரத்தை வடமொழியாளர் மிகவும் விரும்பிக் கற்பர். இந்தச் சாஸ்திரத்தின்பெருமை அக்நிபுராணத்திற் பேசப்பட்டுள்ளது. வாமநஸூத்திரம், காவ்யாதர்சம், ஸரஸ்வதீகண்டாபரணம், காவ்யப்ரகாசம், அலங்காரஸர்வஸ்வம், ரஸமஞ்சரி, ஸாஹித்ய தர்ப்பணம், ப்ரதாபருத்ரீயம், அலங்காரகௌஸ்துபம், சந்திராலோகம், குவலயானந்தம், சடவைரிவைபவதிவாகரம் (இது நம்மாழ்வார்விஷயமான வடமொழி மாறனலங்காரம்) முதலிய நூற்றுக்கணக்கான வடமொழி நூல்கள் அலங்காரத்தைப்பற்றிச்சொல்பவைகள். தமிழில் முதன்முதல் அணியைப்பற்றித்தெரிவிக்கும்நூல் தொல்காப்பியம். தொல்காப்பியர்கூறுவது உவமை ஒன்றுதான். அவர் அகத்திணையியலில் ஏனையுவமம் உள்ளுறையுவம மிவைகளை விளக்கி உவமவியலில் உவமத்தைத் தொழில், பயன், வடிவு, வண்ணம் எனப் பிரித்து விரித்தெழுதியிருக்கிறார். தொல்காப்பியர்காலத்து உவமையொன்றே அணியாகக் கருதப்பட்டது. பிற்காலத்தார் அதிலிருந்து பல அணிகள் கற்பித்துக்கொண்டனர். நச்சினார்க்கினியரும் உவமமொன்றனையே அணியாகக் கருதினர். இவர் தம் காலத்திற் பல அணிவிகற்பவேறுபாடுகளுடன் வெளிவந்த ஒரு அணிநூலைத் தமது தொல்காப்பியவுரையிற் குறைகூறுகின்றனர். இவர் உவமவிகற்பங்களுக்கு எடுத்துக்காட்டிய உதாரணச்செய்யுள்கள்சில, தண்டியலங்காரவுரையில் வேற்றுமையணி, தற்குறிப்பேற்றவணிமுதலியவைகளுக் குதாரணமாகக் காட்டப்பட்டிருக்கின்றன. நிரனிறை, சமம் முதலியவற்றை உவமத்தின்விகற்பமாயே கொண்டார் நச்சினார்க்கினியர். இப்படி உவமமே பலவணிகளினுற்பத்திக்குக் காரணமாயிருந்தது என்பதை வடமொழியாளரும் சம்மதிக்கின்றனர். அப்பையதீக்ஷிதர் தாமெழுதிய சித்திரமீமாம்ஸையென்னும் •க்ரந்தத்தில் இவ்விஷயத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார். அச்சுலோகம் வருமாறு:—

"உபமெகோெஸாஷ்டவாஸம்ப்ராஷ்ராதிருஷ்ஷிகாமைஷாநு ।
ஸஜாயிகாவ்யாஸம்மைநூதஜ்ஜீதவிதாமெஹதஃ ॥"

இதன் மொழிபெயர்ப்பு,

"உவமையென்னுந்தவலருங்கூத்தி
பல்வகைக்கோலம்பாங்குறப்புனைந்து
காப்பியவரங்கிற்கவினுறத்தோன்றி
யாப்பறிபுலவரிதய
நீப்பறமகிழ்ச்சிபூப்பநடிக்குமே" என்பதாம்.

இவ்வணியிலக்கணமானது தொல்காப்பியத்திற் பொருளதிகாரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அக்காலத்தில், தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள் என மூன்றுபாகமாகத்தான் பிரிக்கப்பட்டிருந்தது. "எழுத்துஞ்சொல்லும்பொருளுநாடிச், செந்தமிழியற்கைசிவணியநிலத்தொடு, முந்துநூல்கண்டுமுறைப்படவெண்ணி" என்னும் தொல்காப்பியப் பனம்பாரர்பாயிரத்தால், தொல்காப்பியத்திற்குமுதனூலும் இப்பாகுபாடேகொண்டிருந்ததெனத் தெரிகிறது. இறையனாரகப்பொருளுரையை யுற்றுநோக்கும்போது, 'யாப்பு', தனியுறுப்பாகக் கருதப்பட்டு, தமிழிலக்கணம் நான்குபிரிவாகக்கருதப்பட்டதென்று தோன்றுகிறது. அதன்பின்புதான் 'அணி' தனியுறுப்பாகக்கொள்ளப்பட்டு தமிழிலக்கணம், எழுத்து சொல் பொருள் யாப்பு அணியென ஐந்து பிரிவுடையதாக வகுக்கப்பட்டது. இவ்வைந்திலக்கணமும் ஒருங்கே கூறும்நூல்கள் வீரசோழியம், இலக்கணவிளக்கம், தொன்னூல்விளக்கம், முத்துவீரியம் என்பனவாம். இவை ஒவ்வொன்றிலும் அந்தந்தக்கிரமத்தில் அணியிலக்கணம் கூறப்பட்டுள்ளது. வீரசோழிய அணிகளுக்கு முதனூல் ஆசார்யதண்டியியற்றிய வடமொழிக் காவ்யாதர்சம். இலக்கணவிளக்கமுதலிய மற்ற இலக்கணங்களின் அணியிலக்கணங்களுக்கு முதனூல், தமிழ்த் தண்டியலங்காரமும் அதன் உரைகளுமாம்.

தனியாய் அணியிலக்கணமாத்திரங்கூறும் நூல்கள் அணியியல் அல்லது அணிநூல், தண்டியலங்காரம், மாறனலங்காரம் என்பன. இவற்றுள் அணிநூலைப்பற்றி விசாரிப்போம். யாப்பருங்கலவிருத்தியில் "உருவகமாதிவிரவியலீறவரும்........அலங்காரமென்பது அணியியலாதலின்" என்று கூறியிருப்பது தண்டியலங்கார அணிமுறையை

புக்குப் பொருத்தமில்லாததால் வேறு அணிநூலைக் குறித்ததாகவேண்டும். நேமிநாதவிருத்தியில், "புனையுறுசெய்யுட்பொருளையொருவழி, வினைநின்றுவிளக்கினது விளக்கெனப்படுமே" "முதலிடைகடையென மூவகையான" என்பன அணியியல் ஆகலின்" என்றுள்ளது. இதில் இரண்டுசூத்திரத்தாற் குறித்த விளக்கணி தமிழ்த்தண்டியலங்காரத்தில், தீபக மென்றபெயரால் ஒரேசூத்திரத்திற் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் இவ்விருத்திகாரர்குறித்த அணியியல் என்னும்நூல் தண்டியலங்காரத்தினும் வேறாகவேண்டும். நச்சினார்க்கினியர் தொல்காப்பியவுரையில் "இனி இவ்வோத்தினிற்கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையும் சொல்லதிகாரத்திலுள்ளும் செய்யுளியலுள்ளுஞ் சொல்லுகின்ற சில பொருள்களையும் வாங்கிக்கொண்டு மற்றவை செய்யுட்கண்ணே அணியாமென இக்காலத்தாசிரியர் நூல்செய்தாருமுளர்" எனக்கூறி அவ்வணிநூலுக்குத் தமது சம்மதமின்மையையும் தெரிவிக்கிறார். இவ்வாக்கியத்திலுள்ள விஷயம் வடமொழியிலிருந்துபெயர்த்த தண்டியலங்காரத்தைக் குறிக்காது வேறு அணிநூலையே குறித்ததாகவேண்டும். பரிமேலழகர் பக்ஷாந்தரமாய்க்கூறும் நுவலாநுவற்சி, ஒட்டு என்னும் பரியாயப்பெயர்கள் முறையே வீரசோழியத்திலும் தண்டியலங்காரத்திலும் காணப்பட்டபோதிலும் அவர் தன்மதமாகக்கூறிய பிறிதுமொழிதல் என்பது அணிநூலுட்கண்டதாகவிருந்தாலுமிருக்கலாம். இப்படியே வீரசோழியம், தண்டியலங்காரங்களுட்காணப்படாத சில அணிகளின்பரியாயப்பெயர் இவருரையிற் காணப்படுகின்றன. இன்னோன்ன காரணங்களால், தண்டியலங்காரத்தினும் வேறாய அணிநூல் அல்லது அணியிய லென்ற நூலொன்று இருந்து விழுந்திருக்கவேண்டுமென்றேற்படுகிறது.

ஆனால், தண்டியலங்காரத்திற்கே அணியியலென்னும்பெயர் இருந்திருக்கிறது. அணியியலென்றபெயருடன் அடியார்க்குநல்லாரும் மாறனலங்காரவுரையாசிரியரும் (மா-அ-சூத் 25-ன் கீழ்) எடுத்துக்காட்டியிருக்கிறமுறையே சூத்திரம் இரண்டு மொன்றும் தண்டியலங்காரத்துட் காணப்படுகின்றன. இத் தண்டியலங்காரச்சூத்திரங்கள் அணியியலென்னும்நூலிலிருந்து முன்னோர்மொழியாக எடுத்துத் தண்டியலங்காரத்துட் சேர்க்கப்பட்டிருக்கலாமென்று கருதுவதற்கு இடங்கொடுக்கின்றன.

இனி, 'மாறனலங்காரம்' என்பதைப்பற்றி விசாரிப்போம். மாறன் என்பது பாண்டியரைக்குறிக்கிற பழம் பொதுப்பெயர்களுள் ஒன்று; இங்கு ஆழ்வார்களுட்சிறந்த நம்மாழ்வாரைக் குறிக்கிறது. இவர் பாண்டியரது அரசாட்சிக்குட்பட்ட பொருநையாற்றின் அடைகரையாகிய திருவழுதிவளநாட்டுக்குரிய சிற்றரசர். மாறன், காரிமாறன், சடகோபன், திருவழுதிவளநாடன், பொருநற் (தாம்பர்ணி) சேர்ப்பன், பொருநற்சங்கணித்துறைவன், மகிழ்மாலைமார்பினன் முதலானபெயர்கள் இயல்பாயும், காரணம்பற்றியும் இவருக்கு வழங்கிவந்தனவென்று திருவாய்மொழியால் தெரிகிறது. இவர் பிறந்தபொழுதேதொடங்கித் திருமாலினிடத்துவிசேஷபக்தியுடையாராய் உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாங் கண்ணனேயென் றத்யவசித்துத் ததேகத்யானபராயிருந்து நான்குவேதங்களையும் திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி திருவாய்மொழி என்னும் நான்கு தமிழ்ப்பிரபந்தங்களாக லோகோஜ்ஜீவநார்த்தமாக வெளியிட்டருளினர். இவரை அக்காலத்திலிருந்த மதுரகவிமுதலான ப்ராஹ்மணசிரேஷ்டர்களும் பிற்காலத்துவந்த நாதமுனி, யாமுநாசார்யர், ராமாநுஜர் முதலான ப்ராஹ்மணசிரேஷ்டர்களும் ஆசார்யராகமதித்து நெஞ்சினும் விக்ரகரூபமாவெழுந்தருளப்பண்ணியும் ஆழ்வார்களுட் டலைமையானவராய்க்கொண்டு ஆராதித்துவந்தனர். வடநாட்டினும் துளசிதாசர்முதலானோரால், பாராட்டிப் பூசிக்கப்பட்டார் இவ்வாழ்வாரெனின், இவரைப்பற்றி நாம் அதிகமாவெழுதவேண்டியதில்லை. இந்நூலாசிரியர் இவ்வாழ்வாரிடத்து ஏழாட்காலும்பழிப்பிலாத் தொண்டுபூண்டு மறந்தும் புறந்தொழாதவாவிசத்துட்பிறந்த வைணவமதாபிமானமுள்ளவரானபடியினாலே, தண்டியலங்காரமுதலியநூல்கள் அரசர் முதலியவர்களைப்பற்றிக்கூறி லௌகிகதிருஷ்டாந்தங்களுடையனவாயிருப்பதுகொண்டு, தாமியந்த அலங்காரநூலையிற்றி இதை ஆழ்வார்க்குச் சமர்ப்பித்து உதாரணங்களை ஆழ்வார்விஷயமாகவும் திவ்யதேசத்து எம்பெருமான்கள்விஷயமாகவும் வைஷ்ணவபரமாய்ச் செய்து சேர்த்தருளிக் 'காரிதந்தருள்கலைக்கடலியற் பெயர்புனைந்து' (மா-அலங். பா) 'திருமகிழ்ப்பாமதேசிகன்பெயரால்' (மா-அகப்) இந்நூலை வெளியிட்டருளினர். ஆகவே மகிழ்மாறன் அல்லது நம்மாழ்வாரை நாயகனாக்கொண்ட அலங்காரசாஸ்திரமாகுமிது.

வடமொழியினும் நம்மாழ்வார்விஷயமான ஒரு அலங்காரசாஸ்திரம் 'சடவைரிவைபவதிவாகரம்' என்ற பெயருடன் குவலயாநந்தத்தை யநுசரித்ததாய் விளங்குகிறது. கூடியசீக்கிரம் அச்சில்வரும். இத் தமிழ்நூல், பாயிர இலக்கணத்தை முதலிற் பெற்று, அது தவிரப் பொதுவியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியல் என நான்குபகுப்புடையதாயிருக்கிறது.

இந்நூற் பொதுப்பாயிரத்துள் "வெள்ளையினகவலின்விளம்பலு மரபே" என்றபடி இந்நூலாசிரியர் பொதுவியலைமாத்திரம் வெண்பாவாலமைத்திருக்கிறார். அகவலின்வெள்ளையினறைக வென்று முந்து நூல் விதித்தமையுளவாகவும், விதியாது நீக்கிய கட்டளைக்கலித்துறை ஆசிரியவிருத்தமென்னும் பாவினத்தாற் பின் பிலக்கணநூல்செய்தோர் இலக்கணங்களைக்கூறியதுபோலவும், சிலப்பதிகாரத்திற் சிலகாதைகள் பாவினங்களாற் பாடியதுபோலவும் இவரும் முதலியலை வெண்பாவாலும் மற்றவற்றை நூற்பாவாலும் கூறினர்.

தண்டியலங்காரத்தில் மேற்கூறிய நான்கியலுக்கும் சேர்ந்த சூத்திரங்கள் 125 தான். தண்டியலங்கார உதாரணச்செய்யுள்களினும் மாறனலங்கார உதாரணச்செய்யுள்கள் மிகவு மதிகம். ஆகவே தண்டியலங்காரத்தினும் மாறனலங்காரம் மிக்க விரிவுடையது. தண்டியலங்காரமும் காவ்யாதர்சத்தைப் பின்பற்றின மொழிபெயர்ப்பு. மாறனலங்காரம், தொல்காப்பிய முதலியவற்றின்கருத்துக்களையும், "முதுமொழித்தண்டி முதனூலணியையும், புதுமொழிப்புலவர்புணர்த்தியலணியையும், தனது நுண்ணுணர்வாற்றருபலவணியையும், மனுநூறத்தொகுத்தும்வகுத்தும் விரித்தும், சதுர்பெறவிரண்டிடந்தழீஇயசார்பெனலாய்" விளங்குகிறது. ஆயினும், இது தண்டியலங்காரத்தின் வழிநூலாகும். இதனுரையில் வடமொழித்தண்டியாசிரியரை யபூர்வமா யோரோரிடத்தும், தமிழ்த் தண்டியாசிரியரை அடிக்கடி பலஇடங்களினும் சுட்டியிருக்கிறார். இந் நூலாசிரியர் சிலஇடங்களிற் சிலவிஷயம்பற்றிச் சிறிது வேறுபடுவது முண்டு. எடுத்துரைப்பிற் பெருகுமாதலால் 84-ம் சூத்திரவுரை முதலியஇடங்களிற் கண்டுகொள்க.

தண்டியலங்காரத்துட்கூறிய பொருளணிகளின்றொகை 35. இந் நூலுட்கூறிய அணிகளின்றொகை 64. இந்நூலார், தண்டியாசிரியர்

காமமென்னுங் குழமிச்செல்வத்தையுடைய பரத்தையரிடத்தே தேடிக் காண்பாராக; அஃதன்றி யெம்மிடத்துக்காண்ட லரிதென்றவாறு.

காழ் - கொட்டை. ஊழில் - ஊழ்வினையாலேயெனினுமாம். இது கௌடவுதாரம். என்னை? 'காழில் கனியுண் கடுவன் களங்கனியை யூழிற்பருகியுருகு திருமூழிக்களி' மெனவே யக்கடுவன்போல, உத்தம மாகிய விவளோடும் உள்ளும் புறம்பும் ஒருநீர்மைத்தா மென்மை யோடும் உவர்ப்பில்லாத பேரின்பத்தைத் துய்த்த தலைவன், இழிந்த வியற்கையை யுடையாராய்ப் புறம்பு பொருணசைக்காய்ச் சிறிதுநெகிழ்ந் துண்ணெகிழ்ச்சியற்ற பரத்தையரிடத்தே யுவர்த்த சிற்றின்பத்தைத் துய்த் தவ்வின்ப மீட்டுந்துய்ப்பா னவர்சேரிவிட்டு நீங்கானுயினனென வுள்ளுறையுவமங் குறிப்பிற் கொள்ளக்கிடந்தமையானும், காமக்குழவி வளத்தாரிட மெனவே யிஃது எமது காதற்புதல்வன் என்னுஞ் செல் வத்தையுடைய மனையென்பதூஉம், யாம் புதல்வற்பயந்த மூப்புடையே மென்பதூஉம், இன்னும் அவ்விலேசானே யெம்மிடத் தவர்பெறு மின்பம் எமக் கவர்கொளுத்தக்கொண் டியாங்கொடுக்கு மியற்கையின்பமே யல்லாது பலரையுந்தோய்ந் தவரவர்கொளுத்தக்கொண்ட பல விகற்ப மாகிய செயற்கையின்ப மெம்மிடத்தில்லையே யென்னுங் கூற்று மாகக் குறிப்புங் கூற்றுங் குறிப்பினாற் கொள்ளக் கிடந்தமையானே யிவ்வாறு வேண்டுவர் கௌடரெனக்கொள்க. பகுதி - இதுவுமது. துறை - பாண னொடு கூறல். கூற்று - தோழிகூற்று.

நாம்பிரமமென்றேநவில்வாருமன்னுயிர்க
டாம்பிரமத்தொன்றுமெனுஞ்சார்பாரு—மாம்பிரம
நாரணனேவென்பாருநாவீறுடையபிரா
னாரணப்பாக்கற்றுணராதார். (104)

என்பது, பேரானந்தச் சிற்குணநிகச் சுடர்ச்சொரூப ரூபப் பரத்துவ மென்னும் பரமபதநாதன், அநிருத்தனுகி யுந்தியந்தாமரைப் பொகுட் டிற் பலகோடியண்டங்களைப் படைத்துப் பலகோடி யண்டந்தோறும் பலகோடி பிரமாதிகளைப்படைத் தழிவிலதா யலகிறந்த வணுக்கடோறும் திவ்வியாத்ம சொரூப வியத்தியுடன் சருவபூத பூரண காரணனுகி மீனுவ தாரமுதலாய வவதாரங்களானும் அம்சாவதாரங்களானுங் காவல்பூண்டு

வாழ்நாளுட் டன்னால், லீலைக்காக அமைத்த வவையனைத்து மழிந்துந் தானழியார் தேகோதகத்தின்மே லோராவிளந்தளிரு ளடங்கும் பச்சைக்குழவியாகியும் பல்லாயிரகோடி யண்டமாகியவற்றை யகத்திட்டு மறித்தும் புறத்திட்டுக் காவல்பூண்டு விளையாடு மகடிதகெடித சாமர்த்திய குணங்களு ளொருகுணமுமின்றி யிருவினைத் தளைப்பட்டு மலமூத்திராதிகளாலாய பாண்டத்தோடு பிறந்தும் பிறந்து முழலு முத்தியறியா மூடராகி நாம்பிரமமென்றே நாக்குத் தடுமாறாது நவிலு மொருசார்பாரும், கற்றறிநூல் பல கற்றனராகித் தத்துவமுணர்ந்தும் பற்றறச் சாலோகமுதலிய மூன்று மெய்தி யிருவராயிருந் தீறில்பேரின்ப மொருவராமெனத் துய்க்குஞ் சுகாநந்தத்தைக் கெடுத்துக் கூடாததனைக் கூடுவதாக்கிச் சூனியப்படுத்தி மன்னுயிர் பிரமத்தோடு மொன்றுமென்று நாயனடிமைத்திறம் நழுவிய மூடரா மொருசார்பாரும், ஆதியு மந்தமு மருமறை யரியென வோதிய பொருளுரைக் குடையதை யறிந்தும் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகனென முத்திதருவதாம் பிரமம் ஸ்ரீமந் நாராயணனே வென்றையுறு முழுமூடரும் ஒருநான்மறைத்துணி வோதாதுணர்ந்த நாவீறுடையபிரான்கூறிய திருவாய்மொழியைக்கற் றுண்மைப்பொருளுணரா மூவகைமூட ரென்றவாறு.

ஆரணத்தின்வழிவந்தநூலாதலாற் றிருவாய்மொழிக் காரணப்பா வென்ப தாகுபெயர். அல்லதூஉந் தமிழ்வேதமென்றும் அதற்குப் பெயர். ஆரணப்பாக் கற்றுணராதா ரெனவே யதனைக் கற்றுணர்ந்தா ரவைகூறுரென்னுங் கூற்று மெஞ்சிநிற்பதூஉங் காண்க. இங்ஙனங் கூறிய மூன்றும் வேதத்தின்வழிவந்த திருவாய்மொழியாகிய பனுவற் றுணிவன்றென்பதூஉம் அதனைக் குரவரா லுணர்ந்தோர்மதமும் அம் மூன்றினையுந் தள்ளின மதமே யென்னுமவையுங் குறிப்பெச்சம். இக் கூற்றுங் குறிப்பும் புலவனுலறியலாம். இங்ஙனமாகிய சொன்னடை கொண்டு வேறுபொருடோன்றலா லிதுவுங் கௌடவுதாரம். திணை — வாகை. துறை - சால்புமுல்லை.

சினமென்பதையறியாதவர் தினமும்புகழ்மாறன்
செஞ்சொற்றமிழ்மறைபாடியசெல்வன்குருகையுளார்
முனமன்பினைதளவொன்றியமுறையான்மலரிணைமேன்
முடுகும்பரிசமொடிங்கிதமொழியென்பதுபெறவே

தனமின்றெனினுலகத்தெவர்தனியின்பமதுறுவார்
தாமென்றபினளகத்துறுதனிவண்டொடுநின்பான்
மனமொன்றியபெடையேவலியுளதென்றனரன்றே
மறையென்றதையுணராதவென்மனதேகொடியதுவே. (105)

என்பது, தோழீஇ! வெகுளியென்பதை மனத்தினாலுங் குறித்தறியாத சுத்தசாத்துவிககுணமுடையோர் வாழ்த்துங் காரிமாறப்பிரான், செஞ்சொலாகிய தமிழ்மறையைப்பாடிய செல்வத்தையுடையோன் குருகைமாநகரினிடத்து நம்மிறைவர் பொருண்மேற்பிரியுமுன்னர் இருவர்க்கும் புணர்ச்சிமேற்சென்ற வுள்ளத்தன்பினதளவும் யாக்கையின்களிப்புமேகாந்தமு மிடையாமமும் ஒன்றாகப் பொருந்திய வியல்பான் மலராலலங்கரிக்கப்பட்ட அமளியிடத்து மூடிய பரிசததோடு நலம்பாராட்டலென்னு முறைபோற் பிரிதனிமித்தமெனபதாக, என்னோடுந் 'திருவே! மகளிரிடத்துத் தனமென்பன வில்லையாயி னுலகத்துள்ள வரடவருள் யாவர்தா மொப்பற்ற வின்பத்தை பெய்துமவர்க' ளென்றன ரதன்பின்னரளகத் தரும்பவிழ்ந்தகாலைத் தேனையுண்ணவந் ததனிடத்துறைவதாந் தனிச்சுரும்போடும் நினதிடத் தொருமனப்பட்ட பெடையே மனவலியுடைய தென்றனரன்றே; அவையிரண்டையும் மிக்க தொனியென வுட்கொளாத வெனது மனதே கொடியதென்றவாறு.

இது பாஞ்சாலவுதாரம். என்னை? தனமென்ப திரட்டுறமொழிதலாய் நடுவனை யெய்தாதவர்க் கிருதலையுமெய்தா ; பொருள்வயிற்போகவேண்டு மென்பதனை யுணர்த்தியதாகவும், நின்பான் மனமொன்றிய பெடையே வலியுளதென்றதனால் நீவைத்து நீங்கியபெடைநின்னையின்றியாற்றாமையாற் றுனிறக்கி வீயு மிறப்பையென்று நினதுயிரைப் போற்றித் தனதுயிரைப் பிடித்திருந்த மனவலியுடைத் தென்பதாயது போலத் தாம்பிரிந்தகாலத் தியாமு மாற்றாமையா லிறவாது தம்முயிரையும் போற்றி இல்லறங்காத்திருத்தல்வேண்டுமென்பதூஉமுணர்த்தியதாகக் குறிப்பினாற் பிறபொருள் கொள்ளக்கிடந்தமையாமனென்றறிக. இதனுள் அளவும் என்னு மும்மை செய்யுள்விகாரத்தாற்றொக்கதனை விரித்துரைக்க.' தோழீஇ என்னு முன்னிலைப்பெயருமெஞ்சிநின்றதுங் காண்க. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை -

தலைவி தலைவனை யியற்படமொழிதல். இவற்றை மூன்றுநெறியார்க்கு மொக்குமென்பாருமுளர். அவை பொருந்தாவென வுணர்க. உதாரம் முற்றும்.

மன்னிலங்கைமூதூர்வழியோ திறந்ததொன்றோ
பொன்னகர்செல்வாயிற்புதவன்றோ—தென்னரங்கன்
மைந்நீரசெம்பவளவால்வளையவண்டாள
முந்நீரணைகட்டுமுன். (106)

என்பது, அழகிய திருவரங்கத்தையுடைய மாயோன் கடலைக் கரை கட்டின முற்காலத்து இராவணனாகிய நிருதர்கோன திலங்கையாகிய பழையநகர்க்குச்செல்லும் வழியோ திறந்தது? தென்னரங்கேசனது பாணத்தா லிறந்த சத்துருக்களாகிய அரக்கர்செல்லும் வீரசொர்க்க வாயிலின்கட் கதவல்லவோ திறந்த தென்றவாறு.

எனவே வழியுங் கதவுந் திறந்த தென்பதாம். மைந்நீர செம்பவள வால்வளைய வண்டாள முந்நீரை யெனக் கூட்டுக. இது வைதருப்பவலி. என்னை? இருளி னீர்மையுடைத்தாய்ச் சிவந்த பவளத்தைப் பெற்ற வெளுத்த வளையைப்பெற்ற அதனிடமாக வளவியதாளத்தைப் பெற்ற முந்நீரை யூடறுத்துக் கடலை யணைகட்டின முற்காலத்தெனவே வேற்றுமைத்தொகை இருபெயரொட்டுப்பண்புத்தொகை வினைத்தொகைகளை முன்னிட்டுப் பெயருடைமைப்பொருளாய்நின்று கருகும்நீர்மை யுடையநீரையெனப் பெயர்மேலேறியவிடத்து மிப்பொருளையுடையதா யிருந்த திப்பொரு ளென்னுமிடத்து மிடைநின்ற வுடைமைவினைக் குறிப்புங் காலம்பெற்றவினைக்குறிப்புமாகிய சொற்க ளிடையிடை பல விடத்துந் தொக்கதோடும் பிறசொற்களுந் தொகைமிக்கு விரிதலானும் எனக்கொள்க. திணை - உழிஞை. துறை - புறத்திறை.

வன்கேழற்பன்றியாய்வான்பிறைக்கோட்டாழ்புனலாழ்
கொன்கேழ்கிளர்தாழ்குழல்களிப்ப—முன்கொணர்ந்த
வெம்பிரான்சங்காழியேந்திறைவெவ்வுளார்
தம்பிரான்றாளேசரண். (107)

என்பது, வலியகேழலாகிய பன்றியாய் வானின்கட் பிறைபோன்ற கோட்டாலே யாழ்ந்த புனலின்கட் டாழ்ந்த நிறங்கிளருந் தாழ்ந்த குழலினையுடைய பூமிதேவியானவ ளுள்ளங்களிப்ப முன்னாட் புறத்தே

கொண்டுவந்த எம்முடைய பிரான் சங்கையு மாழியையுங் கைகளிலேந்தி னான் எவ்வுளார்க்குந் தம்பிரான் ; அவனது திருவடிகளே சரணமென்ற வாறு.

கொன் - பயனில்சொல். இது கௌடவலி ; என்னை ? இதனு ளிருதிறப் பண்புத்தொகை முதலாகத் தொகையாறு முடைமையினைக் குறிப்பும் பிறசொற்றொகைகளு மிகவருதலா னெனக்கொள்க. துறை-கடவுள்வணக்கம்.

பொற்றொடிவேற்கண்கள்புடைசிறநதாடகெஞ்ஞான்று
முற்றவுடலுயிரீஙகொன்றென்றே—சொற்றனவாற்
றோடலர்தார்மாறன் றடரியினெஞ்சேயிவளைக்
கூடலெளிதென்றேகுறி. (108)

என்பது பாஞ்சாலவலி. என்னை ? பொற்றொடியெனவே வேற்றுமைத் தொகைப்புறத்துவந்த அன்மொழித்தொகையும், வேற்கண்ணெனவே யுவமைத்தொகையும், புடைசிறந்தாட்கெனவே வேற்றுமைத்தொகையும், உடலுயிரெனவே யும்மைத்தொகையும், தோடலர்தாரெனவே வினைத் தொகையும் வந்து பண்புத்தொகையொன்றுமே வாராது, பெயர் வினைச் சொற்களு முளவாய், முன்னவைபோலச் சுருங்காது மிகாது மிடைநிலைப் பட்டமையா னென றுணர்க. பகுதி-பாங்கியிற்கூட்டம். துறை-பாங்கியை யறிதல். வலி முற்றும்.

ஆவிக்குறு துணைப்பெண் ணாரமுதைப்போலுரைத்த
நாவிற்கினிமைநயப்பதோ—மூவுலகுந்
தாய்க்கொண்டதாளரங்கர்தண்ணளிசார்விண்ணவர்தாம்
வாய்க்கொண்டுயிர்வாழ்மருந்து. (109)

என்பது, எனதாவி வாழ்வதற்கு மிக்கநற்றுணையாகிய விப்பெண்ணாகிய அமிர்தினைப்போற் றன்பெயரினைச் சொன்னாற் சொன்ன நாவிற்கு மினிமையை யளிப்பதொன்றுமோ ? பூமிமுதலாய மூன்றுலகங்களையுந் தாண்டியளந்துகொண்ட தாளினையுடைய திருவரங்கேசர்கருணையைப் பொருந்தின வானிலுள்ளார் வாயாலுண் டினிமையைக்கொண் டுயிர் வாழாநின்ற அமிர்தமென்றவாறு.

ஓகாரம் ஒழியிசை. இதனுள், பெண்ணாகிய அமிர்தினுயர்த்தி யுலகொழுக்கிறவாமை யுயர்த்தினமையால் இது வைதருப்ப காந்தம். பகுதி - இடந்தலை. துறை - நலம்புனைந்துரைத்தல்.

கூறிய நுட்பமென்னுமலங்காரம் பரிகரத்துளடங்குதலா லதைக் குறைத்தார். சொல்லிலக்கணத்திலும் பொருளியலிலும் புறத்திணையியலிலுங் கூறியுள்ளவும் மற்ற அணிநூல்களுட் கூறப்படாதனவுமாகிய பூட்டுவில், இறைச்சிப்பொருள்கோள், பொருண்மொழியென்னும் மூன்றையும் செய்யுட்கணிசெய்தலால் அணியுட்சேர்த்து மிருத்தார். வகைமுதலடுக்கு, இணையெதுகை, உபாயம், உறுசுவை, புகழ்வதினிகழ்த லென்னுமைந்தும் அழகெய்துவதாயிருத்தலின், இலக்கியங்கண்டதற் கிலக்கணமியம்புதலா யிவற்றையு மிருத்தார். தண்டியாசிரியர் உவமவிரியுட்சேர்த்தும், ஏனையாசிரியர் வேறுவேறாகப்புணர்த்துமிருக்கிற ஐயம், தெரிதருதேற்றம், பொதுநீங்குவமைஎன்பவற்றுள்ஐயத்தையும், தெரிதருதேற்றத்தையும், ஏனையாசிரியர்மதமுடன்பட்டுப் பிறிதோரணியாக்கியும், பொதுநீங்குவமையைத் தண்டியாசிரியர்மதம்பற்றி யுவமையுட்புணர்த்தும், தன்கோட்கூறலென்னுமுத்தியானும், தன்குறியிடுதலென்னுமுத்தியானும், பின்னோன்வேண்டும்விகற்பங்கூறிமுடிக்கும் வழிநூலிலக்கணம்பற்றியும் இவ்வாறெல்லாம் முடித்தார். இவ்வாறு சூக்குமமாய்க் காணப்படும் வேறுபாடுகளுக்கெல்லாம் மேற்கண்டபடியே கொள்ளவேண்டும்.

தண்டியாசிரியர் ஒரேசூத்திரத்திற் பன்னிரண்டுசித்திரகவிகளுக்குப் பெயர்மாத்திரங்கூறிச்செல்ல, இந்நூலார் முப்பத்திரண்டுசித்திரகவிகள்கூறி அவற்றுக்கு இலக்கணமுங் கூறிச்செல்கிறார். 'தேவா' 'மாதவனே' 'தண்மதி' 'சேடுறு' என்றுதொடங்குகிற சக்கரபெந்தச்செய்யுள்களில் 'திருமலை', 'தென்குருகூர்', 'வடமலையப்பன்', 'சீராமராமசெயம்', 'தருமமேகைதரும்' என்பவைகளும் இரதபெந்தத்தில் 'நாராயணாயநம', என்பதும், காதைகரப்பிற் 'கொல்லான்புலாலைமறுத்தானை' என்னுங் குறளும் அழகாயமைக்கப்பட்டுள்ளன.

தண்டியலங்காரவாசிரியர் தாமே மூலமும் உதாரணமுங் காட்டினாற்போல, இந்நூலாசிரியர் தாமே உதாரணச்செய்யுள்களும் செய்தமைத்தாரென்று தோன்றுகிறது. "இந்நூலாசிரியர் இவ்வுதாரணம் யாண்டுப் பெற்றாரோவெனின்" என்று உரையில்வருவதுகொண்டும் பிற ஆதாரங்கொண்டு மிவ்வாறு ஊகிக்கவேண்டியதாயிருக்கிறது. இந்நூலிற் பரிபாடல், கலித்தொகை, பத்துப்பாட்டு, புறநானூறு, குறுந்தொகை, அகநானூறு, குறள், நாலடி, சிந்தாமணி சிலப்பதிகாரம், வெண்பா

திங்கள்வெண்கதிரும்பானுவின்கதிருஞ்சிறிதும்வைகலுநுழைந்தறியாப்
பொங்கர்மல்கியபூஞ்சோலைநள்ளிடையிற்புதைதயிருளிரிதரமடவா
ரெங்குமேந்தியசெஞ்சுடர்களானாகனேந்தெழின்மவுலியாயிரத்துந்
தங்குபன்மணிகள்பரப்பிவைத்தொளிர்பாதாலமீதெனப்பொலிதருமால். (110)

இதுவுமது. (குருகாமான்மியம்.) திணை - பாடாண். துறை விளக்கு நிலை.

தென்னனங்கைதமால்வரைமேற்சேயிழைவன்கட்கூற்ற
முன்னிலுயிருண்ணுமெனமுன்னுற்றே—மன்னுயிருண்
கூற்றுருவமக்களுருக்கொண்டோர்விழிக்கெதிரே
தோற்றுவருங்கொள்ளாத்துணிவு. (111)

இது கௌடகாந்தம். பகுதி - இயற்கை. துறை - தகையணங்குறுத்தல்.

பூட்டியுழுங்கருமேதியரிதாளிற்கருங்குவளைப்போதுமேயத்
தீட்டியநாவினைக்குறுக்கிச்சிறைவண்டின்பண்ணமுதைச்செவியானுண்டு
மோட்டுமுதுமுலைக்கண்மடைதிறந்தொழுகும்பாலமுதமுழங்கியாம்பற்
காட்டுவரம்புடைப்பவயற்கழனியடைத்துழவருழுங்காட்சித்தொன்றே. (112)

இது பாஞ்சாலகாந்தம். துறை-நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்). காந்தம் முற்றும்.

ஆழிப்படைக்கையருளாளன்மிக்கதிரு
மூழிக்களத்துறையுமூவர்கோ—னூழிதொறும்
வித்தகனேகாரிதருமெய்ஞ்ஞானமுத்திரைக்கை
யுத்தமனேகாக்கவெனை. (113)

திணை - பாடாண். துறை - புறநிலைவாழ்த்து.

இறையேதிருமால்வீடென்பதுமந்தாம
மறையேபனுவலெனவைக்கு—நிறைகூர்
கரையற்றபேர்க்கடன்மாறனுண்மை
யுரைகற்றுணர்ந்தாருளம், (114)

திணை - பொதுவியல். துறை - பறுவல்வாழ்த்து. இவையிரண்டும் உய்த்தலில்பொருண்மை. இவை மூன்றுநெறியார்க்குமொக்கும். உய்த்தலில்பொருண்மை முற்றும்.

கண்டுகுமுதமலர்சிரிக்கக்கோகனக
மீண்டிதழ்ச்செங்கைகுவிக்குமெல்லிதா—னீண்டுகமா
மென்றுலிறையரங்கத்தேந்தல்பொருட்கேக
லொன்றுனுமாகாதுனக்கு. (115)

சிரித்தல் - மலர்தல். ஏந்தல் அண்ணைமயினி. இதனுள், சிரிக்க வெனவும் கைகுவிக்கவெனவு முக்கியப்பொருளாகிய வாயினதுகிரியை யும், கையினதுகிரியையும் ஒப்புடைப்பொருளாகிய குமுதத்தினுங் கமலத்தினும் புணர்த்துரைத்தமையாற் சமாதி யெனக்கொள்க. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - செலவழுங்குவித்தல்.

ஆரப்பொழிற்கோங்கரும்புதினமாக
வாரைப்பொருதெழுந்தவண்மைசேர்—பேரைக்
குழைக்காதரென்றொருகாற்கூறுதோவெஃறிக்
கழைக்கார்முகன்காகளம். (116)

இது சிலேடைவாய்பாட்டால் வந்த சமாதி.

சந்தனப்பொழிலகத்துநின்ற கோங்கரும்பு வைகலும் மேகத்தி னிடத்துண்டாகிய தண்ணீரைத் தழாயெழும் எனவும், ஆகத்தி னிடத்துக் கட்டின கச்சினைப் பொருதெழு மெனவும் முலையினது கிரியையைக் கோங்கினதரும்பிடத்துப் புணர்த்தவாறு காண்க. மாகம், ஆகம் எனப் பிரிமொழிச்சிலேடையும், வாரையெனச் செம்மொழிச் சிலேடையுங் கொள்க. இவை மூன்றுநெறியார்க்கு மொக்கும். சமாதி முற்றும் ஆக இன்பமுதற் சமாதியீறாகக் குணவலங்காரம் பத்தும் அடைவே வந்தவாறு காண்க. திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - குயிலொடுவெறுத்துக்கூறல். (௨௦)

85. செய்யுட்குணங்களொழிவறவேசெப்புவதும்
பொய்யில்புலமையுறுப்புன்கவியேற்—கெய்துமதோ
சொற்றவற்றுற்சொல்லாதவற்றினையுஞ்சொல்லியவா
முற்றுவித்தல்கற்றோர்முறை.

(எ-ன்) சொல்லிய குணவலங்காரங்கட் கொழிபு புணர்—ற்று.

(இ-ள்) செய்யுட்களின் குணவலங்காரங்களை யொழிவற முற்ற வுணர்த்துவதும் பொய்யென்பதில்லாத அறிவின்றன்மைபொருந்தாத புன்சொற்கவியேற்கு மெளிதா யெய்தப்பெறுந்தன்மைத்தொன்றோ? ஆகையா லிங்ஙனஞ் சொல்லப்படுங் குணங்களோடுஞ் சொல்லாதொழிந்த வக்குணங்களையுஞ் சொல்லியனவாக முற்றுவித்தல் கற்றுணர்ந்த சான்றோர்கட னென்றவாறு.

இங்ஙனம் கூறவேண்டும்நோக்கம் யாதோவெனின், செறிவென்று சொல்லப்படுவதும் எழுத்தச் செறிவும் சொற்செறிவும் பொருட்செறிவுஞ் செறிந்து வேறுவேறு ஒலித்து நடக்கும் என்று கூறியவற்றுள் எழுத்துச் செறிவும் வண்ணமு மூன்றுநெறியார்க்கும் வேறுவேறாக்கி, யொருவகைச் சொற்செறிவு மவையல்லாத பொருட்செறிவு மூன்றுநெறியார்க்கும் பொதுவாகக்கூறினாரெனினும் மெய்களுடனிலைமயக்கமின்றி யேனைமயக்கமாக வண்ணமும் பொதுவாவனவு முள. அது வருமாறு:—

மயர்வறமதிநலனருளியநறைகமழ்மலர்மகள்புணர்பவன்மே
லுயர்வறவுயர்நலனெனமுதிர்தமிழ்மறையுரைமகிழ்முனிவரைவாழ்
புயல்புரைகுழன்மதிபுரைநுதல்வடவரைபுரைபுணரிளமுலைசேர்
கயல்புரைவிழியெனதுயிரெவணினதுயிர்கவல்வகையெவன்மயிலே (117)

இது அராகந்தொடுத்த அடியோடும் பிறிதடியும்படத் தொடர்ந்தோடினமையான் முடுகுவண்ணம்; "முடுகுவண்ண, மடியிறந்தோடிய வதனோரற்றே" என்றாராகலின். இவ்வண்ணமு மூன்றுநெறியார்க்கும் ஒக்கும். ஒழிந்தனவற்றுள்ளு மிவ்வண்ணம் பாகுபடுமென்னு நோக்கத்தாற் கூறப்பட்டது. அவையெல்லா மீண்டுரைப்பிற் பெருகும். பகுதி - உடன்போக்கு. துறை - செவிலிதேடல். (உக)

பொதுவியலுரை முற்றும்.

தருகாளமேகங்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலங்காரக்குவலயத்தே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாரிரத்னகவிராயன்பேரைவரோதயனே.

# இரண்டாவது

# பொருளணியியலுரை.

86. பொருளினுஞ்சொல்லினும்புனையுறுசெய்யுட்
கணிபெறப்புணர்த்தலினணியெனும்பெயர்த்தே.

என்பது சூத்திரம். இவ்வோத் தென்னுதலிற்றோவெனின், ஒத்து நுதலியதூஉ மோத்தினது பெயருரைப்பவே விளங்கும். ஆயின் இவ் வோத் தென்னபெயர்த்தோவெனின் பொருளணியிய லென்னும் பெயர்த்து ; பொருளானு மணிக ளுணர்த்தினமையின். ஆயின், இதன் றலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின்? சொல்வான் றொடங்கிய அணி யென்பவற்றிற்குக் காரண மிவையென்பதூஉம் அவை செய்யுட் கின்ன சிறப்புடைத்தாகப் புணர்த்தலி னிப்பெயர்த்தாயிற் றென்பதூஉ முணர்-ற்று.

(இ-ள்) புலவராற் றொடுக்கப்பட்ட கவிகட்குப் பொருளானுஞ் சொல்லானும் அழகெய்தப் புணர்ப்பதால் அணியென்னும் பெயரை யுடைத்தாயிற் றிவ்வலங்காரமென்றவாறு.

புலவா லென்பதூஉம் அலங்கார மென்பதூஉஞ் சொல்லெச்சம். அணி யிரண்டனுண் முன்னையது அழகாம். பின்னையது பூணும். எனவே பொருளானுஞ் சொல்லானு மணி யிரண்டென்பதாயிற்று. (க)

87. அவற்றுள்,
புவனம்போற்றியபொருளணிபுகலிற்
றவலரும்பான்மைத்தன்மையுவமை
யுருவகமுள்ளுறையொட்டுல்லேக
மொப்புமைக்கூட்டம்வேற்றுமைதிட்டாந்தந்
தற்குணம்பிரத்திபனீகஞ்சந்தய
மற்புதம்நிரிசனந்தற்குறிப்பதிசயஞ்
சிலேடைபின்வருநிலைதீபகநிரனிறை
பூட்டுவிலிறைச்சிப்பொருள்கோள்பொருண்மொழி

யதிகம்வகைமுதலடுக்கிணைபெதுகை
விரோதமுபாயம்விசேடஞ்சமாயித
மேதுச்சுவைபரியாயமிலேசந்
தற்பவமசங்கதிதடுமாறுத்தி
புணர்நிலைவேற்றுப்பொருள்வைப்புவிபாவனை
யார்வமொழிநெடுமொழிபரிவருத்தனை
காரணமாலைகாரியமாலை
யேகாவளிபிரதீபம்பிறவணி
முன்னவிலக்கபநுதிநிதாத்துதி
புகழ்வதினிகழ்தன்மாறுபடுபுகழ்நிலை
பரிசங்கைகாவியலிங்கம்பரிகர
முறுசுவைவிரோத்திசமுச்சயமுதாத்த
மாசிசங்கரஞ்சங்கிரணமே
பாவிகமெனவறுபானுன்காகும். (64)

(எ-ன்) வைத்தமுறையானே பொருளாணி மணிகளது பெயரு முறையுந் தொகையு முணர்-ற்று.

(இ-ள்) அங்ஙன மிரண்டுகூற்றவாகிய அணிகளுள் உபர்ந்தோ முதலெனப் போற்றப்பட்ட பொருளணியொன்றனையுங் கூறுமிடத்துத் தன்மைமுதலாகப் பாவிகமீறாக அறுபத்துநான்கா மெனறவாறு.

இவற்றிற்கெல்லா மெண் ணும்மை தொக்குநின்றன. என என்பது எண்ணிடைச்சொல்; என்னை? "என்று மெனவு மொடுவு மொழுகாவழி, நின்றும் பிரிந்தெண் பொருடோறு நேரும்" என்பதனால். எனவென்ப தனைத் தன்மைமுதலாக வெண்ணிய வெங்கு மொட்டுக.

அஃதாக; இச்சூத்திரத்துள் சிலேடை, பின்வருநிலை, தீபகம், நிரனிறைமுதலிய சொல்லாறுமணிகளு மிதனுட் கூறு நிற்பப் பொரு ளணியியலென்ப தென்னையெனின், மிகுதி பொருண்மேலவாதலின் மிக்கவற்றாற் பெயர்கொடுத்தார்; அஃ தியாவதுபோலவெனின், அங்க ராகமாகிய சந்தனத்துடன் குங்கும கற்பூர கத்தூரி கூடினும் பூசியது சந்தனமென்பதுபோலக் கொள்க.

அற்றேல் இவை முறையாயினவாறென்னையோவெனின், இயல்பு விகாரமென விரண்டாகிய வவற்றுள், தன்மை யியல்பாகலான் முற்பட்ட

முறைமைத்தாக வைக்கப்பட்டது. உவமையை மூன்றுறுப்படக்கிய பிண்டமாகுந் தொல்காப்பியத்து ளிறுகின்ற பொருளகத் தகப்பட்டதாக அலங்காரத்தினையுங் கூறிய ஒல்காப்புலமைத் தொல்காப்பியனாரு முவமையென்ப தொன்றாகத் தொகைபெற்று வினைமுதலிய நான்காய் வகுத்துப் பலவேறு விரிவாய்நின்று விகாரமாயதன்றிப் பிறவலங் காரங்கட்கு முபகாரமுடைத்தாகலானு மஃதொன்றினையுமே முக்கிய மாக்கி யதனுட னுருவகமும் உள்ளுறையுவமமும் வகுத்துக்கூறிய முதன்மையானும், இதற்குத் தனியே முதனூல்செய்த தெண்டியாசிரியரும் அவர்நோக்கமே தாமு முடம்பட்டாராகத் தன்மையின்பின் னுவமையை வைத்தாராகலானும், இருவர்நோக்கமு முட்கொண் டிந் நூலுடையா ரவையிரண்டிற்கு மிந்நூல் வழிநூலாகலானுந் தன்மையை முதல்வைத் ததன்பின்ன ருவமையைபு முதல்வைத்தது முறையெனக் கொள்க. உருவகமும், உவமையும் பொருளும் வேறுபட்டு நில்லா தொன்றெனனும் பான்மைத்தாய மாட்டேற்று முவமையாதலானும் உள்ளுறை யுவமமும் இசைநிரிந் திசைக்கப்படுவதா யுவமையோ டுவமிக்கப்படும்பொருள் பிறிதோராறு தாராது அவ்வந்நிலங்களிற் பிறந்த கருப்பொருளோடுஞ் சார்த்தி யுள்ளுறுத்திக்கொள்ளு முவமை யாதலானும் அவை முறையே வைக்கப்பட்டன. ஒழிந்த ஒட்டு உல்லேக முதலியனவு முவமையைப் பின்சென்றிருத்தலா னவை வைத்தமுறையு முய்த்துணர்ந்துகொள்க. அவையெல்லா மீண்டுரைப்பிற் பெருகும். உவமையைப் பின்சென்றனவல்லாத அலங்காரங்களையுந் தமக்குப் பொருந்தினமுறையே வைத்தமுறையு முய்த்துணர்ந்துகொள்க. அவையு மீண்டுரைப்பிற் பெருகும்.

அஃதாக; ஆறு லிந்நூலுடையார் முதனூல்களிற் கூறியபடியே வழிநூலிற் சிறிது புடைநூலிலக்கணந் தவறாது கூறப்புகுந்து மிகவு மிதன் முதனூலாகிய தண்டி கூறிய அணிகளுள் ஒட்டுமென்னும் அலங்காரத்தைக் குறைத்துப் பிற முதனூலணிகள் கூறிய அணிகளையுந் திரட்டிக்கூறி, முந்து நூல்களுட் கூறாத பூட்டுவில் இறைச்சிப்பொருள் கோள் பொருண்மொழி யென்னு மூன்றினோடும் வகைமுதலடுக்கு இணைபெயுனை உபாயம் உறுசுவை புகழ்வதினிகழ்த லென்னும் அலங்காரங் களையுங் கூட்டி அறுபத்துநாலாக மிகுத்ததூஉ மொருவழிக் குன்றக்

கூறன் மிகைபடக்கூற லென்னுங் குற்றமாம்பிறவெனின், ஆகாது; என்னே? நுட்பமென்பது பரிகாரத்து ளடங்குமெனக் குறைத்துச் செய்யுட் கணிபெறப் புணர்ப்பதெல்லா மணியெனப்படுதலான் முன்னைய மூன்றுஞ் சொல்லிலக்கணத்தினும் பொருளியலினும் புறத்திணையினுங் கூறியபடியே செய்யுட்கழகாதலி னணியிற்கூட்டி யிருத்தார்; ஏனைய வைந்து மழகெய்துவதா யிலக்கியங்கண்டதற் கிலக்கண மியம்பியதாக்கி யிருத்தாராகலானென்றுணர்க. அன்றியும், வழிநூலும் புடைநூலுஞ் செய்தற்கேதுத் தொகுத்தன் முதலிய நான்கினுள்ளு முதலன விரண்டு மிகவு மேதுவாகலானுங் கூறப்பட்டன. அற்றேல் ஐயமுந் தெரிதரு தேற்றமும் பொதுநீங்குவமையுந் தண்டியாசிரிய ருவமவிரியுட் புணர்க்க, அவற்றை யேனையாசிரியர் வேறுவேறணியாகப் புணர்க்க, இந்நூலுடையார் முதலிரண்டும் பிறர்நோக்கத்தோடுங் கூட்டிப் பிறிதோ ரணியாக்கிப் பின்னையது தண்டிநோக்கத்தோடுங் கூட்டிப் புணர்த்த தூஉங் குற்றமாமெனின், குற்றமன்று. இருவர்க்கும் முதலான தொல் காப்பியனார் "தடுமாறுவமங் கடிவரையின்றே" யென வழுவமைதிவாய் பாட்டாற்கூறினமையானும் அவருள் உவமவுருபு புணராமையானு முவமையைப் பின்சென்ற பிறிதோரணியாகப் பிறருடம்பட்டது தானுடம்படுதல் என்னுமுத்தியா னுடம்பட்டும், ஏனையது "தானே தனக்குவமைதா" னென உவமவாசகம் புணர்ந்தமையானும் "ஒரீஇக் கூறலு மரீஇய பண்பே" என்றுராதலானும் பிறர்மதங்களைதலென்னு முத்தியானுங் கூறப்பட்டது. இங்ஙனம் பெயரு முறையுந் தொகையு மாகிய அணிகளை முதனூலாசிரியர் வகைப்படுத்தியும் விரித்துங் கூறிய நோக்கத்தோடுஞ் சிலவற்றை யிந்நூலுடையார் தன்கோட்கூறலென்னு முத்தியானுந் தன்குறியிடுதலென்னு முத்தியானும் வகுத்ததன்மேல் விரித்துவகுத்தும் விரித்ததன்மேல் விரித்ததையும் அவ் வணிகட் குணர்த்தும் பீடிகைமுதலாய வுரைநடைநோக்கங்களா ஞங்காங்குக் கண்டுகொள்க. அவையெல்லா மீண்டுரைப்பிற் பெருகும். (உ)

## 1. தன்மை

88\. வழுவாமரபினெப்பொருளையும்விகாரந்
தழுவாநடைபெறப்புணர்ப்பது தன்மை.

(இ-ள்) மேனிறுத்தமுறையானே தன்மையென்னு மலங்காரத்தி னது பொதுவிலக்கண முணர்-ற்று.

(இ-ள்) இருதிணையுட் குற்றமில்லாத இலக்கணத்தையுடைய எவ்வகைப்பட்ட பொருள்களையு முவமை முதலிய விகாரவணிகள்கூடாதே சுபாவநடைபெறப் புலவன் பாடுவது தன்மையென்னு மலங்காரமா மென்றவாறு.

நடை - ஒழுக்கம். குற்றமில்லாத எவ்வகைப்பட்ட பொருளையு மெனவே குற்றமுள்ளவற்றின் சுபாவத்தைப் பாடுவதுந் தன்மையா மெனினும் அலங்காரத்தின்பாற்கூடாதென்பதாம். வழுவாதமா பென்னும் வினையெதிர்மறுத்தபெயரெச்சவாய்பாடு செய்யுள்விகாரத்தாற் றொக்கிற் றுயிர்மெய் கோவாமுத்தமென்பதுபோலக் குறைந்துநின்றது. தழுவா வென்பது மது. விகாரம் ஆகுபெயர். (௩)

89. அதுவே,

௯௰ ஒண்பொருண் மக்களுயி ருள வஃறிணை

௩௬ சினைவினை பண்பிட மெனவுஞ்சிவணும்.

(எ-ன) தன்மையின் சிறப்பிலக்கணப்பாகுபாடுணர்-ற்று.

(இ-ள்) அத் தன்மையென்னுமணி, உயர்திணையிடத்துப் பொருட் டன்மையும் மக்கட்டன்மையும் அஃறிணையிடத் துயிருள்ள அஃறிணைத் தன்மையும், உயிரில்லாத அஃறிணைத்தன்மையும் அப்பொருளின் சினைத்தன்மையும், வினைத்தன்மையும், பண்புத்தன்மையும், இடத் தன்மையுமெனத் தனித்தனி புலப்படப் பொருந்துமென்றவாறு.

அதுவே, என்பது "சீர்கூறுதல் நோடிக்குரித்தே" யென்பதனாற் சீர்கூறுபிற்று. இவற்றிற்கெல்லா மெண்ணும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்குவிரிந்தன. உயிரில்லஃறிணை யென்பது முயிர்திணையென்பது மெதிர்மறைபெச்சமாகி விரிந்தன. இன்னு மவ்விலேசானே யுயிருள வஃறிணையு ளியங்குதிணையும் உயிரில்லவற்றுட் கருத்துப்பொருளுங் கொள்க. (௪)

90. அவற்றுள்,

௯௰ பொருளியல்பாண்பெண்ணெனவிருபுலப்படும்.

௪௰

௩௭ (எ-ன்) இதுவும் பொருட்டன்மைக்கோர் பகுதியுணர்-ற்று.

(இ-ள்) அச் சொல்லப்பட்ட வுயர்திணை யஃறிணையுட் பொருட் டன்மை ஆடூஉப்பொருட்டன்மை மகடூஉப்பொருட்டன்மை என விரு வகைத்தாய்த்தோற்றுமென்றவாறு. (ரு)

91. அரும்பெறன்மக்கட்டன்மையுமற்றே.

(எ-ன்) இதுவும் உயர்திணைக்கண் மக்கட்டன்மைக்கோர் கூறுபா டுணர்-ற்று.

(இ-ள்) பெறுதற்கரிய மக்கட்டன்மையும் பொருட்டன்மைபோல விருவகைப்படு மென்றவாறு.

அற்று உவமவுருபு. அஃறிணைக் கொருமை பன்மை யென்பதல் லாது ஆண்பெண் ணென்பது சிறப்பின்மையாற் கூறாராயினார்; என்னை? "ஆண்பெண் பலரெனமுப்பாற்றுயர்திணை", "ஒன்றேபலவென்றிருபாற் றஃறிணை" யென்பதனு லறிக.

இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வருமாறு:—

செம்பொனுடைசெறிதிருமருங்கின
னம்புயத்தனிமலரலர்ந்தவுந்தியன்
கவுத்துவக்கடவுட்கவினிழன்முழுமணி
பவித்திரத்திருமகள்பதிந்தமார்பினன்
வலம்பயின்முப்புரிநூலொடும்வாடா
திலங்கியவனமாலிகைபுனையிணைப்புய
னிகல்புரிதிகிரிசங்கேந்தியகரத்தினன்
கதிர்மணிமௌலிகவித்தசேகரன்
மதிதவழ்சோலைமலையலங்காரன்
பூதலர்தாயபொன்னடி
காதலித்தவர்வல்வினைகடந்தவரே. (118)

இது ஆடூஉப்பொருட்டன்மை. திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து உரையிற்கோடலென்பதனு லுரையெழுத வேண்டுவதில்லை. பா - நேரிசையாசிரியப்பா.

கனையிருள்வடிவயிரப்பால்செறிதமனியப்
புனைகழலொடுவனைபரிபுரப்பூந்தாளினன்

குறங்கிணையொடுமருங்கிணைவளைபொலந்துகிலின
னறந்தழைதருமயன்றனையருளலருந்தியன்
கவுத்துவமணிவனமாலிகைகலந்தொளிர்திருப்
பவித்திரமுடன்மலர்மாமகள்பயின்மார்பினன்
வான்றோய்கதிரினிற்றிகிரியைவலனேந்தியு
மீன்றோய்மதியினில்வரிவளையிடனேந்தியு
மகரக்குழைதழைகாதினன்மணிமௌலியன்
சிகரப்பலதலைசேர்திருமலைமேலுறை
செல்வனை,
மனமொழிமெய்களின்வழிபடுபவராய்ப்
புனநறுமலர்பொழிபவர்பாற்
கனவிலுமுறான்கொடுங்கணிச்சியோனே. (119)

கனையிருள்—செறிந்தவிருள். வயிரப்பால்—வயிரமணி; உள்ளீடாய தரி. தமனியப்புனைகழல்—பொன்னாற்புனையப்படும் வீரக்கழல். பூந்தாளென்றது பொலிவினையுடைய சீபாதம். வான்றோய்கதிர்....வேந்தியும் வானிடத் தலமால்பொருந்திய கதிராற்கொண்ட சக்கரத்தை வலத்தே தரித்தும். மீன்றோய்...........இடனேந்தியும் - நாண்மீனோடு பொருந்திய மதியாற்கொண்ட வலம்புரியை யிடத்தே பொறுத்து மெனக. என்னை? வான்றோய் கதிர்போன்ற திகிரியை, மீன்றோய் மதிபோன்ற வலம்புரியை யென வுவமைத்தொகைத்தொடர்மொழியன்றோவெனின், அன்று; "இமையாதமுக்கண், மூவரிற் பெற்றவ" ரென்பதுபோலக் கொள்க. ஈரிடத்தும் இன் சாரியை. ஆல் என்னு முருபு இல்லென மூன்றுவதைந்தனுருபாய் மயங்கின. கொண்ட வென்னும் வினையுந் தொக்கது. செல்வனை யென்பது தனிச்சொல். சீபாத முதலியவற்றை யுடையனாகித் திருமலைமே னிலைபெற்ற திருவுடையானைத் திரிவித காரணங்களானும் அருச்சனைசெய்பவராய்க் கைகளா னறுமலர் தூயவரிடத்துக் காலன் கனவிலுங் கனவிலு மணுகானென்றவாறு. இது பத்தடியாய்ச் செல்வனை யென்னுந் தனிச்சொற்பெற்று மூன்றடி நேரிசையாசிரியச்சுரிதகத்தா லிற்ற சிந்தடிவஞ்சிப்பா. அலங்காரமுந் தீவகமுந் துறையு மிதுவு மது.

மாலை, யாப்பருங்கலம், திருவாய்மொழி முதலிய பழைய நூல்களிலிருந்து மேற்கோள்காட்டப்பட்டுள்ளன. இந்நூலாசிரியர்செய்தருளிய திருக்குருகாமான்மியம், நம்பெருமாள்மும்மணிக்கோவை, மாறன்கிளவிமணிமாலை, இந்நூலுரையாசிரியர்செய்தருளியதாக நினைக்கப்படுகிற மாறன் பாப்பாவினம் முதலிய வைணவநூல்களிலிருந்தும் அடிக்கடி மேற்கோள்கள் காட்டப்பட்டிருக்கின்றன. திருப்பதிக்கலம்பகம் என்னும் நூலிலிருந்தும் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது. அந்நூலைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. மற்றைய உதாரணச்செய்யுள்களெல்லாம் நம்மாழ்வார்விஷயமாகவும், திவ்யதேசத்து எம்பெருமான்கள்விஷயமாகவும் வெண்பாமுதலிய பாப்பாவினங்களிற் பெரும்பாலும் அகப்பொருட்டுறைகளமையப்பெற்றனவாய் நூலாசிரியராற் செய்யப்பெற்றுச் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வுதாரணங்களெல்லாம் கற்பனைக்களஞ்சியமாய்ச் சொற்சுவைபொருட்சுவை நிரம்பி அழகாயிருக்கின்றன. பெரும்பாலும் உதாரணச்செய்யுள்களுக்குத் திணையும் துறையும் கூறப்பட்டிருக்கின்றன. சில உதாரணங்களுக்குப் பொழிப்புரையும், சிலவுதாரணங்களுக்குக் குறிப்புரையும் கூறப்பட்டுள்ளன. தண்டியலங்காரத்துட் கூறியிருப்பதுபோல இந்நூலிலும் ஆரம்பத்திற் பொதுப்பாயிரத்திலக்கணம் மிக விரிவாயும் தெளிவாயுங் கூறப்பட்டிருக்கிறது.

இத் தமிழணிநூலின்பொருளடக்கத்தையும் பெருமையையும் பின்வரும் நூற்பாவாலும், வெண்பாவாலும் ஒருவாறறிந்துகொள்க.

"ஆறெனத்தொகைவகையினில்விரித்தவற்றைத்
தேறமெய்பெறுகான்கெனத்தெரிசெய்யுளும்
பாகமோர்மூன்றும்பயில்குணம்பத்து
மாகவெண்ணென்கிரட்டியபொருளணியு
மடிமொழியெழுத்தினடுக்கினவாக
முடிவுறவகுத்தமூவகைமடக்கு
மூவினப்பாடன்முதலாமுறைமையின்
மேவினவிருபானாறன்மேலாறென
விழுமியமிறைக்கவிவிரித்தபின்னெஞ்சிய
வழுவமுவமைதியுமிவையெனவகுத்து
மொழிந்தவைம்மூன்றுடன்மூன்றுந்
தொழிந்தவுங்கோடலொள்ளியோர்கடனே"

64



பூங்கமலக்கோயிலாள்புத்தமிர்திளுட்பிறந்தாள்
வீங்குதுணைமுலையாள்வெண்ணகையா — ளோங்குபுனற்
பொன்னிநடுவுட்பொருண்மார்பகத்தாளென்
சென்னிபிரியாத்திரு. (120)

இது மகடூஉப் பொருட்டன்மை. இதனுள், பொன்னிநடுவு,— பொருள் என்ற திரண்டாற்றிடைக் கண்வளர்ந்த நம்பெருமாள். திணை— இதுவுமது. துறை - பெண்பாற்கடவுள்வாழ்த்து.

முப்புரிநூன்மார்பினன்முக்கோல்கைக்கொண்டுளான்
பொய்ப்புலனை[redacted]றபொறையுடையான்—மெய்ப்பொருளைச்
சேவிக்குநுண்ணுணர்வான்சிநிவாதன்றமியே
னுவிக்கருள்புரிந்தாள்வான். (121)

இஃது ஆடூஉ மக்கட்டன்மை. ஆவியை என்பது ஆவிக்கென இரண்டாவது நாலாவதாயிற்று. திணை - வாகை. துறை - தாபதவாகை; என்னை? "பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாம, லொருவழிப் படுப்பது தொகைநிலைப் புறனே", "மனத்தினை யொருவழி நிறுப்பது பொறையே", "நிறுத்திய மனத்தினை நிலைதிரி யாமற், குறித்த பொருளொடு கொளுத்துத னினைவே" என்ற முறையே தொகைநிலை பொறைநிலை நினைத லென்னு மூன்று மிப்பாட்டினுள்ளே கூறினமையான் "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்னுஞ்சூத்திரத்துள் 'நாலிரு வழக்கிற் றாபதபக்கமு' மென்னு மெட்டனுள் தவஞ்செய்து யோகம்பயில் வார்க்குரிய விம்மூன்றும் வந்தமையா லெனக்கொள்க.

கூரெயிற்றாருண்கண்ணார்கொம்மையிளமுலையார்
வார்புருவத்தார்திலகவாணுதலார்—காரகத்தெம்
மால்வரையாரெண்ணிறந்தமாதருணின்றற்குறித்த
கோல்வளையாராரிறைவகூறு. (122)

இது மகடூஉமக்கட்டன்மை. கூரெயிறு - கூரியபல். உண்கண் - மையுண்கண். கொம்மை - திரட்சி. இளமை - மேனிவனப்பு. வார்புருவம் - நீண்டபுருவம். கோல்வளை - திரண்டவளை. வாணுதல் - ஒளிபொருந்திய நுதல். பகுதி - சேட்படை. துறை - அறியாள்போன்றவனினைவுகேட்டல்.

வள்ளுகிருந்தோலடியுஞ்செவ்வாயும்வார்சிறைகூர்
புள்ளியுமென்சூட்டுமுறுபொற்பினதா—மொள்ளியனை
மாறிவருவாதியனைவென்றமகிழ்மாறனு
லேறிவருவெள்ளோதிமம். (123)

இஃது உயிருளதா யியங்கு மஃறிணைத்தன்மை. வள் - கூர்மை. தோலடி - என்பில்லாத அடி. புள்ளி - பொறி. திணை - பாடாண் பொதுவியல். துறை - அன்னவாழ்த்து. என்னை? பாலறிமரபிற் பொருநர் கண்ணும் வாகைத்திணையுட்கூறிய சூத்திரம்போல வென்றி கூறாது அன்னத்தினது தன்மைகூறியதனுனும் வ[illegible]தல்லாம் பாடாணுத லானுமுணர்க.

பரியனைத்தாய்த்திணிவயிரம்பயின்றநிலங்கிளேமுதற்றாய்
விரிசினைத்தாய்ப்பசுந்தழைத்தாய்விரைமலர்த்தாய்விழைகனித்தாய்ப்
பெரியகதிரவன்மறைந்தபிழம்பிருட்குமுறங்காது
வரிவளேயூர்புனற்குருகூர்மகிழ்மாறர்திருப்புளியே. (124)

இஃது உயிருளதாகி யியங்கா வஃறிணைத்தன்மை. இவையிரண்டுங் கடவுட்டன்மையுடைத்தாயினு முலகின்கட் டோன்றும் வடிவ மஃறிணைத்தன்மையவாதலி னிங்ஙனம் கூறுவதாயிற்று. திணை - இதுவுமது. துறை - தாவரவாழ்த்து. பா—தாவுகொச்சகக்கலிப்பா. இருள் - ஆகுபெயர்.

ஆதாரபீடத்தமர்ந்துயர்ந்தபாதசெடி
மீதாயமூர்தமிதித்துநிமிர்தாட்டுணைத்தாய்த்
தாழ்ந்ததுதிக்கையினைத்தாவியிருகைபற்ற
வாழ்ந்தபகுவாயகத்தோங்குநாவின்
வளையெயிற்றுக்கூர்ங்கோட்டுவான்பிடர்வீழ்கற்றை
யுளைவனப்பிற்பாங்கருயர்செவித்தாயொண்கருக்கி
னூழொன்றியசீர்த்தோரேற்றமுறுமாளியின்மே
லாழுங்குடைத்தாயதன்மேற்கொளாளியதாய்
நான்றநிலைப்போதிகைத்தாகாவிநீர்வண்புளிக்கீழ்த்
தோன்றுதிருக்காவணக்கற்றூண். (125)

இஃது உயிரிலஃறிணைத்தன்மை. இது பத்தடியான்வந்த பஃறொடைவெண்பா. திணை - இதுவுமது. துறை - மதலைவாழ்த்து.

நீண்டசெவியுறவினீள்புருவத்திம்பரொளி
கூண்டுபயநோக்கமுங்கைக்கொண்டதாம்—பாண்டவர்தந்
தேர்ப்பாகனுனசிறுபுலியூரானுலகங்
காப்பான்றன்மால்வரையாள்கண். (126)

இது சினைத்தன்மை. உபயநோக்கம்—அருளுேக்கமு மருளுேக்கமும். பகுதி - சேட்படை. துறை - கண்ணயப்புரைத்தல்.

கைச்சிரத்தானுந்து திப்பக்கன்றினாகந்திறந்து
பச்சிரத்தமுண்டுயிருண்பான்மைத்தே—வச்சிரத்தாற்
குன்றெறிந்தானும்பரவுங்கோயிலான்பாரதப்போர்க்
கன்றெறிந்தவன்சக்கரம். (127)

இது வினைத்தன்மை. ஆகம் - மார்பு. திறத்தல் - பிளத்தல். பச்சிரத்தம் - குளிர்ந்த ரத்தம். அன்று - முற்காலத்து. குவ் வுருபு மயக்கம். திணை - வாகை. துறை - திகிரிவென்றி.

பூரித்துடலம்புளகித்திடப்புலமை
சீரித்துயிர்தளிர்ப்பச்சோர்ந்துருகும்—பாரித்த
முத்தமிழ்மாறன்ஞானமுத்திரைக்கைகண்டுதொழு
முத்தமராய்வாழ்வாருளம். (128)

இது பண்புத்தன்மை. பூரித்தல்—தடித்தல். புளகித்தல்-உரோமஞ் சிலிர்த்தல். புலமை - அறிவின்றன்மை. சீரித்தல் - இடைவிடாமற் பழகுதல். தளிர்த்தல் - தழைத்தல். சோர்ந்துருகுதல் - பரத்துவ சொரூபத்தை யோகித்துக் குழைதல். பாரித்தல் - விரித்துரைத்தல். முத்தமிழ்—சித் தசித் தீச்சுர மூன்றுங் கூறுந் தமிழ்; அது திருவாய் மொழி. உளம் - ஆன்மஞானம். முத்தமிழ்மாறன் ஞானமுத்திரைத் திருக்கையைக் கண்ணிறுற் கண்டுங் கையிறுற் றொழுது முத்தமாய் வாழ்வாரது ஆன்மஞானமான துடலந் தடித் துரோமஞ் சிலிர்ப்பப் பரத்துவஞானத்தோடும் பயின்ற பரத்துவசொரூபத்தை யோகித்துக் குழையு மெனக் கூட்டுக. திணை - பாடாண். துறை — பழிச்சினர்ப் பரவல்.

உற்றபாமேட்டிமுதலோங்கியவைம்பூதநிலை
பெற்றுளதாய்ச்சோதிப்பிழம்பதாம்—பற்றிலர்பே
ரானந்தமெய்துவதாமாதியிடையென்பவுடன்
றனந்தமில்லான்றலம். (129)

இஃது இடத்தன்மை. பாமேட்டி முதலாய வைம்பூதமாவன:— பரமேட்டி, புமான், விச்சுவம், நிவிர்த்தி, சருவன். இது பாமபதமாகிய இடத்தன்மை. திணை - பாடாண்பொதுவியல். துறை—புலவரேத்தும் புத்தேணாடுவாழ்த்து. புலவர் - நித்தியசூரியர்.

ஏழுவரணமிசைந்தீர்ந்தண்புனற்பொன்னி
சூழாமணிமாடஞ்சூழ்ந்துளதா—வாழ்மறையோர்
வேதவொலியும்விழாவொலியுங்கூர்தகைத்தா
நாதனரங்கநகர். (130)

இதுவும் இடத்தன்மை. திணை - இதுவுமது. துறை . நகர் வாழ்த்து.

தேவும்புவனமுந்திரண்டமன்னுயிர்
யாவும்யாவருமிறந்தொடுங்கியஞான்
றொருபெருந்திருமாலுந்தியங்கமலத்
தருள்பகிரண்டகோடிகளைமவற்று
ளொன்றயனுலகாதியாயவிரேழி
னயனிலைமேருநடுக்கொள்பூலோக
நவகண்டமதாநாவலந்தீவொடு
முவரொன்றியநீருடைக்கருங்கடலொடு
மேழ்பெருந்தீவுமேழ்பெருங்கடலும்
வாழ்வுடைத்தாகியும்வானவர்வைகு
மேமபூதலமிடையிடுகிரிக்
காமர்மால்வரைகடந்தநள்ளிருளா
யண்டபித்திபினகத்தண்டகோளகைக்கீழ்
மண்டுமொழ்புனற்குமேல்வடக்கொடுகுணக்கெதி
ரைப்பதுகோடியோசனைத்தெனவளவை
யும்பரோடிம்பருமுணர்வுறவுணர்வான்

நீதருபான்மையிற்றெருட்டும்
போதமூற்றோங்கியபுராணசித்தமதே. (131)

இதுவும் இடத்தன்மை. திணை - இதுவுமது. துறை - பொண்ட வாழ்த்து. இதனுள், தே என்றது அன்னியதெய்வங்கள். புவனம் - இருநூற்றிருபத்துநாலு புவனமும். யாவும் யாவரும் - அஃறிணைகளும் உயர்திணைகளும். மேருநடுக்கொள்பூலோகம் - மேருவைத் தனது மத்திமத்தே தாங்கிக்கொண்ட பூலோகம். வானவர் வைகு மேமபூதலமிடையிடுதிகிரிக் காமர்மால்வரை - கடவுளர் அரமகளிரோடு மினபமெய்தி வைகும் ஏமபூதலத்தை நலலதண்ணீர்க்கடற்குந் தனக்கும் நடுவாகவைத்த சக்கரவாளகிரி யென்னு மழகிய பெரிய மலை. மண்டுமாழ்புனல் - கொப்போதகம். வடக்கோடு குணக்கெதிர் என்பது வட திசைக்குங் கீழ்த்திசைக்கு மவற்றிற் கெதிரான தென்றிசைக்கும் மேற்றிசைக்கு மென்பதாம். புராணசித்தம் - ஆகுபெயர். ஒழிந்த அகலமுமுறையிற்கொள்க. பா - நேரிசையாசிரியம். எனவு மென்னு மும்மையெச்சவும்மைபாதலாற் காலத்தன்மையு முள.

நித்தமாய்மூன்றுநெறித்தாயிலவமுதல்
வைத்தபான்மைக்குரித்தாமாண்பிற்றே—பத்திகிரிச்
செங்கண்மாலுந்தியின்மேற்செங்கமலத்தோன்முதலா
மங்கண்ஞாலம்புகழ்காலம். (132)

இது காலத்தன்மை. இதனுள் மூன்றுநெறியென்றது இறப்பெதிர்வு நிகழ்வு. இலவ முதலியனவும் முறையே பிரமகற்பமீறாக வுணர்ந்துகொள்க. திணை - பொதுவியல். துறை - பருவவாழ்த்து. (சு)

தன்மையலங்காரம் முற்றும்.

---

## உ-வது உவமையலங்காரம்.



92. உவமையின்வகையையுணருங்காலை
வினைபயனுறுப்புருவென்றநான்கினுந் வகை - 4.
தமிதமிநிகழ்ந்தாந்தம்மின்விரவியுங்
காதல்சிறப்பேகலன்வலியுடனிழி । நிலன் - 5.
போதியவைந்துமுறுநிலைக்களனு ।
பிறந்திணையம்பாலிவற்றொடுமயங்கியு | மயக்கம்
முதலொடுசினைகளின்முறைமையிற்பிறழ்ந்து

முதல்சினைவினைகுணமின்றியுமுயர்ந்தும்
பெருமையுஞ்சிறுமையும்பெற்றியிற்சிறந்து
மெண்மெய்ப்பாட்டினெழில்பெறமரீஇ
யகத்தினும்புறத்தினுமமர்தருநெறித்தா
யுரனுடையுரவோருளங்கொளமுதனூல்
வரன்முறைபுணர்க்குமாண்பிற்றாகும்.

(எ-ன்) வைத்தமுறையானே உவமையென்னு மலங்காரத்தினது பொதுவிலக்கண முணர்—ற்று.

(இ-ள்) உவமையென்னு மலங்காரத்தினது கூறுபாட்டை யாராயுமிடத்து வினையும் பயனு மூறுப்பு முருவு மென்னு நான்குங் காரணமாகத் தோன்றுவனவாகியும், அங்ஙனந் தோன்றுவன வொருபொருளோடொருபொரு ளுவமஞ்செய்யும்வழி யொன்றேயன்றி யிரண்டு மூன்று விரவுவனவாகியும், காதலுஞ் சிறப்பு நலனும் வலியு மவற்றோடுங் கிழக்கிடும்பொருளுமாகிய வைந்துந் தமக்கு நிலைக்களனாகியும், உயர்திணைக் குயர்திணையு முயர்திணைக் கஃறிணையு மஃறிணைக் கஃறிணையு மஃறிணைக் குயர்திணையு மாண்பாற் காண்பாலு மாண்பாற்குப் பெண்பாலும் பெண்பாற்குப் பெண்பாலும் பெண்பாற் காண்பாலும் ஒருமைப்பாற் கொருமைப்பாலு மொருமைப்பாற்குப் பன்மைப்பாலும் பன்மைப்பாற்குப் பன்மைப்பாலும் பன்மைப்பாற் றொருமைப்பாலு மயங்காதும் மயங்கியும், முதற்கு முதலும் முதற்குச் சினையும் சினைக்குச் சினையுஞ் சினைக்கு முதலுமாகப் பிறழாதும் பிறழ்ந்தும், முதலுஞ் சினையும் வினையுங் குணனு மின்றியு முவமங் கூறுவனவாகியும், பொருளினுயர்ந்தும் பொருளினிழிந்து முவமை யுயர்ந்து மிறப்பவுயர்வு மிறப்பவிழிவு முவமிக்குங்காலின்றாகச் செய்யாது கேட்போர் மனங்கொள்ளும்படி சிறப்பிற்றீரவாகிச் சேர்தலியல்புசிறந்தும், எட்டு மெய்ப்பாட்டினோடுங் கூடி யழகுபெறு நிலைமைத்தாகி, அகப்பொருளினும் புறப்பொருளினுஞ் சென்று பொருந்துநெறியை யுடைத்தாய்க் கற்றுவல்ல அறிவுடையோ ரறிவிற்குப் பொருந்த முதனூல் வாலாற்றுமுறைமையிற் றிரியாது சேர்க்கப்பெறும் பெருமையை யுடைத்தென்றவாறு.

இதனுள் நான்கினுமென்ற வும்மை யெச்சவும்மையாகலா னவை நான்குமே காரணமாகியவற்றோடுஞ் சொற்பொருள் காரணமாகவும்

உவமை பிறக்குமென்றவாறு. அவை மேற் கூறப்படும். மயங்கியும் பிறழ்ந்து மென்பது எதிரதுபோற்றுந் தந்திரவுத்தி. இவற்றிற்கெல்லாம் உதாரணம் உரைநடையானுஞ் செய்யுணடையானும் வருமாறு:—

புலியன்ன மறவனென்பது வினையுவமம். 'மாரியன்ன வண்மை'யென்பது பயனுவமம் 'துடியன்ன விடை'யென்பது உறுப்புவமம். 'செவ்வானன்ன மேனி'யென்பது உருவுவமம். 'செவ்வானன்னமேனி' யென்பது வண்ணமொன்றுமே பற்றி யுவமஞ்சென்றது. "ஊர்ந்ததேறே சேர்ந்தோளுமையே, செவ்வானன்னமேனியவ்வா, னிலங்குபிறையன்ன விலங்குவால்வையெயிற்" றென்பது வண்ணத்தோடு வடிவும் பற்றி யுவமஞ் சென்றது.

வள்ளைக்கொடிமிசைபாய்மைக்கயல்போல்வார்குழையி
னுள்புக்குலாவருமையுண்கண்ணாய் — புள்ளார்
வகுளாம்புயன்வரைமேல்வான்பிறைக்குஞ்செங்கை
முகுளாததென்னோமொழி. (133)

இதனுள் வினையு முருவு முறுப்புமாகிய மூன்றுவமையு மொரு பொருட்கண்ணே பிறிதொருபொருளுங்கூடி வந்தவாறு காண்க. இவை விரவுவமை. பகுதி - நாணநாடல். துறை - பிறைதொழுகென்றல்.

நிலைக்களன்,

"பாவையன்ன பலரா[illegible]மாண்கவின" எ-து மகளகட்சென்ற காதலுவமைக்கு நிலைக்களனாயிற்று. 'என்றூனை' யென்பது மது. "முரசமுழங்குதானை மூவருங்கூடி, யரசவையிருந்த தோற்றம்போலப், பா[illegible] பற்றிய பயனுடையெழாஅற், கோடியர்தலைவகொண்டதறி" என சிறப்பினாற்பெற்ற வுவமமாதலிற் சிறப்புநிலைக்களனாயிற்று. உலகத்து ளியல்புவகையானன்றி விகாரவகையாற் பெருஞ் சிறப்பு 'ஓவத்தன்ன விடனுடைவரைப்பின்' எனபுழி அக்கரின செயற்கைநலந் தோன்றக் கூறினமையின் நலனிலைக்களனாயிற்று. நலனென்பது அழகு. 'அரிமா வன்னவணங்குடைத் துப்பிற், றிருமாவளவன்றெவ்வர்க்'கென ஒருவன் வலிநிலைக்களனாயிற்று. "அரவுநுங்குமதியி னுதலொளிகரப்ப" என்றது ஒன்றினிழிபுதோன்ற வுவமித்தமையி னிழிபுநிலைக்களனாயிற்று.

குமரனனையா னுங்குறமகளன் னாரு
மமரர்குழாமெனக்கண்டன்பர்—தமரணங்கே
நின் றிறைஞ்சுமாயோனை நின் றவூரங்கிதன்முன்
சென் றிறைஞ்சவார்கீதிருப்பு. (134)

உவமைமயக்கம்

இதனு ளுயர்திணைக் குயர்திணையும் ஒருமைப்பாற் கொருமைப் பாலும் பன்மைப்பாற்குப் பன்மைப்பாலும் ஆண்பாலுக் காண்பாலும் பெண்பாற்குப் பெண்பாலும் வந்து திணையும் பாலு மயங்கா துவமை யாயிற்று. பகுதி - உடன்போக்கு. துறை - இயைபெடுத்துரைத்தல். நகரடைந்தமைகூறலுமாம்.

"மகிழ்வார்க்கு மல்லார்க்குந், தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூரனீ," "கலங்கவிழ்ந்தநாய்கன்போற் களைதுணைபிறிதின்றிப், புலம்பு மென் னிலைகண்டும் போகலனே யென்றியால்" என்பனவிவை யாண் பாற்குப் பெண்பாலும் பெண்பாற் காண்பாலு மயங்கிவந் துவமை யாயிற்று.

அரிக்குழாமன்னவடலரக்கர்வாவும்
பரிக்குழாந்தேர்க்குழாம்பாயுங்—கரிக்குழா
மோர்வாளிபட்டுருள்வானெங்குசிலைக்கால்வளைகைக்
கார்வானமாலிமையோர்கண். (135)

எனவும்,

பிறைபுரைவெண்கோட்டுப்பிணர்த்தடக்கைவேழத்
திறைபுரந்தபொன்னகருக்கிப்பா—றுறைதருவான்
பூணவாவற்றெனமால்பொற்புருடையாட்கிரங்கும்
வேணவாநெஞ்சேவிடு. (136)

எனவும், வரு மிவற்றுள் உயர்திணையாண்பாற்பன்மைக் கஃறிணையாண் பாற்பன்மையும் அஃறிணைப் பன்மைச்சினைக் குயர்திணை யொருமை முதலும் மயங்கிவர் துவமையாயிற்று. வேழத்தையுடையவிறை - ஈண் டிந்திரன். அற்றென - அதுபோலுமென. பூணவா - மனத்துட்பூண்ட ஆசை. வேணவா—வேட்கைப்பெருக்கம். இவ் விரண்டினுண் முன்னது திணை - வாகைப்பொருளியல். துறை - வில்வென்றி; அல்லது திணை- பாடாண். துறை - கடவுள்வாழ்த்துமாம். பின்னது பகுதி—இரவுக்குறி. துறை - அருமைகேட்டழிதல்,

முத்தநகைவெம்முலைபோன்மலைகொடியே
யெய்த்தவிடைநுதலுக்கேந்திழா—யொத்ததா
னேற்றுருவங்கொண்டநிலாத்தனிரேகூற்றுருவம்
வேற்றுருவங்கொண்டனையாண்மெய். (137)

இதனுள், பன்மைச்சினைக்குப் பன்மைச்சினையும், பன்மைச்சினைக் கொருமைமுதலும், ஒருமைச்சினைக் கொருமைமுதலும், ஒருமைச் சினைக்கு ஒருமைச்சினையும், பெண்பாற் காண்பாலும் மயங்காதும் மயங்கியும்வந் துவமையாயிற்று. இதனுள் முத்தமும் நகையும் முலையும் சாதியேகவசனம். பகுதி - சேட்படை. துறை - தலைவன் பாங்கிக் கவயங்கூறல்.

'கருஞாயிறன்னான்,' 'விசும்புதோலுரிப்பனபோல,' 'மலைநடந்தனைய,' 'அமிர்துபுளித்தாங்கு' இவை முதலுஞ் சினையும் வினையுங் குணமு மில்லாதன வுவமையாயின.

"கடல்கண்டன்னகண்ணகன்பரப்பின்," "மாரியன்னவண்மைத், தேர்வேளாயைக்காணிய," "தெள்ளமிர்தென்னத்திருந்தியதேமொழி," "ஏறுபோற்பீடுநடை" என்பன உவமையினதுயர்ச்சியாற் பொருட் குயர்ச்சியாயின.

"அவாப்போலகன்ற வல்குன்மேற் சான்றோ, ருசாப்போல வுண்டே மருங்கு" லென்பன கழியபெரியவாயினுங் கழியசிறியவாயினுஞ் சிறப் பிற்றீராவுவமையாயின. சிறப்பிற்றீர்வனவு முவமவொழிபிற் கூறுப. எண்மெய்ப்பாட்டினும் அகத்தினும் புறத்தினும் வருவன முந்து நூல்களுட் கண்டுகொள்க.

அஃதாக; இதன் முதனூல்செய்த தெண்டியாசிரியர் பண்புமுத லாகக் காரண மூன்றென்ப துணர்ந் திந்நூலுடையா ருறுப்பினைக் கூட்டிக் காரணநாலென்பதூஉம் நிலைக்களனொன்றென்பதூஉம் மிகைபடக் கூறலென்னுங் குற்றமாமாலோவெனின்? ஆகாது; என்னை? தெண்டி யாசிரியர் "வடிவி னளவின் வண்ணத்தின் வரூஉ" மென்னுஞ் சூத்திர நோக்கி வடிவும் பண்பினுளடங்குமென் றுட்கொண்டாரே யிந் நூலுடையார், உற்றுணரும் பண்பும் கட்புலனாம்பண்பு மெனப் பண்பினை வேறுபடக் கொண்டார், அன்னனங்கோடல் வடிவுபற்றியபண்பு இருளின்

கண்ணும் உற்றுணரப்படும்; வண்ணமாகிய கட்புலனும் பண்பு அவ்வா றுணரப்படாதாதலால் வடிவினைக்கூட்டி நாலென்றார். அன்றியும், "வினை பய மெய்யுரு வென்ற நான்கே, வகைபெற வந்த வுவமைத் தோற்றம்" எனவு மிக்கருத்தேபற்றி முதனூல்செய்த ஒல்காப்பெருமைத் தொல் காப்பியனாருங் கூறினார்; இதற் கதுவு முந்து நூலாகலின் அவர்கருத்தே யிந்நூலுடையாரும் உட்கொண்டாரென வுணர்க.

அன்றியும், "விரவியும் வரூஉ மரபின வென்ப," "சிறப்பே நலனே காதல் வலியோ, டந்நாற் சொல்லு நிலைக்கள னென்ப," "கிழக்கிடும் பொருளோ டைந்து மாகும்," "முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு, நுதலிய மரபி னுரியவை யுரிய," "உயர்ந்ததன மேற்றே யுள்ளுங் காலை," "பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக், குறிப்பின் வரூஉ நெறிப்பா டுடைய," "பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பா டெட்டன், வழிமருங் கறியத் தோன்று மென்ப" எனவுங் கூறிய சூத்திரங்களானு மேனையவு முணர்க. (எ)

93. அதுவே,

நிறையினுங்குறையினுநிகழ்ந்துதனெறித்தாய்த்
துறைதொறும்பழமையும்புதுமையுந்தோய்ந்து
விரிபினுந்தொகையினும்விழுமிதினடைபெறும்.

(எ-ன்) இதுவும் அவ் வுவமைக்காவதோர் பொது விலக்கண முணர்-ற்று

(இ-ள்) அதுவே—அவ்வகைப்பட்ட வுவமை யென்னுமது, நிறை வுவமை குறைவுவமை யெனப் புலவராற் கூறுதலைத் தனக் கிலக்கண நெறியாகவுடைத்தாய் வினைமுதலாய் நால்வகைப்பட்ட இடந்தோறு முந்து நூற்புலவராற் கூறப்பட்ட தொன்மைத்தாகியும், அதன்பின்னர் அவ்வக்காலத்துப் புலவராற் புதுவதுபுதுவதாகக் கூறப்பட்டுவரு வனவுமாகப் பொருத்தமுற்று விரியுவமை தொகையுவமை யென இரு திறத்தினும் விழுமிதாக நடைபெறு மென்றவாறு.

விழுமிதினென்று சிறப்பித்தவதனால் இவைநான்கும் இனிமேல் வரும் விரியுவமையினத்திற்கும் பொதுவாமெனவும், இன்னு மவ்விரே முரனே அவற்றுள் விரியுவமையுந் தொகையுவமையும் வினைமுதலிய

"வாய்ந்ததிருப்பதிநாற்றெட்டினையும்வாழ்த்தியே
யாய்ந்ததமிழ்மாறனணியெனப்பேர்—தோய்ந்துளதாற்
காண்டகுசீர்மற்றோரணியுங்கவின்புணர்க்க
வேண்டுமோவீங்கிதற்குமேல்"

சுமார் நூறுவருஷங்களுக்குமுன் 'கர்னல் மெக்கன்ஸி' துரையவர்களால் மிக்க திரவியச்செலவுசெய்துசேர்க்கப்பெற்று இப்போது துரைத்தனத்தாரிடமிருக்கும் சென்னை இராஜாங்கப்புத்தகசாலையில் இந்நூலின் காகிதக்கையெழுத்துப்பிரதியொன்றிருப்பது, சில பெரியோர்களுக்குத் தெரிந்தவிஷயம். கிரந்தமந்தணகூடம் (Tamil Museum) என்றபெயர் வைத்துக்கொண்டு அநேக சாஸ்திரங்களைவெளியிடப்போவதாய் முன்னுக்குவந்த S. சாமுவேல்பிள்ளை என்பவர், சுமார் 55-வருஷத்துக்குமுன், தாமச்சிட்ட 'தொல்காப்பிய நன்னூல் ஐககண்ட்ய'புஸ்தகத்தில் இந்நூலைப்பற்றிப் பிரஸ்தாபித்துள்ளார். மகா-ா-ா-ஸ்ரீ சூரியநாராயண சாஸ்திரியாரவர்களும், மகா-ா-ா-ஸ்ரீ செல்வக்கேசவராயமுதலியாரவர்களும் தாங்களியற்றிய தமிழ்ப்பாஷைவிஷயமான நூல்களில் இந்நூலைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். சென்னையில்வசித்த வைணவவித்வான்களாகிய மகா-ா-ா-ஸ்ரீ இராஜகோபாலபிள்ளையவர்கள் முதலியோர் இந்நூலை அச்சிட எண்ணிப் பொருண்முட்டுப்பாட்டால் நின்றுவிட்டனர். முதன் முதல்வெளியான செந்தமிழ்ப்பகுதியினின்று, காலஞ்சென்ற ஸ்ரீமாந். பாண்டித்துரைத்தேவரவர்களும், முன்பு செந்தமிழ்ப்பத்திராசிரியரா யிருந்த ஸ்ரீ உ. வே. ரா. இராகவையங்காரவர்களும் இந்நூலை அச்சிடுவதைச் சங்கத்தின்முதனோக்கங்களுளொன்றாகக் கொண்டிருந்தனரென்பது தெரிகிறது. எக் காரணங்களாலோ அவர்கள் எண்ணம் நிறைவேறவில்லை. இத்தகைய அரியநூல்களை யச்சிட்டுத் தமிழகத்திற் குபகரித்துவரும் தமிழ்ச்சங்கத்தார்க்குத் தமிழபிமானிகள் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

## நூலாசிரியர்.

பெயர்:—இவ் வரியபெரியநூலை இயற்றியவர் திருக்குருகைப் பெருமாள்கவிராயர். திருக்குருகைப்பெருமாள் என்றால், திருக்குருகையென்னும் ஆழ்வார்திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வார் என்று பொருள். "திருக்குருகைப்பெருமாள்தன் திருவடிகள்வாழியே" என்பது [illegible] அப்பிள்ளை அருளிச்செய்த நம்மாழ்வார்விஷயமான

நான்கினோடு மெட்டாமெனவுங் கொள்க; என்னை? "நாஷிரண் டாகும் பாலுமா ருண்டே" என்றாராகலின். (அ)

94. அவற்றுள்,
முக்கியப்பொருட்டிற முற்றுதனிறைவே.

நிறைவுவமை

(எ-ன்) நிறைவுவமையின திலக்கண முணர்-ற்று.

(இ-ள்) உவமேயத்தி னுன்குகூறுபாடு முவமையினு முற்றக் காண்பன நிறைவுவமையா மென்றவாறு.

ஆராவமுதமளித்ததிருபப்பாற்கடலு
ஞாராயணனாகணைமீது—நேரிழா
யெப்படியேகண்வளராநின்றானெனுமரங்கத்
தப்படியேகண்வளர்வானும். (138)

இது நிறைவுவமை. இதனுள், திருப்பாற்கடனுதனுவமை. ஆரிய ரிதனைப் பூரணவுவமை யென்ப. அங்ஙனமாதல், அவன் கண்வளரா நின்றதுபோல விவனுங் கண்வளராநின்றானென வினையுவமையும், அவன் றிருமேனி யெப்படியேயிருக்குமென்னும் அப்படியே யிவன் றிருமேனியுமிருக்கு மெனவே வடிவினோடு காந்தியாகிய பண்பும், அவனைச் சேவிப்பார்க் கச்சேவை காரணமாக முத்தியாகியகாரியம் பயக்குமது போல விவனைச் சேவிப்பார்க்கு முத்தியாகியகாரியம் பயக்குமெனப் பயவுவமையும் உவமையாகிய திருப்பாற்கடலிடத்தும் வினைமுதலிய நான்கும் பூரணமாகி யுவமை யுயர்ந்தபடியுங் காண்க. எப்படியே கண் வளராநின்றானெனு மென்பது பிரமன்முதலாயினோர்புராணங்க ளெப்படியேகூறுமென்பதாம். பயவுவமையென்பது ஒன்றன்றொழி லேதுவாகப் பிறக்குங் காரியம். அஃதெச்சமாயிற்று. நேரிழா யென்பது மகடூஉமுன்னிலை. இரண்டாற்றிடையரங்கத்துத் திருமதிட்குப் பாற் கடனள்ளிடை யாவரண முவமை. திணை-பாடாண். துறை-கண்படை வாழ்த்து.

பனிமதிக்கிரணம்வியன்களநிவெட்
பார்துடல்கதுவுபோர்ப்பாய்மா
முனியுறப்பொழியுமிருண்மதமுடுக்க
மூரணிழந்திரியல்போய்வேடர்

குனிதிரைத்திருப்பாற்கடலினைக்கடைநாட்
கொதித்தெழுங்கருவிடந்தொடரத்
தனிதனியுலக்கற்றறிவிழந்திரிந்த
தலைமைவானவரையொத்தனரே. (139)

இதுவுமது. இதனுள், திருப்பாற்கடலீன்ற கருவிடந் தொடர்ந்தது வெண்ணிலவு வியன்களநடுவட் பார்த்துடல் கதுவிய போர்ப் பாய்மாப் பொழியு மிருண்மத முடுக்கினதற் குவமை. முரணிழந் திரியல்போயவேடரென்பது தனித்தனி யொருவர்க்கொருவ ருதவாது ஓடின தலைமைவானவரை யொத்தன ரென்றவாறு.

இருண்மத முடுக்கவெனவே பண்பும் வடிவும் வினையுவமையும், அறிவிழந்தெனவே அதனலாய காரியமாதலாற் பயனுவமையுமாகிப் பூரணவுவமையாயவாறு காண்க. (௧)

95. ஒன்றாதியசிலவொப்பது குறைவே.

(எ-ன்) குறையுவமையாமா றுணர்-ற்று.

(இ-ள்). உவமேயத்தின் வினை முதலிய கூறுபாடு நான்கும் ஒவ்வாது அவற்றுள் ஒன்றுமுதன் மூன்றொப்பது குறையுவமையா மென்றவாறு.

இஃது "ஒரீஇக் கூறலு மரீஇய பண்பே" என்பதன்பாற்படும்.

வாவித்திருக்குருகூர்மாறநின்வண்டமிழென்
னாவிற்கினிமைநயப்பதாற்—றேவர்
மருந்துநிகரென்றேமதித்துரைப்பன்முற்றப்
பொருந்துவமற்றின்மையினிப்போது. (140)

இஃது ஒன்றொத்த குறையுவமை.

வெள்ளைப்பிறைக்கோட்டுவெங்கரியைவென்றவீற்
பிள்ளைப்பெருமான்றென்பேரைவாழ்—வள்ளைக்
குழையாரைத்தோய்ந்தகன்றகொற்றவனைக்காய்ந்த
பிழையார்பொறுப்பார்பிறர். (141)

இஃது இரண்டுபெற்றவுவமை.

பாயுங்கருங்கயல்போற்பாங்கியிவளென் றுமருங்
கேயும்படிதாவினதியற்பாத்—தோயும்
புவிகாவலர்புகழ்மால்புட்குழியாள்செவ்விக்
கவினனைத்துலவுண்கண். (142)

இது தொழில் பண்பு வடிவு மூன்றும்பெற் றொன்று குறைந்த வுவமை.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றேயுலகு" "மாதர் முகம்போ லொளிவிட, வல்லையேற், காதலை வாழி மதி" என்பனவும் எடுத்துக்காட்டுவமை எனவும், ஒன்றொத்த குறைவுவமை எனவும் படும்.

செய்யகமலமுகஞ்செங்கனிவாய்முத்தநகை
வெய்யகளபமுலைமின்மருங்குன்—மொய்யிழாய்
பையரவப்பாயலான்பாடகத்தான்மால்வரைவாழ்
தையலடிமாந்தளிர். (143)

இதுவுமது. பகுதி - சேட்படை. துறை - தலைவன்பாங்கிக் கவயவங்கூறல். வடநூலார் உலுத்தவுவமையென்பது மிது.

முந்து நூற் புலவராற் கூறப்பட்டுத் தொன்றுதொட்டுவரு முவமை யாவன:—'புலிபோற்பாயுமறவன்,' 'மாரியன்னவண்மை,' 'துடிபோற் சுருங்கு மருங்குல்,' 'பவளம்போன்ற செவ்வாய்,' 'குறைபடுமதியந்தே யக்குறுமுயறேய்வதேபோல்,' 'நஞ்சுமமிர்தமுமேபோல் குணத்த,' 'கருமணியம்பாலகத்துப்பதித்தன்ன,' 'பொருகயற்கண்' என்பன முதலியன.

அதன்பின்ன ராகுங்காலங்கடோறும் புலவராற் புதுவதுபுதுவ தாகப் புணர்த்தவற்றுட் சில வருமாறு:—

கோழரையகாஞ்சிரைதாம்பழுத்தருகேநிற்பவற்றிற்
குறுகாதாங்குக்
காழிலவாங்கொழுங்கதலிக்கனிகளைச்சேட்சென்றருந்துங்
கவிகண்மார்க்க
மூழிலவாய்ப்படைத்தபொருள்பிறர்க்குதவாவுலுத்தரைநீத்
துசிதமான
வாழ்வுடையோர்பொன்மனைச்சென்றமிர்தருந்திப்பசிதணிவார்
மார்க்கமாளும். (144)

வாசமொருசிறிதின்றியிணைசூழ்த்தசெம்மலர்தம்
மருங்காய்நிற்பப்
பூசல்வரிவண்டினங்கணீளிடைப்போய்வாவிதாம்
பூந்தேன்மாந்த
ஆசறக்கற்றுணர்ந்தறியாரவைக்களநீத்தேசெலச்சொல்
பவராய்நுண்ணூல்
காசறக்கற்றவர்கழகத்தடைந்துநலனுணர்பவர்தங்
காட்சிமானும். (145)

உற்றவயக்களிற்றினொடும்பிடியினையாங்கொருபாந்த
ளொருவாய்க்கொள்ளக்
கற்றதுகண்டிருதலைப்புளவற்றிருகைகவர்ந்தெடுப்பக்

பற்குலமுக்கிடருழத்தறீவினைவந்தடியிடுநாட்
பசையதாகப்
பெற்றபொருளினைப்பேணிமுதலுமிழந்திடருறுவோர்
பெற்றிமானும். (146)

உச்சவான்மலைச்சிகரத்துறுகொடிகள்படர்பாங்க
ருடையவாகும்
பச்சைவேய்ங்கழைத்தலையிற்சுழல்வனவாய்த்தோகைநடம்
பயிலுநீர்மை
மொய்ச்சலாங்குழற்கழைக்காரிகைபாசம்பூண்டகழை
முடிமேனின்றே
விச்சைமேதகப்பவுரிகாட்டுவதாமெனக்கவினும்
விளம்பின்மன்னே. (147)

காவின்மேற்படுபலவின்கனிகடுவன்கொடுசினைதாழ்
காமர்வல்லி
மாவின்மேற்படர்ந்ததன்மேன்மந்திகடாம்வயிற்றிடையே
மகவைத்தாங்கித்
தாவினூற்றவருடைத்தாமெனவருவதொடுபோகுந்
தன்மைகூத்த
ரோவில்வான்கழைக்கயிற்றின்முழவுதழீஇயெதிர்நடப்ப
தொப்பதாமே. (148)

வெதிரெதிர்சென்றேபொரவிண்டுகுதழலவ்வெதிரிணையும்
வெண்ணீறாக்கி
யெதிர்பொருதற்றிறனறியாச்சந்தனத்தேம்பொதும்பரையு
மெரித்தமரார்க்கம்
பிதிரெனவாழ்ந்திடுசிறியார்விளைத்தசினமவர்திருவின்
பெற்றிதேய்த்துச்
சதிருடன்வாழ்ந்திடுதலைமைத்தமர்திருவுந்தொலைத்திடுமத்
தன்மைமானும். (149)

வீங்குபாரைக்கழைகண்மூளிந்தவாயுயிர்த்ததழன்
மிறைசெய்காலை
யோங்குபசுங்கழைக்குலங்கண்மழைக்குலங்கீண்டுகுபுனலா
லொழித்தபான்மை
தீங்குவிளைத்திடுமுதுவருறுமிடரையக்குலத்துட்
சிறுவர்மன்னர்
பாங்குபடைத்துளகருணைமுகத்தவராற்றணித்தருளப்
பான்மைமானும். (150)

கருநிறப்பரூஉக்காழ்க்களங்கனிவகுளக்காமர்தீங்
கனிகண்மாங்கனிகள்
பெருமிதப்பலவின்கனிசுவைத்ததன்பின்
பீடுலாங்காழிலாக்கனியை
யொருமுகப்படவுண்சுகமுறுசுகமாங்
குபயநூல்களைமுறைமுறையே
குருமுகத்துணர்ந்தபின்னர்நான்மறைதேர்
குறிப்பினர்சுகம்பொருவருமே (151)

இவை எட்டும் குருகாமான்மியத்திற் கந்தமாதனச் சருக்கத்திற் பாட்டு. இவற்றுள் நால்வகைக்கும் புகுவதா முவமை புணர்த்தவாறு காண்க. (௧0)

விரியுவமை

96. உவமையுமுருபுமேதுவும்பொருளுந்
தவலருஞ்சிறப்பிற்றாம்விரிவனவிரி.

(எ-ன்) வைத்தமுறையானே விரியுவமையிலக்கண முணர்-ற்று

(இ-ள்) உவமையும், உவமவுருபும், வினை பய மெய்ப் புருவென்ற நான்கினு ளொன்றும், உவமேயமும் என்னு நான்கும் ஒன்றற் குவமங் கூறுமிடத்துத் தொகாது விரிவன விரியுவமையா மென்றவாறு.

தவலருஞ் சிறப்பிற் றும்விரிவன வென்றதனாற் பெயரு முறையுந் தொகையுஞ் சிதையாமல் வருதல் சிறந்ததென் றுணர்க. அவையாவன:— பவளம்போலச் செவ்வா யென்புழி, பவளம் உவமையெனவும் உவமான மெனவும் படும். போல்வென்பது உவமவுருபு. செம்மை யென்பது குணமாகியவேது. வாயென்றது உவமேயமெனப்படும். இப்பெயர்— பெயர், இம்முறை முறை, இத்தொகை தொகை யெனக்கொள்க

கருங்குவளைபோற்கருங்கண்கன்னல்போலின்சொற்
சுருங்குதுடிபோற்சுருங்கு—மருங்குல்
பிடிபோலியங்குநடைப்பெய்வளையைக்கண்டாற்
குடிபோங்குடிபோங்குணம். (152)

இதனுள் உவமைமுதலிய நான்கும் முறையே வந்தவாறு காண்க. அன்றியும், வினை பய மெய்ப் புரு வென்ற நான்குவமையு மிதனகத்து வந்தவாறுங் கண்டுகொள்க. அடுக்குத் தணியின்மேற்று. குணம் - அறிவு. குடிபோமென்றல் தன்னிலையி னீங்குமென்றல். பகுதி—பாங்கற் கூட்டம். துறை - தலைவன்வியத்தல்.

இலவிதழ்போற்செவ்வாயியற்றமிழ்போலின்சொல்
கலகமன்போலவடுங்கண்க—டிலகப்
பிறைபோல்வளைநுதலிப்பெண்ணமிர்தைக்கண்டா
லறைபோமறைபோமறிவு. (153)

இதுவுமது. இதனுள்ளும் நான்குவமையும் வந்தவாறுகாண்க. துறை - இதுவுமது. இதன்க ணடுக்குந் தணியின்மேற்று. அறை போதல் - கீழறுத்தல். (கக)

97. உரைத்தநான்கினுளொன்றிரண்டிடையன
யாப்பினுளிடைப்பட்டெஞ்சதுர்தொகையே.

(இ-ள்) வினைத் தொகையுவமையிலக்கணமுணர்—ற்று.

(இ-ள்) விரியுவமைக்குவமைமுதலாகச் சொல்லப்பட்ட நான்கனுள்ளிடைப்பட்டன விரண்டனு ளொன்றேயாயினும் இரண்டேயாயினும் யாப்பினிடத் திடைப்பட்டுத்தொகுவது தொகையுவமையாமென்றவாறு.

இதனுள், தொகையென்றதல்லது உவமையென்பதுபெற்ற தியாதோவெனின், விரியுவமைக்கு முதலே யுரைத்த சூத்திரத்தாற் பெற்றதெனக் கொள்க.

அம்பவளச்செவ்வாயுமாரநிரைவெண்ணகையும்
பைம்பொனசலப்பணைமுலையின் — விம்பமுடன்
கண்டுகளித்தேந்தி நுமால்நாட்கமையார்கன்னலின்சொல்
லுண்டுகளிப்புற்றிலமன்றே. (154)

இஃதுவமவுருபொன்று மிடையிற் றொக்க தொகையுவமை; இதனுள் அம்பவளச்செவ்வாய் முதலியவற்றிடையிற் போலவென்னு முவமவுருபு தொக்கதனாலறிக. நெஞ்சமே யெனனு முன்னிலையு மெழுவாயு மெச்சம். மன்னும் ஓவும் அசை. பகுதி - இயற்கை. துறை - கிளவி வேட்டல்.

நீலம்போற்கண்ணுநிறைமதியம்போன்முகமும்
வாலமதிபோனுதலும்வண்டிமிர்பூங் — கோலத்
தொடைத்துளபமாலைத்தொழுமாறன்வெற்பிற்
படைத்துளதேன்மன்னுயிர்நம்பா. (155)

இஃதுவமவேதுவென்புதொன் றிடையிற்றொக்க தொகையுவமை.

(இ-ள்) கருங்குவளைபோலக் கரியகண்ணிணையும், எல்லாக் கலைகளு நிரம்பின மதிபோன்ற செம்முகத்தினையும், பிறைபோல வளைந்த நுதலினையும் வண்டுகளாரவாரிக்கு மழகிய தொடையாகிய துளபமாலிகையையுடைய மாயோனைத் தொழு மாறன்றடரிவெற்பிற் றனக் குறுப்பாகப் பெற்றுநிற்ப நீகண்டதுளதே லஃதென்னிலைபெற்ற வுயிரா மென்றவாறு.

இதனுள் நிற்ப நீகண்டது என்னுஞ் சொற்களையும் அஃதென் னென்னுஞ் சொற்களையு மெச்சமாக நின்றனவாக்கி விரித்துரைக்க. பகுதி-பாங்கற் கூட்டம். துறை-அவ்விடத்தேகல்.

அஃதாக; இதன் முதனூல்செய்த தண்டியாசிரியர் வினை பய முதலிய வேறுக்கொருவதே தொகையுவமையென நோக்கவும்

இந்நூலுடையாருவமவுருபு தொகுவதுந் தொகையுவமையென்ற தென்னையோவெனின், அஃதே; நன்றுசொன்னாய்! இவையிரண்டிற்கும் முதனூலாகிய தொல்காப்பியத்துள் "உவமைத் தொகையே யுவமவியல" என்பதனாலும், அதன்பின்னர் நேமிநாதர் பவணந்தி முதலியோரும் "உவமவுருபிலதுவமத்தொகையே" என்பதனாலுங் கூறப்பட்டது.

பவளவாய்முத்தநகைப்பைந்தொடியீரூழி
யவளவாய்க்கங்குனெடிதாமோ — துவளருவிச்
சோலைமலையார்துணைத்தோளிற்பைந்துளப
மாலைமலையாமயிற்கு. (156)

என்பதிரண் டிடையிற் றொக்க தொகையுவமை; என்னை? பவளம் போலச் சிவந்த வாயினையு முத்துப்போல வெளுத்த நகையினையுமென்னு முவமவுருபும் பண்பு மிடையிற் றொக்கதா லென்றுணர்க. திணை—பெருந்திணை. துறை—கண்டுகைசோர்தல்.

கறைவேல்விழியிலவிதழிதழ்
நறைநாண்மலரஃதானனம்
புருவஞ்சிலையுருவம்புய
லூநவம்புரிகுழலெனுமது
பொன்னங்கிரிகொங்கைத்துணை
மின்னென்றுரையிடைகண்டிலன்
எனவாங்குக்
கற்றறிவுடையவென்னிறையினைக்கலந்து
ணற்றிருவுறைவிடநண்பா
சொற்றமிழ்மாறன்றுடரிவண்பொழிலே. (157)

இதுவு மிரண்டு தொக்க தொகையுவமை. இஃது தாறடித்தா யொன்றியும் ஒன்றாதும் வரும் வஞ்சித்தளையான், எனவாங்கு என்னுந் தனிச்சொற்பெற்று மூன்றடி நேரிசையாசிரியச்சுரிதகத்தாலிற்ற குறளடி வஞ்சிப்பா. பகுதி — பாங்கற்கூட்டம். துறை — இயல்பிடங்கூறல்.

'இடைப்பட்டெஞ்சலு'மென்ற வும்மையா னிடைப்பட்டுத்தொகாது முதலானும் முதலைக்கூறச் சினையறிகிளவியாகிய வாருபெயரானும்

உவமையு முவமவுருபும் விரிந் தீற்றி லிரண்டு தொகுவனவு முளவென்ப தூஉந் தோன்றிநின்றது.

கொடிபோல்வடவரைபோற்கொவ்வைபோற்காமர்
பிடிபோலிளமான்பிணைபோல்—வடிவமைந்த
தென்றுயிரமார்க்கின்னமிர்தன்றீந்தபிரான்
றன்றுகையன்றுடனக்கு. (158)

(இ-ள்) கொடிபோ லுடங்குகின்ற விடையினையும், வடமலை போலப் பெருத்த முலையினையும், கொவ்வைக்கனிபோலச் சிவந்தவாயினை யும், அழகிய பிடிபோன்ற மென்னடையினையும், இளைய மான்பிணை போலவெருண்ட நோக்கினையு முடைத்தாகிய வடிவா லழகமைந்திருப்ப தொன்று; தோழீ யெனக் குயிர்போலச் சிறந்தவனுமாகி யமரர்க்கு முன்னொரு ளமிர்தமீந்தபிரான் றிருநாமகையனையாட் கென்றவாறு.

இதனு ளீற்றில் விரித்தவிரண்டுஞ் செய்யுட்கட் டொக்கவாறு காண்க. தோழீ யென்று முன்னிலை யெச்சமாயிற்று. பகுதி-சேட்படை. துறை - தோழிக் கவயவங்கூறல்.

இரண்டுமென்ற வும்மை யெச்சமாதலா னீற்றின் மூன்று தொகு வனவுமுள.

அன்னநடைமானோக்கணியிழாய்வார்சுமந்த
பொன்னசலந்தன்னைப்பொறுப்பதாய்—முன்னுதித்த
வெய்யாநவெறக்கொன்றிட்டதைவைததென்னேசெங்
கைபான்மறைத்தமையுண்கண். (159)

என்பது, அன்னநடைபோன்ற மென்னடையினையு மானோக்குப்போன்ற வெருண்ட நோக்கினையு மழகிய பூணினையு முடையாய்! வாரைச்சுமந்த வாய்ப் பொன்மலைபோலப் பணைத்த முலையானவை தம்மைச்சுமப்பது மாய்த் தாம் பிறந்து பணைப்பதற்குமுன்னே பிறந்த வுடன்பிறப்பாகிய தேயாநவினை முற்றக்கொன்றவற்றைக் கொல்கவென வெளியில்வைத்து யானுய்யும்படிக் குன துயிர்போன்ற தோழியைக் காட்டித்தந்த மையுண் கண்களைக் கைகளான் மறைத்த தென்ன பேதைமையோ வென்றவாறு.

உண்கண்களையென் றோர் சொல் லிறுதி யிரண்டாவது தொக்கு விரிந்தது. ஒழிந்த சொல்லெச்சங்களும் குறிப்பினால் விரித்துரைத்த வாறுங் காண்க. பகுதி - இடந்தலை. துறை - நாணிக்கண்புதைக்க வருந்தல். (கஉ)

தொகைவிரி உவமை 98. இருமையுமொருதொடர்பினுளுறலியல்பே.

(எ-ன்) இன்னுமத் தொகை விரி யுவமைகட் காவதோர் விதி யுணர்-ற்று.

(இ-ள்) அத்தொகையுவமையும் விரியுவமையு மாகிய விரண்டு தன்மையு மொருசெய்யுளகத்து வருதலுமா மென்றவாறு. உம்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது.

மொழியமுதமுற்றுமுலைமுகுளம்வைவேல்
விழிமகிழ்மாறன் றடரிவெற்பி—லெழின்மயிற்கு
நன்போதவிழ்குழல்கார்நண்பனேசெம்மேனி
பொன்போன்ம்பல்வெண்முத்தம்போன்ம். (160)

என்பது, நண்பனே! மகிழ்மாறன் றடரிவெற்பி லழகிய மயில்போலுஞ் சாயலுடையாட்கு மொழி யமுதம்போலும்; இளமுலை தாமரைமுகுளம் போலும்; விழி கூரிய வேல்போலும்; செறிகிய முல்லையரும்பவிழாநின்ற குழல் கார்போலும்; சிவந்தமேனி பொன்போலும்; வெண்பல் முத்த நிரைபோலு மென்றவாறு.

இதனுள் முன்னையநான்கும் உவம வுருபு மேதுவு முவமேயத்தை முன்னிட்டுத் தொக்கன. எழின்மயின் முற்றுவமை. பின்னையவிரண்டும் விரியுவமை. போலு மென்னு முவமவுருபீற்றிறுகாரம், "செய்யுமெனெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ், செய்யுளு ளும்முந் தாகலு முற்றேற், றுயிருமுயிர் மெய்யு மேகலு முளவே" என்பதனல் முற்றுதலின் உயிர் கெட்டது. "மெல்லெழுத் தியையின் னகார மாகும்" என்பதனல் லகாரம் னகாரமாய்த் திரிந்தும், "னகார முன்னர் மகாரங் குறுகும்" என்பதனு லீற்றுமகாரங் குறுகியும், "செய்யு ளிறுதிப் போலி மொழி வயின், னகார மகார மீரொற் றாகும்" என்பதனு லீரொற்றுடனிலையாயும், மேலே பகரவொற்று வருதலின செய்யுளிடைப்பட்டும் வந்த முற்றுப் போன்ம் என்றயிற்று. "ஐ ரிரைமாண்பகழியரந்தின்வாய்போன்ம் போன்ம்போன்ம், பின்னுமலர்க்கண்புனல்" எனப் பரிபாடலாகிய சங்கச் செய்யுளகத்தும் பகர மேலே வருதலாற் செய்புளிடைப்பட்டும் வந்தமை காண்க. இது தொகைவிரியுவமை.

இன்னும் வேறுபட வருவனவெல்லாந் தொகைவிரியுவமைக்க ணமைக்க. (கரு)

வாழித்திருநாமம். இந்நூலாசிரியர் நம்மாழ்வாருடைய ஆஸ்தானகவிராயராதலால் அவருக்குத் திருக்குருகைப்பெருமாள்கவிராயரென்று பெயராயிற்று. இவருக்குச் 'சடையன்' என்னும் இயற்பெயருமுண்டு. 'சடகோபன்' என்பது சடையன் எனத் திரிந்ததுபோலும்.

தகப்பனார்:—இவருடைய தகப்பனார்பெயரும் 'திருக்குருகைப் பெருமாள்கவிராயர்' என்பதேயாம்.

ஜாதி:—வேளாளர். 'சீரகத்தார்வணிகன்' என்று பாயிரத்திலிருப்பதைநோக்க வேளாளரும் ஒருவகை வைசியவகுப்பிற்சேர்ந்தவரென்பது வெளியாகின்றது. ஆழ்வார்திருநகரிக்கோயிற் சத்தாவரண உத்ஸவங்களிற்படிக்கவேண்டிய 'திருப்பணிமாலை' படிப்பவருக்கு ஏற்பட்ட சுதந்தரங்களைத்தெரிவிக்கும் கோயிற்கணக்கில் திருக்குருகைப் பெருமாள்கவிராயர் என்றிருக்கிறது. அந்தச்சுதந்தரங்களை இப்போது வத்தராயிருப்பு ஆழ்வாரப்பபிள்ளை என்பவர் பெற்றுவருகிறதுகொண்டு இந்நூலாசிரியர் இவரின் முன்னோராயிருக்கலாமென்று சிலர் நினைக்கின்றனர். ஆழ்வாரப்பபிள்ளையின்பந்துவாகிய அமிர்தகவிராயரின்வம்சத்தில் 'திருக்குருகைப்பெருமாள்கவிராயர்'கள் சிலரிருந்திருக்கின்றனர். சென்னை ராஜாங்கக்கையெழுத்துப்புத்தகசாலையிலுள்ள திருவரங்கத்தந்தாதியின் பழையவுரையெழுதிவைத்தவர் திருக்குருகைப்பெருமாள் கவிராயர். இவர் இந்நூலாசிரியரல்லர். இவர் 'மாறன்கோவை' இயற்றிய வெங்கடத்துறைவான்கவிராயர் வம்சத்தவராயிருக்கவேண்டும். இப்பெயரினர் 'O.K.S.' என்ற கவினக்குறியால்வழங்கப்படுகிற திருநெல்வேலியில்லா வைணவவேளாளவகுப்பைச்சேர்ந்தவரென்று தெரிகிறது.

ஊர்:—திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரி. இவற்றிற்குப் பிரமாணம்:—

"பெருநிலம்புகழ்திருக்குருகைப்பெருமா
ளருள்குருகூர்வருமனகன்செழுந்தேன்
மருக்கமழ்சீரகத்தார்வணிகன்புகழ்த்
திருக்குருகைப்பெருமாள்கவிராயன்
அருட்குணத்தடன்வளர்சடையன்
பொருட்டொடர்நவம்புணர்புலமையோனே"
(மாறனலங்காரப்பாயிரம்)



99. அவைதாம்,
வெளிப்படைகுறிப்பினும்விழுமிதினடைபெறும்.

வெளிப்படை
குறிப்பு
2 வகை
கள்

(எ-ன்) இதுவு மவ்விருவகை யுவமையின்கூறுபாடுணர்—ற்று.

(இ-ள்) அங்ஙனங் கூறப்பட்ட விரியுவமையுந் தொகையுவமையு மென்னு மிரண்டும் வெளிப்படையுவமங் குறிப்புவம மென்னு மிரண்டாய் விழுமிதாக நடைபெறு மென்றவாறு.

பவளச்செவ்வா யென்புழி இரண்டற்கும் பொதுவாய செம்மைக் குணத்தை வெளிப்படையாகக் கூறினமையான், குறிப்பின்றியுவமை கொள்ளப்படுதலானும், பவளவா யெனநின்றவழிப் பவளத்தினையும் வாயினையுங்கூட்டிச் செம்மைக்குணம்பற்றி யுவமஞ்செய்ததெனக் குறித்துக்கொள்ளப்படுவதல்லது வல்லென்ற பவளத்திற்கும் மெல்லென்ற விதழிற்குமுள்ளதோரொப்புமைக்குணங்க ளாண்டில்லை யென்பதூஉம், பானல்போற் கருங்க ணென்புழியும் இரண்டற்கும் பொதுவாய கருமைக்குணத்தை வெளிப்படையாகக் கூறினமையாற் குறிப்பின்றி யுவமையே கொள்ளப்படுதலானும், பானலுண்க ணெனநின்றவழிப் பானலையுங் கண்ணினையுங்கூட்டிக் கருமைக்குணம்பற்றி யுவமஞ்செய்த தெனக் குறித்துக்கொள்ளப்படுவதல்லது பல விதழினோடும பலவல்லியுந் தாதுவுங் கூடிய பரிமளப்போதிற்கும் நீண்டு பிறழ்ந் துலாய்க் குழை மேற்றுய கண்ணிற்கு முள்ளதோ ரொப்புமைக ளாண்டில்லை யென்பதூஉ முணர்க. பிறவுமன்ன ; என்னை ? "சுட்டிக் கூறா வுவம மாகிற், பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே" என்றாராகலிற் கொள்க.

விழுமிதி னடைபெறு மென்றதனால் விழுமிதாய குறிப்புவமையு முள. அவையு மேற்காட்டுதும்.

பாற்கடல்வெய்யோனிலொளிபாரித்தசோதிவட
நூற்கடலைத்தென்னுமைநன்னூற்கடலாய்—மாற்கடிமை
வாய்ந்தாரீடேறவருத்தளித்தான்றண்ணளிதாங்
தாந்தாமெனும்வகுளத்தான். (161)

இது விழுமிதாய குறிப்புவமை.

(இ-ள்) உலகின்கண்ணேயிருந்து நோக்குவார்க்குத் திருப்பாற் கடலின் கட்டோன்று முதயதிவாகரனைப்போல வொளியைப்பரப்பின சோதிச்சொரூபத்தையுடையான் அவன் யாரெனில் வடமொழியாகிய சுருதிக்கடலைத் தென்றுறை நூற்கடலாக்கித் திருமாலுக் கடிமையாகத் தோன்றினர் பேரின்பமெய்தப் பாடித்தந்தான் குளிர்ந்த வண்டுகள் தாந்தாமெனப்பாடித் தேனையுண்ணும் வகுளமாலிகையை யுடையான்; அவன் பரமகருணையிருந்தபடியோ! வென்றவாறு.

இது விழுமிதாய குறிப்புவமையாயது, இதனுள், திருப்பாற் கடலிற்றோன்று முதயதிவாகரன் றனது செய்யமேனியி லாயிரங்கிரணங் களைப்பரப்பி யுலகத்திருளைத் தூரத்தி யுலகினுள்ளார்க்குக் கடபடாதி களைக் காட்டி யின்பத்தைப் புரந்தாற்போல விவனும் வெண்டிரைப் பொருநைத்துறை மாடத் திருக்குருகூரினிடத்துச் சிவந்தமேனியோடுந் தோன்றித் திருவாய்மொழியாகிய வாயிரம் பாடல்களையும் விரித்தத னோடு மனனவாகனத்தினுந்தோன்றித தன்னை மனோவாக்குக் காயங்க ளாற் றியானித்தும் வாழ்த்தியும் வணங்குவார்மனத்து ளறியாமை யாகிய வந்தகாரத்தை நீக்கிப் பரப்பிரமத்தைக் காட்டித்தருவனென வினையுவமம் பயவுவமம் வடிவுவமம் உருப்புவம மென்னும் நான் குவமையுங் குறிப்பினாற் கொள்ளக்கிடந்தமையானெனக் கண்டுகொள்க.

தண்ணளி.......... தான் என்பதற்குக் குளிர்மையுடன் கூடியதாய வண்டுகள் பாடித் தேனையுண்ணும் வகுளமாலிகையை யுடையானெனினு மாம். வெண்டிரைப் பொருநைமாடத் திருக்குருகூரொடும் அன்ன வாகனமுந் திருப்பாற்கடற்குவமை.

இக்குறிப்புவமை இந்நூலுடையார் யாண்டுப்பெற்றாரெனின் நலமிகு புலமை நக்கீரர் "உலக முவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங், கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" எனக் கூறிய முருகாற்றுப்படுத்ததுட் பெற்றாராம்.

வாழ்த்தெல்லாம் பாடாணுதலால் திணை-பாடாண்சார்ந்த பொது வியல். துறை-பனுவல்வாழ்த்து; அன்றியும், வாகையைச் சார்ந்த பொதுவியலிற்கூறிய பாடல்வென்றியுமாம்.

மின்பதிந்தகார்மேனிவிண்ணகர்மாலைப்புலவன்
பின்பதிந்துசென்றபெருமானை—முன்பதிந்து
சேவித்தாராளுந்திருநாடுதேவரெனப்
பாவித்தார்க்கெட்டாப்பதம். (162)

இதுவுமது; என்னை? மின்குடிகொண்ட கார்போலுந் திருமகள் குடிகொண்ட மார்பினோடுங் கூடிய கரியதிருமேனியையுடையான் எனக் குறிப்புவமை கொள்ளக்கிடந்தமையா னெனக்கொள்க. தேவ ரெனப் பாவித்தார்க் கெட்டாப்பதம் என்பது—கண்டாகன்னனாலறிக. திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப்பரவல். (கச)

100. உவமேயத்தியலுயர்த்தியபின்ன
ருவமப்பொருளியலுயர்த்திமுடித்தலுங்
கவினப்பொருட்குறிற்கடிநிலையிலவே.

(எ-ன்) இஃ தவ்வுவமத்திற் கெய்தாததெய்துவித்தது.

(இ-ள்) முதலே யுவமேயத்தினதுபட்டாங்கை யுயர்த்திக்கூறி, அதன்பின்னர் உவமப்பொருளின்பட்டாங்கை யுயர்த்திமுடித்தலும் அவ் வுவமேயத்திற் குயர்ச்சி குறிப்பினாலுண்டாம்படி பயனிலை தோன்று மெனி னீக்கப்படா தென்றவாறு. கவின் ஆகுபெயர்.

முத்திரைக்கைம்மாறன்மொழிந்ததிருவாய்மொழியே
சத்தியநூலென்பர்தகைசான்ற—மெய்த்தமிழோர்
மேதினிமேலாரணப்பாமெய்த்திருமாலேபரனென்
றோதியதூஉமாதியினிலுண்டு. (163)

(இ-ள்) திருஞானமுத்திரைக்கையினையுடைய காரிமாறப்பிரான் சிமன்நாராயணனே பரத்துவமென்று அவனது சொரூபரூப குண விபூதிகளைக்கூறிய திருவாய்மொழியே யுண்மைநூலென்று பெருமை பூர்த்தியான வாய்மைத்தமிழ்ப்புலவோர் கூறுவர். அத்திருவாய்மொழியே யன்றி யுண்மைப்பொருளான திருமாலே பரதத்துவமென் றுதிகாலத் தப் பூலோகத்துக்கு மேலாய சத்தியலோகத்திலுமிருந்து வடமொழி யாகிய சுருதி கூறியதூஉ முண்டென்றவாறு.

எனவே, ஆதியாய்ச் சத்தியலோகந் தொடங்கிப் பரந்த வடமொழியா யுணர்த்திற்றென்று சுருதியாகிய நூலை மிகச்சிறப்பித்துக் கூறுவானாகித் திருவாய்மொழியாகிய நூலை யுயர்த்திக் கூறுதற்போல வியல்பினலாய வுவமங் கூறினாராயினும், மண்ணின்குடத்தோடு பொன்னின்குடத்திற்குண்டாய வேற்றுமைபோல அந்தணரு மேனை மூவகைக் குலத்தோரு மோதுவதாகவும் பரந்துபோகாதே தமிழ்மொழியா லெவ்வுலகத்தாரும் பரதத்துவத்தையுணரும்படிக்கு மறைவின்றி யிருட்டற வேதசாரத்தை யெடுத்துக்கூறித் தெருட்டிற்றெனத் திருவாய்மொழிக் கேற்றமானதோர் பயனிலை குறிப்பினாற் றோன்றினவாறு காண்க. என்னை? "உவமத் தன்மையு முரித்தென மொழிப, பயனிலை புரிந்த வழக்கத்தான" என ஒல்காப்பெருமைத் தொல்காப்பியனார் கூறிய விலக்கணத்தானும், "பாரி பாரி யென்றுபல வேத்தி-யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்-பாரி யொருவனு மல்லன்-மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே" என்னுஞ் சங்கச்செய்யுளாகிய இலக்கியத்தானு முணர்க. திணை - பாடாண். துறை - பனுவல்வாழ்த்து ; அல்லது வாகைசார்ந்த இயல்வென்றியுமாம். இதுவுங் குறிப்புவமைப்பாற்படும். (கரு)

101. பலபொருளொருபொருளொருவயிற்பலவயிற்
போலியில்பொருண்மறுபொருள்விபரீத
மருட்கைத்தலைதடுமாற்றம்விகாரந்
தடுமாற்றம்மேற்சமுச்சயம்பின்சொ
னியமநியமம்புகழ்நிந்தையுவம
மோகமவயவமவயவியுற்றே
யேகமாலையுபக்தாதிபொதுநீக்கலென்
றுகவையைந்தாமதன்விரியே.

(எ-ன்) இதன்முன்னர் உவமையெனத் தொகையானொன்றாய் நின்றது வினை பயன் மெய் உருவென்ற நான்கினோடுங்கூடி யேதுவைந்தாமென வுமவை முதலிய வகையின் பாகுபாடுகளெல்லா முணர்த்தி யவற்றினின்றும் விரிந்த வுவமையின தூ பெயர்வேறுபாடுந் தொகையு முணர்-ற்று.

(இ-ள்) அதன் விரி - அங்ஙனங் கூறுபடுத்தின வுவமையின் விரி, பலபொருளுவமைமுதலாகப் பொதுநீங்குவமையீறாக விருபத்தைந்தா மென்றவாறு.

இவற்றிற்கெல்லாம் எண்ணும்மை தொக்கன. போலியென்பதனை யிறுதிவிளக்காக்கி, இருவயினுங் கூட்டி, உவமமென்பதனை மத்திம தீபமாக்கி, முன்னும் பின்னும் எல்லாவற்றோடுங் கூட்டி யுரைக்க. என் றென்ப தெண்ணிடைச்சொல்; "என்று மெனவு மொடுவு மொருவழி, நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்" என்பதனு லறிக. இவை யெல்லாஞ் சொல்லின்முடியு மிலக்கணத்தனவாதலாற் பெரும் பான்மையும் தம் பெயருள்ளே இலக்கணமும் புலப்படும். அல்லனஉம் உரையினுங் கொள்க.

க. அவற்றுள், பலபொருளுவமையென்பது ஒருபொருட்குப் பலபொரு ளுவமைகாட்டுவது. பலபொருளுவமையெனப் பொதுப்படக் கூறினமையான், அது ஒன்றுபலகுழீஇய பலபொருளுவமையும், வேறு பலகுழீஇய பலபொருளுவமையுமென விருகூற்றவாம். அவற்றுள், ஒன்றுபலகுழீஇய பலபொருளுவமை வருமாறு:—

எண்ணிற்கடங்காவிளஞாயிறொன்றியபோற்
கண்ணிற்கடங்காக்கதிர்விரிக்கும்—விண்ணிற்
பரந்தாமமாதவன்பொற்பாதங்களைத்தேத்தும்
வரந்தாம்படைத்தார்வசம். (164)

இஃது ஒன்றுபலகுழீஇய பலபொருளுவமை. இதனுள், பரந் தாமம் என்றது பரமபதம். வரந்தாம் படைத்தார் வசம் என்பது மாதவன் றிருவடிகளை யிப்பிறப்பிற் சிந்திக்கவும் வாழ்த்தவும் முற் பிறப்பில் வரம்படைத்தவர்தா மெவர் அவர் கைப்படும்பொருளாமென்ற வாறு.

கொடியுமொருபிடியுங்கோளரவுமின்னுள்
அடியும்புரைமருங்குற்றோகை—வடிநெடுங்கண்
ணொன்னுயிர்க்குத்தம்பமதாயிற்றனூர்மால்வரைத்தன்
முன்னுயிரைக்காட்டுமெதிர்த்து. (165)

இது வேறுபலகுழீஇய பலபொருளுவமை. ஒரு பிடி—ஒருகையை விரன்மடக்கின அளவாம். "ஒருபிடிநுசுப்பினாட்கே" எனச் சிந்தாமணியி லுங் கூறினமை காண்க. பகுதி—இயற்கை. துறை—பாங்கியையறிதல்.

ஆலம்போற்செவ்வேளயில்போலடுங்காலன்
சூலம்போற்காமன்றொடுத்தியக்கு—நீலம்போற்
கொல்வான்பிறழ்கட்கொடிக்கிடமாமூலமெனச்
செல்வான்கடிகைச்சிலம்பு. (166)

இதுவுமது. பகுதி—பாங்கற்கூட்டம். துறை—இயல்பிடங்கூறல்.

2. ஒருபொருளுவமை

உ. ஒருபொருளுவமை யென்பது பலபொருட் கொருபொருளுவமைகாட்டுவது:—

இமிழ்திரைநீர்ஞாலத்திருளிரியவான்றோய்ந்
தமிழ்கதிர்வெண்டிங்களுடனேபெஞ்ஞான்றும்
வலஞ்செய்சுவணவடவரைபோன்மாடம்
பொலஞ்செய்மதிள்கோபுரஞ்சிகாபந்தி
யிலங்குமதிளரங்கத்தெம்பிரான்பல்புகழைப்
பாடினார்பாதந்தனைப்பாடிச்சென்னியின்மேற்
சூடினார்க்குண்டோதுயர். (167)

என்பது பலபொருட் கொருபொருளுவமை. பலபொருள்—செம்பொன் மாட முதலியன. உவமை வடமேருவெனும் ஒன்று. பா—ஏழடியான் வந்த பலவிகற்பப் பஃறொடைவெண்பா. திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப்பணிதல்.

வண்ணவனசமலர்போற்றிருமுகமுங்
கண்ணுமலரடியுங்கைக்கொண்ட—பெண்ணரசைச்
செந்தமிழ்மாறன்சிலம்பிற்சேர்த்தகன்றென்பாலுரைக்க
வந்தவனேதின்னுயிரனுவான். (168)

இதுவும் ஒருபொருளுவமை. பகுதி—இதுவுமது. துறை—தலை [illegible]

ங. ஒருவயிற்போலி என்பது ஒரு தொடர்மொழிக்கட் பல வுவமைவந்தா லுவமைதோறும் உவமைச்சொற் புணராது இறுதியி லோருவமைச்சொற் புணர்ப்பது:— ஒருவயிற் போலி

வாவித்திரையெறிந்தநித்திலத்தின்மள்ளரெறி
காவித்திரள்சேர்கமலமலர்—பாவைமார்
வெண்ணகையுண்கண் ணனம்போன்மெனத்தோன்றுங்
கண்ணபுரத்தானிமையோர்கண். (169)

இஃதொருவயிற்போலி. திணை – பாடாண். துறை – கடவுள் வாழ்த்து ; நாடுவாழ்த்துமாம். திரையெறிந்த நித்திலத்தினோடு மள்ளர் களைகட்டெறிந்த காவிகளுஞ் சேர் கமலமெனக. போன்மெனத் தோன்று மென்பது போலத்தோன்று மென்றவாறு. ஒழிந்த அகல முறையிற் கொள்க.

4 பலவயிற்போலியென்பது ஒருதொடர்மொழிக்கட் பல வுவமைவந்தா லுவமைதோறு முவமைச்சொற் புணர்ப்பது. பலவயிற் போலி

பொன்மலைபோலுந்திருமால்புட்குழியாள்பூண்முலைநீர்
மன்னருவிபோலுமணிவடங்கள்—சொன்னதன்மேற்
செக்கர்வான்போலுமெழிற்செம்படாமும்புனைந்தா
ரெய்க்குறாலென்னுமினி. (170)

இது பலவயிற்போலி. எய்க்குறால்–எய்யாநிற்குறால். பொன் மலைபோன்ற முலையின்மேற் பொற்பூணையும் பூட்டி முத்துவடத்தையும் பூட்டிச் செம்படாத்தையு முத்தரீகமாகப்போட்டமையா னினி யிடை யிறுமென்றவாறு. என்னு மென்பது குறிப்புமொழி. எனவே, இடையைத் தாங்கி வடமுதலியவற்றைத் தாங்கிப் புடைபெயர்த்துத் தனத்தைப் பரிசித்து மருங்கணைந்தானும். பகுதி–இடந்தலை. துறை– மருங்கணைதல்.

5. ரு. இல்பொருளுவமையாவது முன்பில்லாததொன்றை யொன் றற் குவமையாக்கி யுரைப்பது:— இல்பொ ருளு

உதிக்குங்கருஞாயிறென்றேயுவமை
மதிக்கும்வடமலைமாயோனைத்—துதிக்குந்
திருநாவுடையபிரான்செந்தமிழையோதி
யிருநாவேவாராதிடர். (171)

என்பது இல்பொருளுவமை. என்னை? கருஞாயிறு இல்லாத பொருளாதலால் அதனைக் காளமேகம்போன்ற திருமேனிக்குவமைகூறினமையா னென்றுணர்க. திணை - பாடாண். துறை - ஓம்படை.

சொன்னவாறென்றுரைக்கக்காணேன்றுணைமேரு
வென்னவாழ்வுற்றவிணைமுலையாள்—மன்னவா
பந்துகழங்கம்மனைகைப்பற்றுகவென்றின்றெனையும்
வந்துதழீஇக்கொண்டாண்மகிழ்ந்து. (172)

இதுவுமது; இதனுள் துணைமேருவென்றதனால் வடமேரு ஒன்றல்ல தில்லையால் இல்பொருளுவமையாயிற்று. இவ்வணஞ் சிந்தாமணியினும் "கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்ற மொத்தே" என வந்தமையா லிதனது வேறுபாடுங் காண்க. பகுதி - உடன்போக்கு. துறை - குறிப்புணர்தல்.

6. மறுபொருளுவமை

௬. மறுபொருளுவமை யென்பது முன்னர்வைத்த பொருட்கு நிகராவதோர் பிறிதொருபொருள் பின்னரு மதன்கண் வைப்பது:—

மாண்குலாமாறுநின்வண்டமிழ்போன்மற்றொருநூல்
காண்கலேனுங்கதுபோற்காண்கலேன—மீண்டும்
புதல்வற்கருள்புரிந்துபொற்றாணிற்றோன்று
முதல்வற்கிணையாமுதல். (173)

இது மறுபொருளுவமை. திணை - பாடாண். துறை - பனுவல் வாழ்த்தோடு கடவுள்வாழ்த்துமாம்.

7. விபரீதவுவமை

எ. விபரீதவுவமையென்பது முன்பி னுவமையாகவந்ததனைப் பொருளாக்கிப் பொருளை யுவமையாக்குதல்:—

மென்றோளெனத்திரண்டவேயினங்கள்வெம்முலைக
ளென்றேவெனக்கோங்கரும்புறா—நின்றனவால்
வண்டமிழ்மாறன்றடரிவண்பொழிலுமின்றெனக்கவ்
வொண்டொடியாய்த்தோற்றமுறும். (174)

இது விபரீதவுவமை. என்னை? "பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினு, மருளறு சிறப்பினஃ துவம மாகும்" என்றாராகலின். அனறேவென்பது அல்லவோவென எதிர்மறையாகி ஆம எனறாயிற்று. பகுதி - பாங்கற்கூட்டம். துறை.- பொழில்கண்டுமகிழ்தல்.

அ. மருட்கையுவமை யென்பது உவமைகூறுவான் மருட்கை வயத்தனாகி யொருபொருட்குக் கூடாதபண்பினைக் கூடுவதாகக்கொண்டு அதனை யொன்றிற் குவமையாக்கி யுரைப்பது:—

தாகம்பெறநுகர்தீந்தண்மருந்துகைத்தழலின்
வேகம்பயின்றவிதிபோலு—மோகம்
படையாதமாறன்பனிவரைமேலென்னோய்
துடையாதுநீயுரைக்குஞ்சொல். (175)

இது மருட்கையுவமை தெண்டியாசிரியர் கூடாவுவமை யென்பது மிது. தீந்தண்மருந்து - இனிய குளிர்ந்த வமிர்து. கைத் தழலின் வேகம் பயிலுதல்—கயந்து தழல்போலச் சுடுங் கோப மிடைவிடாமை. பகுதி—இதுவுமது. துறை—பாங்கனைநொந்துகூறல்.

கூ. தலைதடுமாற்றவுவமை யென்பது மேற்றொட்டு முதலே வந்த வுவமப்பொருளிடையினு மீற்றில் வந்த வுவமேயப்பொருண் முதலினும் இடையினின்ற வுவமவுருபு இறுதியிற் றொக்கதும் விரிந்ததுமாகப் புணர்ப்பது:—

மையமருண்கண்காவிவாய்பவளந்தோளிணைவே
யையவிடைநுண்ணூலகலல்குல்—பையாவங்
கஞ்சத்திருமாதுகாதலிக்குமார்பகத்தான்
றஞ்சைத்திருமான்றனக்கு. (176)

இது தலைதடுமாற்றவுவமை. இவை யுவமவுருபு இறுதியிற் றொக்கது. "குவளை கொங்கை குரும்பை குழல் கொன்றை" யென்பது மிது. மையமருண்கண்—கருமைபொருந்திய மையுண்கண். ஐயவிடை நுண்ணூல்—உண்டில்லையென்று சந்தேகமுற்ற விடை நுண்ணிய நூல் போலு மென்றவாறு. ஐயவிடை யென்பதற்கு ஐயனே யென அண்மை விளியா யுவப்பின்கண்ணே மயங்கியதாகக் கூறினுனெனினுமாம். பகுதி-இதுவுமது. துறை-இயல்பிடங்கூறல்.

கo. விகாரவுவமை யென்பது உவமையாகிய தன்மைப் பொருள்களை விகாரம் பண்ணியதாக உவமிப்பது:—

தெள்ளமிர்தத் துள்ளாயதீஞ்சுவையைமெய்வேதத்
துள்ளவுணர்வையுணர்வினு—லள்ளி
யெடுத்திசைத்ததொன்றெனலாமின்பொருளான்மாறன்
றொடுத்திசைத்தவுத்தமப்பாச்சொல். (177)

இது விகாரவுவமை. உணர்வை யுணர்வாலள்ளி யென்பது உபநிடதச் சொல்லுளிருந்த ஞானத்தைத் தனதுண்மைஞானத்தாற் சொல்லைநீக்கித் திரட்டியெடுத்தென்றவாறு. இரும்பை யிரும்பினுலறுத் தென்பதுபோலக் கொள்க. சொல்லெனவே சொல்லு மதனுட் பொருளு மாயிற்று. சொல்லு மதனுட்பொருளும் அமிர்தினுள்ள சுவையையு முபநிடதச் சொல்லினுள்ள வுணர்வையுந் தனது பரம ஞானத்தா லள்ளி யெடுத்துச் சொல்லும் பொருளுமாகத் தொடுத் திசைத்ததொன் றெனலா மென்க இது பனுவல்வாழ்த்து.

கக. தடுமாறுவமமென்பது ஒருபொருள் ஒருகால் உவமையுமாய் ஒருகாற் பொருளுமாகி யொருதொடர்ச்சிக்கண்ணே தடுமாறிவருவது:-

மெய்வேதம்போன்றதுநின்மெய்த்தமிழ்நின்மெய்த்தமிழ்போன்
மெய்வேதமுங்காட்சிமேயதால்—வையகமெண்
ணுவலவர்காரிதருகாவிருநின்னிகராம்
பாவலரிங்கரோபகர். (178)

"குருகையம்பதித்திருக்குருகைப்பெருமாள்
பொருவில்போன்புடன்புரந்தருள்புதல்வன்
மருக்கமழ்சிரகத்தார்வணிகேசன்
திருக்குருகைப்பெருமாள்கவிராசன்
அருட்குணத்தவர்புகழ்சடையன்
பொருட்டொடர்கவம்புணர்புலமையோனே"
(மாறனகப்பொருட்பாயிரம்)

"இருக்குமுதற்பனுவலினுலியற்றமிழ்தேர்நாவீறனென்னுமேன்மை
யருட்புயலைப்புகழ்புலமைத்திருக்குருகைப்பெருமாள்போன்புகூருந்
தருக்குலவும்பொழிற்குருகாபுரிவணிகன்சடையனிசைத்தமிழாற்சாற்றித்
திருக்குருகைப்பெருமான்வண்கவிராசனெனப்புனைபேர்சிறந்ததொன்றே"
(திருக்குருகாமான்மியப்பதிகம்)

முதலியன.

மதம்:—வைணவம். இவர், 'மணவாளமாமுனி' முதலிய தென்கலை ஆசார்யஸ்ரேஷ்டர்களை அலங்கார நூலின்மத்தியில் வணங்கியிருப்பதாலும், ஸ்ரீநிவாசஜீயர் என்னும் தென்கலை ஆசார்யபுருஷாது சிஷ்யராதலாலும், தென்கலைவகுப்பைச்சேர்ந்தவர்.

ஞாநாசிரியர்:—இந் நூலாசிரியருக்குப் பஞ்சஸம்ஸ்காரமென்னும் தீக்ஷைமுதலியசெய்துவைத்த ஞாநாசிரியர் 'ஸ்ரீநிவாஸஜீயர்' என்பது 'சிற்குணச் சீநிவாதனின் னருளா, னற்பொருண் மூன்றையும் நலனுற வுணர்வோன்' என்னும் மாறனலங்காரப்பாயிரத்தாலும், 'சிற்குணத் திருமலைச்சீநிவாதன், பொற்புடைத்திருவடிபோற்றியபுனிதன்' என்னும் மாறனகப்பொருட்பாயிரத்தாலும் தெரிகிறது. அன்றியும், மாறனலங்காரத்துள்ளே இவ் வாசிரியரைச் சில இடங்களில் வாழ்த்தியிருக்கிறார். அச்செய்யுள்கள்வருமாறு:—

"முத்திக்கவனேமுதற்காரணனென்றும்
பத்திவிடாதேபயிலென்றஞ்—சத்தியமாய்ச்
செவ்வத்திருப்பதிவாழ்சீநிவாதன்பகர்ந்த
சொல்விற்கமேதுணிந்து"
(காபாலிகாந்தியகுளகம், குரவன்வாழ்த்து)

"முப்புரிநூன்மார்பினுன்முக்கோல்கைக்கொண்டோன்
டொய்ப்புலனைவென்றபொறையுடையான்—மெய்ப்பொருளைச்
சேவிக்குநன் னுணர்வான் சீநிவாதன்றமியே
னுவிக்கருள்புரிந்தான்வான்" (திணை: வாகை. துறை: தாபதவாகை

இது தடுமாறுவமை; என்னை? "தடுமாறுவமங் கடிவரையின்றே" என்றாராகலின். தண்டியாசிரியர் இதரவிதரமென்பது மிது. திணையுந் துறையு மிதுவுமது.

கஉ. சமுச்சயவுவமை யென்பது இதனானேயன்றி யிதனையொப் பதினு மொக்கும் என்பது:—

வண்ணத்தாலன்றிவடிவாலளவினு
லெண்ணிற்கமலமுகையெய்க்குமே—கண்ணன்
வழியார்துணைமாறன்மால்வரையாய்கன்னன்
மொழியார்துணைமார்முலை. (179)

இது சமுச்சயவுவமை. கண்ணன்வழியார்—கண்ணனே பரதத்துவ மெனநிற்கு மார்க்கத்திணையுடையார். துணையென்றது அவர்களான்மா வுக்குறுதித்துணை யென்றவாறு. மாறன் மால்வரையிலுள்ள தலைவனே! கன்னலினது பாகுபோலு மொழியையுடையாரென்று நீ சொல்லப் பட்டவருடையமுலை செம்மைநிறத்தா லொத்ததன்றி வடிவினு மளவி னு முள்ளத்தா லுவமைகுறிக்கின்ற செந்தாமரைமுகையை நீ சொன்னபடியே யொக்குமென்றவாறு.

குறிவழிச்சென்ற பாங்கன் தலைவி தனமுங் காண்பனோவெனிற் காண்ப துண்டென்பதற்குச் செய்யுள்:—"அரனம்பலத்தி, னியலுள வெயிலிணைச்செப்புவெற்பாநினதீர்ங்கொடிமேல்" என்றதனா லறிக. மால் வரையாயென்பதனா னில மொன்றென்பதாயிற்று. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - செவ்விசெப்பல்.

கங. இன்சொலுவமை யென்பது பொருளினு முவமைக்கோர் மிகுதி தோன்றக்கூறி யுவமேயத்தினு மிகுதியுளவேனு மொப்பதன்றிச் சிறந்ததன்றென்பது:—

ஒன்றுபரின்முகத்ததொண்டமிழ்வேதங்குரவ
னன்றுயுரான்முகத்ததவ்வேத — மென்றாலும்
வண்டமிழ்மாறுவண்டமிழ்மறைக்கொப்பன்றிமறைக்
குண்டெனலாமோவேறுயர்வு. (180)

இஃது இன்சொலுவமை. இதனுள் ஒப்பதன்றியென்பது ஒப்பன்றி யெனச் செய்யுள்விகாரத்தாற் றொக்கது. திணை - பாடாண். துறை - பனுவல்வாழ்த்து.

கச. நியமவுவமை யென்பது இன்னதற் கின்னதே யுவமை யென்று தேற்றேகாரம்பெறத் துணிந்துசொல்லுவது:—

வாய்மைமறையேநினது வாய்ந்ததமிழ்மறையின்
வாய்மைதனக்கிணையாம்வாழ்த்துங்காற்—றூய்முலைப்பா
லுண்ணுதமெய்ஞ்ஞானமோங்கியமாறுகமலக்
கண்ணனேநின்னிணையாங்காண். (181)

இது நியமவுவமை. வாய்மைமறை - மெய்வேதம். திணை—வாகை. துறை - தாபதவாகை.

பைம்பொற் குன்றேபணையிளவனமுலை
யம்புத்துணையேயரிமதருண்கண்
குனிசிலையிரண்டேகொடுநன்புருவம்
பனிமாமதியேபழிதீர்நன்முகம்
கொடியேதளரிடைகொண்மூவேகுழ
லாடரவின்படமாமேகடிதடங்
காந்தளின்றுணைமலர்க்கவினேகையும்
பூந்தளிரன்றேபுடைபெயர்மெல்லடி
மாதே,
படர்புகழ்மாறன்பராங்குசன்
றடரிமால்வரைவளர்தோகையதியலே. (182)

இதுவுமது. பா - பொதுச்சீர் பதினாறும்வந்து கேசிசையாசிரியச் சுரிதகத்தாலிற்ற குறளடிவஞ்சிப்பா. பணையிளவனமுலை - பெருத்த இளைய அழகிய முலை. அரிமதருண்கண்—செவ்வரிபரந்து கண்டார்க்கு விருப்பத்தைக்கொடுக்கு மையுண்கண். பகுதி—செட்பலை. துறை— அவயவக்கூறல்.

கடு. அநியமவுவமை யென்பது நியமித்த வுவமையை விலக்கிப் பிறிதுமோருவமை புணர்ப்பது:—

தேன்சுவைக்கொண்டோங்குமகிழ்ச்செல்வாநின்செந்தமிழின்
வான்சுவைக்குவான்சுவைகொள்வான்கனியே—நான்பகர்தற்
கொப்பாகக்கண்டதுமற்றுள்ளிற்சுவைதெவிட்டா
தப்பான்மைத்தானதுமொப்பாம். (183)

இஃது அநியமவுவமை.

(இ-ள்) வண்டுகள் தேனையுண்ணும் பரிமள வகுளமாலிகையை யுடைய செல்வனே ! நினது திருவாய்மொழியிலுண்டான சொல்லும் பொருளும் கேட்ட செவிக்கும் ஓதின நாவிற்கும் உற்ற வுணர்விற்கும் இனிமைதரும் பெரிய வினிமைக்குப் பரமபதத்துள்ளார் மனோ வாக்குக் காயங்களால் இனிமைகொள்ளும் பரமபதநாதனாகிய அக்காரக்கனியே நான் சொல்லுதற் கொப்பாகக் கண்டது ; அஃதன்றி வேறுவமை குறிப்பேனாகின் முப்பொறிகளுஞ் சுவை தெவிட்டாத திருவாய் மொழியேபோலப் பண்ணும் பாடலுமாய் நடைபெறுஞ் சுருதியும் அதற் கொப்பா மென்றவாறு.

அப்பாலமைத்தானதும் என்றது சுருதியை. துறை - பனுவல் வாழ்த்து. 16

கசு. புகழுவமையென்பது உவமையைப் புகழ்ந்துவமிப்பது:- புகழுவமை

விண்ணோருயிர்தளிர்ப்பான்வேலைவாயன்றுதித்த
தண்ணாரமிர்தந்தனைநிகர்க்கும்—பண்ணாற்
றிருந்துமறையைத்தமிழ்செய்தேவேசன்வெற்பின்
முருந்துநகையார்மொழி. (184)

இது புகழுவமை. பண்ணாற்றிருந்து மறை—கீதநடைத்தாய்க் குற்றமற்ற மறை ; அது சாமவேதம். மறையைத் தமிழ்செய் தேவேச னெனவே வேதந்தமிழ்செய்தபெருமாள் என னு நாவீறுடையபிரான் என்பதாயிற்று. பகுதி - இயற்கை. துறை - புணர்ச்சியிறுதிக்கட் டலைமகன் காதற்சிறப்புரைத்தல்.

கஎ. நிந்தையுவமை யென்பது உவமையை இகழ்ந்துவமிப்பது:- 17. நிந்தையுவமை

உறைகழித்துக்கைம்மிசைக்கொண்டோன்மறவரோச்சின்
பிறைபுரிவேலொப்பெனினுமேலா—நறையூர்வாழ்

தேக்குள்பமால்வரைமேற்றனேதெறுஞ்செயலா
லேந்திழையாள்வன்கண்ணிணை. (185)

இது நிந்தையுவமை. ஒண்மறவர் – கொலைமேற்கொண்டொழுகு மொள்ளிமையுடையமறவர் ஓச்சில்–செலவிடுக்கில். மிறைபுரிவேல்– கொலையைவிரும்பும் வேல்; எடுத்தெறிதலைவிரும்புவார்தொழிலை வேலின்மே லேற்றியது காரண காரிய மயக்கம். மறவரோச்சுகிற் கொல்வ தல்லது வன்கண்போற் றனேதெறுஞ்செய லின்றென்பதனால் நிந்தை யுவமையாயிற்று. பகுதி–பாங்கற்கூட்டம். துறை–உற்றதுரைத்தல்.

18. மோக உவமை

கஅ. மோகவுவமை யென்பது ஒருபொருளின்மே லெழுந்த வேட்கையாலதற்கு உவமையாகக்குறிக்கப்பட்ட வதன்மேலும் வேட்கை நிகழ்ந்ததாகக் கூறுதல்:—

அம்பவளமொன்றிருப்பவன்புறுமாதொண்டையெனச்
செம்பதுமத்தேனேநின்செவ்வாயை—விம்பமுநே
ராதற்கதைவிரும்புமாழியான்கோழியூர்க்
காதற்சிறப்புடையேன்கண். (186)

இது மோகவுவமை.

(இ-ள்) ஆழியான் கோழியூர்ச் செய்யபதுமத்தினிடத்து விளைந்த தேன்போலுமொழியையுடையாய்! நினது சிவந்த வாயை யதற்கொத்த அழகிய பவளமுளதாயிருப்பவும் ஆதொண்டையை யொப்பெனநோக்கி யன்புறுநிற்கு மஃதன்றி யவ் வாதொண்டை செய்ய வாயினிறத்தோடும் வடிவிற்கு மொப்பதால் அவ்வாயினையுங் காதலிக்கப்பட்ட சிறப்புடையே னுடைக் கூடிய கண்கள் அவ் வாதொண்டையையும் விரும்பாநின்ற வென்றவாறு.

ஆதற் கென்பது மூன்றுவது நான்காவதாயிற்று. அதையும் என்று மும்மை விகாரத்தாற்றொக்கது. விம்பம்–வடிவம். பகுதி– இடந்தலை. துறை–காதற்சிறப்புரைத்தல்.

19. அவய உவமை

க௯. அவயவவுவமை யென்பது அவயவத்தையுவமித் தவயவியை வாளாதே கூறுவது:—

மாதரிலவிதழ்போன்மாண்பிற்றேமாதவனால்
வானோருந்துமருந்து. (187)

இதனுள், மாதரென்ற தவயவி. இலவித ழென்ற தவயவம். பகுதி-இதுவுமது. துறை-நலம்புனைந்துரைத்தல். புணர்ச்சிமகிழ்தலுமாம்.

வல்லிக்கொடிமருங்குன்மாதினுக்குமேருமுலை
யல்லிக்கமலமனையதடி—கல்லதர்தீ
சொல்லும்பொழுதரங்கர்தென்னகர்சேய்த்தாயிழாய்
செல்லும்படிக்கெளிதோசெப்பு. (188)

இதுவும் அவயவவுவமை.

(இ-ள்) வல்லிக்கொடிபோலு மருங்குல்; வடமேருப்போலு முலை; அல்லியோடுங் கூடிய தாமரைபோலுந் தாள்கள்; பரலோடுங் கூடிய வதரும் அழல்போலச் சுடும். சொல்லுங்காலத்தில் அரங்கர்நகரமென்றால் நெடுந்தூர மாகையா லாராய்ந்தணிந்த பூணினையுடையாய்! நினது மாதினுக் கென்னோடும்வரும்படி யெளியதொன்றல்ல வென்றவாறு. பகுதி-உடன்போக்கு. துறை-அருமையுரைத்தல்.

௨0. அவயவியுவமை யென்பது அவயவியை யுவமித்து அவயவத்தை வாளாதே கூறுவது:—

பொன்னங்கொடியனையபொற்றொடிதன்றாட்சுவடு
மென்னம்புறத்தோன்றுமிங்கிவைக—ளன்னங்
கடிக்கமலஞ்சேரரங்கர்கானிகாரங்காளை
யடிச்சுவடுமாங்கவையேயாம். (189)

இஃது அவயவியுவமை. அரங்கர்கானிகாரங் காளை-அரங்கர்புதல்வனுங் காமன்போல்வானுங் காளையென்பதாம். பகுதி-இதுவுமது. துறை-சுவடுகண்டறிதல்.

௨௧. முற்றுவமை யென்பது அவயவ அவயவிகளை யொருசெய்யுளகத் தொக்க வுவமிப்பது:—

பொன்னெடுங்குன்றெனச்செறிந்துபுடைபரந்தபுளகமுலை
மின்னெனலாநுணுகிடையவேய்புரையுந்தடமென்றோட்
குளிர்மதிபோன்மிளிர்வதனக்கோமளப்பூங்கொம்பன்னா
டளிர்புரைமெல்லடிச்சுவடுந்தளர்ந்தனவெய்யோன்மன்றே
குடதிசைவான்கதிர்சுருக்கிக்கொடித்தேரினொடுமறைந்தா
னடல்புனைவேடுவர்குறுகியற்றம்பார்த்தாறலைப்பார்
பொன்புனைபூண்மணிமார்பிற்புரவலவின்றிருவிரு
நன்குலத்தெய்யிலிவைகிநறுந்தேன்செந்தினையருந்தி
மரையதளிற்றுயில்வைகிவைகறைவாய்த்துயிலெழுந்து
விரைகமழ்தார்மகிழ்மாறன்மெய்த்தமிழ்ச்சொற்குருகூரின்
முதிர்திரைப்பாலாழியின்வான்முகடுரிஞ்சுமுதயகிரி
கதிர்வருமுன்சேர்தல்கடன். (190)

இது முற்றுவமை.

(இ-ள்) பொன்மேருவாகிய மலைகளென்னும்படி சிக்கென்று மருங்கசுன்ற புளகமுலையினையு மின்னெனத் தகுவதாநுண்ணிய விடையினையு மூங்கில்போலும் பெரிய மெல்லிய தோளினையு மதிபோல விளங்கு முகத்தினையு முடைத்தாய பூங்கொம்பன்னாள் தளிர்போன்ற மெல்லிய வடியிரண்டுந் தளர்ந்தன, ஆதித்தனுங் குடதிசைவாய் வானிற் கிரணங்களை யொடுக்கிக் கொடியையுடைய தேரினோடு மறைந்தான், வெற்றியை யுடைய வேடுவர்கள் அற்றம் பார்த்து வழிபறிப்பர், இனிப் பொன்னி னாற்செய்த பூணினையணியு மார்பினையுடைய மன்னனே! இற்றைப் போது நீங்களிருவிரு முத்தமகுலமாகிய எங்களில்லின்கண் வதிந்து, நல்லதேனினோடுங் கூடிய தினைமாவினையுந் துய்த்து, மான்றோலிற் றுயி லமர்ந்து, வைகறையிற் றுயிலெழுந்து, மணங்கமழாநின்ற வகுள மார்பன் மெய்த்தமிழ் பாராட்டப்பட்ட கீர்த்தியையுடைய குருகாபுரி யிடத்துப் பெருத்த திரையையுடைய திருப்பாற்கடலின்கண் வானின துச்சியைத் தைவருங் கொடுமுடியையுடைய வுதயகிரியிற் கதிரோ னுதிக்குமுன்ன மெய்துவதே முறைமை யென்றவாறு.

மன்னும் ஓவும் அசை. பகுதி-இதுவுமது. துறை-நெறிவிலக்கு. பா-வெண்கலிப்பா.

உஉ. ஏகவுவமை யென்பது உவமையும் உவமேயமுந் தினை பான் முதல் சினை பெயர் வினை யென்பன மயங்கா தொன்றாயிருக்கை:— ஏகவுவமை

முற்றவுணர்த்து முது காப்பியம்புணர்ப்பா
ருற்றவர் தங்கண்போன் றுறங்காவா—மிற்பிரிந்தா
னல்லியலார்வந்தனைசெய்நாவீறன்மால்வரைமேன்
மெல்லியலாரின்பவிழி. (191)

என்பது ஏகவுவமை. இதுவும் பூரணவுவமைப்பாற்படும்.

(இ-ள்) நெஞ்சமே! நன்புலவ ரஞ்சலிசெய்யு நாவீறுடைய பிரான் வண்குருகூரினிடத்து மெல்லியசாயலையுடையா ரின் பவிழியானது இனி நாமிவரை யில்லின்கண்வைத்துப் பிரிவோமாகில் அறமுதலிய நாற் பொருளுமலை கட லுடுமுதலிய பதினெட்டு வருணனையு மொழிந்தனவுங் குறைவின்றி யுணர்த்தப் படுவனவாகும் பெருங்காப்பியம் பாடுதற் குட் கொண்ட புலவர்கண்போலத் துயிலொழிந்ததோடும் துன் பவிழியா மென்றவாறு.

இது, கற்பினு ளில்வாழ்க்கையெனனும் பகுதிக்கண் பிரிந்து செய்நாட் சென்று வந்து கூடிய தலைமக னவளுறுப்புக்களை வேட்கை மிகுதியாற் புதுவது புதுவதாகப் பாராட்டத் தலைமக ளிஃதென் றுடைத்தென வஞ்சியவழிப் புணர்ச்சியந்தியத்துந் துயிலாதலைத் துயின்று துயிலொழிந்தோன் தன்கட் பிரிதற்குறிப்புளதாகக் குறித்த வேறுபாடெனக் குறிப்பானறிந்த தலைமகன் முன்னிலைப் *புறமொழி யாகத் தன்னெஞ்சிற் கவள்குறிப்பறிவுறுத்துவான்போல வினி நின்னிற் பிரியேனெனப் பிரியாத தன்குறிப்பினைத் தலைமகட்கறிவுறுத்தல் கலி யுள்ளும், "மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட், பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற், றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள், கடிமனை காத்தோம்ப வல்லுநள் கொல்லோ" எனத் தலைமகன் புணர்ச்சியந்தியத்துக் கனவினாற்றியதனைத் தலைவி துயிலொழிந்திருந் தவன் குறிப்புணர்ந்தனளென்பது முணர்க. அன்றியும், கற்பினுட் குறிப்பறிவுறுத்தலென்னு மதிகாரத்தின்கண் வள்ளுவரும் "கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க, ணுரைக்க லுறுவதொன் றுண்டு" என் னுங் குறட்பாவினுட் டலைவன் றன்பிரியாமைக்குறிப்பினைத் தலைவிச்

கறிவுறுத்தவாறுங் காண்க. இதனுள், தலைவி இஃதொன் றுடைத்தென நாடின் மடனழிந்ததன்றோ வெனின்? தலைவன்கட் டலைவி விரும்புதலா லதுவுங் கடனாயிற்று. என்னை? "தன்வயிற்காத்தலுமவன்வயின் வேட்டலு, மன்னவிடங்களல்வழியெல்லா, மடனொடுநிற்றல்கடனென மொழிப" என்னும் பொருளியற்சூத்திரத்தா னுணர்க. முதுகாப்பியம் புணர்ப்பா னுற்றவர்தங் கண்போன் றுறங்காவா மென்றதனால் தோழி கூற்றன்று; தலைவன்கூற்றென வுணர்க; என்னை? "இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியவென், றவ்விடத் தவரவர்க் குரைப்பதை முன்னம்" என்னுஞ் செய்யுளியற்சூத்திரத்தான், பெருங்காப்பிய வொழுக்கம் அறிவது பெண்டன்மைக் குரிமையன்மையி னுணர்க. இங்ஙன்கூறிய விலக்கணங்க ளிறந்தவற்றிற்கு மினிமேல்வருவன வற்றிற்கு மிலக்கணமென வுணர்க.

23. மாலை உவமை

'உ௩. மாலையுவமை யென்பது ஒருபொருட்குப் பலவுவமை வந்தா லவை யொன்றோடொன் றிடைவிடாது தொடர்ச்சியுடையன வாகப் புணர்த்துக் கடைக்கட் பொருளை வெளிப்படையாகக் கூட்டி முடிப்பது:—

பாற்கடலுண்மால்போலவன்மார்பிற்பைந்தொடிபோற்
கோற்றொடியுட்கொண்டகுணமேபோ—னூற்கடலாய்ந்
தாமாறுணர்ந்தாரறம்பயின்றநாவகலா
பாமாறன்சொன்னதமிழ்ப்பா. (192)

இது மாலையுவமை. அறம்—வேதம். உட்கொண்டகுணம்—கருணை. துறை—பனுவல்வாழ்த்து.

தென்னரங்கனுந்திச்செழுமலர்போலம்மலருண்
மன்னுமயன்போலயன்மனத்து—ணன்மறைபோ
னீங்காதொருபொழிற்கண்ணோவியம்போனின்றதொன்று
பாங்காகக்கண்டனன்வெற்பா. (193)

இதுவுமது.

(இ-ள்) வெற்பனே திருவரங்கேச னுந்தித்தாமரைபோலவும் அத்தாமரையுள்ளுறையும் பிரமனைப்போலவும் பிரமன்மனத்துட் குடி

கொண்ட கல்ல சுருதிபோலவும் ஒருபொழுதும் நீக்கமின்றி நீகூறிய பொழிற்கண் ணோவியம்போனின்றதொரு பெண்ணுருவத்தைக் காவின தொருபக்கமாகக் கண்டன னென்றவாறு.

ஓவியம்போனின்றதென்றான் உயிர் நின்னிடத்தும் உடலங்கு மாக நின்றதென்பது தோன்ற. ஒருபக்கத்தேநின்றதென்றான் ஆயத்தை நீங்கிநிற்பது தோன்ற. பகுதி — பாங்கற்கூட்டம். துறை — பாங்கன் கண்டமைகூறல்.

உச. அந்தாதியுவமை யென்பது ஒரு செய்யுளகத்துப் பல பொருட்குப் பலவுவமை வந்தான்,முதலேயுவமஞ்செய்த வுவமேயப் பொருட்பெயரினை யாகுபெயராதல் அன்மொழித்தொகைப்புறத்துவந்த பெயராத லாக்கித் துணித்து நிறீஇ யவ்வுவமேயப்பெயரினை யந்தாதித் துவமானப்பெயராக்கி யுவமவுருபுகொடுத்துப் பின்ன ரதன்மேல்வரு முவமேயப்பொருளோடு புணர்த்து நிகழ்த்துவது:—

குருமணிகுயின்றபொற்குடமெனத்தகைசால்
பருமணிவடந்தோய்ந்தெழுதருபணைமுலை
முலையெனப்பொடித்ததாமரைமுகைமுகைநெகிழ்
பொழுகுதண்ணறவெனவுறுநர்நன்மார்பத்
திழுகுமான்மதமளாயெழுபுனற்சங்கணித்
துறைவளங்கெழீஇயதொன்மைசான்மரபி
னீங்கிதுபுவனம்யாவையுந்தழைத்தற்
கோங்கியவிராமாநுசமுனியிருக்கை
யாங்கதுதருமமோர்படிவமுற்றனைய
பாங்குறுசக்கரபாணிபேர்புனைபதி
மழைகிழித்தெழுந்தபொன்மாளிகைச்சூளிகைத்
தழைதுகிற்கொடித்திரடாமவெண்மதியகட்
டுறமறுத்துடைத்துவாளொரீஇநடங்கூர்குரு
முருகார்மொய்ம்மிழ்மாறன்
குருகாபுரியெனக்கூறானனவே. (194)

இஃது அந்தாதியுவமை. இதனுள், பணைமுலை யென்பது பணைத்த முலையினையுடையாளென வினைத்தொகைப்புறத்துவந்த வன்

மொழித்தொகைப் பெயராய் அன்மொழியேற்றுத் துணித்து நிறீஇய வாறும் முலையென வருபெயரினை யுவமானப்பெயராக்கி, யுவமவுருபு கொடுத்துப் பின்ன ரதன்மேல்வருந் தாமரைமுகையென்னு முவமேயப் பொருளோடும் புணர்த்தலுங் காண்க. முகை நெகிழ்பு—முகைநெகிழ்ந்து. ஒழுகு தண்ணறவென—ஒழுகு தண்ணறவுபோல. வுறுநர் - தன்னிடத்திலே பரிசிப்பார். இழுகு மான்மதம்—பூசும் கத்தூரி. அளாயெழுபுனற் சங்கணித்துறை – கலந்தோடும் புனலையுடைய திருச்சங்கணித்துறை. ஈங்கிது வென்றது தமக்கு முன்னுளவிடத்தை. ஆங்கது வென்றது தமக்குச் சேய்த்தானவிடத்தை. ஊங்குது வென்றது இரண்டிற்கும் நடுவான விடத்தை. தாமவெண்மதி—ஒளியையுடைய மதி. ஒழிந்த வகல முறையிற் கொள்க.

அஃதேல், "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" எனத் தொல்காப்பியனு ரிதனைக்கூறி மறுக்கவும் இங்ஙனங் கூறுமது மாறுகோளக் கூற லென்னுங் குற்றமாம் பிறவெனின், ஆகாது; என்னை? அஃ தொருபொருளோ டொருபொருளை யுவமித் ததற் குவமவுருபுகொடுத் துப் பிறிதொருபொருளை யுவமித்தல். அதற்குச் செய்யுள், "மதியத் தன்ன வாண்முகம்போலும், பொதியவிழ் தாமரைப் புதுப்பூம் பொய்கை" என்பது; மதியத்தன்ன வாண்முகத்தை யொக்கும் தாமரை யென்றமை யின் அவை யொன்றினொடொன்று பொருந்தாதென்பதுகருதி மறுத் தார், இஃ தன்னதன்று. என்னை? பருமணிவடந்தோய்ந் தெழுதரு பணைமுலையினையுடையாயெனத் துணித்துக்கூறினமையா னென் றுணர்க. "ஈர்ந்த நிலந்தோயு மிரும்பிடித் தடக்கையிற், சேர்ந்துடன் செறிந்த குறங்கிணை திறங்கொள, மால்வரை யொழுகிய வாழை வாழைப் பூவென" என்பதுபோலக் கூறினாரெனக் கொள்க. பகுதி-உடன்போக்கு. துறை-பதிபரிசுரைத்தல். பா-நேரிசையாசிரியப்பா.

உ௫. பொதுநீங்குவமை யென்பது உவமையைக் குறிப்பினுவமையாதல் வெளிப்படையாதல் கூறி மறுத்துப் பொருடன்னையே பொருட் குவமையாக்கி யுரைப்பது:—

முற்குணத்தான்மாதர்முலைப்பாலருந்தாத
நற்குணத்தால்வேதமொருநான்கினையுஞ்—சிற்குணத்தா

இவ்வாசிரியர், ஸ்ரீமணவாளமாமுனிகளின் ஆசிரியர் திருவாய்மொழிப் பிள்ளையால் ஸ்தாபிக்கப்பெற்ற திருநகரி உடையவர் (ராமாநுஜர்) ஸந்நிதி எம்பெருமானார்ஜீயர்மடாதீநபரம்பரையில் 8 (?) வது ஸ்வாமியாக எழுந்தருளியிருந்தவர்; திருப்பதிமடத்திலிருந் தெழுந்தருளியவர். (மேற்குறித்த பிரமாணங்களைநோக்குக) இவர் திருப்பதியிலிருந்தெழுந்தருளும்போது கொண்டுவந்த, ஸ்ரீநிவாஸன்படத்திற்கு நாளிதுவரை நித்தியபூஜையும் உத்ஸவமும் நடத்திவருகிறார்கள். இந்தஜீயர், தாம் வீற்றிருந்தமடத்தைச்சார்ந்த உடையவர்ஸந்நிதியை ஜீர்ணோத்தாரணஞ் செய்தாரென்பது, பின் வரும் ஆழ்வார்திருநகரித்திருப்பணிமாலைச் செய்யுளால் விளங்கும்.

"இவர்ந்தபூதூரெதிராசன்கோயிலை
யுவந்தனைத்தழகுங்கண்டுலகிலேனுங்கினன்
சிவந்தபங்கயமுகன்சீநிவாசமா
தவன்றிரிகோற்கோன்மாதவர்கிரீடமே"

சென்னை ராஜாங்கக்கையெழுத்துப்புத்தகசாலைப் புத்தக அட்டவணையில் இவரை ஸ்ரீநிவாஸாசார்யர் என்றெழுதியிருக்கிறது. இந்த ஜீயர்சுவாமி, உபயவேதாந்தப்ரவர்த்தகராய்த் திக்குவிஜயம்செய்து வாக்மியாயிருந்தாரென்றுசொல்லப்படுகிறது.

இந்நூலாசிரியர்செய்த வேறுநூல்கள்:—1. மாறனகப்பொருளும் அதன் உதாரணம் நூற்றெட்டுத்திருப்பதிக்கோவையும். 2. திருக்குருகாமான்மியம். 3. நம்பெருமாள்மும்மணிக்கோவை. 4. மாறன் கிளவிமணிமாலை முதலியன. இவற்றில் முன்னையதைத்தவிர மற்றைய நூல்களெல்லாம் மாறனலங்காரத்தில் உதாரணமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

காலம்:—இந்நூலால் இவர்காலம் இன்னதென்றுதெரியாமற்போனபோதிலும், இவர்செய்த மற்றொருநூலாகிய திருக்குருகாமான்மியம் அரங்கேற்றியகாலம் அதிற் குறிக்கப்பட்டிருப்பதால் அதிலிருந்து இவர்காலமின்னதென் றேற்படுகிறது. அச்செய்யுள் வருமாறு:-

---

மாறனலங்காரத்தில் கூசு-ம் பக்கம் கௌடச்சமநிலைக்கு உதாரணமாகக் காட்டப்பட்ட 'பனிப்பிறை' என்னும் முதற்குறிப்புள்ள 95-ம்பாட்டு, ஷை திருப்பதிக்கோவையில் உ0அ-ம்பாட்டாகச் சிறிது பாடபேதத்துடன் காணப்படுவது ஆராயத்தக்கது [பதிப்பாசிரியர்].

லோதாதுணர்ந்துணர்த்துமுத்தமமாறற்கிளைபார்
மீதார்மனனேவிளம்பு. (195)

இது குறிப்பால் வந்த பொதுநீங்குவமை. இதனுள், மனனே விளம்பென்பது மரபுவழுவமைதி; என்னை? நாவாகியபொறியினது கிரியையை அந்தக்கரணத்தின்மேலேற்றி யதனைக் கூறுக வென்றதனால். நாவாகிய பொறிக்குச் சொற்கிளத்தலுஞ் சுவையறிதலுமாகிய இருதிறத் தனவா மவையிரண்டு மந்தக்கரணங்கள்கூடாதே யதற்குங் கூடாதாதலா னதனை யங்ஙனங் கூறப்பட்டது., திணை—பாடாண். துறை—"அமரர்கண் முடியு மறுவகை யானு" மென்பதனான் முனிவர்வாழ்த்து.

வாரியைமொண்டுண்டோன்வசிட்டன்முதலாய
சிரியரின்ஞானஞ்செறிந்ததாற்—காரிதருஞ்
சேயேயுடையநங்கைசெம்முலைப்பாலுண்ணுதாய்
நீயேநினக்குநிகர். (196)

இது வெளிப்படையாய்வந்த பொதுநீங்குவமை. துறை—இதுவு மது.

ஆகப் பலபொருளுவமைமுதற் பொதுநீங்குவமையீறாக வுவமவிரி யிருபத்தைந்தும் அடைவே காண்க. (௧௬)

102. சிறப்பினும்வரூஉந்திறமுமொன் றுளதே.

(எ-ன்) இஃது வுவமவிரியு ளோதாததாகவொழிந்த தொன் றுணர்-ற்று.

(இ-ள்) ஒருபொருளைப் பிறிதொருபொருளாகச் சிறப்பித்துச் சொல்லுமிடத் துளவாய்வரூஉங் கூறுபாடு மொன் றுளதென்றவாறு.

சிறப்பென்பது ஒருபொருளையெடுத் ததற்குச் சிறந்த பல அடை களையு முவமித் தவற்றானே யுவமையாக்கி யுரைப்பது.

றுண்டுகிற்கொடிகளுடங்குபுவளங்கெழு
வெண்பொன்மாளிகையெலாம்வீதிதெண்டிரையெழும்
பாற்கடற்பரப்பதாய்வரிபலபயின்மதின்
மேற்படரிவர்துவிளங்குகோபுர

னமைவாய்ச்சேடன்மண்டலித்தனனாகிப்
பைவாய்த்தலைநிமிர்பான்மையவாகக்
கருங்கடன்மொண்டெழுங்கருவிக்கார்மழை
யொருங்கதனனந்தலையுறப்படிந்ததொடு
மோங்குபொற்கம்பத் துச்சிமேலதனொளி
பாங்குறவுச்சியிற்பதிதருபானு
வோகநித்திரைகொளுமுரவோனுந்தியி
னேகதாட்டாமரைப்பொருட்டிறைவனைநிகர்
சினகரக்குருகாபுரியினுட்செவ்வியி
னனவரதமுஞ்சராசரங்களாக
வுதிக்குமன்னுயிர்களையுவந்தே
அதிப்பர்நித்தியரெனத்துறவுளோரே. (197)

இது சிறப்புவமை. திணை—இதுவுமது. துறை—சினகர வாழ்த்து. (௧௭)

27 இரட்டை உவமை

103. அடைபெறுபொருட்கடைபுணர்க்குமஃதிரட்டை.

(எ-ன்) இதுவும் விரியுளோதாத வொழிபுணர்—ற்று.

(இ-ள்) அடையடுத்த முக்கியப்பொருட் கொப்புமைகூறும் ஒப்புடைப்பொருளிடத்து முக்கியப்பொருளினடை புலப்படப் புணர்ப்பது மிரட்டையுவமையா மென்றவாறு.

புணர்ப்பது மென்னு மும்மையால் ஒற்றைக்கிளவியும் இரட்டைக்கிளவியுழித்தாகிவருவன கொள்க; என்னை? "இரட்டைக்கிளவி யிரட்டைவழித்தே" என்றாராகலின். உவமை யென்பது அதிகாரத்தாற் பெற்றது.

நறைமல்கியகொழுங்காவியைப்போனள்ளிரவினுநீ
டுறைமல்கியகண்டுயிலாமையன்பர்க்குரைக்கிலகான்
மறைமல்கியசெந்தமிழ்மாறன்வண்குருகூர்ப்பொருநைத்
துறைமல்குசேவற்சிறைபிறைநீங்கிற்றுயரன்னமே. (198)

இஃ திரட்டையுவமை; நறைமல்கியகாவிபோ லுறைமல்கியகண் ணென்பதா லறிக. மல்குதல்—பெருகுதல். உறை—துளி. இறை நீங்கில்—சிறிது நீங்கில். துயரன்னம்—துன்புறுமன்னம். பகுதி—ஒருவழித்தணத்தல், துறை—ஓதிமப்பெடையொடுபுலத்தல்.

ஊனூறியவிருகோட்டொருமாவையுறுபுனல்வன்
மீனூறுசெய்வதைத்தீர்த்தபிரான்வடவேங்கடத்திற்
றேனூறிலவிதழைக்கண்டபோழ்திலெஞ்சிந்தையும்பர்
வானூர்மதிமுகத்தாளிதழாகமதித்திடுமே. (199)

இஃது ஒற்றைக்கிளவி யிரட்டைவழித்தாய்வந்த வுவமை; இதனுள், தேனூறிலவிதழைக்கண்டபோழ்தெனக் கூறியவழிப் பானமூறு மிதழென்றதே இதழென ஒற்றைக்கிளவியாய்க் கூறினமையா னென்றுணர்க. பின்னர்வந்த விதழ் - அதரம். உம்பர் வானூர் மதிமுகத்தாளென்பதன்கண்ணு மிவ்வுவமை வந்தவாறு காண்க. அது, "கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்—லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை" என்னுங் குறுந்தொகைப் பாட்டினுங் காண்க. முன்னர்வந்ததற்கும் "பொன்காண் கட்டளை கடுப்பச் சண்பின்-புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்" என்பதனுட் காண்க. பகுதி – இடந்தலை. துறை – புனங் கண்டுமகிழ்தல். (௧௮)

104. உவமையுமுருபுந்தொடர்வழிப்பிறிதுமொன்
றுவமேயப்பொருட்கடைபுணர்ப்பதுமுள.

(எ-ன்) இதுவு மெய்தாத தெய்துவித்தது.

(இ-ள்) ஒன்றுடைப் பொருளொடு புணர்ந்த வுவமவுருபிற்றுப் பின்னாகப் பிறிதுமோர் ப்புடைப்பொருண் முக்கியப்பொருட் கடையாக முன்னோராற் புண கப்பட்டுவருவது முளவென்றவாறு. இஃதிலக்கியங்கண்டதற் கி ணங் கூறியதெனவுணர்க.

அம்பணையவேற் ணணங்காலறிவழிந்த
திம்பருனக்கெய்து தாலெவ்வுளா—னும்பரெலாம்
போற்றவருண்மாலைப்போற்றார்போலாயினையான்
மாற்றமிதற்கெனனுரைக்கேன்மற்று. (200)

அம்பணையவேற்கண்ணென்றவழி யுவமப்பொருளின துருபின் பின்னர் வேற்கண்ணென வந்தவாறு காண்க. இதற்கு முன்னோர் கூறிய விலக்கியமாகக் கண்டன யாவையோ வெனின், "அப்புறழ் தொண்டைச் செவ்வாய்" எனத் திருத்தக்கமாமுனிகள் கூறிய சிந்தாமணியினும்,

"ஆம்பனூறுந் தேம்பொதி நறுவிரைத்—தாமரைச் செவ்வாய்" என்புழித் "தேம்பொதிநறுவிரை யாம்பனூறுந் தாமரைச் செவ்வாய்"என இளங்கோவடிகள் பாடிய அந்திமாலைச்சிறப்புச்செய்காதையினுங் கண்டவையென்றுணர்க. இம்பருனக்கும் என்னு மும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது. பகுதி—பாங்கற்கூட்டம், துறை—பாங்கன்கழறல். (கக)

மரபுவமை 105. மாபினும்வருவதோர்மரபுடைத்தென்ப.

(எ-ன்) இதுவு மெய்தாததெய்துவித்தது. இலக்கியங்கண்டதற்கிலக்கணங்கூறலு மாம்.

(இ-ள்) ஒருதொடர்பினு ளொருபொருட்காதல் பலபொருட்காதல் உவமைகூறுமிடத் துவமப்பொரு ளொருகுழுவினு ளொருமாபாகப் பலவுவமம்வருவது மரபுவமையா மிலக்கணத்தை யுடைத்தென்று கூறுவர் சான்றோ ரென்றவாறு.

செந்தாமரைவதனஞ்சேதாம்பல்வாய்நயன
நந்தாதசெங்குவளைநாடுங்காற்—கொந்தார்
வகுளம்புனைவார்வரைமயிற்குக்கஞ்ச
முகுளம்புணர்மாமுலை. (201)

இது மரபுவமை; என்னை? கோடு கொடி நிலம் என்னும் நால்வகைப்பூக்களுள் நீர்ப்பூவாகிய குழுவுள், செக்கர்நிறமென்னு மோரிலக்கணத்தனவாந் தாமரை யாம்பல் குவளை மொட்டு என்னும் மூன்றினையும் முகம் வாய் நயனம் முலை யென நான்கிற்கு மரபு பொருந்துவனவாக வுவமம்புணர்த்தலினெனக் கொள்க. இதற் கிலக்கியங்கண்டதாவது: "கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை, யிடையாயார் தெங்கி னனையர்—தலையாயா, ரெண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே, தொன்மை யுடையார் தொடர்பு" எனபதனுள் ஓரினத்தனவாகிய புறக்காழ்ப் புன்மரமேகூறி யொழிந்தமரங்க ளொப்பன வுளவாயினுங் கூறாராயினாரதலான் மரபுவமையாமென வுணர்க. துறை — இயல்பிடங்கூறல். (உ0)

106. ஒத்ததுவென்றதென்றொருபொருட்குவமை
வைத்தனவாயொருதொடர்பினும்வருமே.

(எ-ன்) இதுவு மெய்தாத தெய்துவித்தது.

(இ-ள்) ஒருபொருட் குவமைகூறுமிடத்து ஒருபொருளை யொத்தது ஒருபொருளை வென்றது என் றிருபொருளைக் குறித்தனவா யொரு செய்யுளகத்துவருவனவு முவமவிலக்கணத்திற்குக் கூடியும் நீங்கியும் வருமென்றவாறு:—

கூற்றுவன்வேல்போன் றுருகன்வேலைவென் றுகொலை
யாற்றலு றும்வன்கண்ணமர்விளைப்பத்—தோற்றமுறுங்
கொல்லிப்பாவைக்கிணையாய்நின் றதெவன்கோகனக
வல்லிப்பாவைக்கிணையாவாய. (202)

இஃது ஒத்தது வென்றதென்றல். ஆற்றல்—பெருமை. தோற்றம்—பொலிவு. கொல்லிப்பாவை—காமுகரைக்கொல்லும் பாவை. கோகனக வல்லிப்பாவை-திருமகள். பகுதி—இயற்கை. துறை-இரந்துபின்னிற்றல்.

தெண்ணறவைவென் றுதிரைத்தெள்ளமிர்தையொத்தமொழிப்
பெண்ணரசேமாதவன்றென்பேரைவாய்த்—தண்ணறும்பூக்
கொய்யாமலாயமுடன்கூடாமலூசலிற்றுள்
வையாமனின்றதென்னேமற்று. (2(')3)

இது வென்று தொத்ததென்றல். பகுதி—இதுவுமது. துறை—முன்னிலையாக்கல். (உக)

107. ஏது நுதலியமுதுமொழியினும்வரும்.

(எ-ண) விரியுவமையினு ளின்னு மோ ரொழிபுணர்-ற்று.

(இ-ள்) அவ்வுவமை யேதுப்பொருளைக்குறித்துமுடித்தற்குப் பிறிதொருபழமொழியினும் வருமென்றவாறு.

பாம்புகடித்ததற்குத்தேளுக்குப்பார்ப்பதுபோ
லாம்புகழ்மால்கச்சியணிவரைவா—யாம்பகட்டா
லோடத்துணிக்தளித்தாலுய்த்துகோர்க்கின் றுவெறி
யாடத்துணிந்தானறிவு. (204)

இஃது ஏதுநுதலியமுதுமொழியுவமை ; என்னை? "நுண்மையுஞ் சுருக்கமு மொளியுடை மையு, மென்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக், குறித்த பொருளை முடித்தற்கு வரூஉ, மேது நுதலிய முதுமொழி யென்ப" என்றாராகலின். இதனுட் குறித்தபொருண்முன்ன ரொரு முதுமொழியினைவைத்துப் பின்னர்த் தான்குறித்த பொருளை வெளிப்படையாகவைத்தமையா னெனவுணர்க. பகட்டாலோடத் துணிந்தளித்தானென்பது யானையைக்கண் டியாங்கள் பயந்தோடாநிற்ப அவ்வியானையையும் பொருதற்குத் துணிந் திவளுயிரைத் தந்தானென்க. உய்த்தநோய்க்கு—தந்தநோய்க்கு. வெறியாடத் துணிந்தான் என்பது இகழ்ச்சிக்குறிப்பு. அறிவென்ற தீண்டறியாமை. "உழுத வுழுத்தஞ் செய் யூர்க்கன்று மேயக், கழுதை செவியறிந் தற்றால்—வழுதியைக், கண்டநங் கண்ணீ ருதுப்பப் பெரும்பணைத்தோள், கொண்டன மன்னோ பசப்பு" என்பது மிது. துறை—வெறிவிலக்கு. (உஉ)

33

பிசிஉவமை 108. பிசியினும்புலப்படும்பெற்றியதாகும்.

(எ-ன்) இதன்முன்னர் விரியுவமையி னொழிபுகூறி யிதனுட் டொகையுவமையினதொழிபுணர்—ற்று.

பிசியென்பது நற்பொருள்; என்னெனின்? "பிசியென்ப பொய்யுஞ் சோறும் பேசுநற் பொருளும்" என்பதனா லறிக.

(இ-ள்) பிசியென்ற இலக்கணத்தோடும் புலப்படு மியல்பினையு முடைத் தவ்வுவமை யென்றவாறு.

அஃதாவது உவமேயப் பொருட்குள்ள சினை வினை சார்பு முதலியன வுவமப்பொருட்கண் ணில்லையாயினும் அவற்றை யதனோடு சார்த்தி யுவமப்பொருளொன்றனையுங்கூற வுவமேயப்பொருளு மேதுவு முவம வுருபும் விரிந்து புலப்படுதலாம்.

வருங்குன்றினைக்கடிந்தெம் மன்னுயிரைத் தந்தா
னிருங்கங்கணக்குன் றிருப்பப்—பெருந்தகைசால்
செந்தமிழ்மாறன்சிலம்பிற்சேய்நேடித்தருந்த
வந்தனையாளனேதடுப்பேன்மற்று. (205)

இஃது ஒப்பொடுபுணர்ந்த வுவமத்தானுஞ் சார்பினானும் வந்த பிசியுவமை ; என்னை? "ஒப்பொடு புணர்ந்த வுவமத் தானுந், தோன்று

வது கிளந்த துணிவி னுனு, மென்றிரு வகைத்தே பிசிவகை நிலையே"
என்றாராகலின். இதனுள், வருங்குன்றினை யென்றது யானையை எனவும், இருங்கங்கணக்குன்றென்றது சார்போடுந் தோளினை யெனவும் வினையானும் வடிவானும் சார்பானும் உவமவுருபுமுதலியனவு மூவமேயப்பொருளும் புலப்படுவதாயிற்று. ஒழிந்த அகல முறையிற் கொள்க. பகுதி—இதுவுமது. துறை—களிற்றிடையுதவிக் கறத்தொடு நிற்றல். (உ௩)

109. முக்கியப்பொருட்குமுக்கியப்பொருளுவமை
புணர்ப்பதுமுதன்மைப்புலனெறிவழக்கே.

(எ-ன்) இதுவு மொருவகையா மொழிபுணர்—ற்று.

(இ-ள்) உவமேயப்பொருட் குவமேயப்பொருள்களை யுவமமும் பொருளுமாக்கிச் செய்யுளகத் துரைப்பனவும் புலவாற்றுவழக்கமா மென்றவாறு. இஃது இலக்கியங்கண்டதற் கிலக்கணங் கூறல்.

சீதானே முத்தனெனுந்தேற்றமுறச்சிந்தையினுட்
பேதமைபோலற்றபிறர்நசையும்—பாதகமாம்
பொன்றுவழுக்காறெனப்போயதுபுலமைக்
கொன்றுப்புறங்கூறலும். (206)

என்பது, நெஞ்சமே! நாம் சீமந்நாராயணனே யகிலாண்டகோடி பிரமாண்டங்களையுஞ் சத்தாவரணங்களையும் பிரகிருதியையும் கடந்து மேலாய விரசைக்கக்கரையா முத்தியைத் தருவதற்குரியனென்ப தாசியனு லுணர்ந்து அறிவுபிறந்தபின்னர் நம்மிடத்து முன்பு நின்ற வறியாமை போல வகன்ற தொழிந்த அா ளைய னென்னு மிருவரைப்பற்றின பசையும்; அதுவுமன்றிப் பாதகத்திற் கேதுவா மழுக்காறகன்றதுபோலகன்றது அறிவிற்குப்பொருந்தாப் புறங்கூறலும்; ஆதலாவினி நா மீடேறினே மென்றவாறாயிற்று.

திணை—பொதுவியல். துறை—முதுகாஞ்சி. எதிர்மறைகளை யுவமமும் பொருளுமாக்கிய இரண்டானும் பெறுதற்கு இலக்கியம், "இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும், கழிபே ரிரையான்க ணோய்" என்பதனுலறிக. (உ௪)

110. ருவகநிரனிறையதிசயஞ்சிலேடை
தற்குணந்தற்குறிப்பற்புதம்விரோதத்
தொப்புமைக்கூட்டமேதுவிலக்குடன்
மெய்ப்படவிரவுமேதகவுடைத்தே. (11)

(எ-ன்) அவ் வுவமையலங்காரம் பிறவலங்காரங்களோடுங் கூடி வருமாறு கூறுகின்றது.

(இ-ள்) உருவகமுதலாக விலக்கீறாக மேற்கூறப்படும் பதினோரலங் காரங்களுடன் விரவிவரு மவ்வுவமையலங்கார மென்றவாறு.

மெய்ப்படவிரவும்—பொருள்பெறவிரவு மென்பதாம். மேதக வுடைத்து—பெருமையுடைத்து. (உ௫)

111. இவைதத்தமவிலக்கணங்களிற்றிறம்பா
துவமச்சொற்புணர்ந்திறினஃதுவமை.

(எ-ன்) இஃ தவ்வுவமையலங்காரம் பிறவலங்காரங்களோடுங்கூடி வருவதற் கோரறிகுறியுணர்-ற்று.

(இ-ள்) இவை—பதினோரலங்காரமும், தனக்குத் தனக்கு விதித்த விலக்கணங்களிற் குன்று துவமவுருபுடனேகூடி யுவமைடாந்தன்மை பெறமுடியுமாயி னவற்றை யவ்வவபெயரானே யுவமையென்று பெயர் கொடுத்து வழங்கப்பெறு மென்றவாறு.

பூந்தண்வ துளாபரணன்புயசயிலம்
வாய்ந்தவருவிவரைமானும்—பாய்ந்ததிரை
தங்கொலிநீர்வையந்தனைச்சூழ்ந்திருபொத்தும்
பொன்கொளிசேர்முத்தவடம்பூண்டு. (207)

இஃது உருவகவுவமை. இதனை முதனூல்செய்த தண்டியாசிரியர் உருவகத்தின்கண் ணுவமையுருவக மென்றார். அதற்குக் காட்டிய, "மதுமகிழ்ந்த மாதர் வதன மதிய, முதய மதியமே யொக்கும்" என்ற செய்யுளகத் துருவகவாய்பாடாகவன் றுவமவுருபொடுறதலி னது பொருந்தாதாதலா னிவ ரதனை யுவமையி னுருவகவுவமையென்று பெயர்கொடுத்ததே பொருத்தமென்றறிக. பூந்தண் வதுளாபரணன்—

பொலிவினையுங் குளிர்மையையுமுடைய மகிழமாலிகையை யபாரண மாகவுடைய மாறன். புயசயிலம் - திருப்புயங்களாகிய மலை வாய்ந்த - புலப்படுவதான. அருவிவரைமானும் — நீரருவியோடுகூடிய வரையை யொக்கும். பாய்ந்ததிரை - பரந்ததிரை புயசயிலம் முத்துவடம்பூண்ட தால் நீரருவியுடன்கூடிய மலையையொக்குமெனக் கூட்டுக. திணை - பாடாண். துறை - புயவருணனை. 36.

மலைமதிதேன்மாறன்வரைவேல்விழியாண் நிரனிறை உவமை

முலைவதனகண்பாமொழி. (208)

இது நிரனிறையுவமை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல் பிடங்கூறல்.

புருவநயனம்பொருசிலைவேல்போன்ற

திருமகணின்னொடுவரிற்செல்வா—கருவிளைமென்

பூநிறமாயன்புட்குழிசூழ்வாசமலர்க்

காநீர்த்தடமாங்கடம். (209)

இதுவுமது. இவையிரண்டும் பெயரொடுபெயர் நிரனிறையுவமை. வாசமலர்க்காநீர்த்தடமாம் - பரிமள மலர்ச்சோலையும் வாவியும்போலக் குளிர்மையையுடையவாம்; கடம் - சுரம். * நின்னொடுவருகி லவளுக் கெனக் கூட்டுக. ஒழிந்த வகல முறையிற் கொள்க. பகுதி - உடன் போக்கு. துறை - ஆதாங்கூறல்.

காருலாவியகொழும்பொன்மணிமாடவெயிற்பிழம்புகதுவநாளு

மேருமால்வரையெனவேபொலிந்தபனிவரைக்குலங்கள்வேலைநீர்சூழ்

பாருமாடகநகரிற்சிறந்தவிறன்மதன்மருடபந்திமாறனும்

வாருலாமுகிழ்முலைமங்கையருமலைமகள்குழுவின்வாழ்வார்மன்னோ.(210) 37 அதிசய உவமை

என்பது குணவதிசயவுவமை. திணை - பாடாண். துறை - நகர வாழ்த்து (குருகாமான்மியம்).

38. சிலேடை உவமை

வார்செறிந்தவல்லாமுன்னியகலத்தவாய்த்

தார்செறிந்தவல்லிபெருந்தடமாகு—சீர்செறிந்த

நற்றிருமால்வைகியதென்குருகைத்தடமாது

முற்றிழையாள்முற்றுமுலை. (211)

இது செம்மொழிச்சிலேடையுவமை. தடத்திற்குந் தனத்திற்குஞ் சிலேடை.

(இ-ள்) தண்ணீர்பொருந்திச் செங்கழுநீரோடுங்கூடி யிடமகன்ற தாய்ப் பூநெருங்கின வல்லிக்கொடிகடோன்றுதற் காகரமாந் தடத்தை யொக்கும், கச்சினதகத்தடங்கி மாணிக்கப்பூ ணிலைபெற்று மார்பிடத்த வா யொழுங்குசேர்ந்த தொய்யிலெழுதுதற் கிடம்பெற்றன முற் றிழையா ளிளமுலையென்றவாறு.

பொலிவுகுடிகொண்ட நல்ல திருமால்வைகு மழகிய திருநாகைத் தடத்தை யெனக் கூட்டுக. தடத்தின்மேற் சொல்லுங்கால், வார்-தண் ணீர். செறிதல் - பொருந்துதல். கல்லாரம் - செங்கழுநீர். மன்னி-கூடி. தார் - பூ. செறிதல் - நெருங்குதல். வல்லி - கொடி. எழுதல்-தோன்று தல். இடமாம்-ஆகரமாம். தனத்தின்மேற் சொல்லுங்கால் வார்-கச்சு. செறிதல் - அடங்குதல். கல்லாரம் - மாணிக்கப்பூண். மன்னி - நிலை பெற்று. அகலம்-மார்பு. தார்-ஒழுங்கு. செறிதல்-சேர்தல். எழுதல்- எழுதுதல். இடமாம் - இடம்பெற்றதாம் என்க. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - செவ்விசெப்பல். பகுதி - இயற்கை. துறை - நலம்புனைந்துரைத்தலுமாம்

மான்மதங்கூர்வெங்களபமட்டிக்கமைந்துளவாய்க்
கானிலவாவாரநிழல்கைக்கொண்ட—ஞானமுனி
செஞ்சொற்றமிழ்மலயமேபோலுஞ்சிதரன்வாழ்
தஞ்சைத்திருமான்றனம். (212)

இது பிறிமொழிச்சிலேடையுவமை. இது மலயத்திற்குந் தனத் திற்குஞ் சிலேடை.

(இ-ள்) மயக்கத்தைத்தருங் கடாமுண்டான வெம்மையைச்செய் யும் யானையும் பூவிற்றேனும் வைத்ததேனும் நிறைந்துளவாய்க் காடாய இலவும் அச்சாவும் சேர்ந்த மலைப்பக்கங்கள் குளிர்மையைத் தன்னிடத் துக்கொண்ட தமிழ்மலயை யொக்கும், கத்தூரியிருந்த விருப்பத்தைத் தருஞ் சந்தனச்சேற்றைப் பூசப் புளைத் திறமிய வலிமையுடையவாய்ப் பரிமளநிலைபெற்று முத்தினொளியைத் தன்னிடத்துக்கொண்ட புல மான்போலும் விழியையுடையாள்தனம் என்றவாறு.

"அறந்திகழாண்டவையேழுநூற்றிருபான்மூன்றி
லணிகிளர்கார்த்திகைமாதமெட்டில்வாழ்வு
சிறந்திடுதிங்களினுத்தரத்திலேகா
தெசிபின்மகாமுகூர்த்தந்திருத்தமுற்றத்
துறந்தவரெண்மகிழ்மாறர்திருமுன்னரிச்
சுருதியுடன்மிருதியுஞ்சொற்றமிழின்வாய்மை
பிறந்தபெருங்காப்பியமுந்தெரிந்தோர்கேட்கும்
பெற்றியுடனரங்கேற்றப்பெற்றதன்றே"

இதிற் குறிப்பிட்டுள்ள வருஷம் கொல்லம் ஆண்டு. கொல்லமாண்டு 723-வது எனவே, இப்போது 1090 நடப்பதால், 365 வருஷங்களுக்கு முன் இவர் இருந்தாரென்றேற்படுகிறது. குருகாமான்மியத்திலிருந்து இந்நூலுக்கு உதாரணமெடுத்திருப்பதால் இந்நூல் பின்னுற்செய்யப் பெற்றதென்றுவைத்துக்கொள்வோம். ஆகவே ஏறக்குறைய 360-வருஷங்களுக்குமுன் இந்நூலியற்றப்பெற்றதென்பது ஏற்புடைத்தாகும். ஜீயர்காலம் நிர்ணயிக்கப்புகுமிடத்தும் இக்காலவரையறை சரியாயேற்படுகிறது. உரையாசிரியர்காலமும் இதுவேயாகும். இதுபற்றியேதான் 'செந்தமிழில்' இரண்டுமூன்றிடங்களில், உரையாசிரியராகிய இரத்தின கவிராயர் பிரஸ்தாபம்வருமிடத்து ஸ்ரீ.உ.வே. இராகவையங்காரவர்கள் '350-வருஷங்களுக்குமுன்னிருந்த' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இவர்பெருமை:—இவர் பாலியத்திலேயே நிகண்டு, இலக்கணம், இராமாயணம், சங்கநூல்கள், பழையவுரைகள் இவற்றை ஐயந்திரிபறக் கற்றுச் சிறந்தவித்வானாகிய தமது தகப்பனாரிடம் கற்றுவல்லுநராய், மாணாக்கர்க்குப் பாடமோதியும், பழையநூல்களைத் தேடித் தொகுத்துவைத்துக் 'கல்விக்களஞ்சிய'மொன்றேற்படுத்தியும், பொருட்டொடர் நவம்புணர்புலமையோன (மா.அக & அல) என்றபடி புதுவகையான பெருங்காப்பியம் சிறுகாப்பியமுதலான நூல்களியற்றியும், தங்காலத்து வித்வான்களுடன் வாதஞ்செய்தும், அரசராற் சன்மானிக்கப்பெற்றும் தமிழை விருத்திசெய்து சிறந்த வீரவைணவப்புலவராய்வீற்றிருந்தார். இவர்விஷயமாய் அபியுக்தரருளிய பின்வருஞ்செய்யுளையும் நோக்குக.

"நேற்றுப்பிறந்துவரும்பாவியாணவிலவெறுப்புக்
காற்றும்படிதொங்கறந்திலனேயருட்கூடற்சங்கத்
தோற்றும்படிசொன்னசொன்னூற்பத்தொன்பதையம்பதென்று
சாற்றுந்திருக்குருகைப்பெருமாணத்துசடைக்குட்டியே"

ஞானமுனி செஞ்சொற் றமிழ்மலையை யெனவுஞ் சிதான்வாழ் தஞ்சைத் திருமாற்றனமெனவு முன்னும் பின்னுங் கூட்டுக. கூர்வெங் களபம் - வினைத்தொகை. ஏகாரம் - அசை. பொதியத்தின்மேற்சொல் லுங்கால் மால் - மயக்கம். மதம் - கடாம். கூர் - உண்டான. வெம்மை - வெப்பம். களபம் - யானை. மட்டு - பூவிற்றேன். இக்கு - வைத்ததேன்; "தேன், றுளியோடுமெதுத்துளி" யென்றார் சிந்தாமணியினும். அமைதல் - நிறைதல். உளவாய் - உண்டாய். கான் - காடு. இலவு - இலவமரம். ஆ - ஆச்சாமரம். வாரம் - பக்கம். நிழல் - குளிர்மை முலைமேற்சொல்லுங் கால். மான்மதம் - கத்தூரி. கூர்தல் - மிகுதல். வெம்மை - விருப்பம். களபம் - சந்தனச்சேறு. மட்டித்தல் - பூசுதல். மைந்து - வலி. கான் - பரிமளம். நிலவா - நிலைபெற்று. ஆரம் - முத்துவடம். நிழல் - ஒளி. கைக்கொண்ட வென்ப திருதலைக்கு மொருபொருள். இது பகுதி - இயற்கை. துறை - நலம்புனைந்துரைத்தல்.

நயிக்கற்றறைவளத்தினன்பொருள்களெல்லா
மிடுக்கற்றுதவுமியல்சான் — றொடுக்கமற
வெய்ந்தமலைபடௌனவளர்கின்றான்பரன்சி
ராய்ந்ததமிழ்மகிழ்மாறன். (213)

இஃது இருவகைச்சிலேடையும் விரவி யிரண்டுபொருளைக் கவிநாயக னுக் குவமையாக்கி யவற்றை யிரட்டுறமொழிந்து மூன்றாவது கவி நாயகன்மேலுஞ் சிலேடை செல்வதாக வவனு மவைபோலிருந்தானென்னு மூன்றுபொருள்பயந்தசிலேடையுவமை. இது பொதியத்திற்குங் கட லுக்குங் காரிமாறப்பிரானுக்குஞ் சிலேடை.

(இ-ள்) அசைவற்ற பக்கப்பாறைகளின் வளத்தோடுங்கூடி நல்ல பொருள்களையெல்லாங் குறைவற்றளிக்கு மியல்பமைந் தழி வின்றித் தகுதியடைந்த பொதியமலையொப்பெனவும் தழைபாநின்றனன், மத்தி மம் பாராகிய துறைவளத்தோடுங்கூடி நல்லபொருள்களையெல்லாங் குறைவறவளிக்கு மியல்பமைந்து அழிவின்றித் தகவடைந் தழகிய வலைமையுடைய கடலை யொப்பெனவுந் தழையாநின்றனன், அவன் யாரெனில் உண்மைநூல்களை யோதாதுணர்ந்து பிறர்க்குணர்த்தும் வளத்தினோடுங்கூடி நல்லபொருள்களையெல்லாங் குறைவறவளிக்குங்

தகுதிபடைத்த பாத்தவை சொருப்ருபகுண்விபூதியாதிய பொலிவினை யாராய்ந்த திருவாய்மொழி யென்னுந் தமிழையுடைய திருமகிழ்மாறன் என்றவாறு.

மலயத்தின்மேற்சொல்லுங்கால், நடுக்கு-அசைவு. அற்று-இன்றி. அறை - பாறை. வளத்தின் - வளத்தோடுங்கூடி. கடன்மேற்சொல்லுங் கால், நடு - மத்திமம். கற்றறை - புராகிய தறை. வளத்தின் - வளத் தோடுங்கூடி. மாறன்மேற் சொல்லுங்கால், நடுக்கற்று-உண்மைநூல்களை யோதாதுணர்ந்து. அறை - உணர்த்தும். வளத்தின் - வளத்தோடுங் கூடி என்க. எல்லாம் - முழுதும். இடுக்கு - குறைவு. அற்று-இன்றி. உதவும் - அளிக்கும். இயல் - இயல்பு. சான்று - அமைந்து. ஒடுக்கம்— அழிவு. அற்று - இல்லையாக, என்க.

இப்பாட்டினுள் "வளத்தினன்பொருள்களெல்லா மிடுக்கற்றுதவு மியல்சான் றொடுக்கமற வேய்ந்த"வென்னுந் துணையு மூன்றுபொருட்கு மத்தச்சிலேடை யொன்றாய்நின்றன. அவற்றுள்ளும் பொருளென்பது பலபொருளொருசொல்லாதலின் மலை முதலிய மூன்றுபொருட்கு முறை முறையே சந்தனம் அகில் குங்குமம் தக்கோலம் ஏலம் இலவங்கம் சாதிக் காய் தேன் என்பனவும் பிறவும், சங்கு முத்து பவளம் என்பனவும் பிறவும், சித் தசித் தீச்சுர மென்பனவுமாம். இதனுள், ஏய்ந்தமலை யெனநின்ற பெயரெச்சவாய்பாட்டைக் கடலைக்கூறுமிடத்து ஏய்ந்து என வினையெச்சவாய்பாடாக நிறுத்தி அம் அலையென்பவற்றை இடை யில் ஏற்பன வந்தனவாக வளர்கின்ற தென்னுந் தன்னெச்சமான வினை யோடுங் கூட்டுக. பான்சோய்ந்த தமிழ் என்பது காரண காரிய மயக்கம். திணை - பாடாண். துறை - செந்துறைப்பாடாண்பாட்டு

பெற்றுளிகழவளர்த்தாளிடர்செயப்பேர்த்துறவொன்
றற்றுகமெங்குங்கருகியும்வாய்விட்டாற்றுமந்தோ
பொற்றும்மரைக்கண்ணன் விண்ணோர்பிரான்புட்குழியில்வஞ்சங்
கற்றார்பொருட்பிரிவுற்றிடைவெளிற்கருந்துயிலே. (214)

இஃது அத்தச்சிலேடையுவமை. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை – குயின்மேல்வைத்துக்கூறல். சொற்பொருள்காரணமாகவும் உவமைபிறக்கும்; அவை முன்னர்க்காட்டுது மென்றும்; அவை யிவை யெனவுணர்க.

அறிவுடையார்தத்துவ நுண்பொருளுரையாய்ந்தறிகழகத் 39
தறிவொன்றில்லா தற்குண
வறிதுடையாரடைதரிற்சிற்குணத்தினாய்த்தலைப்படுமவ் உவமை
வாழ்வுபோல
வெறிவரிவண்டுளர்நறுமென்சந்தனப்பூம்பொதும்பரிடை
விராயவேலை
முறிபடுதண்சினைவெளிற்றுத்தாருவுமாங்கதிற்கமழு
முதன்மைத்தாமே. (215)

இது தற்குணவுவமை. துறை—பருப்பதவாழ்த்து. 40

சிலைவணக்குந்திருநுதலார்சிற்றிடையைவணக்கியவச் தற்குறிப்
சிறுமைநோக்கி பேற்ற உவ
முலைவணக்குஞ்செய்ததுபோன்முதுக்குறைவந்தடைந்துபெருமை
முதிரநோன்று
ணிலைவணக்கங்கொண்டதுகண்டின்றதாய்சுமந்திறுத
னெறித்தன்றென்றே
தலைவணக்கங்கொண்டுகதிர்நிலமகட்கேசரணமெனச்
சாய்ந்தமன்னோ. (216)

இது தற்குறிப்பேற்றவுவமை. நாடுவாழ்த்து. (இவையிரண்டுங்
குருகாமான்மியம்.)

41.

கொடிமேல்வளருமிருகுன்றுமுளவென்னும் அற்புத உவமை
படிமேதகப்பணைத்தபாவாய்—வடிவேற்கட்
பொற்றொடிக்கைப்பூமகள்கோன்புத்தூர்வரைமடமான்
சிற்றிடைமேற்கொங்கைத்திரள். (217)

இஃது அற்புதவுவமை; என்னை? குன்றின்மேற் கொடிவளர்வ தல்லது கொடிமேற் குன்று வளர்வதின்று, ஆதலான் அற்புதவுவமை. அற்புதமென்பது ஆச்சரியம். பகுதி - சேட்படை. துறை - பாங்கிக் கவயவங்கூறல். பாங்கன் செவ்விசெப்பலுமாம். 42

மின்னுமரவும்விளக்கிழாய்மின்னிடையும் நிரோத உவமை
பின்னுதமிழ்மாறன்பனிவரைவா—புன்னில்

விருத்தமுளவாயிருப்பமெய்புவமைக்கென்றே
பொருத்தமுடைத்தென்னும்புவி. (218)

இது விரோதவுவமை. பகுதி - இடந்தலை. துறை - நலம்புனைந்துரைத்தல்.

43. ஒப்புமை கூட்ட உவமை

எப்பொருளுங்கோதற்றிசைக்குமறைபம்மறைபோன்
மெய்ப்பொருளெல்லாஞ்சொலுநின்மெய்த்தமிழு—முப்பொருளு
மாசின்றுணர்த்துமயனயன்போன்மாறநீ
யாசின்றுணர்த்துமவை. (219)

இஃது ஒப்புமைக்கூட்டவுவமை. எப்பொருளு மென்பன:— "மிக்க விறைநிலையு மெய்யா முயிர்நிலையுந், தக்க நெறியுந் தடையாகித்—தொக்கியலு, மூழ்வினையும் வாழ்வினையும்" என்பனவாம். முப்பொருளும் ......முணர்த்தும் என்பது அங்ஙன முதலிற் கூறிய மறை, அரி அயன் அரனென்னுமவர் மூன்றுபொருளாய் முக்குணமாய் மூன்றுதொழிலா யிருக்குமெனக் கூறியவண்ணமே குற்றமின்றி யுணர்த்து மென்பதாம், இன்றியென்னும் வினையெச்சவாய்பாட்டிகரம் இன்று என உகரவிறுயிற்று; என்னை? "அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந், தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே" என்றாராகலின். அவற்றை யென்பது அவையென இரண்டாவ திறுதியிற்றொக்கது. கோதற்றென்பதனைக் கோதறவென்றாக்குக. முன்னது – பனுவல்வாழ்த்து. பின்னது–இயன்மொழிவாழ்த்து.

44. ஏது உவமை

மாடகுளிகைக்கொழும்பொற்றகட்டமைத்த முழுமணிவால்
வயிரநீலம்
பாடல்சால்பசுமணிபொன்னிறப்புருடாரகமிவை
பத்திவாய்த்து
கோடலால்வளர்தருசெங்கேழ்கிளர்மாண்செக்கரொடுங்
குறைவொன்றில்லா
வாடகாசலக்குமிவணீத்தெழுமிந்திரதனுவொத்
தவிர்வதொன்றே. (220)

இஃது தேதுவுவமை. துறை–நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்.)

பூரணமாங்கண்மலர்க்கும்புத்திக்குந்தித்திக்குங்
காரணத்ததாமோகடலமிர்தம்—தாரணிமேற்
கன்னியிடத்தார்பரவக்காகோதரத்துவளர்
பொன்னியிடத்தாமுதைப்போல். (221)

இது விலக்குவமை. துறை - கடவுள்வாழ்த்து.

அளிமருவும்பொற்காவக்மணந்துஞ்சங்க
வொளிமருவுநீணிதியுட்கொண்டும்—விளிவில்லா
நன்னரங்கவீடருளநாடாதருளரங்கன்
றென்னரங்கநேர்வரும்புத்தேள். (222)

இதுவும் விலக்குவமை

(இ-ள்) அளிமருவும் பொற்கா – கொடையைப்பயிலும் பொற்சொரூபமான கற்பகக்கா. மணந்து – குடிபுகுந்து. சங்கவொளி மருவு நீணிதி – சங்கநிதி. திருவரங்கத்தின்மேற் சொல்லுங்கால், வண்டு பொருந்திய பொலிவையுடைய சோலைகள். (மணத்தல்-) பரிமளங்கூர்தல். சங்கவொளிமருவுநீணிதி - பாஞ்சசன்னியத்தைத்தரித்த அன்பர்க்கழியாவைப்பாகிய அரங்கநாதன். நன்னர்–நன்மை. வீடு–பரமபதம். நாடாது-ஒவ்வாது; அப் பரமபதத்தைக்கொடுக்கப் புத்தேள் நினையாது. திருவரங்கம் பரமபதங்கொடுக்கு நினைவுள்ளதா மாதலாற் புத்தேளைத் திருவரங்கத்துக் குவமைகூறுவது பொருந்தாதென விலக்குக. நேர் வரும்புத்தேளென்பது இகழ்ச்சிக்குறிப்பு; எதிர்மறையு ளடக்கும். இங்ஙன முவமையைக் கூறிவிலக்குதலால் விலக்குவமையாயிற்று.

இதனுள்ளுஞ் சிலேடை விரவிற்றெனும் வீடருளநாடாதென்பத னால் விலக்குவமையென்பதே நோக்கம். தண்டியாசிரியரும் "குழை பொருது நீண்டு குமிழ்மேன் மறியா, வுழைபொருதென் னுள்ளங் கவரா" வென்னும் விலக்குவமையினுஞ் சிலேடைவிரவியதுங் காண்க. திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து.

ஆக உருவகவுவமை முதலாக விலக்குவமை யீறாகப் பதினொன்றும் அடைவே வந்தவாறு காண்க. (உக)

112. சிறப்பிற்றீர்ந்தசெய்கையவாகி
யிறப்பவுயர்த்தலிழித்தன்மிருத்தல் |
குறைத்தல்புானமாறுதல்கொள்கடவிலவே,

தேனருவிசோருமியோடேசிறந்துளநற்
றூனவடமேருவெனுஞ்சால்பிற்றே—மானனையார்
சித்திரப்பொற்கச்சணிந்துசெப்பமணிவடமு
முத்தவடமும்பூண்முலை. (225)

இதனுள், பொற்கச்சணிந்தென்னு முவமேயவடைக் குவமான வடை குறைந்து வழுவாயிற்று. பொற்கச்சு—பொன்னெழுத்துக்கச்சு.

நமன்மடந்தையன்னானிவனிவன்றன்னூரி
சமனனையளீங்கிவர்க்குத்தையா—லமர்புதல்வ
ரெண்ணிருவர்க்கொப்பாகுமன்றேபமண்சமரிற்
பண்ணமைத்தாங்கேறும்பகடு. (226)

இதனுள் உயர்திணையாண்பாற் குயர்திணைப்பெண்பாலு முயர் திணைப்பெண்பாற் குயர்திணையாண்பாலும் உயர்திணையாண்பாற்புன்மைக் கஃறிணையாண்பாலொருமையுஞ் சிறப்பிற்றீர்ந்தனவாய் வழக்கின் றாய்க் கூறுதலால் வழுவாயிற்று.

வாலிலாச்சம்புவெனவாழ்மதங்காவந்ததற்குப்
பாலிலாவுண்டிபடையோமான்—மேலுமக்குக்
கூகைக்கறிபிலேயோகோதிலாத்தேனுடனே
பாகைச்சொரிந்தென்பயன். (227)

இதனுள் இங்ஙனம் வாலிலாச்சம்புவெனப் பழித்துவமைகூறுதல் வழுவன்று. சம்பு—நரி. பாதி—பாத்தையிற்பிரிதல். துறை—பாணனைப் பழித்தல். (உஎ)

(113) பொதுவினுஞ்சிறப்பினும்புணர்ந்துளவாகி
யிதுவழக்கிதுசெய்யுளெனுமீரிடத்தும்
வெளிப்படைகுறிப்பெனவிழுமியநெறியாற்
கொளப்படுமுவமவுருபினைக்கூறி
னன்ன | போல | வினைய | மான |
வென்ன | நேர | நிகர்ப்ப |
நாட | நளிய | வேய்ப்ப |
வோட | வொன்ற | வேய | வொட்ட

கள்ளக்கருதக்காட்டக்கடுப்ப
வெள்ளவிழையவெதிர்வெப்ப
மருளமலையமாறுமதிப்ப
வென்றுவந்தவேரவேய
வாங்கவொப்பவமர்விழையப்
புல்லவுறழப்புரையப்பொருவ
வனைதுணைகெழுவிழ்தழைச்சத்தற்றனி
(24) யென்றிவைநாற்பானெட்டும்பிறவு
மொன்றியதிறத்தாலொழுகுதலுளவே.

(எ-ன்) இஃ துவமேயத்தினையு முவமானத்தினையு மொப்புமைப் படுத்துங்கா லிடையினு மீற்றினும்வரு முவமவுருபினை யினைத்தெனக் கூறுத னுதலிற்று.

(இ-ள்) கொள்ளப்படு முவமவுருபினைக்கூறின் என்பது இது வினைப்பாலுவமம் இது பயனிலையுவமம் இது மெய்ப்பாலுவமம் இஃ துருவினுவமம் என நால்வகைத்தாக மனத்தான் மதித்துக்கொள்ளப் படுதலையுடையவாய்ப் பொதுவாலுஞ் சிறப்பாலும் பொருந்துவதுளதா யிது வழக்கிட மிது செய்யுளிடமென விரண்டிடத்திலுங்கூடி வெளிப் படை குறிப்பென வருஞ் சொற்களுக்கு வரையறைகூறின் அவை, அன்ன போல வென்பன முதலாக அற்று அணி யென்பன வீறாக வெண்ணப்பட்ட நாற்பத்தெட்டும் பிறவுமாகிப் பொருந்துங் கூறுபாட்டா னொழுகலாறுடைத்தா மென்றவாறு.

பிறவுமென்பதனால் எடுத்தோதினவேயன்றி வெல்ல, வென்ற, விடப்ப, ஒத்த, ஒக்கும், தகைய, தகைப்ப, பொற்ப, காய்ந்த, நேரக்க,
(16) மருளும், புரையும், அலை என்றற் றொடக்கத்தனவும், ஐந்தாம்வேற்றுமை யுருபாய்வரும் இன்னும், என, என்னென வரும் எச்சவாய்பாடுகளாய் வருவனவும், பிறவுங் கொள்க. "சொல்லினை யிரண்டு நாலு மயக்கம், இவற்றுட் பலவும் செயவனெச்சமாயவாய்பாட்டான்வந்தனவெனினும் போல வென்னுஞ்சொல் புலிபோலவந்தானென வினையெச்சவாய்பாட் டான் வினைகொண்டும், புலிபோலும்மறவ னென்புழியும் புலிபோன்ற மறவ னென்புழியும் பெயரெச்சவாய்பாட்டாற் பெயர்கொண்டும், புலி போன்மறவ னென்புழி யிடைச்சொல்வாய்பாட்டாற் பொதுவாயும் நிற்கும்,

இவ் வோதியவாய்பாடெல்லா நான்குவமத்திற்கும் பொதுவென்ப தீண்டுக் கூறினர். இனிச் சிறப்புவகையா னுரியவாம்வகை, ஒல்காப் புலமைத் தொல்காப்பியனாரும், உவமவியலுள் "அன்ன வாங்க மான விறப்ப, வென்ன வுறழத் தகைய நோக்கொடு, கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்," "அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும்," "எள்ள விழையப் புல்லப் பொருவக், கள்ள மதிப்ப வெல்ல வீழ, வென் றாங் கெட்டே பயனிலை யுவமம்," "கடுப்ப வேய்ப்ப மருளப் புரைய, வொட்ட வொடுங்க வோட நிகர்ப்பவென், றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்," "போல மறுப்ப வொப்பக் காய்த்த, நேர வியப்ப நளிய நந்த வென், றொத்துவருங் கிளவி யுருவி னுவமம்," "தத்த மாபிற் றோன்று மன் பொருளே" என்ற சூத்திரங்களா னுணர்க.

இவற்றுள், அணியென்பது முதலாய சிலவுருபுக ளீறுவிகாரப் பட்டுநிற்பனவு முள. அஃதேல் அணி, வந்த, துலை என்னு முருபுகள் முன்னோர்கூறிய வுவமவுருபுத்தொகைச்சூத்திரங்களு ளில்லையாலோ வெனின், அவை "முலையணிந்த முறுவலாள்" எனவும், 'கயல்வந்த கண்ணியர்' எனவும், "தோல்வி, துலையல்லார் கண்ணுங் கொளல்" எனவும் இலக்கியங்களுட் கண்டமையாற் காட்டியதெனக் கொள்க. ஒழிந்தன வாய் மறைந்த வுவமவுருபுகட்கு மீண் டிலக்கியங் காட்டி விறப்பப் பெருகும். அவைகட்கும் வந்தவழிக் கண்டுகொள்க. (உஅ)

உ-வது உவமையலங்காரம் முற்றும்.

---

## ங-வது உருவக வலங்காரம்.

114. முக்கியப்பொருளையொப்புடைப்பொருளெனமதித்
திருபெயரொட்டாயிசைப்பதுமுருவகம்.

(எ-ன்) வைத்தமுறையானே யுருவகமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) உவமேயப்பொருளையு முவமப்பொருளாக வுட்கொண் டிரண்டுபொருளையு மிருபெயரொட்டாக வொற்றுமைகொளுத்தி யுரைப்ப தருவகமென்னும் அலங்காரமா மென்றவாறு.

உம்மையா லிரண்டுபொருளையு மொற்றுமைகொளுத்தா துவமை யாத லுவமேயமாத லிரண்டிலொன் றுருவகச்சொல்லொடுதொக்கு மாட்டேறில்லாதுவரு முருவகமு முளவென்றவாறு. மூன்றுதொக்கு வருவனவு முள. இவற்றிற்கெல்லாஞ் செய்யு ளுருவகவிரியுண் முன்னர்க் காட்டுதும்.

அஃதாக; உவமையும் பொருளுமென இதன் முதனூலுடையார் கூறவும், இந்நூலுடையார் முக்கியப்பொருளை முதல்வைத்ததியாதோ வெனின், உவமைபோலாது முக்கியப்பொருளை முதல்வைத் தொப்புமைப்பொருளை யதன்பின்னர்வைத் தொற்றுமைகொளுத்துவதே யுருவகத்திற்கு மிக்கதோர் அறிகுறி யென்பது தோன்ற வைத்தாரெனக் கொள்க. (உக)

115. பொருண்முதலினுமுவமையதாம்புணர்வுழி
யொற்றிடைதோன்றறிரிதலோடொன்றிய
மற்றதற்குறுசொல்விரியாவயினே.

(எ-ன்) உவமைக்கு முருவகத்திற்கு மெய்தியதோ ரைய மறுத் துணர்—ற்று.

(இ-ள்) (முக்கியப்பொருண் முன்னு முவமப்பொருள் பின்னுமாக வருவ துருவகத்திற்கு மிக்க வறிகுறியென்றார்; அவ்வாறன்றிப்) பொருண்முதலேவரினு நிலைமொழியாகி யுயிரு மொற்று மீறாய்வரு முவமேயச்சொல்லும் வருமொழியா யவைமுதலேவரு முவமச்சொல்லுந் தம்மிற் புணருமிடத் தவற்றினிடையி லொற்றுத் தோன்ற றிரிதலின்றி யவற்றோடு மவ்வுருவகத்திற்குரியசொல்லும் விரியாவிடத் துவமையாம் பகுதியு முள வென்றவாறு.

உதாரணம்:—வாய்ப்பவளம், (வாயென்றபவளம், வாய்பவளமாக.) குழற்கொன்றை, கொங்கைக்குரும்பை யெனவு மிவை யுருவகம். வாய்பவளம், குழல் கொன்றை, கொங்கை குரும்பை யெனவு மிவை யுவமை. "வாய்பவளந், துடிக்கின்றவா" எனவும், "குவகின கொங்கை குரும்பை குழல்கொன்றை" எனவுங் கண்டுகொள்க. ஒன்றிய வென்றதனல் வதன சந்திரன், கரகமலம், கரபுண்டரீகம் எனவும் நிலைமொழியுவமேயவுயிரீற் றின்முன்னர் உவமையாய வருமொழி முதல் வல்லெழுத்துமுன்ன ரொற்றுமிகா துருவகமா மிடமுமுள. இது உவமவிரியினுள், தலைதடு

## இந்நூ லுரையாசிரியர்.

இந்நூலுக்குச் சிறந்த விருத்தியுரையருளிச்செய்தவர் தென்றிருப்பேரைப்பதியிற்பிறந்த காரிரத்நகவிராயர் என்பவரே. தென்றிருப்பேரையென்னும் பாடல்பெற்ற திவ்யதேசம் ஆழ்வார்திருநகரிக்குக் கிழக்கே மூன்றுமைல்தூரத்துள்ளது. இவர், திருக்குருகைப் பெருமாள்கவிராயர் அநேகமாணுக்கர்க்குப் பாடமோதிக்கொண்டு சிறந்த வித்வானுயிருப்பதைக் கேள்வியுற்று அவரிடம் படிக்க ஆழ்வார் திருநகரிக்குவந்தார். அவரிடம் கல்விகற்றுச் சிறந்தவித்வானுனர். செந்தமிழ்ப்பத்திரிகையில் இவரைக் குறிக்கநேரும்போதெல்லாம் இவர் பெயரை இரத்திநகவிராயரென்றே குறித்திருக்கிறது. ஆனால் உற்று நோக்கும்போது இவரது இயற்பெயர் 'காரிரத்நகவிராய' ரென்பதென்று தெரிகிறது. 'காரிரத்நம்' என்பது ஆழ்வார்திருநாமம். காரி ராசன்பெற்ற இரத்திநம்போன்ற புதல்வன் என்பது இதன்பொருள். 'காரிதந்தருள்கலைக்கடலியற்பெயர்புனைந்து' (மா. அல) 'காரிமாறன் சடகோபன்' (திருவாய்) 'காரி..................ரத்நம்' (மாறன்கோவை) முதலியவற்றையும் நோக்குக. இவருரை மிகவுஞ்சிறந்ததோருரை. இவ்வுரையின்றேல் இந்நூலின்பெருமை வெளிப்படாது. சங்கநூல்கள் பிற சான்றோர்நூல்கள் முதலியவற்றிலிருந்து மேற்கோள்காட்டியிருக்கிறார். சில உதாரணச்செய்யுள்களிலுள்ள உள்ளுறையுவமம், ஏனையுவமம், இறைச்சிப்பொருள்முதலியவற்றை அழகாய்விளக்குகிறார். சில உதாரணச்செய்யுளுக்குக் குறிப்புரையும் சிலவற்றிற்குப் பொழிப்புரையும் கூறுகிறார். இவர் வேண்டுமிடங்களில் தண்டிமதம், தொல்காப்பியர்போன்ற பிறநூலாரின்கருத்து முதலியவற்றைபெடுத்துக் கூறித் தக்கசமாதானங் கூறுகிறார். உதாரணச்செய்யுள்களைச் சூத்திரப் பொருளோடு அழகாய்ப் பொருத்திக்காட்டியிருக்கிறார். இவர்காலம் முன்னேகூறப்பட்டது. இவர்செய்த வேறுநூல்கள்:—தொல்காப்பிய நூன்பொருண்மாலை, பரிமேலழகருரைநுண்பொருண்மாலை (இது செந்தமிழில் வெளிவந்துளது), ஆசிரியர்செய்த நம்பெருமாண்மும்மணிக்கோவைக்கு விருத்தியுரை, மாறன்பாப்பாவினம் முதலியன.

இவருக்குக் கோயிலில் 'வாகனமாலை'படிப்பதற்காக அக்காலத்தரசன் சிறந்தமானியங்கள்விட்டிருந்தான. அவற்றை இன்னும் இவர்

மாற்றவுவமையின்கண் பொருண்முதலேவந்து முவமையாயினவாறு கண்டுகொள்க. (கூ0)

116. அதுவே,
தொகையினும்விரியினுந்தொடரிருவகைத்தே.

(எ-ன்) இதுவு மவ்வுருவக மின்னவகைப்படு மென்கின்றது.

(இ-ள்) அவ்வுருவகமென்னு மலங்காரந் தனக்குரியசொற் றொக்கும் விரிந்தும் வருமொழியொடு தொடர்ந்துநிற்கு மிரண்டுகூறுபாடுடைத்தென்றவாறு.

உம்மை யிரண்டனுண் முதலது சிறப்பும்மையாதலால் அதற்குரியசொற் றொக்குவருதலே சிறப்புடைத்தெனக் கொள்க. ஏனைய திழிவுசிறப்பும்மை. (கூக)

117. அடையிடைபுணரினுங்கடிநிலையிலவே.

(எ-ன்) இதுவு மவ் வுருவகந் தொகையினும் விரியினும் புணர்வுழி யெய்துவதோர் வழுவமைப் புணர்—ற்று.

(இ-ள்) இரண்டுபொருளையுந் தம்மி லொற்றுமைகொளுத்தும் வழி யிடைப்பட வுவமைக்கண் ணடைச்சொற்புணர்த்துக்கூறினு முருவகமேயாம்; நீக்கப்படாதென்றவாறு.

உம்மையான் முதலே யடைபுணரினு நீக்கப்படாதாம்; எனவே தொகைநிலவகையானும் அடைச்சொற்புணராமலும் புணர்ப்பதே சிறப்புடைத்தென்பதாம். இவற்றிற்குச் செய்யுள் வருமாறு:—

முருகவிழ்ளகக்காட்டைமுன்னிடாவல்குற்றேரும்
பருமணிவடத்திற்சேர்த்தபடாமுலைக்களிறுமுந்திப்
புருவவிற்குனித்து நாட்டப்பொருகணையுடக்கிமைந்தர்
செருவிழந்தோடடார்பிற்செஞ்சவேசெலுத்துவாரே. (228)

என்பது தோகையுருவகம். இதனுள் படாமுலை, பொருகணை யென்பன அடை. துறை - நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்.)

கண்கழுநீராய்க்கரங்கள்காந்தளாய்த்தீங்கிளவி
பண்களாய்ச்செவ்வாய்பதுமமாய்—நண்பனை

தொகைஉருவகம் (handwritten margin note)
விரிஉருவகம் (handwritten margin note)

வாய்ந்தமடவார்குமாறன்மணிவளைவா
ரீர்ந்தண்பொழிலாமிடம். (229)

இது விரியுருவகம். பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பிடங்கூறல். (௩௨)

தொகை விரி உருவகம் 118. ஒருதொடர்பினுளிருமையுமுறதுளவே.

(எ-ன்) தொகைவிரியுருவக முணர்—ற்று.

(இ-ள்) தொக்கும் விரிந்தும் வரூ மிரண்டுதன்மையு மொரு செய்யுளகத்துவருதலுமுள வென்றவாறு.

பெண்ணாமுதளித்தபேரின்பத்தீஞ்சுவைபெற்
றுண்ணநினைவேற்குறுதியெனக்—கண்ணா
லளித்தவருளுக்காமயிர் திணைக்கண்டுள்ளந்
தளிர்த்ததையிங்கார்க்குரைப்பேன்றான். (230)

இது தொகைவிரியுருவகம். துறை - பாங்கியையறிதல்.

கதிர்முலைக்குவடுந்திண்டோட்சயிலமுங்கலவிமுந்நீ
ரெதிர்கொளநிறீஇமத்தாகவிவறலாந்தாம்புபூட்டி
முதிர்பொறிப்புலவர்மாண்பின்முறைமுறைசுழற்றுமாற்றாற்
சதிர்பெறப்பிறந்தவின்பத்தனியமிர்தருந்துநீரார். (231)

திணை—பாடாண். துறை—நாடுவாழ்த்து. இதனுள்ளு முதலேயு மிடையினு முவமேயத்தினு முவமையினும் அடைச்சொற் புணர்ந்ததுங் காண்க. (குருகாமான்மியம்.) (௩௩)

119. உரைத்தவையினிவரும்விரிக்குறுபொருவே.

(எ-ன்) இதுவு மத் தொகைவிரிகளா லெய்து மிலக்கண முணர்—ற்று.

(இ-ள்) இங்ஙனமுரைத்த தொகையும் விரியு மேற்கூறப்படு முருவகவிரிக்கு மிக்க பொதுவிலக்கணமாமென்றவாறு. (௩௪)

உருவக விரி (16) 120. இயைபியைபின்மையியேகதேச
மொருபொருள்பலபொருளுருவகஞ்சிறப்பே

விருத்தமவிருத்தநட்புவியனிலை
யேகவங்கமனேகவங்க
மவயவமவயவிமுற்றெனவாய்ந்த (16)
நவையறுசிறப்பினுருவகத்தன்விரியே.

(எ-ன்) உருவக மென்னு மலங்காரத்தின் விரியிலக்கண முணர்—ற்று.

(இ-ள்) இயைபுருவகமும், இயைபிலுருவகமும், ஏகதேச வுருவகமும், ஒருபொருளுருவகமும், பலபொருளுருவகமும், உருவகவுருவகமும், சிறப்புருவகமும், விருத்தவுருவகமும், அவிருத்தவுருவகமும், நட்புருவகமும், வியனிலையுருவகமும், ஏகாங்கவுருவகமும், அநேகாங்கவுருவகமும், அவயவவுருவகமும், அவயவியுருவகமும், முற்றுருவகமும் என ஆராய்ந்த குற்றமற்ற சிறப்பினையுடைய வுருவகவிரி பதினாறு மென்றவாறு.

இவற்றிற்கெல்லாம் உருவகமென்னும்பெயரை யதிகாரத்தாற் கூட்டியுரைத்ததனோடும் எண்ணும்மைத்தொகையும் விரித்துரைக்கப்பட்டது. நட்பென்பது சமாதானம். இவையெல்லாஞ் சொல்லின்முடியு மிலக்கணத்தன. அல்ல துரையினுங் கொள்க.

அவற்றுள், இயைபுருவக மென்பது ஒரு தொடர்பினுட் பலபொருளையு முருவகஞ்செய்யுங்காற் றம்முட் காரணகாரிய மியையுடைத்தாகவைத் துருவகஞ்செய்வது:— 1. இயைபுருவ

நித்தர்முத்தரிற்புகழ்நிபுணன்பராங்குச
னுத்தமஞானமென்றொளிர்திருப்பாற்கடல்
புரந்தசெந்தமிழ்மறையாயபுத்தமிர்த
நிரந்தரமுலகின்மெய்ந்நெறிநிலைதழைவான்
பூமகளெனும்பெயர்புனைமலர்நிதியொடந்
தாமமாதவனெனுஞ்சங்கரனிதியினை
யருளுடைமையின்வெளிப்படுத்தருளவுமவை
வருபவர்வருகெனவாழ்வுபெற்றிருப்பவும்
வாழ்நாளதன்கண்வழிபடுசரிதையின்
வீழ்நாள்படாமைவீட்டினைபெய்தா
தொல்லையிற்பிறந்திறந்துழல்வோர்
வல்வினையதனில்வலியதொன்றிலையே. (232)

இஃ தியைபுருவகம்.

(இ-ள்) அநந்த கெருட சேனாபதிகளோடும் பரமபதத்து முத்தரும் புகழு மிகவும் வல்லோனாகிய சிபோரங்குசன் றிருஞான மென்றொளிரும் திருப்பாற்கடலளித்த திருவாய்மொழியெனும் புத்தமிர்தம் எல்லாாரு முலகின்கண் சிமந் நாராயணனே பரப்பிரமமென்னு முண்மை மார்க்கநிலை தழைக்கும்படி மலர்மடந்தையெனப் பெயர்புனை பதுமநிதியுடன் கூடிய பரமபதத்தையுடைய மாதவனென்னுஞ் சங்கநிதியைத் தனது திருவுள்ளக்கருணையுண்டானதன்மையால்வெளியிடவு மவையிருட லேகமாகி முத்திவேண்டினவர் வருவார் வருகவென்று தம்மினீங்காது வாழ்ந்திருக்கவுந் தமக்குள்ள வாழ்நாள் வீழ்நாள்படாமை மனோவாக்குக் காயங்களால் அருச்சனைபுரியு மொழுக்கத்தினன் மோக்கத்தினைப் பொருந்தாது சிறுவரையிற் பிறந்து பிறந்து முழல்வோ ரும்மையிலிழைத்த தீவினைபோல வலியுடையதொன் றில்லை யென்றவாறு.

மலர்நிதி—பதுமநிதி ; சங்கநிதி—பாஞ்சசன்னியத்தைத் தரித்த பெரியநிதி ; திருவு மாயோனும். இதனுள், திருப்பாற்கடன்முதலாக அடைவே காரணகாரியத்துடனியைந் துருவகமாயினவாறு காண்க. பா—நேரிசையாசிரியம். திணை—பாடாண்பொதுவியல். துறை—பனுவல் வாழ்த்து.

2. இயைபில் உருவகம்

ஆரவடநீருருவியாமாணிக்கத்
தார்கெழுசீர்த்தேனருவிதாஞகப்—போழகு
பாரிக்குமாரன்பனிவரைமான்வார்புனைந்து
பூரிக்குங்கொங்கைப்பொருப்பு. (233)

;ம். ஆரவடம் – முத்துவடம். மாணிக்கத்தார் - மாணிக்கமாலை. பகுதி – பாங்கற்கூட்டம். துறை – செவ்வி செப்பல்.

3. ஏகதேச உருவகம்.

ஏகதேசவுருவக மென்பது ஒரு செய்யுளகத்து ஓரிடத் தொரு பொருளை யுருவகஞ்செய்புங்கால் மாட்டேறுபெற வுருவகஞ்செய் தப் பொருளோடு சம்பந்தமுறப் பிறிதோர்பொருளைச் செய்யுளகத்துப் பிறிதோரிடத்து மாட்டேறுபெற வுருவகஞ்செய்யாது தொகைநிலைவாய்ப் பாட்டாற் கூறுதல்;—

அறியாமையென்னுமகவிருளைச்சீக்கப்
பிறியாதறிவிருக்கப்பெற்றுங்—குறியாத
தீச்சொற்பயில்வரேசெண்பகமாறன்பவள
வாய்ச்சொற்றிறம்பயிலாமல். (234)

இஃதேகதேசவுருவகம். இதனுள் அறியாமையென்னு மகவிருளை யென மாட்டேறுபெற வுருவகஞ்செய்ததனோடு மெதிராகச் சம்பந்தமுற ஞானமாம்விளக்கென மாட்டேறுபெற வுருவகஞ்செய்யாது தொகைநிலைவாய்பாட்டா னறிவெனக் கூறியவாறு காண்க.

செண்பகமாறன் பவளவாய்ச்சொல்—திருவாய்மொழி. திறம்—சித்த சித்தீச்சுரத்தை மயக்கமறவிளங்கக்கூறுங்கூறுபாடு. பயிலாமல்—இடைவிடா துணர்வினுற் சிந்தியாமல். இது, உவமேயமு முருவகவுருபு மாகிய இரண்டுதொக்க தொகையுருவகம். ஞானவிளக்காவது திருவாய்மொழி; பிறரறியாமையென்னு மிருட்டறக் கூறிய ஞானமாகிய விளக்கு. பயில்வரே யென்பது பரசமயவாதியரை. ஏகாரம் — இரக்கத்தின்கட் குறிப்பு. துறை - இதுவுமது.

புன்பனுவனஞ்சம்பொசிக்கின்றபேதையர்பே
ரின்பமுறமெய்யுணர்வாரேனோருந்—தன்பால்
விருந்தருந்தத்தானநுணாவீறனூர்கூறு
மருந்தருந்தாரந்தோமதித்து. (235)

இதுவுமது. இதனுள் நாவீறனூர்கூறு மருந்தென்பது திருவாய்மொழியாகிய மருந்து. மருந்தென்பது - அமிர்தம் எனவே திருவாய்மொழியாகிய மருந்தென வுருவகஞ்செய்ததனோடுஞ் சம்பந்தமுறும்படி பிறவியாகிய பிணியைத்தீர்த்து முத்தியாகிய பேரின்பத்தைத் தரு மருந்தென வுருவகஞ்செய்யா துவமேயமுதலிய மூன்றினையு மிருவகைத் தொகைநிலைவாய்பாட்டாற் கூறியவாறு காண்க

மெய்யுணர்வார்—தத்துவத்திரயத்தி னுண்மையுணர்வார். தன்பால் விருந்தருந்த - அம் மூன்றினையும் மயக்கமறவுணர்த்தும் ஞானமான அமிர்தத்தைத் தமது மெய்யுணர்வா லுவட்டாது புதுவதுபுதுவதாக வுரிசிக்கவும் என்க. அருந்தாரந்தோ என்ப திரக்கம். மெய்ப்பொருண் மாறன்—உண்மைப்பொருளை யுணர்ந்தமாறன் ; உண்மைப்பொருளாகிய மாறனென்றுமாம்.

மிக்கவரிதாளின்மெய்யன்பினைவித்தித்
தக்கதவந்தினமுந்தான்பொழிந்துட்—புக்கதோர்
ஞானமுருவியபின்னன்முத்திவிளைக்கு
மானபரான்காரிதருமன். (236)

இது, உவமையு முருவகவுருபு மாட்டேறில்லாதுவந்த வுருவகம்; என்னை? அரிதாளாகிய செய்யின்கண் அன்பாகிய வித்தை விதைத்துத் தவமாகிய நீரைப்பொழிந்து ஞானமாகிய முளையுருவியபின் முத்தியாகிய போகத்தை யென மாட்டேறுபெறாதுவந்தமையாலுணர்க. ஒழிந்த அகலமுரையிற்கொள்க இவை யிரண்டுதொகாது. இவற்றுண் முன்னையது பனுவல்வாழ்த்து. இது திணை—வாகையைச்சார்ந்த புறத்திணை. துறை—அறக்களவழி. இவை மூன்று மாட்டேறிலாதுவந்த வுருவகம். இவற்றிற்கு "அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற், பிறவாழி நீந்த லரிது" எனவும், "சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு, மேமப் புணையைச் சுடும்" எனவும், "பவளவாய்ச் செறுவு தன்னு ணித்திலம் பயில வித்திக், குழவிநா றெழுந்து காளைக் கொழுங்கதி ரீன்" றெனவும், "அஞ்சவரு தானை யமரென்னு நீள்வயலுள், வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்கும்" எனவும் முந்து நூல்களினும் அடைவே வந்தவாறு காண்க

ஒருபொருளுருவக மென்பது உயர்திணை அஃறிணை யென்று சொல்லப்பட்ட காட்சிப்பொருளுங் கருத்துப்பொருளு மொருசெய்யுளகத்துவந்தா லவற்று ளொருபொருளை யுருவகஞ்செய்தல்:—

பிறப்பாரிறப்பார்பிறப்பாயவேலை
துறப்பாரொருபோதுந்துவார்—சிறப்பாருஞ்
செய்படைத்ததென்னரங்கர்சேவடிமென்மானிடராய்க்
கைபடைத்தும்வாழ்ந்தகதை. (237)

இஃ தொருபொருளுருவகம். அரங்கன், மானிடர்கை, சேவடி யென்னும் உயர்திணை யஃறிணைகளை யுருவகஞ்செய்யாது கருத்துப் பொருளாய பிறப்பென்னும் அஃறிணையை யுருவகஞ்செய்தலா னென்றறிக. திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

பலபொருளுருவக மென்பது அவ்விருபொருளையு மொருசெய்யுளகத் துருவகஞ்செய்தல்:—

தீதற்றமெய்ஞ்ஞானத்தெப்பமுடன்மேதகுநால்
வேதக்கடல்கடந்தவித்தகத்தாற்—கோதற்ற
வந்தாமத்தீவினுட்புக்காழியானுமணியைத்
தந்தானம்பூதூர்வந்தான்.' (238)

இது பலபொருளுருவகம். அந்தாமத்தீவு—விரசைக்கக்கரையாகிய பரமபதம். திணை—பாடாண். துறை—அறமுறைவாழ்த்தினுண் முனிவனைவாழ்த்தல்.

உருவகவுருவக மென்பது ஒன்றனை முதலே யுருவகஞ்செய் ததனைப் பெயர்த்து முருவகஞ்செய்தல்:—

மத்தம்புரியவிச்சைவாராழியாமிருளென்
சித்தமினித்தேறுமேதேமகிழ்த்தார்—முத்தன்
முகத்தாமரையாமுழுமதியென்செவ்வி
யகத்தாமரையகத்தாக. (239)

இஃது உருவகவுருவகம். இதனுள், மத்தம்—மயக்கம். புரிதல்—தருதல். அவிச்சை—அறியாமை. அவிச்சையாம் வாராழி யென வுருவகஞ்செய்ததனை மறித்து மிருளென வுருவகஞ்செய்ததும் முகத்தாமரையா முழுமதி யெனவும் உருவகவுருவகம் வந்தவாறுங் காண்க. துறை—இதுவுமது.

சிறப்புருவக மென்பது ஒருபொருளையெடுத் ததற்குச் சிறந்த அடைகளை யுருபித் தவற்றானே யதனை யுருபித்துரைப்பது:—

நாரங்குழலாய்நளினமுகமாய்முகுளங்
கூர்வெம்முலையாய்க்கொடியிடையா—யூர்திரைகள்
வெண்டுகிலதாகிவிளங்குமகிழ்மாறன்
வண்குருகூர்த்தண்பொருநைமாது. (240)

இது சிறப்புருவகம். நாரம்—பாசி. வெம்முலை—விருப்பத்தைத்தரும் முலை. பொருநைமாது—பொருநையாகியபெண். துறை—நதிவாழ்த்து.

விருத்தவுருவக மென்பது ஒருபொருட்குக் கூடாதனபலவுங் கூட்டி யுருவகஞ்செயவது:—

வேம்பாலிசைந்தசுவைவெவ்விடத்தினேடுதித்த
தாம்பாலதன்றறவின்பாலன்று—பாம்பா
விமிழ்திரைவாயிற்பிறந்ததென்பதன்றுமாறன்
றமிழ்மறையாஞ்செஞ்சொலமிர்தம். (241)

இது விருத்தவுருவகம். வேம்பு–கைப்பு. கைப்பைத் தனக்குச் சுவையாகவுடைய நஞ்சினேடும் பிறந்ததாம்பகுதியையுடையதன்று; அறவின்பாலன்று – சலததினது மயம ம்பகுதியையுடையதூஉமன்று; பாம்பா................தன்று–பாம்பாகிய தாம்பா லாரவாரிக்குந் திரையை யுடைய கடலைக் கடையப் பிறந்ததென்று கூறுவதூஉமன்று; காரிமாறப் பிரான் றிருப்பவளத்திற் பிறந்த திருவாய்மொழியாகிய வினிய சொல்லின்மயமா மமிர்தமென்றவாறு.

அமிர்திற்கு விடத்தினேடுதிப்பது முதலாயதுஞ் சலமயமாவதுஞ் சுபாவம். இந்த அமிர்தத்திற் கவையின்மையால் விருத்தவுருவக மாயிற்று. துறை–பனுவல்வாழ்த்து.

அவிருத்தவுருவக மென்பது ஒருபொருட்குக் கூடுவனவாந்தன்மை பலவுங் கூட்டி யுருவகஞ்செய்வது:—

ஓர்பொழுதுந்துஞ்சாதலமந்து றுதுளித்தாம்
போர்புனேவேலண்ணல்பொருட்கேகிற்—சீர்பெருகுந்
தண்ணார்பசுந்துளபத்தார்மார்பன்றஞ்சைமான்
கண்ணாகியகார்க்கடல். (242)

இது, அவிருத்தவுருவகம். அண்ணல்–அண்மைவிளி. ஒழிந்த அகல முறையிற்கொள்க. பகுதி–பொருள்வயிற்பிரிதல். துறை–செல வழுங்குவித்தல்.

நட்புருவக மென்பது ஒருபொருளை நன்றாக வுருவகஞ்செய்து அதனைத் தீங்குதருவதாகக் கூறி யத்தீங்கு அதனால்வந்ததன்றென் றதற்குப் பிறிதோர்காரணங் கூறுதல்:—

தீங்கிளவியென் றுயிர்க்குந்தெள்ளமிர் தம்வெவ்விடத்துப்
பாங்கிழமைகூர்தலணிமாற—ஞங்கைப்
பதித்திருவேதீவினையின்பாங்காயதெனறே
மதித்திருக்குமின்றென்மனம். (243)

இது நட்புருவகம்.

(இ-ள்) இனிய கிளவியென வொலிக்கு மொள்ளிய வமிர்தமானது வெம்மையைச்செய்யும் விடத்திின்கயப்பா முரிமையை விளைத்தல் கின்னிடத்துண்டாய பாங்கினுலுண்டாயதல்லவென்று மெனது தீவினையின் பாங்காயதென்றுஞ் சந்தயமற விசாரியாநின்ற திப்பொழு தென்மனமென்றவாறு.

உயிர்த்தல்-ஒலித்தல். கூர்தல்-விளைதல். பாங்கு-வாரம். பகுதி-பாத்தையிற்பிரிதல். துறை-பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில்வேண்டப் புறத்தொழுகக முண்டென்று வாயின்மறுத்துக் கடுஞ்சொற்கூறிய விற்பரத்தையுடன் புறத்தொழுக்க மின்றென்றுகூறித் தன தாற்றுமையே வாயிலாகக் கூடியது.

வியனிலையுருவக மென்பது ஒன்றினங்கம் பலவற்றையு மொரு செய்யுளகத்துக்கூறி யவற்றுட் சிலவுருவகஞ்செய்து சிலவற்றை யுருவகஞ்செய்யாது அவயவியை யுருவகஞ்செய்வது:— 11. வியனிலையுருவகம்

வையம்பரவுமகிழ்மாறன்செவ்வாயுந்
துய்யநயனத்துணைப்போதுஞ்—செய்ய
முகத்தாமரையுடன்கைம்முத்திரையுங்கண்ட
சுகத்தார்க்குமுண்டோதுயர். (244)

இது வியனிலையுருவகம். இதனுள் அவயவி முகத்தாமரை. இதன்கண் ணவயவியுடன் அவயவங்களை யுருவகஞ்செய்து மற்றையொன்றை யுருவகஞ்செய்யாமையுங் காண்க. துறை-கடவுள்வாழ்த்து. பழிச்சினர்ப் பரவலுமாம்.

ஏகாங்கவுருவக மென்பது ஒன்றினங்கம் பலவற்றினு ளொன்றை யுருவகஞ்செய்வது:— 12. ஏகாங்கவுருவகம்

மாறன்பனிவரைமேல்வாண்முகச்செவ்வாயிவட்கு
வேறன்றிவளெனவேமெய்யுணர்விற்—கூறொன்றக்
காட்டுகின்றதொண்பொற்கனங்குழைமேற்பல்காலு
மோட்டுகின்றகட்காவியுற்று. (245)

இது, ஏகாங்கவுருவகம். ஒருபொருளாவ திதனுண் முகமாகிய அவயவி. இதன்பொரு ளுரையிற் கொள்க.' துறை-பாங்கியை யறிதல்.

13. அநேகாங்க அநேகாங்கவுருவக மென்பது ஒன்றினங்கம் பலவற்றையு முரு வகஞ்செய்வது:—
உருவகம்

செங்கைத்தளிர்நயனச்செவ்வேன்மறைப்பவர
மங்கைத்திருமால்வரைமடவாய்—கொங்கைக்
களியானைக்கட்படாநீக்கியோகண்ணுற்
றெளியானைக்காக்குமியல்பு. (246)

இது, அநேகாங்கவுருவகம்.

(இ-ள்) திருமால் சீவரமங்கைவரையில் வாழும் மடப்பத்தை யடையாய்! பெறுதற்கரிய நின்னோடும் பேரின்பத்தை யனுபவித்துப் பின்ன ரதுபெறாது வருத்தமிக்கு நின்கண் ணெளியனுவேனைக் கருணை புரிந்து காக்குமியல்பு, செங்கையாகிய தளிரா னயனமாகிய சிவந்த வேலை மறைத்துக் கொங்கையாகிய களியானையினது முகபடாத்தினை நீக்கிக் கொல்லும்படியே யவற்றை வெளியில் வைத்ததோ? இஃ தரு ளுக்குத் தகாதென்றவாறு.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை- நாணிக்கண்புதைக்கவருந்தல். எளியானை யென்றது தன்னைப் பிறன்போலக்கூறல்.

கொங்கைக்குவடுங்குழற்காருமேலிருந்த
சங்கைக்கருண்மாயன்றஞ்சைவாய்—மங்கைக்குப்
பொய்யேயுளதென்கைபோற்றுமிலதென்கை
மெய்யேயிடையாம்வெளி. (247)

இதுவுமது. சங்கை - வளம். ஏகார மிரண்டும் எதிர்மறை. இடையாம்வெளி யுளதென்கை பொய்யே யிலதென்கை மெய்யேயெனத்

சந்ததியார் அநுபவித்துவருகிறார்கள். இவரைப்போலவே இவர்வமிசத்தோரும் சிறந்தவித்வான்களாயும் வைணவர்களாயுமிருந்து தமிழையபிவிருத்தி செய்தார்கள். மகா-ள-ள-ஸ்ரீ தாமோதரம்பிள்ளையவர்கள், ப்ரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள், ஸ்ரீ-உ வே. ரா. இராகவையங்காரவர்கள் முதலியோருக்கு அருப்பெறற்றமிழ்நூல்களருளிய குடும்பம் இதுவே இக்குடும்பத்தினர் ஏடுகளே திருக்கோவையாருரையாசிரியர் பேராசிரியரென்றும், அச்சிட்ட தொல்காப்பியச் செய்யுளியலுரைமுதலியவை பேராசிரியரது; நச்சினார்க்கினியரதன்றென்றும், பரிபாடலுரையாசிரியர் பரிமேலழகர் என்றும் அறியுமாறு அருமையான பலவிஷயங்களைத் தெரிவித்தன. இக்குடும்பத்தார் காப்பாற்றிவைத்த ஏடுகளின்பெருமை ப்ரஹ்மஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள் ஸ்ரீ-உ வே. இராகவையங்காரவர்கள் முதலியோருக்கே தெரியும். இவ்வமிசத்தவர் வைணவபரமாய் எத்தனையோ தமிழ்நூல்கள்செய்திருக்கிறார்கள். தமிழுரைசெய்திருக்கிறார்கள். வடமலையப்ப அரசரின் ஸமஸ்தானவித்வான் சிறியகாரிரத்நகவிராயர் இவ்வம்சத்தவர். சாபாநுக்ரகசக்தியுடன் கவிபாடத்தகுந்தபுலவர் இவ்வம்சத்தி லநேகரிருந்திருக்கின்றனர். குமரகுருபரசுவாமிகள்வம்சபரம்பரையோரில் ஆழ்வார்திருநகரிக்கிளையினர் அநேகர் இவ்வம்சத்தாரிடம் பாடங்கேட்டிருக்கிறார்களென்றதெரிகிறது. இம்மாறனலங்கார உரையாசிரியர்விஷயமான சிறப்புப்பாயிரச்செய்யுளையெடுத்துக்காட்டி இதனுடன் நிறுத்துகிறேன.

தருகாளமேகக்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலந்தாரங்குவலயத்தே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாரிரத்நகவிராயன்பேரைவரோதயனே.

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,

(நேஷநல்ஹைஸ்கூல்தமிழ்ப்பண்டிதர்,

திருச்சிராப்பள்ளி.)

25—5—1913.

தேற்றேகாரமாக்கிக் கூட்டினுமாம். பகுதி - இடந்தலைப்பாடு. துறை—மறுங்கணைதல்.

அவயவவுருவக மென்பது அவயவமே யுருவகஞ்செய் தவயவியை வாளாது கூறுவது:— 14 அவயவஉருவகம்

நிறத்தாரைவேலிமையாநீடுறையைநீக்கிப்
புறத்தாயிடரிழைக்கும்போர்மே—லறத்தான்
வருந்தாவிரங்குவதென்மாலரங்கத்தின்பம்
பொருந்தானனத்தாய்புகல். (248)

இது, அவயவவுருவகம்.

(இ-ள்) திருமா லரங்கத்தினிடத் தழகுகுடிகொண்ட முகத்தினை யுடையாய்! நினது செவ்வரிபரந்த கண்ணாகியவே லிமையாகிய வுறையை நீக்கி வெளிப்பட்டுத் துன்பத்தைச் செய்யும் பூசன்மேலும் யான் மிகவும் வருந்தும்படி கலுழ்வதற்குக் காரணம் யாதெனக்கூறுவா யாகவென்றவாறு.

தாரை - கண். உறை—கவிசனை. அற—மிக. வருந்தா—வருந்த. இரங்குதல்—அழுதல். இன்பம்-ஆகுபெயர். பகுதி—பொருட்குப்பிரிதல். துறை—கருத்தறிந்தழுத கண்ணீர் துடைத்தல்; என்னை? பொருள் வயிற்பிரிந்த தலைவன் உள்ளக்குறிப்பினைக் காந்து பன்னாளும் புதுவது வாக வுறப்பினைப்பாராட்டியதா லிஃதொன்றுடைத்தென அவனது பிரிவையுட்கொண்டழுத கண்ணீராதலின்.

அவயவியுருவக மென்பது அவயவியை யுருவகஞ்செய்து அவய வத்தை வாளாதே கூறுவது:— 15. அவயவிஉருவகம்

முதிராமுலையுமுறுவற்குறிவர்
தெதிர்பாயுங்கண்களுங்கண்டெய்தி—வதனமதிப்
பொற்றொடியையமாறன்பொருப்பிடைவைத்திங்கெதிர்ந்த
வற்புதனேதிண்ணியனுவின். (249)

இஃ தவயவியுருவகம். துறை—பாங்கன்றலைவனைவியத்தல். இதனுள் வதனமதியென்றது அவயவியுருவகம்.

பெண்ணமுதேபங்கையாற்பேரைமால்தண்சிலம்பிற்
றண்ணறும்பூவேங்கைதலைநாட்செய்—கண்ணி
தனைக்கொய்தனமேற்றமரிற்செறிப்பான்
றினைக்கொய்திறம்விளையாதே. (250)

இது மகா அவயவியுருவகம். இதனுள், பெண்ணமுதே யென்றது மகா அவயவியுருவகம். தண்ணறும்பூ....................கண்ணி—குளிர்ந்த நறுவிதாம் பூவாமுன்பே வேங்கை வைத்த அரும்பு. பகுதி—பகற்குறி. துறை—வேங்கையொடுவெறுத்து வரைவுகடாதல்.

16. முற்றுருவகம் முற்றுருவக மென்பது அவயவ அவயவிகளை யேற்றவிடத்தோடும் பிறவிடத்திநோடு முற்ற வுருவகஞ்செய்வது:—

வட்டவதனமதியுநுதற்பிறையும்
பெட்டநகைநிலவும்பேர்த்தறியாக்—கட்டளகக்
கங்குலின்மேன்மாறன்கனவரைவண்டீரிருந்தா
ஙிங்கிவளுக் தண்டோவிடை (251)

இது முற்றுருவகம். பெட்ட — விரும்பப்பட்ட. பேர்த்தறியா—நீக்கியறியாத. கட்டளகக்கங்குல் - ஐம்பாலாகக் கோலஞ்செய்த குழலாகிய விருட்பிழம்பு. ஒழிந்த அகல முறையிற்கொள்க. பகுதி—இடந்தலை துறை - வண்டுகற்றி மறுங்கணைதல்.

மண்படர்தாட்டாமரையுமைபடர்கட்காவியையுங்
கொண்டுமுலைக்கோங்கரும்புங்கொண்டதோர்—பெண்கொடியைக்
கண்டனையேனண்பாகழறலைமாறன்சிலம்பில்
வண்டமர்தண்பூஞ்சோலைவாய்., (252)

இதுவுமது. பகுதி — பாங்கற்கூட்டம். துறை — கழற்றெதிர் மறுத்தல். இதன்பொருளுரையிற்கொள்க.

ஆக இயைபுருவக முதலாக முற்றுருவக மீறாகப் பதினாறு மடைவே கண்டுகொள்க. (கூ௫)

பிற அணிகளோடு வரும் உருவகம் 121. உவமைபெறுசிலேடைவேற்றுமையுடனேது
வபநுதியுவமையென்றவற்றொடும்விரவும். (5)

(எ-ன்) அவ்வுருவகம் ஏ ன னு ம் அலங்காரம் பிறவாய அலங்காரங்களோடும் விரவிவருமென்ப துணர்—ற்று.

(இ-ள்) சிலேடைமுதலாக வுவமையீறாகக் கூறப்பட்டவைந்தலங் காரங்களோடும் விரவியும் வருமென்றவாறு.

உரைபெறுசிலேடையென்றதனால் வினைமுதலிய நான்கு காரணத்தானுவமை பிறப்பதேயன்றி யிரட்டுறமொழியுஞ் சொற்பொருள் காரணமாகவு முவமை பிறக்கும் என்பதும், சிலேடை இக்கூறிய வுருவகத்திற்கும் காரணம், இனிமேல்வரும் பிற அலங்காரங்கட்கு முப காரங்களாம் என்பதுந் தோன்ற நின்றதுங் காண்க. இச்சூத்திரஞ் சிங்க நோக்காம்.

அவற்றுட் சிலேடையுருவக,மென்பது ஒருபொருளை யொரு செய்யுளகத் திருபொருள்பயப்பதாகப் பலவிடத்தினும் புணர்த் திறுதி யினு மிருபொருள்பயப்பதாக வுருவகஞ்செய்வது:—

விற்புடைக்கீழ்மன்னிமிகுநாணிடைதழீஇச்
சுற்றுடைமாண்கோதைத்தொடைசெறியும்—பொற்புடைத்தாம்
பாணிழையாவண்டலவும்பைந்துளவமாலுறையூர்
மாணிழையார்சேயரிக்கண்வண்டு. (253)

இது செம்மொழிச்சிலேடையுருவகம். கண்ணிற்கும் அம்பிற்குஞ் சிலேடை.

(இ-ள்) (கண்ணின்மேற் சொல்லுங்கால்) வில் - புருவம். இஃது வமப்பேர் புருவத்தின்பரப்பின்கீழ்த் தங்கிப் பெருத்த நாணிடத்துக் கூடிச் சுற்றுதலுடைய மாட்சிமைக் குழலின்மேல் மாலையை மேனோக்கத் தாற் பொருந்துங் கண்ணாகிய வண்டெனவும், (அம்பின்மேற் சொல்லுங் கால்) தனுவி னகன்றவிடத்துக்கூடி மிகுந்த நாணுக்குநடுவே யெய்தி விரலிற் கட்டுதலுடைய விறற்சாடுறத் தனுவிற்குவல்லார் தொடுத்தெய் வதை யெய்தும் அம்பு எனவுங் கொள்க. பகுதி - சேட்படை. துறை- கண்ணயப்புரைத்தல்.

பூங்குமிழ்மீதெறிப்புணர்க்குமதனன்கலைதோய்ந்
தோங்குவனத்தாமரையி[illegible]பயினும்—தேங்குபுனல்
வெள்ளக்குளத்துறைமால்வெற்பினில்வாழ்மெல்லியலார்
வள்ளைக்குழையார்கண்மான். (254)

இது பிறிமொழிச்சிலேடையொடுங்கூடியவுருவகம். கண்ணிற்கும் மானிற்குஞ் சிலேடை.

(இ-ள்) (கண்ணின்மேற் சொல்லுங்கால்) பொலிவையுடைய மூக்கின்மீதேறிக் காமன் புணர்க்கு நல்லகலையைக் கற்றுப் பெருத்தெழுந்த தண்ணீரகத்துத் தாமரைபோன்ற முகத்திலுட்டடங்கு மிகுந்த புனலையுடைய திருவெள்ளக்குளத்துறையுந் திருமால்வெற்பில்வாழு மெல்லியலாராகிய வள்ளைக்குழையினையுடையார்கண்ணாகிய மான் எனவும், (மானின்மேற் சொல்லுங்கால்) பூவிலேறிக் கூடிய குமிழாகிய மரத்தினைப் பார்த்து, காமத்தைத் தன்னிடத்தே விளைக்கும் நல்லகலையைப் புணர்ந்து, ஓங்கிவளருங் காட்டின்கண் ணுளவாம் மரை கண்டு பழகு மெல்லிய வியல்பு மிகுந்த வள்ளைக்கொடியினது குழையைப்பருகுங் குறிப்பினையுடைய மானெனவுங் கொள்க. இதனுள், கண்மா னென்ப துருவகம். புணர் மதன் என்பதனை மதன் புணர் எனப் பாடமாற்றுக. துறை-இதுவுமது.

மன்பார்குளிர்விக்குமாறன்குடைமதியு
நன்பான்மதியுமதிநாடுங்கான் — முன்பாங்
குடைமதிக்குண்டாவதல்லகுன்றுதன்மைவானத்
தடைமதிக்குண்டாங்குன்றுதல். (255)

இது குணவேற்றுமையுருவகம். வடநூலார் வெதிரேகவுருவகமென்பதுமிது. குன்றுதல் - தேய்தல். மை - களங்கம். குடைமதியென்ப துருவகம். திணை - பாடாண். துறை - குடைமங்கலம்.

பொழகார்காரிதரும்பிள்ளைமாணிக்கநெறி
சிரியமாணிக்கமுறுஞ்செய்கைத்தோ—வாரியர்கா
ளூற்றுளதேற்றத்துவங்களெல்லாமுணர்ந்துணர்த்துக்
கற்றுளதாய்க்காணேன்களித்து. (256)

இதுவுமது. இதனை விலக்குருவகமென்றுங் கூறப்படும். துறை-அறமுறைவாழ்த்தி னடங்கும்.

வெகத்தாவையுவதாம்வெண்ணிலுமமெதருகே
முகத்தாற்முரசபிலாதியா—மெகவில
மாய்ந்தவுணர்வாற்சகளுக்காசின்றபிக்கிரது
லாய்ந்துணர்ந்தவாவாரிக்கும், (257)

இது, ஏதுவுருவகம். வெண்ணீர்மைமேதகுகேழாகம் - வாலிதாக் தன்மை பெருமையொடு பொருந்துந் திருமேனி. தாரசயிலாதி - வெள்ளி யாங் கயிலை. மோகநிலை - காமத்தினிலைமை. சகன் - ஈசப்பிரமவிருடி. ஆசின்று - குற்றமின்றி. அயிந்திரநூல் - ஐந்திரவியாகரணம் வானர சிங்கம் - சிறியதிருவடி. திணை - வாகை. துறை - சால்புமுல்லை.

முத்திரைக்கையன்றமுளரிமலரீதிதுபூர்
தொத்தணிமார்பன்றசுவணகிரி — பத்தி
திகழானனமன்றிதுதிங்கள்வாச
மகிழ்மாறனன்றிவனுமால். (258)

இது, அபநுதியுருவகம். பத்தி - பரமபத்தி; அஃதாவது அன்பு. சுவணகிரி - பொன்மலை. இதனுள் மகிழ்மாறனன்றிவனுமால் என்பது ருவகம். திணையுந் துறையு மிதுவுமது.

விடமனையகட்டூவிமெல்லியலாள்சோர்ந்தாள்
குடவரைபுக்கான்வெயிலோன்கொல்வா—ரடல்வேடர்
வேலவனேகக்குல்விருந்தருந்திவைகறைவாய்
மாதுறையூர்க்கெய்தன்மதி. (259)

இஃது உவமையுருவகம். பகுதி - உடன்போக்கு. துறை - செறி விலக்கல்; விருந்து விலக்கென்பதுமிது. இதனுள், 'விடமனையகட்காவி' என்ப துவமையுருவகம். " மையோர்குவளைக்கண்வண்டினம்வாழும் " என்பது மிது.

பொற்பிற்குரியதிருமால்கரிசொன்னபோழ்தினிலச்
சொற்பிற்படச்சென்றுதவியமாயன்றுவரையின்வாய்
வெற்பிற்புடைக்குந்தனவேழமானவிலங்கறுத்தாற்
கற்பிற்குரியவிப்புல்லோதடுத்திடைகாப்பதுவே. (260)

இதுவு முவமவுருவகம். இதனுள் வெற்பிற்புடைக்குந் தனவேழ மென இடையி லடையுபுத்துவுருவா றுங் காண்க. பகுதி - மணஞ்சிறப் புரைத்தல். துறை - அக்கினிசாக்ஷியாகத் தலைவன் றலைவியைக் கைப் பற்றி வலம் செய்தது. வசிட்டனைய மருந்ததியைய மிருவருங்கண்டு

மணவறைக்கட் பள்ளியிடத்தாராயகாலைத் தலைவ னருமறைச்சடங் கிற்குப் படுத்த தருப்பையைநோக்கித் தலைவி காதலையுந் தனதாற்றாமை யையு முட்கொண்டுரைத்தல். (௩௬)

122. ஒழிவறவுருவகமுடனேயுவமையு
மொழிவதற்கடங்காமுறைமையவாகலின்
மொழியப்புகும்யான்முதுணர்விலனு
லிவற்றினுக்கிதனுளிசைத்தவைபெரீஇவரு
மவற்றையுமிவற்றினகப்படவுரைகொளீஇ
முற்றவுணர்த்தியமுறைமையவாக்குதல்
கற்றோரறிவின்காட்சியதாகும்.

(எ-ன்) மேற்சொல்லிய வுருவகமு முவமையு மென்னு மிரண் டிற்கும் புறனடையுணர்—ற்று.

(இ-ள்) உருவகமு மதற்குக் காரணமாகிய வுவமையு மென்னு மிரண்டலங்காரமு முற்றக்கூறுவதற் கடங்கா முறைமையையுடைய வாகலானும் அவற்றைக் கூறுவதற்காக முந்துநூலுணர்ந்தோரவையின் கண் புகுதாநின்ற யான் முதியவுணர்விலனுதலானும் இக் கூறிய விரண் டலங்காரத்திற்கு மிந்நூலுள் யானிசைத்த தொகைவிரிகளைக் கடந்து வருவனவா முருவக வுவமங்களையுங் கூறியவிவற்று ளகப்படுவதாக வுரை கொளுத்தி முழுதுமுணர்த்திய முறைமையவாக்குதல் அலங்கார முதலிய விலக்கணங்களோடு மிலக்கியங்களையு முற்றக்கற்றோரறிவினுக் கழகென்றவாறு.

உவமையின்வழி பிறந்த துருவகமாதலி னுவமைக் குரைக்கத் தகுவனவெல்லா முருவகத்திற்கு முரைத்துக்கொள்க. ஈண் டுருவக முற் கூறியதனு லதிகார மிடையறாதெனக் கொள்க.

கூறியவற்றை யொரீஇயினபோல்வருமவற்றுட் சில வருமாறு:—

காமர்தத்தோகைகளிவண்டினமுலவுந்
தாமரைசாராம்பற்றளிநறவுண்—டேமுறுபே
ரின்பத்தினும்பெரிதேயெவ்வுண்மாலைப்பணிர்
அன்பற்றவர்சேர்சுகம். (261)

இது, பேதத்தை யபேதமாக்கின வாய்பாட்டானல்வந்த வுருவகம். இது முதலே உவமேயமு முவமவுருபுந் தொக்க தொகையுருவகம். என்னை? கண்ணாகிய வண்டினம் முகமாகிய தாமரை வாயாகிய வாம்பல் பானமாகிய நறவு என்பன முறையே தொக்கதா லென் றறிக. ஆனால் அவற்றினை யவ்வாறாக்கியதென்னை? வண்டினம்போன்ற கண்களுலவுந் தாமரைபோன்ற முகத்தி லென்பனவோடு மேனையவுந் தொக்கதாக விரித்துத் தொகையுவமமாக்கப்பெறாவோவெனின், ஆகாது; என்னை? முற்றுவமவாய்பாடாக வுவமமொன்றனையுங் கூறும்வாய்பாடு உவமையுருவக மென்னு மிரண்டற்கும் பொதுவாய்பாடேனு மீண்டு மருட்கை யென்னு மெய்ப்பாட்டுவயத்தனாகிப் புணர்ச்சியை மகிழ்ந்து பேதத்தை யபேதமாக்கி விதந்துரைத்தானதலிற் றொகையுருவகமாக வுரைகோடலேயாம். காட்சிக்குத் "திருவளர்தாமரை" யென்னு முதற்பாட்டு மருட்கை வயத்தனாகிக் கூறிய இவ்வாய்பாடென் றுணர்க. அற்றேல், இதனகத்துப் பேதத்தை அபேதமாக்கிய தியாதோவெனின், தாமரை வேறு *முகம் வேறாயிருக்கவு முகத்தைத் தாமரையென்றே பேதமறக் கூறியவாற்றானு மேனையுவமேயத்தினையு மவ்வாறே கூறியவாற்றானு முணர்க. பகுதி-இயற்கை. துறை - புணர்ச்சிமகிழ்தல்.

மேலிருந்தவிண்ணோர்வியத்தக்கசெம்மையதாய்ப்
பாலிகையுட்டௌ்ளமுதம்பாலிக்குஞ்—சால்புடைய
திங்களைக்கண்டான்மாறன்செம்பொற்றுடரியுள்யார்
தங்களுளங்கோடாதவர். (262)

இது, அபேதத்தைப் பேதமாக்கிய சிலேடைவாய்பாட்டான்வந்த அற்புதவுவமை. இதனுள் அபேதத்தைப் பேதமாக்குதல் சந்திரனொருவனன்றிப் பிறனொரு சந்திரனின்றாகவுஞ் செம்மையுடையதாய்ப் பாலிகையுட் டெளிந்த அமிர்தத்தை விளம்புந் திங்களெனப் பேதித்துக் கூறினமையா னறிக. பாலிகை - வள்ளமும் அதரமும் ஆதலாற் சிலேடை. பகுதி - இதுவுமது. துறை - தலைவனை வியத்தல். இதுவுந் தொகைநிலையுளடங்கும்.

காவிற்பிறவாக்கனகக்கொடிகமல
வாவிக்கடங்காமடவன்னம்—பூவிற்

பிறவாகுக்தேறல்பெய்கார்மால்வெற்பி
லுறவசய்கிறையுண்ணுரு. (263)

இது, சம்பந்தமுள்ளதைச் சம்பந்தமில்லையாக்கி வந்த வுருவுகம். அன்றியும், காவிலும் வாவியிலும் என்றமையால் விரோதவலங்காரமு மிதனுள் விளைப்பாருமுளர். "மலையிடைப் பிறவா மணியே யென்கோ, அலையிடைப் பிறவா வமுதே யென்கோ" என்பனவற்றையும் விரோத வலங்கார மாக்குமாறுபோல என்றறிக. பகுதி - இதுவுமது. துறை- இயல்பிடங்கூறல்.

சோதிலாப்பொன்னைக்குழைத்துமதன் றாரியக்கோல்
காதலாற்கைப்பற்றிக்காட்கரைமால்—போதுங்
குழைந்த நள்பொற்கொம்பிற்குறித்ததென்கோவின்பக்
குழைந்தருளிக்கொம்பினையேதான். (264)

இது சம்பந்தமில்லாததனைச் சம்பந்தமாக்கிக் கூறிய மோகவுவமை. விகாரவுவமை அதிசயவுவமை எனினுமாம். பகுதி—இயற்கை. துறை— நலம்புனைந்துரைத்தல்.

மாயன்குருநகாபுரியனையமாதரா
ளாயந்தொழுவாழநமையுறிற்—றூய
கனவென்கோகூடிக்குழைந்ததனைக்காமர்
நனவென்கோயாதென்கோநான். (265)

இதனுள், குருநகாபுரியனையாளென்பது குருகாபுரி செயற்கையா னன்றி யியற்கையானு முதலே யழகுடையதுபோன் றிவளு மியற்கை யான் அழகுடையளென்பது தோன்ற நின்றமையா லிதுவு முவ மையு ளோர் பேதம். பகுதி—இதுவுமது. துறை—ஆயவெள்ளம் வழி படக்கண்டு மாயமோவென்றல். "பாயும்விடையான் றில்லையன்னாள்" என்பது மிது. "வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க, சொல்லே ருழவர் பகை" எனவும், "நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே, கல் லார்கட் பட்ட திரு" எனவும், இவைபோல்வன பிறவு மிவற்றின்பாற் கூட்டியுணர்க.

திருந்திழையாய்மாறன் றிருவாய்மொழியே
மருந்துபிறவிப்பிணிக்குமாதர் — தரும்பிணிக்கு
வாய்ந்தமருந்தென்பார்மடல். (266)

இது, மாதர்தருங் காமமாகியபிணிக்கென்பது மாதர்தரும் பிணிக்கென மாட்டேறிலாதுவந்த வுருவகம். பகுதி—மடல். துறை—உலகின் மேல்வைத்துரைத்தல். பா—இரண்டுவிகற்பத்தால்வந்த நேரிசைச் சிந்தியல்வெண்பா.

வழிமதுத்தார்மாறன்மணிவரைமேன்மாதர்
விழியெழுதினுமிணைவெற்பெழுதினு
மொழியெழுதலாமோமொழி 267)

இது, மாட்டேறில்லாதுவந்த ஏகாங்கவுருவகம்; என்னை? முலை யென்பவற்றை யுவமைவாய்பாடுதோன்றக் கூறினமையா னுபயமுலை யாகிய விணைவெற்பெனக் கோடல்வேண்டுமென் றுணர்க. பகுதி—இதுவு மது. துறை—எழுதலரிதென்றல். பா—ஒருவிகற்பத்தால்வந்த இன் னிசைச்சிந்தியல்வெண்பா.

நாணுநிறையுநறுநுதாஅன்மாணிழையார்
தந்தவெங்காமத்தழல்கதுவவெந்து
தருமடன்மாவேற்றந்தரும். (268)

இஃதேகதேசவுருவகம இதனுள், நாணும் நிறையுமாகிய பஞ் சென வுருவகஞ்செய்யாது காமத்தழலென வொன்றையே யுருவகஞ்செய் தமையா னென்றறிக. பகுதி—இதுவுமது. துறை—நாணழிவுரைத்தல். பா—அடிதொறூஉ மொரூஉத்தொடைபெற்றுவந்த இன்னிசைச்சிந்தியல் வெண்பா.

தருமன்றண்ணளியாற்றனதீகையால்
வருணன்கூற்றுயிர்மாற்றலின்வாமனே
யருமையாலழித்தின்னலையர்துடைத்
திருமகன்றிருமானிலமன்னனே. (269)

ஏதுஉருவகம

என்பதும் ஒருவகையுருவகம்; என்னை? தண்ணளியால் மன்னனாகிய தருமன், தனதீகையால் மன்னனாகிய வருணன், உயிர்மாற்றலால் மன்ன

ளுகிய கூற்று, அருமையால் மன்னனுகிய வாமன், அழகால் மன்னனுகிய காமன் என வுருவகஞ்செய்துணர்க.

மன்னர்மடங்கன்மறைபவர்சொன்மாலே
யன்னநடையினுர்க்காரமிர்தந்—துன்னும்
பரிசிலர்க்குவானம்பனிமலர்ப்பைந்தா
ரெரிசினவேற்றூனேயெங்கோ. (270)

என்பதும் கூறிய ஒருவகை யுருவகம்.

வருந்தியின்றூண்மறந்தொழிந்தாள்வளர்த்தாள்சொற்கேட்டில்கடிந்தாண்
முருந்தின்காறங்கூழையைமுனிவார்நின்னையென்முனிவார்
பொருந்திற்றன்றூலிதுவென்னுய்பொன்றுமளித்திவ்வுயிரொன்னுய்
திருந்துசோலைக்கருங்குயிலேசிலம்பவிருந்து கூவுதியால். (271)

என்றற் றொடக்கத்தன வுருவக இலக்கணம்விளங்கநின்றிலவேனு மதனிடத்து மயக்கநின்றன கொள்க. என்னை கொள்ளுமாறெனின், ஈன்ற குயிலாகியபெண் மறந்தொழிந்த, வளர்த்த காக்கையாகிய பெண் இல் கடிந்த, பெண்குயிலாகியபெண்ணே யெனக்கொள்வதை மயக்கநின்றமை காண்க (௩௭)

௩-வது உருவகம் முற்றும்.



௪-வது உள்ளுறையுவமம்.



123. உணர்வதற்கரிதாமுவமப்பொளி
புணர்திறத்தினையேற்பொருளுமெய்ப்புருவெனப்
பிறப்பொடுமைந்தரும்பெற்றித்தாகிச்
சிறப்புறுதிணைகளிற்றெய்வமொழிந்த
கருப்பொருள்களுக்கட்டுரைபயின்று
முவமைப்பொருட்டிருள்ளுறுத்தலுற்றவை

# விஷயசூசிகைமுதலியவற்றின் அகராதி.

[எண்—பக்க எண்.]

யுவமச்சொற்றொகலொருதலையாகியு
மன்பினுதளவாமதுத்திணையிருவயி
னின்பதுன்பத்திசைதிரிந்திசையாத்
துணைவன்றுணைவிதோழிசெவிலி
யிணையெனும்பாங்கன்பாணனென்றிவரற்
கொள்கையின்வரூஉங்குறிப்புரைத்தாகும்.

(எ-ன்) வைத்தமுறையானே யுள்ளுறையுவமமெனுமதற்குப் பொதுவிலக்கணமுணர்--ற்று. உவமப்போலியென்று மதற்குப்பெயர்.

(இ-ள்) உணர்வினுணர்தற்கரிதாகிய வுள்ளுறையுவமமென்பது முற்கூறிய வெளிப்படையுவமம்போல வினைபயன்மெய்யுருவுகாரணமாகத் தோன்றுமவற்றினோடும் பிறப்புங்கூட்டி நிலக்களனாதிநோடு முவ்வகு நிலங்களிற் றெய்வதமொழிந்த கருப்பொருணிலைக்களனாகவு மழகிய வுரையுட் பயின்றும் வெளிப்படையாகவரு முவமப்பொருளோடும் அதற் கெதிராகிய வுவமேயப்பொருள்களை யுள்ளுறுத்துக்கொள்ளும்படித்தாயு முவமேயம் பாடலுட்பயின்றுவாராது அயலாகியு முவமவுருபு தொகுத லொருதலையாகவுங் களவு கற்பெனுங் கைகோளினிருவகையினு மின்ப துன்பங் காட்டுவனவா யிசைதிரிந் திசைப்பனவாய்த் தலைவன் றலைவி முதலியபெயர்களாற் குறிப்புரையாய்வரு மென்றவாறு.

உணர்வதற்கரிதா மென்பதனால் ஏனையுவமம் புலப்படக்கூறுத வுள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத் துக் கூடிநிற்குமென்பதாம். கொள்கையின்வரூஉமென்பதனால் "கிழவி சொல்லி னவளறி கிளவி, தோழிக் காயி னிலம்பெயர்ந் துரையாது" எனவும், "கிழவோற் காயி னுரனொடு கிளக்கும், ஏனோர்க் கெல்லா மிடன் வரை வின்றே" எனவும், "கிழவோட் குவம மீரிடத் துரித்தே," "கிழ வோற் காயி னிடன்வரை வின்றே" எனவும், "தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக், கூறுதற் குரியர் கொள்வழி யான" எனவும் வருஞ் சூத்திரங்களாலுந் தோழியு முறைமையுருந் தலைவன்கொடுமைகூறும் வழியினும் பிறவழியினுந் தலைவனாசின்னன்னுள்ள கருப்பொருள்களா னவைசொல்லத் தலைமைப்பெயன்றியுந் தலைவிக்கேற்றவை முவமத் தன்மைத்தோற்றத்தனவா யுள்ளுறையுவமத்தொடுமும், பிறவாறு வரு

வனவா மவைகளுங் குறிப்புரைத்தாகு மென்பதனுறு முய்த்துக் கொள்க. பிறப்பாவது அவ்வவ நிலங்களி விழிந்தபிறப்போடுஞ் சார்த்திக் கூறல். உள்ளுறுத்தல் - உள்ளேகுறித்தல். ஒருதலை - நிச்சயம். அகத்திணை யிருவ்பினென்பது இறந்ததுபோற்றலென்னுந் தந்திரவுத்தி. இசைதிரிந்திசைத்தலென்பது செய்யுட்சொற்க டம்பொருளுணர்த்தாது வேறுபடக்கூறுதல். இசையாவது சொல். சொல்லாவது எழுத்தினு லாக்கப்பட்டுப் பொருளறிவுறுத்துமோசையாகலி னிசையென்றார். இஃ தாகுபெயர். என்னை? "இசைதிரிந்திசைப்பினுமிசையுமன்பொருளே, யசைதிரிந்தியலா" என்னும் பொருளியற்சூத்திரத்தா னுணர்க.

இவற்றிற்கெல்லாம் செய்யுள் வருமாறு:—

வினையுவமப் போலி

காமர்பன்மலர்களுவியபொதும்பர்
மாமரப்பணையின்மதுகாமிழைத்த
முதுநறுந்தேறலொடுமலர்முன்னுபு
கொளத்தருமாபிற்குன்றவாண
வளைதலின்வரையாதொழுகலினிருவிரு
மாறுபட்டொழுகியமதியினிராகலிற்
றிருமகிழ்மாறன்றிருவருட்கிலக்கா
யொழுகாதவருளத்தொன்று
மழுகாமதியின்மறுகுவல்யானே. (272)

என்பது வினையுவமப்போலி; என்னை? மாமரப்பொதும்பாகத்து மது காங்கள் தமக்குப் பின்னைக்கு நுகர்வதாக மறைத்துவைப்ப விளைந்த தேனை யொருமலராராய்ந்து கைப்பற்றிக்கொடுபோங் குன்றவாணனே யென்றதனுற் களவிலொடுங்கூடிய கூட்டத்தை நீட்டித்துப் பின்ன ரிவளை வரைந்துகொள்ளக்கடவேனென நினைந்தநினைவு நவறும்படி பருவமுதிர்ந்த விவளையும் பிறரயர்ந்த பொக்கணிந்து கொடுபோவ ரதுபோல வென்பவாகலான்; உவமைக்குப் பிறிதுபொருள் எதிர்த்துவமஞ்செய்யா தான்பேப்பிறந்த கருப்பொருளவற்றோடு முள்ளுறுத்துவைத்தலி னிஃ துள்ளுறையுவமமாயிற்று. அவற்றோடு மிஃது ஒருமலர் கொடுபோவு

ரென்னுந் தொழிலொடு மிவளையும் பிறர்கொடுபோவரென்னுந்தொழிலுவமங்கொள்ளநின்றமையின் வினையுவமப்போலியாயிற்று. அன்றியுங் காமர்பன்மலர் கஞலியபொதும்ப ரென்பது நற்றாய் தோழி செவிலி முதலியோர்வைகு மனைக்குவமையாம். திணை - குறிஞ்சி. கைகோள் - களவு. கூற்று - தோழி. கேட்போன் - தலைவன். இடம் - முன்னிலை. காலம்—நிகழ்வு. பயன்—இற்செறிவுரைத்து வரைதல்வேண்டுமென்றது. மெய்ப்பாடு—அச்சத்தைச்சார்ந்த பெருமிதம். பகுதி—பகற்குறி. துறை—வருத்தங்கூறி வரைவுகடாதல். காமர் - அழகு. ஒழிந்தனவுமுரையிற் கொள்க.

இறைவறங்கூராவீர்ந்தண்பொய்கைத்
துறைதொறுந்துவன்றதோடவிழ்பன்மலர்
மாந்துபுவயினிறைவெய்தியகவரி
யேந்தெழின்மாடத்தின்றகன்றுள்ளிப்
படர்வுழிப்படர்வுழிப்பணைமுலைக்குறுங்கண்
மடைதிறந்துவளகமடுநிறைத்தொழுகு
பாற்றடினியினயற்பழிதீர்பேடையைப்
போற்றறுகளிப்பிற்புணர்ந்தவண்மூழ்கிப்
புனிதமுற்றிருசிறைபுலர்த்தியவோதிமந்
தணந்தயற்கழனிச்சாதிப்பெடைகளை
மணந்ததனனந்தலைமள்ளர்தாமுழுத
நாற்றடியதன்கணறுந்தழைபதனழிந்
தூற்றெழுநளங்கவுறுபுனலாடிப்
பண்டுதான்மரீஇயபானிறப்பேடையைக்
கண்டுதான்வளைக்குங்காமருகடல்கெழு
கண்ணகன்ஞாலங்கண்டுகண்ணயப்பான்
விண்ணவர்வியப்பான்மேதகுபடிவத்
தாவனைத்துயின்றருளரங்கத்தழ்நி
னூரவுநீர்க்காவிரிக்குறுபுனலூர
புல்லேன்பொதுவுனின்மார்பெனச்
சொல்லேன்புன்மனத்தொடர்புடையேனே. (273)

இதுவும் வினையுவமப்போலி. இதனுள், இறைவறங்கூரா என்பது சிறிதும் வற்றாதவென்றவாறு. ஈர்ந்தண்பொய்கை - மிகவுங்குளிர்ந்த

பொய்க்க. "துறைதொறுந்துவன்ற..........................கவரி" இடர் தொறுநெருங்கின இதழ்விரிந்த தாமரை முதலிய பலமலரையு முண்டு வயிற்றைநிறைத்தல்பொருந்தின காரான். "வந்தெழில்.................... தொடர்புடையேனை" என்று உயர்ந்த அழகையுடைய மாளிகையினிடத் தின்றகன்ற குழக்கன்றைநினைந்துசெல்லுமிடத்து முறுகின முலைக் குறுங்கண் மடைதிறந்து பள்ளவர்விகளைப் பெருக்கி யோடாநின்ற பாலாற்றின்பக்கமே குற்றமற்ற தனதுபேடையைப் பாதுகாப்பற்ற களிப்பினோடும்புணர்ந்தப் பாலாற்றினடுமூழ்கிப் பவித்திரமுற் றிருசிற கரும் புலர்த்திய சேவலோதிம மப்பேடையை நீங்கி யயல்வயற் கூட்டப் பெடைகளை மணந் தக்கழனிநடுவன் மள்ள ருழுத நாற்றடிநனந்தலை நறியத்தழைக ளழுகி யூற்றிருந்த சேறு மிகுந்த புனலிடை யாடி முன்னர்த் தான் மணந்த வெண்ணிறப்பேடையைப் புணர்ச்சிகுறித்து வளையும், அரவணைத்துயின்ற அரங்கத்தமிர்தி னூரவுநீர்க்காவிரிக்குறுபுன லூரனே! புல்லேன் பரத்தையர் பொதுவுணின்மார்பெனச் சொல்லேன் புன்மனத்தொடர்புடையே னென்றவாறு.

பொதுவுணல்-பரத்தையர் பலரா யேககாலத் தின்பத்தைப் பொது வாக அநுபவித்தல். இதனுள், பரத்தையரென்பது சொல்லெச்சம். ஒழிந்த அகல முரையிற்கொள்க.

அஃதாக; இதனையும் வினையுவமப்போலி என்ற தென்னையெனின், தனக்குரிய பேட்டோடும் பாலாற்றினயற்புணர்ந் ததன்பின்னர் அப் பாலாற்றின்முழுகியசேவ லன்னப்பெடையைநீங்கி யயற்கழனியிடத்து வேற்றுப்பேடைகள் பலவற்றையும்புணர்ந் ததனள்ளிடை நாற்றடிக் களங்க வுறுபுனலின் முழுகி யக்களங்கப்புனல் புலராமுன்னம் பண்டு தான மரீஇய பேடையைவளைபு மென்பதனால் நமதகச்சோலையினடுவட் பனிநீரோற் பூரித்த புழுகுசுனையினதய லென்னோடும் பாதுகாப்பற்ற களிப்புடன் உவர்ப்பில்லாவின்பத்தைத் துய்த்துப் பவித்திரமெய்த வேண்டி முழுகி யீரவாடைகளைந்து நனைந்த குழற்கற்றை புலர்த்தி யெதிர் முகமாகவிருந்த நீ நீங்கி யெனதுமாளிகைக் கயலே சேரிப்பரத்தையர் பலரையுந்தோய்ந்த வேர்வோடுங் குழம்பிய மான்மதச்சேறு புலரா முன்னம் வாயில்வேண்டாதுவந் தெனது பள்ளியிடத்தானுகி மணி மேகலையைப்பற்றுதற் கிருகையால் வளையாநின்று யென்னும் உவமேய வினை கருப்பொருள்களானுகத் தோன்றிநின்றமையா னென்றுணர்க.

இது திணை - மருதம். கைகோள் - கற்பு. பகுதி - பரத்தையிற் பிரிதல். கூற்று - தலைவி. கேட்போன் - தலைவன். இடம் - முன்னிலையாய பள்ளியிடன். காலம் - நிகழ்காலம். பயன் - ஊடறீர்தல். மெய்ப்பாடு - வெகுளியைச்சார்ந்த வுவகை. இதற்குத் திணையுட்டுறை - பெண்பாற்கூற்றுப்பெருந்திணை. துறை - இல்லவைநகுதல்; அல்லது பரத்தையிற்பிரிந்துவந் தாற்றாமைவாயிலாகப் புகுந்த தலைவனொடு தீர்கின்றாளாய இயற்பரத்தைகூற்றுமாம்.

குவளையுங்குமுதமுந்தவளவொண்பதுமமுந்
திசைதிசையோசனைதேங்கமழ்திவ்விய
வசைதீரந்தண்மயிலைவெளிப்
பொய்கையுட்செவ்வியிற்பொதியவிழ்புனிதச்
செய்யதாமரைத்தேறலையளவளா
யுவட்டாதருந்தியுமுருகியசுரும்பதன்
கரைசேர்வெள்ளிடைக்கவித்தநீர்முள்ளியிற்
பாடவிழ்தயற்சுரும்புளர்ந்துணப்பதனழி
பூநறவுண்டின்புறுபுனலூரன்
றெண்டிரைக்காவிரித்திருவரங்கேசன்
றொண்டர்தந்தொண்டர்தொடர்பினையொரீஇப்
போதம்புறந்தாப்புரைதீரின்னுயிர்க்
கேதங்கொள்ளுநரிதயம்விட்டகலா
தொல்லாப்புலன்வழியுய்க்கும்
புல்லறிவினுட்குடிபுகும்புன்மையனே. (274)

இது பயனுவமப்போலி; என்னை? பொய்கையுட் பவித்திரச் செய்யதாமரை பருவத்தின் மலர்ந்தது புதிய தீந்தேறலை யளவளாயுண்ணத்தெவிட்டா துள்ளமுருகிய சுரும்பு அதன்கரையினில் மலிந்த முள்ளுடை நீர்முள்ளி முறுக்கவிழ்ந்தபருவத்து வேற்றுச்சுரும்பு பலவுந் துவைத்துண்ணச் செவ்வியிழந்த பழம்பூவிற் சுருங்கியதேனையுண்டின்புறுமெனவே நமது தலைவர்க்குயர்ந்தமகளி ரிழிந்தமகளி ரென்பதில்லை; புணர்ச்சியின்புறுதற் கியாவருமுரிய ரென்னும்பய னுள்ளுறுத்துக் கொள்ளக்கிடந்தமையா னென்றுணர்க.

திவ்விய - நல்ல. புனிதம் - பவித்திரம். அளவளாய் - உடனுமிருங் கலந்து. வெள்ளிடை - வெளி. கவித்தல் - மிகுதல். புன்மையன் -

அறிவினாற் சிறுமையன். வெளியினிற்கும் நீர்முள்ளி யெனவே வீதியினிற்கும் வேசை என்பதாயிற்று. ஒழிந்த அகலம் நம்பெருமாள் மும்மணிக்கோவைவிரித்துரையுட் காண்க. இனையும் பகுதியு மிதுவுமது.

துறை - உழையரியற்பழித்தல்.

இனியதெள்ளமிர்தாயெறித்தெழுகிரணப்
பணிமதியகடுழப்பணைநெடும்பொங்கர்ப்
பூந்துணர்தகைஇயபொழிலெழினள்ளிடை
யீர்ந்தண்கோட்டகத்தினமலர்முற்றிய
பொதியவிழ்தாமரைப்பொகுட்டாசனத்து
மதிநலனுறப்புணர்மாண்புடைப்பெடையொடும்
வீற்றிருந்தின்புறுமென்மையோதிமமொரு
பாற்படுகரைசேர்பன்மரக்காவிற்
குறுகுபுகொடுமுட்டாழைக்கூன்சினை
வெறுநிலத்தடர்தாவிரித்தபாசடைமேற்
றனிநறைமாந்துபுசார்பெடைக்குருகொடு
புணர்தனலனுறும்புனன்மலியூரன்
பூமகளிலைகுலாம்பூண்முலைமுகடுழத்
தேமலிழ்பசுந்துழாய்த்திருமணிமார்பன்
றென்னரங்கேசன்றிருவருட்கிலக்கா
மூறனுடையோர்களுயிர்த்துணையெனவா
ழில்லறம்பழிபிறங்காதிருந்தில்வி
னகனமர்ந்தானுதுறையுந்
தகவேதுமிலாததலவறளோனே. (275)

இதுவும் பயனுவமப்போலி; என்னை? இருமனமு மொருமனம் போலப் பேரானந்தமெய்தப் புணர்ந்த பெடையோடும் பொதியவிழ்ந்த தாமரைப்பொகுட்டி லாசுவிற்றிருந் தின்புறுஞ் சேவலோதிம மப்பெடையைப்பிரிந்து வாவிக்கொருபக்கமான கரைசேர் பன்மரக்காவின்புறத்து வளைந்த முள்ளுடைத்தாழை முடச்சினை வெறுநிலத்துத் தகடுபட விரித்த பாசடைமேலிருந் ததனிடத்துத் துளித்துவிழுந் தேனையுண்ட களிப்பினால் வெளுத்த சிறையுடைப் பெடைக்குருகைப் புணர்தலு

மானந்தமெய்தும் புனன்மலியூரனெனவே இப் பொற்புடையில்லின்க ணிருந் திக்கற்புடையவளோடு மிருமனமு மொருமனமாகப் புணர்ந்து பேரானந்த மெய்தியபின்னர் யாம்புடைசூழ அரசவீற்றிருந்தோன் இவளைநீங்கி எமது மாளிகைக் கயலாய்ப் பொலிவிழந்த சேரிப்பரத்தை யைப் பெண்டன்மைமாத்திர மொத்தலிற் காமபானத்தையுண்ட புத்திப் பிரமையா லுவர்ப்பின்றிப் புணர்ந்ததனு லின்பமெய்துமூரான் றகுதி யொன்றுமில னென்றுரைத்தபான்மை யுள்ளுறுத்துக்கொள்ளக்கிடந் தமையா னென்றுணர்க.

இதற்கும் விரித்துரை நம்பெருமாண்மும்மணிக்கோவையுரையுட் காண்க. பகுதி—இதுவுமது. துறை—தோழி தலைவனை யியற்பழித்தல்.

3. மெய்யுவமப்போலி

நீர்நிலைமுற்றியநிழன்மலிசோலையுட்
கார்வழங்காதகாலையுங்கவின்பெற
வேர்முதற்பழுத்துவியன்சினைப்பலவு
வளங்கெழூஉநாடவெம்மணிபுரைமாண்கவின்
புறந்தருமாயினும்புனிதநின்னின்று
லரவணைத்துயிலமர்ந்தருளரங்கேசன்
றாநீர்க்காவிரித்துறைபடிந்தல்லதை
யொல்லென்மலரமளியினுறப்
புல்லென்பரத்தையர்ப்புணர்ந்தநின்மார்பே. (276)

இது மெய்யுவமப்போலி; என்னை? கார்வழங்காதகாலையும் நிழன்மலிசோலையுட் பலவு வேர்முதற்பழுத்து வாட்டமின்றி வள னெய்தினாற்போல நீ யென்னிடத் தருளின்றிப் பரத்தையர்மாட்டுப் பிரிந்தகாலத்தும் ஆயவெள்ளம் விட்டுநீங்காத எனதுமனையிடத் தில்லறங்கோடாதுநடத்துதற்பொருட் டித்துணைப்போது முளனுனே னென்றதாக வுள்ளுறுத்துக்கொள்ளக்கிடந்தமையானென்றறிக. இதற்கு மொழிந்த விரித்துரை மும்மணிக்கோவையுரையுட் காண்க. பகுதி— இதுவுமது. துறை—அணைந்தவழியூடல்.

உலகினீரழுவத்துமிறையதன்க
ணலைகொழித்தலைதொறுமலைதொறுமொத்துன்
டழுங்குறுசெய்தியயார்க்கைதாலியர்

சதுமறைப்பொருளாற்றருந்தமிழ்மறையினுண்
முதுமொழியுணராமூடமதடைந்த
மனனகமலமிகமறுகுன
ரினமெனவொன்றுமிகழ்பொய்ம்மையனே (278)

இது நிறமல்லாத பண்புவமைப்போலி. என்னை? சோலையுட் டன்னிழலே துணையாகத் தளிர்த்த முல்லைக்கொடியின்மலரானது விரிந்த கதிர்தெறுதலான் வெம்மையுற்றுணங்க முடப்பலவு தனக் கயலாகத்தோன்றின செங்கிடைமலர்க் கழகுமிக அதற்கு நிழல்செய்யுமது போலத் தலைவனும் தன்னையேதுணையாக ஆவிதளிராநின்ற விவளுங் காமத்தீயால் வெந்து மேனிவாடத் தனக்கயலாய பரத்தையர்க் குடனுமயிருந் தளிர்ப்ப நலங்கொடாநின்று னெனப் பண்புள்ளுறுத்துக் கொள்ளக்கிடந்தமையா னென்றுணாக. பகுதி - இதுவுமது. துறை—பாணனொடுவெகுளல். கூற்று - தோழி.

ஒன்றுய்ப்பரந்தவுறுவளிகறங்கலின்
மின்றும்பன்மின்மிளிர்விசும்புழுசினை
சுமைமலிந்தொசிதரத்துணர்த்தமென்பூமுகை
பொறிச்சுரும்புளர்தொறுமுளர்தொறும்பொதும்பருண்
முறுக்குடைந்திழிதருஉமொய்ந்நறுந்தேறல்
பரந்துபன்முகத்தவாய்ப்பவளக்கொடியொடுங்
குளூஉக்கட்பரூஉத்தாட்குடம்புரைசெருத்தற்
கயவாய்மேதிகட்கழுநீருண்
டுயவால்வைர்நுதித்தொடர்நெறிமருப்பிற்
புறக்காழ்வயிரப்பூங்கழைதடிந்துகு
நிறக்காழ்நித்திலநிரந்தாம்வான்றயல்
வெள்ளிடைநிவந்தமேதகுசுவலினை
யுள்ளுயிர்ப்பெடையையுறையுளினிருத்திப்
பாலுணீர்தெரித்துப்பருகுமொண்சேவ
லாலுநீர்ச்சிறைபுக்காய்ந்திரைகொணர்வலென்
றிகர்தயலிடைப்படிந்தெழுமயர்வுயிர்ப்பான்
வாலுளைவப்பெணமறுகுபுகுதுகிலிழ்ந்

தன்மையிற்றவக்குற்றச்சப்பார்வையிற்
புராதனப்பொய்கையுட்புகுபுன லூர
பொருவருதாமரைப்புதல்விளைப்பயந்த
திருமறுமார்பன்றிருவரங்கத்துப்
பொதுநலப்பெண்டிர்பொதுவுணின்மார்ப
மல்லனீர்படிந்தல்ல
புல்லேந்தீண்டலெம்பொன்னடிச்சுவடே. (279)

இதுவும் பண்புவமப்போலி ; என்னை ? சேவலன்னம் நித்திலங்கள் வெள்ளிடைநிவந்த மேதகுசுவலினை வாலுகவைப்பெனக்குறுகி யிருந்தற்கு மென்மையில்லாததனோடு மறிவுமயக்கமுற்றதனால் இலச்சை யுற்றுத் தன்பெடையையிருத்திப்போந்த பொய்கையுட் புகாநிற்கு மது போல நீயுங் கற்பு நாணு முதலிய நற்குணங்க ளின்றித் தனை முதலியனவெய்தும் பெண்டன்மைமாத்திரமேயுடைய பரத்தையரையு நற்குணநற்பெண்டிரென்று தோயுமளவிற் பொருண்மேற்சென்று வற் கென்ற துர்க்குணந்தாராதல்கண் டதனோடு நினது புத்தி மயக்கமுற்றது நினக் கிழிபென நாணி யெம்மனையிடத்துவந்து வாயில் வேண்டா நின்று யென்ப துள்ளுறுத்துக்கொள்ளக்கிடந்தமையானென் றுணர்க.

வெள்ளிடை - வெளி. நிவந்தது - உயர்ந்தது. சுவல் - மேடு. வாலுகவைப்பு - மணற்குன்றாகிய விடம். தவக்கு - இலச்சை ; நாண். கருத்துப்பொருளாய பண்புவமப்போலி. பகுதி-இதுவுமது. துறை- அணைந்தவழியூடல். இது கூற்று - இற்பரத்தை.

5. பிறப்புவமப் போலி

ஓங்கியகுரம்புசாருவளகவயின்வயின்
வீங்கியதிணிதோண்மிடலுடைமள்ளர்
சுதைபெய்தாற்றலிற்சுடுமண்பன்முறை
தகைவுறப்படுத்தசால்பிற்றெண்ணீர்
வார்ந்துகுவெர்முழைமதகுபடர்குடியிற்
சேர்ந்தசைவறவிருளிறகுமொடுக்கி
மறைபுகுசோக்கின்மனைப்பட்டிமையாற்
றுறைபுகுபலவினைச்சேர்புண்டுடுத்தக்
கூர்வாய்வெண்சிறைக்குரண்டமென்பெடைக்
கார்வாபெனவருத்தியினருத்தபுதழூந்

தயல்வீழ்வதனையற்றம்பார்த்து
மிச்சிலென்றறிந்தும்விழைநெறியொரீஇ
நச்சியுண்புலவுநாற்றத்தோடுஞ்
செங்கால்வெள்ளுகிர்ச்சேவலோதிம
மொருசிறையிருந்தவோவாச்செவ்வி
யிருசிறைப்பேடையெழின்மலர்குறுகு
நளிமலர்ப்பொய்கைநல்வயலூர
திருநெடுமாயன்றிருவரங்கத்துப்
பொருணசைப்பரத்தையர்பொறிததைநின்மார்பிற்
புனக்குறியாநிற்றழுவுபுசிதைவுறின்
மனக்கிடரிழைப்பதுமன்றி
நினக்கிடருறுமாரனெருங்கலெம்மிடனே. (280)

இது பிறப்புவமப்போலி. என்னை? இழிந்தகுராண்டக் *தன் பேடைக் கருத்துங் கயலை யதுவாய்க்கொள்ளத் துடித் தயலேவீழ்ந்த தனை மிச்சிலென்றறிந்து மறிவினாலுயர்ந்த அன்னம் அதனை யற்றம் பார்த் தெடுத் துண்ட புலானாற்றத்தோடுந் தன துத்தமப்பேடையுறையு மழகிய சேக்கையாகிய தாமரைமலரைக் குறுகுமதுபோல நீயு முயர்ந்த குலத்துட் பிறந்து மிழிந்தகுலத்துளோர் தோய்ந்தகன்ற மிச்சிலாகிய பரத்தையரிடத் தின்பத்தைத் துய்த்து வேற்றுநாற்றத்தோடு மெமது நன்மனைக்கண் ணெம்மைத் தீண்டவந்தனை யாதலா லெம்மைத்தீண்டல் பொருந்தாதெனக் கூறினாளென் றுள்ளுறுத்துக்கொள்ளக்கிடந்தமையா னென் றுணர்க.

பகுதி-இதுவுமது. திணை—பெண்பாற்கூற்றுப்பெருந்திணை. துறை-பள்ளியிடத்தூடல். கூற்று - இதுவும் இற்பரத்தை.

விசும்புதூர்த்தெழுவியன்சினைமாத்தின்
பசும்புறத்தீங்கனிபரிந்துநுகர்கடுவன்
புரப்பவர்குறுகுபுலம்புறீஇப்பொங்க
ரிசைத்தலம்போதருபீர்ந்தண்சோலையுட்
புளிங்கறிவேட்டபுன்றொழிற்றன்மையர்க்குப்
பழிப்பின்றுகப்பாகுசெய்தட்ட
சேதுறுமாண்பாற்குழம்புபொற்கலத்தினுட்

பெய்திருந்தா றும்பெற்றியெய்ப்ப
முடவடிப்பலவின்முதிர்பொற்குடக்கனி
வேர்முதற்பழுத்துவிரிந்தபொற்றீஞ்சுளை
பதனழிபான்மைப்பாய்புனலூா
நூற்கடற்பழகியநுண்ணுணர்வுடையோ
ராற்றலிற்பாவுசீராங்களுக்கமைந்த
பாற்கடன்முற்றப்பருகுதற்கெழுந்த
போாப்பெரும்பசியாளர்தம்முன்ன
ாராவள்ளத்தமிர்தமைப்பவர்போற்
சிறுவரையின்பத்து றாதுயரிழைத்தற்
கிரத்தலீங்கியல்பன்றாற்
பாத்தையிற்பிரிதனின்பண்பாகும்மே. (281)

இது, "உள்ளுறையுவமமேனையுவமமெனத், தள்ளாதாகுந்திணை யுணர்வகையே" என்னு மகத்திணையியற்சூத்திரத்தான் உள்ளுறை யுவமந்தா னேனையுவமமென்றுகூறும்படி யுவமையு முவமிக்கப்படும் பொருளுமாய்நின் றுள்ளுறையுவமத்தினைத்தரும் கருப்பொருட்குச் சிறப்புக்கொடுதது நின்றது ; என்னை ? ஆகாயத்தை மூடியெழாநின்ற அகன்ற கொம்பர்மாமாத்திற் செம்மைமுற்றுப் பசுத்த வினிய கனியைப் பறித்துநுகர் கடுவனுன தச்சோலையைக் காப்பவர் முடுகத் தனிமையுற்று அத னயற்கொம்பரிற் சுற்றித்திரியுங் காவினுட் புளிப்பாகினை யுண்ண வேட்ட புன்றொழிற்றன்மையுற்றவர்க் கூட்டுவதாகக் குற்றமில்லையாம் படி பாகுபடுத்திக் காய்ச்சின எப்பிணியுந் தீர்க்கும் பசுவின்பாற்குழம்பு பொன்னின்கலத்துட் பெய்திருந்தாறுமுறைபோல முடப்பலவின் வேரிற் குடக்கனி முற்றிப் பழுத்து விரிந்த பொன்போனிறத்தையுடைய வினியசுளை யருந்தும்பருவத்தருந்தாது செவ்வியழியாநிற்கும் பாய்த புனலூரனே ! என்றதற்கு ஊரனே ! நீ யுத்தமநாயகியில்லின்கண் மாலைக்காலத்தினுஞ்செல்லா திளைய செவ்வியுடைய சேரிப்பரத்தையைப் புணர்ந்து விளையாடாநின்றகாலத் தவள் பொதுமகளாதலின் பிற ரப்பரததைமாளிகையைக் குறுகத் தனியுற்றுத் தணந்தப் பரத்தை மாளிகையைச் சுற்றித்திரியு மிவ்வூரிடத் தியானு நின்வரவுபார்த் தென்னையலங்கரித்து மிருந்த காந்தியோடுமிருப்ப நின்வரவுதாழ்ப்பக் கவினழியாநின்ற வென் வருத்தத்தைத்தீர்ப்பா ரொருசேரியினிடத்

தென்மாளிகைக்கண்வந்து வாயில்வேண்டாநின்று யென்னிடத் தின்ப நின்காதற் கார்த்திபுடையதொன்றல்ல வின்னு மச் சேரிப்பரத்தை மாளிகையிற்பிரித னினக்குக் கடனென்று காமக்கிழத்தி யுள்ளுறை யுவமங்கூறினளாதலி னெனவுணர்க.

அன்றியும், "உடனுறையுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக், கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே" என்னும் பொருளியற்சூத்திரத்தா னிது சிறப்பென்றவுள்ளுறை. இச்சிறப்பென்றவுள்ளுறை "விரிகதிர்மண்டில" மென்னு மருதக்கலியுள்ளும் வந்தமை காண்க. இது சேரிப்பரத்தையிற் புணர்ந்துவந்த தலைவன்வரவுகண்டு காமக்கிழத்தியூடியவாறுகண்டு சென்றுசார்ந்த தலைவனுட னூடற்றீர்கின்றாள் கூறியது. ஒழிந்த அகலம் நம்பெருமாள்மும்மணிக்கோவை விரித்துரையுட் காண்க. கோது - ஆகுபெயர்.

மழைதவழ்பலவின்வான்சினைநீழற்
றழைதருமரம்பைதான்பொறையுயிர்ப்ப
விசும்புமிழ்திவலையின்விழுமிதின்முற்றிய
பசுங்காய்மதுரப்பலன்படுகாலை
நிறத்தபாசடைநீள்சினைவாட
விறப்பளித்துலகிற்பிறர்க்குறுபயனு
மடலவிழ்நறைமகிழ்மாலிகைமார்பன்
றடரிமால்வரைதுறந்தனளாய்த்தொடர்ந்த
வினையென்பெற்றமெல்லியலொருத்தியுங்
கனைகதிர்வேற்கைக்காளையுங்கடத்திடை
மன்னியதிருவுமாயோனும்போன
முன்னியதுளதெனின்முக்கோற்பகவீர்
மதிபெறவணங்கினன்மகிழ்ந்தே
சதிர்பெறவிளம்புமென்றளர்வகன்றிடவே. (282)

(இ-ள்) மேகந்தவழாநின்ற பலவினது பெரியகொம்பர்நீழலில் வளர்ந்த வாழை யீன்றுசிறப் முகில்பெய்யுந் துளியி னன்றாய்விளைந்த பசுங்கா யினிய கனியானபருவத்துப் பசுத்த விலையாகிய நீண்டசினை வாடுதலோடு மதற் கிறத்தலையுங்கொடுத் துலகின்கட் பிறர்க்குமிக்க வூதியமாகு மாறனது தடரிமால்வரையை நீங்கினளாதலிற் றொடர்ந்து

போந்த வினையேன்பெற்ற மெல்லியசாயலையுடையாளொருத்தியும் நெருங்கிய கிரணத்தையுடைய வேற்கைக்காளை யொருவனுமாக விருவரும் விட்டுநீங்காத திருமகளும் மாயோனும்போல, முக்கோற்பகவீர் சுரத்தினிடத் தெதிர்வரக்கண்டதுளதேல் யான் கூறியவையெல்லாம் புத்தியுட்கொண்டு மகிழ்ந்து எனது தளர்வுநீங்கச் சதிராக விளம்பும்; நும்மை வணங்காநின்றே னென்றவாறு.

இதனுள் செய்து என்பது செயவென்னும் வினையெச்சவாய்பாடாக நின்றது. இச்செய்யுள் நால்வகையுவமப்போலியும் விரவிவந்த வுவமப்போலி. என்னை? பலவின்கீழ் வளராநின்ற வாழையீன்ற தாறுபோல, நற்றாயால்வளராநின்ற வெண்ணுற் பெறப்பட்டாள் என வினையுவமப்போலியும், விசும்புமிழ்திவலையிற் றூறுமுற்றியதுபோல வென்னு மாயத்தாலும் இளையள் விளைவெய்தினளெனவே மெய்யுவமப்போலியும், 'பசுங்காய்மதுரப்பலன்படுகாலை நிறத்தபாசடை நீள்சினை வாடவிறப்பளித் துலகிற் பிறர்க்குறுபயனு மெனவே அங்ஙன மிளையளாய் விளைவெய்திய தலைவி யிந்திரியகளினம்வந் தின்பத்திற் குரியளாயின காலத்து எனது மேனிக்கும் வாட்டந்தந் தெனதுயிரையுங் கொல்லாது கொன் றெனக் கொருபயனுமின்றி யயலானுன கணவற்கே யுதியமாயினளென்றுகொள்ளப் பயவுவமப்போலியும், பண்புவமப்போலியும், வினையுவமப்போலியு மிதனோடேகூடி முன்னும்பின்னு மிவ்வண்ணமே நால்வகை யுவமப்போலியு முள்ளுறுத்துக்கொள்ள நிகழ்ந்ததையா னென்றுணர்க. பயவுவமப்போலியாவது வினைகாரணமாகப் புலப்படுங் காரியத்தை யுள்ளுறுத்துக் கொள்ளப்படுவதாம். அஃ தீண்டுக் கூட்டத்தாற் பிறக்கும் பேரானந்தம். என்னுற் பெறப்பட்டாளென்மகள் என்பன அன்பினதிகத்தானு நற்றாயென்றுந் தாயென்றும் வேறல்லவாம் ஐக்கியத்தானுங் கூறினள். பாலைக்கலியுள்ளும் "என்மகளொருத்தியு" மெனக் கூறியவாற்றானு முணர்க. பகுதி—உடன்போக்கு. துறை—பின்சென்ற செவிலி முக்கோற்பகவரை வினாதல்.

இதனுள் தலைவி தோழி செவிலி இற்பாத்தை காமக்கிழத்தி உழையர் என்போர்கூற்று வந்தன. ஒழிந்தோர்கூற்றும் வந்தவழிக் காண்க. (௩௮)

௩-வது உள்ளுறையுவமம் முற்றும்.



## ரு-வது ஒட்டலங்காரம்.

124. குறித்ததைமறைத்துக்குறிக்கொளநிகர்த்ததை
நுவல்வகைதாமேயொட்டெனநுவல்ப.

(எ-ன்) வைத்தமுறையானே ஒட்டென்னு மலங்கார முணர்-ற்று.

(இ-ள்) புலவனுற் குறித்தபொருளை மறைத் ததனைக் கற்று வல்லோ ருட்கொள்ளும்படிக் கதற்கொத்த பிறிதொன்றினை வெளிப் படையாய்க் கூறுங் கூறுபாடுதாமே யொட்டென்னு மலங்காரமென்று கூறுவர் பெரியோரென்றவாறு. வெளிப்படையாகவென்பது சொல் லெச்சம் (௩௪)

125. அதுவே,
பொருளிடஞ்சாதிவினைகுணம்பொழுதொடு
மருளறுநெறித்தாய்வருதிறனுடைத்தே.

(எ-ன்) இஃ தவ் வலங்காரத்தின்கூறுபாடுணர்—ற்று.

(இ-ள்) அதுவே—அச்சொல்லப்பட்ட ஒட்டுப் பொருள்முதற் காலமீறுகச் சொல்லப்பட்ட வாறு மிடனுக மயக்கமற்ற நெறியுடைத் தாய்த தோன்றுங் கூறுபாடுடைத்தா மென்றவாறு

இவற்றிறகெல்லாஞ் செய்யுள் வருமாறு:—

கற்றுணர்ந்தவாய்மைக்கவிப்புலவீர்கண்ணனருள்
பெற்றியன்றசெமபொருளைப்பேணியே—சுற்றம்
வளைத்தருந்தவாழாதுவந்தயலார்கூண்டு
இளைத்தருந்தவாழ்வார்சிலர். (383)

(இ-ள்) கற்பனவாபநூல்களைக் கற்றுணர்ந்த வுண்மையோடுங் கூடிய கவிப்புலவீர்காள்! கண்ணனருளைப்பெற் றதனாலுண்டான வுண்மைநிதியை யழியாதோம்பி யதனை மாதா பிதா முதலிய வுரிமைச் சுற்றங்க டம்மைவளைத்திருந் துநுகர்வெய்தத் தாமு முடனுண்டுவாழும் வாழ்வெய்தாதே சிலர் தம்மோ டொருவழியு முறவில்லாத வயலார் களித் தருந்த வாழ்வா ரவரறியாமை தகாதென்றவாறு.

இது புலவன் குறித்தபொருளை மறைத் ததனைக் குறிக்கொளற் கதற்கொத்த பிறிதொன்றனை வெளிப்படையாய்க் கூறியது. குறித்த பொருளாவது கண்ணனருள்பெறுதலாலுண்டான வுண்மைப்பொருளாகிய கல்வியோடுங்கூடிய கவி. பேணுதல்—வாய்மையிழவாது போற்றுதல். சுற்றம்வளைத்தருந்தவாழாதென்பது ஆன்மாவை யீடேற்றுமுறுதிச்சுற்றமான பாமபதநாதனுகிய பிதாவும், பெரியபிராட்டியாகிய மாதாவும், ஆசிரியனும் அதனைக்கேட்டு மகிழ்வெய்த அவர்களைப்புகழ்ந் தப்பாடலை யவர்களுக்கேகொடுத் திம்மைப்பயனேடு மறுமைப்பயனுமுத்தியையும்பெற்றுப் பேரின்பமெய்தி வாழாதென்றவாறு. சிலர் வந்தயலார்கூண்டுவளைத்தருந்த வாழ்வாரென்பது புன்புலவர்களைப்போலக் கவிகளாற்புகழ்தற் கியாதுமியைபில்லாத மானிடராகிய வயலாரை வாய்மையிழந்து புகழ்வதனை யவர்கேட் டுட்கொண்டு களித்தளித்த கூறை சோறு முதலியன வுடுத்து முண்டும் வாழ்வா ரிஃதென்ன உலகியற்கை யென்றவாறு.

இது, பொருணிலைக்களனுகத்தோன்றிய ஒட்டு; என்னை? இருவகைப்பொருள் கல்விப்பொருளுஞ் செல்வப்பொருளு மென்பதனு லுணர்க. ஒட்டென்பதற்கு நுவலாநுவற்சி, பிறிதுமொழிதல், சுட்டு என்பன பரியாயம். திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

உழவுபயன்கொள்வாருயர்நிலத்தினுள்ளாய்
விழைவுபெறவித்தியவித்தல்லா—லழகமையா
வன்பாரில்வித்தியதூஉமால்பொருட்டாற்போர்நிலத்தா
மென்பார்புலவீரெவர். (284)

(இ-ள்) உழவினுற் பயன்கொள்வார் நல்ல கழனியகத்தவாய் மகிழ்வெய்த விதைத்த நல்லவித்துச் சிமன்ஞாரயணன்பொருட்டால் விளைந்து களம்புகுமென உலகங்கூறுவதல்லா துழவினுக் கியாதுஞ் சிறப்பில்லாத வலிய பாறைநிலத்தில் விதைத்ததும் விளைந்து களம்புகுதுமென்று கூறுவார் புலவீர்கா ளுலகத் தொருவருமில்லையென்றவாறு.

இதுவும் குறித்தபொருளை மறைத் ததற்கொத்த பிறிதொன்றனை வெளிப்படையாய்க் கூறியது. குறித்தபொருளாவது:—தவமாகிய

தொழிலாற் [illegible]யாக்கு முத்தியாகிய வூதியத்தையெய்து மாரியர்கள் பரவுபகாரத்தாற் பூலோகமாகிய செய்யகத்து நல்ல கழனியாகிய கோயில் முதலிய திருப்பதிகளுள் விருப்பமுற்றிருத்திய சிறப்புடையுயிர்களே திருமால்பொருட்டாற் பாமபதமெய்துமென் றுலகங்கூறுவதல்லாற் சிறப்பில்லாத பாறைநிலத்தில் விதைத்த வித்து விளைந்து களம்புகுதா ததுபோல மணநலன்யாதுமில்லாத தறுகண்மையோர்வைகும் பாறை யாம் பாலைநிலங்களில் வைகியவுயிர்க ளறியாமை யேதுவாக முத்தியைப் பெறுமென்றுகூறுவார்க ளொருவரு முலகின்க ணில்லை யென்றவாறு. தவம் பெயர்ச்சொல்லெச்சம். உயர்நிலம்—கோயில்முதலிய திருப்பதிகள். விழைவுபெற—விருப்பம்பெற்று. வித்தியது—நியமித்திருத்தல் வித்து— ஆன்மாக்கள். இது மாட்டேறில்லா வுருவகம். வன்பார்—திருப்பதிக ளல்லாத பொல்லாதவூர்கள். மால்போர்நிலம் இரண்டுஞ்சிலேடை. மால்- திருமாலும் அறியாமையும்; அல்லது மேகத்தின்பொருட்டாலென்பது மொன்று. போர்நிலம் - சூடுநிற்குங்களமும் பரமபதமும். எல்லா வண்டத்தையு மீன் றகத்திடும் பிரகிருதிக்கு மேற்பட் டகன்ற விரசை யையும் அகத்திடுநிலமாதலால் முத்திக்குப் போர்நிலமென்று பெய ராயிற்று. போர்த்தல் - மூடுதல். இத் இடநிலைக்களனாகிய ஒட்டு. திணையுந் துறையு மிதுவுமது. ஓம்படை யெனினுமாம்.

வாய்ந்ததமிழ்மாறனருட்புலவீர்மத்திமநோய்க்
கேய்ந்தமருந்தாவின்பாலென்றக்கா—லாய்ந்ததையக்
கற்றாவின்பாலுணர்ந்துகைக்கொளார்மேதியின்பால்
பெற்றூர்க்கும்போமோபிணி. (285)

இதனுள் மத்திமநோயென்பது பித்தம். அதற்கு மருந் தாவின்பா லென்றக்கால் என்பது வாகடநூ லதற்கு ஆவின்பாலே மருந்தென்று கூறியக்காலென்றவாறு. மேதியின்பால் பெற்றூர்க்கும் போமோபிணி யென்பது அப்பித்தமாகிய பிணி எருமைப்பாலைப்பெற்றூர்க்குந் தீரா தென்றவாறு. இது வெளிப்படையாகக்கூறியபொருள். குறித்தபொரு ளாவது, மத்திமநோய்க்கு (என்பது:—பிறர்கூறும் பதி பசு பாச மென்ப வற்று ளிடைநின்ற ஆன்மாவிற்குச் செய்த இவினைபடியாக வெய்தும்

பிறவியாகிய பிணிக்கு) நால்வேதத்தின் சாரமாகிய திருவாய்மொழி யென்னு மாவினிடத்துண்டாகிய வுண்மைஞானமாகிய பாலை யான்ம ஞானத்தினிடத்துத் தலைப்பெய்யாது, வேதமார்க்கமல்லாத புன்பனுவ லாகிய மேதியினிடத்துண்டான புன்மைஞானமாகியபாலாற் றீராதென்ற வாறு. வாய்ந்தது - உண்டானது. உம்மை-இழிவுசிறப்பு. ஓகாரம்- ஒழியிசை. ஒழிந்த அகல முரையிற்கொள்க. இது சாதி நிலைக்களனுகத் தோன்றிய ஒட்டு. என்னை? ஆவின்பால் மேதியின்பால் என்பவற்று லவை நிலைக்களனுகப் புலப்படுதலானென்றறிக. இணை-இதுவுமது. துறை - செவியறிவுறூஉ; அல்லது பாடாண்சார்ந்தபொதுவியற்பாற் சார்த்திற் பனுவல்வாழ்த்துமாம்.

வளைதவழ்நீர்மண்மேன்மதிப்புலவீர்ந்தோ
விளைகழனிச்சார்புள்விராய— களைகளைய
வாங்குங்களைக்கோலான் மாநிலத்தார்க்கேலாத
தீங்குபுரிவார்சிலர். (286)

என்பது, சங்கினந்தவழுங் கடல்சூழ்ந்தபூமியினுண்டாய புலவீர்காள்! செந்நெல்விளையுங் கழனியிடத்துவிரவுங்களையைக் களைவதற்குக் கத்தன் கொடுத்துக் கைக்கொண்ட களைகளையுங்கோலாற் களையைக்களையாது, பெரியநிலத்தின்கணுள்ளார்க்குப் பொருந்தாத தீங்காகச் சிலர் தமது கண்ணைக்களையுந் தீயதொழில் விரும்பிச்செய்வா ரிஃதென்னபேதைமை யோ வென்றவாறு. இது வெளிப்படையாகக்கூறியபொருள் விளை கழனி-சீவியாநின்ற வுடம்பு. உள்-ஆன்மா. சார்பு-இடம். விராயகளை- உம்மையிழைத்ததீவினை. களைய - அதனைப்போக்குதற்கு. வாங்குங் களைக்கோலால்-ஸ்ரீமந்நாராயணன்கொடுப்பக் கைக்கொண்ட மனோவாக்குக் காயங்களால். அவனைச் சிந்தித்தும் துதித்துங் கண்டுஞ் சேர்த்தியைக் கேட்டுந் தாமஞ்சாத்தியும் கோயில்வலம்வந்தும் பொழுதுபோக்காது முத்தியைவிரும்புவார்புத்திக்குப்பொருந்தாத தீத்தொழில்களை விரும்பிச் செய்து தமக்குள்ளவாழ்நாளை யக்கோதா வவமேபோக்காநின்று ரினி யெங்ஙனமீடேறுவ ரென்றவாறு. இதற்கும் அவரைப்போலெனக் கூட்டுக. உள்-ஆகுபெயர். அஃதாவென்ப திரக்கத்தின்கட் குறிப்பு.

மாநிலம் — சிலேடை. இது குறித்தபொருள். இது வினைநிலைக்களஞகத் தோன்றியவொட்டு. என்னை? திங்குபுரியுந்தொழில் நிலைக்களஞகத் தோன்றுதலா னென்றுணர்க. திணை — இதுவுமது. துறை— வாயுறைவாழ்த்து.

வாழ்ந்தமதிப்புலவீர்மால்வழங்குந்தூயநீர்
வீழ்ந்தநிலத்தியல்பான்மெய்திரிந்தாற்—சூழ்ந்ததனை
தேற்றிற்றெளிப்பதல்லாற்சேற்றிற்செறிகளங்க
மாற்றப்படுநெறித்தோமற்று. (287)

என்பது, முற்றவுணர்ந்த மூதறிவாளரோடுங்கூடிவாழ்ந்த மதியையுடைய புலவீர்காள்! மேகம்பெய்யுந் தெளிந்தநீர் தான் வீழ்ந்தநிலத்தி னியல்பா னிறம்வேறுபட்டா லதனைப்போக்குதற் குலகம் விசாரித்தறிந்த தேற்றினு லந்நீர் தெளிவதன்றிச் சேற்றுநீரா லதற்கடைந்த களங்கத்தை யொருவாறு நீக்கப்படுமோர்க்கமுடைத்தன் றென்றவாறு. இது வெளிப்படையாகக் கூறியபொருள். அது தெளியாததுபோல மாயோனளித்த நற்குணஞ் சிற்றினங்களை விரும்பிக்கொண்ட வுறவினதுபெற்றியானுண்மைவேறுபட்டா லெல்லாநூல்களையு மனத்தாலுள்ளி யறிவறிந்தோர் தெளிந்தஞானத்தாற் பண்டுபோறறெளிவதன்றிக் கரியசேறுபோற் செறிந்த சிற்றினத்தா மாசுண்டஞானத்தாற் றேற்றப்படாதென்றவாறு. ஆதலான் மூதறிவுடையோர்நட்பு விடாது கொள்ளவேண்டு மென்றவாறு. இது குறிதத பொருள். இதனுள் மால், நீர், வீழ்ந்த, மெய், தேற்றில், களங்கம் என்பன சிலேடை. ஆதலா னிது அடைபொதுவாய்ப் பொருள் வேறுபட்டுப் பண்பு நிலைக்களஞகத் தோன்றிய ஒட்டு; என்னை? வீழ்ந்த நிலத்தியல்பான் மெய்திரிந்தாலெனக் குணநிலைக்களஞகக் குறித்த பொருடோன்றுதலா னென்றுணர்க. திணை—இதுவுமது. துறை—ஓம்படை.

நன்புலவீர்கள்குற்கிசைந்ததெலாநாரண
வின்புறவாராய்ந்தியற்றுமெஃகற்றே—புன்புலன்பெற்
றீட்டாதவரெவனேவெண்ணியது தாமுடிக்க
மாட்டாதழுங்குமதி. (288)

என்பது, நல்லறத்தினது பகுதியறிந்த புலவீர்கா ளிரவிற்கு வேண்டுவனவெல்லா நன்பகலே நாரணனருளாற் புத்திகளித்தியற்றுங் கூறி

விலராகித் தமது மந்தபுத்தியா லவற்றை யியற்றுதிருந்தவர் அக்கந்துல் வந்தகாலத்துக் கந்துற்குவேண்டுவனவின்றித் தாம் எண்ணியது முடிக்கமாட்டா தழுங்குகின்ற தென்னபேதைமையோவென்றவாறு. இது வெளிப்படையாய்க்கூறியபொருள். அவரைப்போல நிலையாமை யோடுங்கூடிய யாக்கை நிலைமைத்தா முயிரோடுங் கூடியிருக்கப்பெற்ற காலத் திம்மைக்கண்ணே மறுமைப்பயனு முத்தியைப்பெறுதற் கேது வாம் ஞானநூல்களை யாராய்ந்து சித்தசித்தீச்சுரங்களையறிந் தவற்றோடும் அன்றறிவாமென்னு தறங்களைப் பயிலாதார் மரணம் வந்தடுத்தகாலத்தி லெண்ணியிருந்த முத்தியையெய்த வேண்டுவன செய்துமுடித்திலமென் றியமதூதுவர்கூட்டத்தைக்கண் டழுங்குகின்றமை என்னபேதைமை யோ வென்றவாறு. எனவே முத்தியை யெய்துதற்கு வேண்டுவன யாக்கையிருக்கப்பெற்றபொழுதே பின்னையென்னுது செய்துமுடிக்க வேண்டுமெனபது பயன். இதனுள், நல்லறததின்பகுதியறிந்தவென்பது சொல்லெச்சம். நன்பகலேயென்பது எதிர்மறையெச்சம். இது கால நிலைக்களனுகததோன்றிய ஒட்டு. என்னை? இரவிற்குவேண்டுவனவெல்லா நன்பகலே யியற்றவேண்டுமென்னுங் காலநிலைக்களனுகக் குறித்தபொரு டோன்றுதலா னென்றுணர்க. திணையுந் துறையு மிதுவுமது. பொழு தொடுமெனனுமும்மையாற் சினைநிலைக்களனுகத்தோன்றும் ஒட்டு முள. அதற்குச் செய்யுள் வருமாறு:—

எம்பெருமானின்னருள்சேரினபுலவீர்வான்பொருட்குச்
செயபொனுளதீவிறசெலவுற்றுற்—பம்புதிரைச்
சங்கந்தவழ்கடலைத்தாம்பொடுபாய்கூம்பின்றி
வங்கங்கடந்துறமோமற்று. (289)

என்பது, புலவீர்காள்! பெரும்பொருட்குப் பொன்விளைதீவிற் செல்ல நினைந்தாற் கப்பல் கயிற்றாற் கட்டப்பட்ட பாயோடுங்கூடிய பாய்மர மின்றி யத்தீவிற் றலைப்படாதென்றவாறு. இது வெளிப்படையாற் கூறியபொருள். அதுபோலப் பொன்மயமான பாமபதத்திற் செல்லக் குறித்தவர்கள் மனே வாக்குக் காயங்களா னினைத்துந் துதித்துந் தாமஞ்சாத்துவதுமுதலான சரியையின்றி யாண்டுந் தலைப்படாதென்ப தாம். இது குறித்தபொருள். கடல்—பிறப்பாயகடல், வங்கம்—ஆன்மா.

தாம்புங் கூம்பும் பாயும் - மனம் வாக்குக் காயம். திணை - இதுவுமது. துறை - வாயுறைவாழ்த்து.

தாந்தனுறையுளெனுந்தண்பொருநையின்வடபால்
வாய்ந்தகிரணமுழுமாணிக்க—மேந்திழாய்
ஞானமுணர்ந்துணர்த்து நன்முத்தியைவிளைக்குந்
தானவனுமீதெவனோதான். (290)

இதனுள், தாந்தனுறையுளெனுந்தண்பொருநையின்வடபால் — செம்பொன்மாடத்திருக்குருகூர். கிரணமுழுமாணிக்கம் — காரிமாறப்பிரான். இது அடைவிபரீதப்பட்டுப் பொருள்வேறுபட்டது ; எனனை ? "ஞானமுணர்ந்" தென்பதுமுதலாயினநான்கும் மாணிக்கத்திற் கில்லையாதலி னடைவிபரீதமாயிற்று. இது முதலதுபோலப் பொருணிலைக்களனாகத்தோன்றின ஒட்டு. திணை - இதுவுமது. துறை—செந்துறைப் பாடாண்பாட்டு.

தென்னம்பொதியந்தருபொருநைத்தென்கரையின்
மன்னும்புளிக்கீழ்வளர்தருவொன்—றின்னமிர்தொத்
தான்றசுவைத்தீங்கனியோராயிரமுந்தண்ணளிகூர்ந்
தீன்றளித்ததனபாலெமக்கு. (291)

இதனுள், மன்னும்புளியென்பது திருப்புளியாழ்வார். திருப்புளிக் கீழ்வளர்தருவாவது காரிமாறப்பிரான். இன்னமிர்தொத்தான்றசுவைத் தீங்கனியோராயிரமென்பது திருவாய்மொழியாயிரப்பாடல். இதுவும் பொருணிலைக்களனாகததோன்றின ஒட்டு; அல்லது சாதிநிலைக்களனாகத் தோன்றிற்றெனினுமாம். இவை யிரண்டிற் றும் ஒழிந்த அகல முரையிற் கொள்க. தருவுங் கடவுளாதலிற் றுறை—கடவுள்வாழ்த்துமாம். இதுவு முன்னதுபோற் செந்துறைப்பாடாண்பாட்டு. அஃதே லிதன் முன்னர்க் கூறிய வுள்ளுறையுவமத்திற்கும் ஒட்டென்னு மிதனிடை வேற்றுமை யாதோவெனின், அஃதே! நன்று சொன்னாய்! உள்ளுறையுவமமென்பது அகத்திணைக்கைகோளிரண்டிற்குமேயுரித்தாய் அகத்திணையைந்தினும் அவ்வவ நிலங்களிற் றெய்வதமொழிந்த கருப்பொருள்களனாகப் பிறக்கு மெனவும், அவ் வுள்ளுறையுவமங்கூறுவார், தலைவன் றலைவி செவிலி

தோழி பாங்கன் பாணன் ஆக அறுவரெனவும், உள்ளுறையுவமங் கூறுதற்குரியரல்லாதார், நற்றாய், தந்தை, தன்னையத்தார், ஐயன்மாராக நால்வரெனவும், அங்ஙனங் கூறுதற்குரியோர் கூறுமிடத்து மருதம் நெய்தலென்னு மீரிடத்தும் மிகுந்தும், குறிஞ்சிக்கணவ்வளவின்றியும், ஒழிந்த நில மிரண்டினு மதனிற் குறைந்தும் வருமெனவும், அங்ஙனங் கூறுமிடத்தும் வெளிப்படக்கூறு முவமையிடத் துவமேயங் கேட்போர் மனத்தின்கண்ணும் புலவன்குறித்தவாறே நிகழ்த்து தலின் உள்ளுறை யுவமமெனவும், மேற் கூறப்படுங் கருப்பொருள்களுகப் பிறக்கு மிறைச்சிப்பொருளோடுங் கூடாதனவரியும் வருமெனவுணர்க. இஃ தன்ன தன்றாய்க் கருப்பொருளிற்பிறக்கவேண்டுமென்னும் யாப்புற வின்றிப் புறத்திநும் புறப்புறத்தினுஞ்சென்று செய்யுட்செய்யும் புலவன் முதலாயினோர் கூறுங் கூற்றாய்ச் சுட்டென்னும் உள்ளுறையவாய் நடத் தல் வேற்றுமையென்றுணர்க. அங்ஙனமாதல் "பீலிபெய் சாகாடு மச் சிறு மப்பண்டஞ், சால மிகுத்துப் பெயின்" "நுனிக்கொம்பரேறினாஃ திறந்தூக்கி, னுயிர்க்கிறுதியாகிவிடும்" எனவும், "நெடும்புனலுள்வெல்லு முதலையடும்புனலி, னீங்கினதனைப்பிற" "கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு, நாவாயு மோடா நிலத்து" "காலாழ் களரி னரியடுங் கண் ணஞ்சா, வேலாண் முகத்த களிறு" எனவும் திருவள்ளுவர்கூறிய வலி யறிதல் இடனறிதல் என்னு மிரண்டினுள்ளும், பிறநூல்களினுங் கண்டு கொள்க. தண்டியாசிரியர் ஒட்டென்னு மலங்காரத்தினுள் அடையும் பொருளு மயல்படமொழிவதாக "வெறிகொளினச்சுரும்புமேய்ந்ததோர் காவி" யென்றதில் உள்ளுறையுவமமும், அடைவிபரீதப்படப் பொருள் வேறுபடக் "கடைகொளுலகியற்கை" யென்பதிற் கருப்பொருள்கள ளுகாது ஒட்டுங் கூறினரெனினும், இந்நூலுடையார், "உடனுறை யுவமஞ்சுட்டுநகைசிறப்பெனக், கெடலருமாபினுள்ளுறையைந்தே" என உள்ளுறையை யைந்தாய்ப் பிரித்தமையான் உள்ளுறையுவமம் ஒட்டு இறைச்சியென மூன்றாக்கினார். இங்ஙன மாராய்ந்து பிரித்தவிவர் நோக்கமுந் தெள்ளிதி னாராய்ந்துகொள்க. (௪0)

ரு-வது ஒட்டலங்காரம் முற்றும்.



## ௯-வது உல்லேகவலங்காரம்.

126. ஒருபொருட்குவமச்சொற்றொகக்கவர்த்த
பொருவமர்பொருள்பலபுணர்ப்பதுல்லேகம்.

(எ-ன்) வைத்தமுறையானே உல்லேகமென்னுமலங்கார முணர்-ற்று.

(இ-ள்) புலவனாற்குறிக்கப்பட்டதோ ருவமேயப்பொருட் குவம வுருபுதொகப் பலவேறுவகைத்தாய்க் கவர்த்த வினைபயமெய் யுருவென்னு மேதுக்களா லொத்த வுவமானப்பொருள்களை யதற்குக் கூறுவ துல்லேக மென்னும் அலங்காரமா மென்றவாறு. (௪௧)

127. அதுவே, உல்லேக வகை
யொருவர்பலர்குறிப்புரைப்ப தமொன்றும்.

(எ-ன்) இதவு மதற்கோர் புறனடையுணர்-ற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்டவுல்லேகம் ஒருவர் தன்மையிற் கூறப் படுவதோடும், அவர் பிறராயுள்ளார்பலர்குறிப்புரையையும் பெய்துரைப் பதும் பொருந்துமென்றவாறு. ம்மை, யெச்சமாதலால் வினைவினும் வருமென்றுணர்க.

என்னு நுயிரென்னிருகண்மணியென்னிதயத்துள்ளாய்
மன்னூமிர்தமென்மெய்க்கணியாரம்வகுளப்பிரான்
முன்னுளெனையடிமைக்கொண்டபேருண்மூர்த்திமண்மே
னன்னுவலர்தம்பிரானுயர்வானவர்நற்றுணையே. (292)

இது ஒருவர் பலகவர்ப்பாயுரைத்தது. இருகண்—அகக்கண்ணும் புறக்கண்ணும். இடம்—தன்மை. துறை—கடவுள்வாழ்த்து.

முத்திக்குவித்தென்பர்முத்திபெற்றார்முத்திவையைவிளக்கும்
பத்திக்குவித்தென்பர்பத்தியுற்றார்பனுவற்றொகைதேர்
புத்திக்குவித்தென்பர்முத்தமிழ்வாய்மைப்புலவர்மண்மே
லெத்திக்கும்போற்றுந்திருமகிழ்மாலையிறைவனையே. (293)

இது பலர் பலகவர்ப்பாய்க் கூறுவரெனப் பெய்துரைத்தது. முத்தமிழ்—சித்தசித்தீச்சுரத்தைக் கூறுந்தமிழ், அது திருவாய்மொழி; எழுத்துஞ் சொல்லும் பொருளுந் தேரும் வாய்மையுமாம். வாய்மை—உண்மை. துறை—இதுவுமது.

அருளதென்கோநல்லறமதென்கோகற்றறிந்தவர்மெய்ப்
பொருளதென்கோசிற்குணமதென்கோதொண்டர்புந்தியுள்ளாந்
தெருளதென்கோபிறதெய்வமென்றேதிரிகின்றசெய்கை
மருளதென்பாலணுகாதென்னையாண்மகிழ்மாறனையே (294)

இது தன்றொழிலுரைக்கும்வினையின்கண்வந்தது. என்கோ என்பது யான் என்றுகூறுகோ என்னும்பொருட்டு. அருள்—கருணை. நல்லறம்—துறவறம். மெய்ப்பொருள்—ஸ்ரீமந் நாராயணன். சிற்குணம்—சுத்தசாத்துவிககுணம். புந்தியுள்ளாந்தெருள்—பரமஞானம். மருள்—அறியாமை. அது என்பாலணுகாமை—அம்மருளென்னிடத்துச் சிறிது முறாமை. என்னையாண் மகிழ்மாறன்—என்னையாட்கொண்ட மகிழ்மாறனென்றவாறு. இஃதனுள் தன்றொழிலுரைக்கும்வினையின்கண் ணீற்றினுகாரமுன்னர் வருமொழி முதற்கண்ணதாங் கசதபக்கண் மிகா தியல்பாயின. என்னை? "மாறுகொளெச்சமுழ்வினைவுமைபழுங், கூறிய வல்லெழுத்தியற்கையாகும்" என்பதனலறிக. திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப்பரவல். (சஉ)

கூ-வது உல்லேகம் முற்றும்.

---

## எ-வது ஒப்புமைக்கூட்டம்.

—:O:—

128. தக்கோர்பொருளினைச்சாற்றுழியதுபோன்
மிக்கபல்பொருள்களையுடன்விளம்புதரு
ளொப்புமைக்கூட்டமெனவுரைத்தனரே.

(எ-ன்) வைத்தமுறையானே யொப்புமைக்கூட்டமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள) முக்கியமானதோர்பொருளினைப் புலவன்கருதிச் செய்யு ளகத்துக்கூறுங்கா லதுபோன்ற மிக்க பலபொருளோயு மதனுடன் பொருளொப்புமையுடைத்தாய்க் கூட்டமுறச்சொல்லுத லொப்புமைக் கூட்டமென மேனுட் கற்றுவல்லோ ருரைத்தனரென்றவாறு. (சக)

ஒப்புமைக் கூட் வகை ௨

129. உயர்புகழ்பழியவற்றெடுமுறுமதுவே.

(எ-ன்) இதுவும் அவ் வலங்காரத்தின்பாகுபாடுணர்-ற்று.

(இ-ள்) அவ் வொப்புமைக்கூட்டமென்னுமது உயர்ந்தபுகழோடு முயர்ந்தபழியோடும் பொருந்திவரு மென்றவாறு. உயர்வு முதனிலைத் தீவகம். ஏகார மீற்றசை.

1 புகழொப்புமைக்கூட்

> வையம்பரவுமகிழ்மாறனவண்டமிழுஞ்
> செய்யசதுர்மறையுந்தேசிகராய்—மெய்யுணர்ந்தோர்
> போறிவும்பெருலகுண்டானேபிரமமெனப்
> பாரறிந்ததாரறிதற்பாற்று. (295)

இதனுள், மகிழ்மாறன்வண்டமிழென்றது – திருவாய்மொழி. தேசிகர் – ஆசாரியன்மார். பெருலகுண்டான்–சீமந்நாராயணன். பாரறிந்தது – பெரியோர்களறிந்தது. அவையல்லவெனி லென்பதனைச் சொல்லெச்சமாக்கிக்கூட்டிப் பிரமமென்ப தாரறிதற்பாற்று என்பது ஒருவரும் அறியும்பகுதியுடைத்தன்றென்பதாம். திணை – வாகை. துறை–சால்புமுல்லை. அல்லது திணை–பொதுவியல். துறை–பனுவல் வாழ்த்துமாம். இது புகழொப்புமைக்கூட்டம்.

> என்றும்பிறர்மனையாளின் பநயவாரு
> நன்றிமறவாநலத்தாரு—மொன்றினைக்கொன்
> றான்பரிந்துண்ணுதவரவோரும்பூமகள்கோன்
> வான்புரந்துநீடுவாழ்வார். (296)

இதுவும் புகழொப்புமைக்கூட்டம். இதனுள், நீடுவாழ்வார் என்றது அழிவின்றிவாழ்வாரென்றவாறு. ஒழிந்த அகல முரையிற்கொள்க. திணையுந் துறையு மிதுவுமது.

2 பழியொப்புமைக்கூ

> வெரிமலர்மகள்கோன்மேவுந்திருமேனி
> பாரிதுலோகமெனும்பாவிகளு—மாசியனை

மாந்தரிலொன்றென்பாரும்வன்றொண்டர்சென்மநிலை
யாய்ந்துரைப்பாருங்கிழித்தார். (297)

இஃது பழியொப்புமைக்கூட்டம். திணை-பாடாண். துறை-வாயுறை வாழ்த்து.

பொல்லாவழுக்காறுபூண்குருகூர்மாலடியார்க்
கில்லாப்பழியொன்றிடுகுநரு—நல்லாற்றிற்
செல்குநரைமீட்குநருஞ்செயிழையாயெய்துவன
நல்குரவுதீவாய்நரகு. (298)

இதுவுமது. நல்குரவு – வறுமை. தீவாய்நரகு – அக்கினிநரகம். எனவே இம்மைக்கு வறுமையும், மறுமைக்கு நரகு மென்பதாம். ஈரிடத்து மும்மை தொக்கன. திணையுந் துறையு மிதுவுமது.

மைந்தர்மூரல்வாய்முத்தமுண்ணுதவாய்வாயோ
மைந்தர்சொற்கொளாச்செவியுமோர்செவிகொலோமழலை
மைந்தர்சிறுடிச்சுவடுறாமார்புமோர்மார்போ
மைந்தர்காட்சிகண்டின்புறுக்கண்கள்கண்மலரோ. (299)

இதுவுமது. திணை – வாகை. துறை – பொருளொடுபுணர்தல். அன்றித் திணை–பொதுவியல். துறை–மகப்பெறுதழுங்கல். (சச)

எ-வது ஒப்புமைக்கூட்டம் முற்றும்.



## அ-வது வேற்றுமையலங்காரம்.



130. ஒப்புடையிருபொருளுரையினுங்குறிப்பினு
மெய்ப்படவேற்றுமைப்படுத்துதல்வேற்றுமை.

(எ-ன்) வைத்தமுறையானே வேற்றுமையென்னு மலங்கார முணர்-ற்று.

(இ-ள்) உவமத்தொப்புடையனவாயிருக்கு மிரண்டுபொருளைத் தவற்றைக் கூற்றினாலாதல் குறிப்பினாலாதல் பொருள்பெறத் தம்முள் வேற்றுமைபடக்கூறுவது வேற்றுமையென்னும் அலங்காரமாமென்றவாறு. (சூ)

131. அதுவே,

ஒருபொருளிருபொருள்சமமுயர்ச்சியதெனும்
பொருள்பெறுமரபிற்புலப்படுமென்ப.

(எ-ன்) இதுவும் அவ்வலங்காரத்தினது பொருட்கூறுபாடுணர்-ற்று.

(இ-ள்) அவ்வேற்றுமையென்னுமலங்காரமாகியவது, ஒருபொருளான் வேற்றுமைசெய்தலும், இருபொருளான் வேற்றுமைசெய்தலும் அங்ஙனம் வேற்றுமைசெய்யுங்கா லொன்றினுக்கொன்று சமமாந் தன்மையும், உயர்ந்துளதன்மையு முடைத்தெனப் பொருள்படு மிலக்கணத்தோடுந் தோன்றுமென்றுகூறுவர் பெரியோரென்றவாறு.

இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வருமாறு:—

உண்ணத்தெவிட்டாதுடலுமுயிருந்தளிர்ப்பத்
தண்ணென்றினிமைதருமமிர்தம்—பெண்ணமிர்தின்
செவ்வாயமிர்தனையதென்றாலுஞ்செவ்வியினி
லொவ்வாதது பழமைத்தொன்று. (300)

என்பது, உண்ணுந்தோறு முண்டோ ருடலு முயிருந் தழைக்கும்படி குளிர்ந்து தெவிட்டா தினிமையைக்கொடுக்குந் தேவர்பானமாகிய அமிர்தமொத்த திப் பெண்ணாகியவமிர்தின் செவ்வாயிடத்துண்டாகிய பானமாகிய அமிர்தமென்றே னாலுங் காலத்தினாற்பார்க்குமிடத்துப் பழமையுடைத் ததஃ திஃ தப்படியன்று; புதிதுபுதிதாந்தன்மையை யுடைத்தாகையாற் காலச்செவ்வியா லொவ்வாதென்றவாறு.

இதனுள், பெண்ணாகிய அமிர்தின் செவ்வாயிடத்துண்டாகிய பானமாகிய அமிர்தமென உருவகவாய்பாடுகள் மாட்டேறுபெற்றும் மாட்டேறுபெறாதும் வந்ததுங் காண்க. இஃதொருபொருள். பகுதி— இயற்கை. துறை—நலம்புனைந்துரைத்தல்.

வண்ணவாய்மைச்சுடர்கண்மன்னுனனத்துலவு
கண்ணதாயம்பரமாய்க்கண்டவற்று—ளொண்மை
வெளியொன்றுவேங்கடத்துண்மெய்ப்பொருளாய்நின்ற
வொளியொன்றெனும்பெருநலகு. (301)

இதனுள் அழகினோடுங்கூடிய வுண்மைச்சுடர்கள்—சந்திரனும் [illegible]த்தனுமாம். ஆகாயமுந் திருவேங்கடமுடையானும் ஒப்புடைப் பொருள். ஆகாயத்தின்மேற்சொல்லுங்காற் சுடர்கள் பொருந்திய மகிழ்ச்சியோடுஞ் சுற்றிவருமிடமுடைத்தாய்ச் சலத்தைத்தரிக்கப் பட்டதா யெனவும், திருவேங்கடமுடையான்மேற்சொல்லுங்காற் சுடர்க ணிலைபெற்ற திருமுகமண்டலத்துட்பிறழுந் திருக்கண்களாகவுடைய அழகிய பாத்துவமாமெனவுங் கொள்க. இஃ திருபொருள். ஒருபொருள், இருபொருள் இவையிரண்டும் சமம். கூற்று. துறை—கடவுள்வாழ்த்து.

மாறன்றமிழ்மறைக்குவாய்ந்தமறைமுப்பொருளுங்
[illegible]கூறுந்திறத்தாற்குறிப்பொக்குந்—தேறத்
துயவரவேகூறுமிதுசோதிலையுட்கொள்ள
[illegible]யர்வற்வேகூறுமறை. (302)

என்ப துயர்ச்சி. துயவு—அறிவுதிரிதல். இதுவுங் கூற்று. திணை—[illegible]ண்டாண்சார்ந்தபொதுவியல். துறை—பனுவல்வாழ்த்து.

வெய்யகயனத்தசெவ்வாயவெண்ணகைய
தையல்வதனமிறைதண்காவுட்—பொய்கைதான்
வண்கழுநீர்சேதாம்பல்வால்வளைகடாமுயிர்த்த
தண்டாளரீணிரையதாம். (303)

உயிர்த்த - பெற்ற. இது சமம். குறிப்பு. பகுதி இடந்தலை. துறை - தடங்கண்டுமகிழ்தல்.

மாதாாள்வெய்யமுலைமாணிக்கமுத்துவட
மீதுலாவுந்தகைத்தாம்வேரிமகிழ்ச்—சோதி
துடரிவரைதேனருவிதுாரருவி
படரிபலாஸ்கா தின்பம். (304)

வெய்யமுலை—விருப்பத்தைத்தருமுலை. வேரிமகிழ்ச்சோதி—காரி மாறப்பிரான். இன்பஸ்காதென்பதனால் இதுவுங் குறிப்பு. உயர்ச்சி. பகுதி—இதுவுமது. துறை—கலப்பாாட்டல். (சக)

132 அதுவே,
பொருளாதியவாகான்கொடும்புணரும்.

(எ-ன்) இதுவும் அவ்வேற்றுமையலங்காரத்தின் விதப்புணர்-ற்று.

(இ-ள்) அது—அவ்வேற்றுமையலங்கார மென்னு மது 'பொருள் குணஞ் சாதி தொழி லெனனும் நான்கினோடும் பொருந்திவரு மென்ற வாறு.



1. பொருள்வேற்றுமை

அலைபுட்படியுமருந்புனலைவாங்கி
யுலைவிலுலகுய்யவோங்கு—மலைமேற்
களிக்கும்புயல்வேங்கடவனைப்பொன்முத்தி
யளிக்குந்திறனறியா (305)

இதனுள், அலைபுட்படிதல் - திருப்பாற்கடலுட் கண்வளர்தலும், புனலையுண்ணக் கடலுட்டாழ்தலுமாம். அரும்புனலைவாங்கி யுலைவிலுலகுய்யவோங்குதல் - பெறுதற்கரியபுனலை மாவலிபால்வாங்கி யுலகத் துள்ளார் பிழைக்க விச்சுவரூபங்கோடலும், கடலிற் புனலைவாங்கி யுண் டுலகு பிழைக்க விசும்பின்மே னிமிர்தலும். இது பொருள்வேற்றுமை. துறை—கடவுள்வாழ்த்து.

2. குணவேற்றுமை

செம்பவளமுந்திருமால்சேறைமான்செவ்வாயின்
விம்பவளமுங்குணத்தால்வேறன்றே—யம்பவளம்
வல்லென் றிருக்குமலர்மாதர்வாயென்றூன்று
மெல்லென் றினிமைமிகும். (306)

இது குணவேற்றுமை. செவ்வாயின்விம்பவளம்—வடிவின்செல்வம். ஒழிந்த அகல முறையிற்கொள்க. துறை—நலம்புனைந்துரைத்தல்.

3. சாதிவேற்றுமை

மந்திரத்தால்வாகடஞ்சொன்மாமருந்தாற்றீராது
புந்தியிடங்கொண்டுபுறம்போகாவாஞ்—சந்ததமு
மைவளைவேற்கண்மடவீர்மாறன்றமூவாத
பெய்வளைபாற்காமப்பிணி. (307)

இது சாதிவேற்றுமை. திணை—பெண்பாற்கைக்கிளை. துறை—கண்டுகைசோர்தல்.

மாறுங்கொலைநமற்குமாறன்மணிவரைமேற்
றேறுமயில்விழிக்குஞ்சேர்வினைதான்—வேறன்றே
நினைறூறுக்குங்கூற்றுயிரைநேரிழைகண்மன்னுயிரைக்
கொன்றளிக்குமீட்டுங்குழைந்து. (308)

இதனுள் தேறும் என்பது (மானிடமகளெனத்) தெளியும் எனவும், மயில்விழிக்கென்பது மயில்போறசாயலையுடையாள்விழிக்கெனவுங் கொள்க. இது தொழில்வேற்றுமை. கொன்றளிக்கை—நோய்செய்யும் நோக்கும், அதற்கு மருந்தாகிய நோக்கும். நோய்செய்யும்நோக்கு—இன்பத்தினுடைய காமக்குறிப்பினைவெளிப்படுத்துகின்ற நோக்கு. மருந்தாய நோக்கு—தன்கணிகழ்கின்ற அற்புநோக்கு. பகுதி—இயற்கை. துறை—குறிப்பறிதல்.

நான்கொடும்புணருமென்ற தெச்சவும்மையாதலாற் பிறவலங்காரங்களோடுங் கூடியும் வருவனவுள. அவை வருமாறு:—

ஊர்தியனமம்போருகமாசனஞான
நீதிவழுவாநெறிபடைத்தும்—வேதநெறி
யோதிப்பொறியிழந்தானெண்குரவனெங்கோமா
னாதித்திருமகிழ்மாறன். (309)

இது, சிலேடைவேற்றுமை. பொறியிழத்தல்—பிரமன் றலையிழத்தல். எங்கோமானாகிய மாறன் பொறியென்னும்பெயரையுடைய பெரிய பிராட்டியாருளையெய்தினவ னென்றமையாற் சிலேடையால் வேற்றுமையாயிற்று. திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப்பரவல்.

ஓவாதசெம்மையுதயத்துளதெனினும்
நாவாமறுப்படைத்ததன்மையான்—மூவா
முதனமது கண்ணனெனுமுத்திரைக்கைம்மாறன்
வதனமதுநேராமதி. (310)

இது விலக்குவேற்றுமை. திணையுந் துறையுமது. இன்னும்வேறுபடவருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க. (௪௭)

௮-வது வேற்றுமை முற்றும்.



## கூ-வது திட்டாந்த வலங்காரம்.

133. ஒருபொருட்டிறமுதற்குறித்தொப்புமைகொளத்
தெருள்புரிபிறபொருட்டிறமுஞ்செவ்விதி
னவ்வியலகத்தறைவது திட்டாந்தம்.

(எ-ன்) வைத்தமுறைபானே திட்டாந்தமென்னு மலங்கார முணர்-ற்று.

(இ-ள்) யாதாயினு மொருபொருட் கெய்திய நன்மைதீமைக் கூறு பாட்டைப் புலவனுட் கொண் டதனைத் தன்ஹற்கூறப்படுஞ் செய்யுளகத்து முதலேகூறி, யதன்பின்ன ரதனே டொப்புமைகொள்ளும் படிக்குத் தெளிவைத்த நமற்றொருபொருளின் கூறுபாடும் அச் செய்யுளகத் தழகுபெறக் கூறுவது திட்டாந்தமென்னு மலங்காரமா மென்ற வாறு. எனவே, உள்ளுறையுவமம்போல வுவமப்பொருள் செய்யுளகத்து வெளிப்படையாகநிற்ப வேனை யுவமேயப்பொருள்க ளெஞ்சிநிற்பக் குறிப் பிஞற் கொள்ளப்படுவதன்றென்பதாயிற்று.

பூரணன்மலர்மகள்புணர்மணிமார்ப
ஞாரணன்மதிநலனயந்தனன்புரப்ப
முத்திரைக்கராம்புயமுதல்வஹவிற
னுத்தமச்சுருதியையோதாதுணர்ந்துணர்ந்
தாறுடையவற்றுளுமுபநிடதத்தால்
வாறுடைத்தாகவடித்தவண்டமிழ்மறைப்
பாடம்போற்றிகாப்பவித்திரம்படைத்தோ
ராடகமருமணிக்கிரணமோடளவளாம்
வீடடைவது மெய்மெய்யேயாயினு
ஙாடரிதாமிடைபெறுந்தொடர்புடைப்
பொதிந்தசொற்பொருணிலைபுலப்படப்புந்தியுட்
பதிந்தறியாிருபசையறத்துன்மை
யுணர்ந்துடலுயிர்தளிர்ப்பதுமுருகுமவர்
கணம்பயிலவாங்காலக்கழியாத்
தெரிகைரவரைத்தேர்ந்துநற்றுணக்கொளும்

பூசான்றிருப்பெரும்பூதூர்முனிவன்
குருபரம்பரையுரைக்குறிப்பினத்தமிழ்மொழிப்
பொருண்மலிலோக்கிளைப்புணர்த்துணர்ந்தொண்மை
யிருநிலத்தொருவடிவெடுத்தகாட்சியதாங்
திருமலையாழ்வார்திருவருட்கிலக்கெனு
மறையவர்பிரான்மணவாளமாமுனிவர
னிறைநிலையுயிர்நிலையிஃதிஃதெய்து
முறைநெறியிஃதெனமுழுவதுமுனிவறத்
துறைதொறுந்துறைதொறுஞ்சோர்வறத்தொடுத்தெடுத்
துணர்த்தியவ்சத்திரக்காண்டிகையொழிவின்முற்
குணத்தொடும்பழகுபுகூர்ந்துள்ளுறுத்தித்
தோய்ந்துவட்டாததூயபேரின்பம்
வாய்ந்தவர்தாமேபுலவிர்காண்மன்ற
விமிழ்திரைப்பாற்கடலினிற்பலவளஞ்சா
ரமிழ்தினைப்பசும்பொற்றசும்பகத்தடக்கியும்
பரிசிப்பதனொடும்பரிமளிப்பதலா
லுருசித்தறியாதுசிதமாமதன்சுவை
வானவர்சுவைக்கொளும்வாய்மை
நானிலத்தேவர்தெளியாதவர்நயந்தே. (311)

என்பது திட்டாந்தம்.

(இ-ள்) சொரூபமும், ரூபமும், ஞானமும், குணமும், விபூதியும், கருணையு முதலாகியவற்றுள் யாதுமோர் குறைவிலனும் நிறைவுள்ளான் பூமகள் விட்டுநீங்காத கவுத்துவமணியோடுங் கூடிய மார்பனுஞ் சீமந் நாராயணன் ஞானத்தையும் போனந்தத்தையு மன்புற் றளித்தலான் ஞானமுத்திரைக் கைத்தாமரை நாவீறுடையபிரான் ஒருநூல்களு மொப்பில்லாத நன்மையையுடைய சுருதியை நாவினாலோதாது பாடந் தரித்துஞ் சத்தவிற்பத்தியால்வரு மத்தங்களை யுட்கொண்டும் ஞான மிகுந்த அச்சுருதிகளுள்ளும் நுட்பமா மூபநிடத வாக்கியங்களாற் செட்டமாகக்கோதற வடித்துரைத்த திருவாய்மொழியின் மூலமுழுதும் பழுதறவோதித் தமதுநாவிற்குச் சுத்தி யுண்டாக்கினோர் இவ்வுலகிற் பெறற்கரு மிரணியத்தளவு அருமணிக்கிரணத்தள[illegible]மொரு

தன்மைத்தாகக்கலக்கு மந்தாமத்தை அந்தியகாலத் தடைவதோடும் சிறிது தமதுளத் தீண்டிருந் தானந்த மெய்துவதும் பிறராற் பூசனை யெய்துவதும் மெய்; மெய்யேயானாலும், அதன்க ணாராய்தற்கரியதாகி யொழுகும் பொருட்டொடர்புடைய மறைந்தசொல்லின்பொருள் சென்று முற்றுதல் வெளிப்படைபோலப் புலப்பட்டுத் தமதுபுந்தியுட்டங்கி யறியாதார் அயனரனென்று மிருவராலெய்தும் பயனைவிட்டுச் சீமந் நாராயணனே பரதத்துவமென்னும் வாய்மையுணர்ந்து தமதுவாழ்நாளு ளுடலுமுயிருந்தளிர்ப்பப் பேரானந்தமெய்துவ தறியார்; அறிபவர் யாரெனிற் கணப்பொழுது முயிர்க் கிலாபமின்மையா மவப்பொழுதுகழி யாத பெரியநம்பிமுதலாம் ஆரியரவரையும் ஆராய்ந்து முத்திக்கு நற்றுணையென்ன வுறவுகொண்ட பூலோகதேவனாந் திருப்பெரும்பூதூர் முனிவன் குருபரம்பரைநோக்கத்தோடு முதலேசொன்ன தமிழ்மொழிப் பொருளான்மிருத்த நுட்பநோக்கத்திணையு மொன்றெனப்புணர்த் துட் கொண்ட வள்ளியஞானம் பெரியநிலத் தொப்பற மனுகுலவடிவெடுத்த காட்சிப்பொருளென்றுகூறத்தகுவதாய திருமலையாழ்வார் திருவுள்ளக் கருணைக்கிலக்கென்னு மறையவர்க்கதிபதியாம் அழகியமணவாளமா முனிவனென்னுஞ்சட்டவா னிறைநிலைமையிஃ துயிர்நிலைமையிஃ திறையை யுயிர்சென்றெய்து மடைவாகிய வழி யிஃதெனவு மவற்றோடு மேனையவிரண்டுமாகிய யாவையும் யாவரும் விரும்ப முதற்பத்துமுத லாய்ப் பத்தாம்பத் தீறாகு மிடந்தோறு மிடந்தோறுஞ் சந்தயமறத் தொடுத்தெடுத் துபதேசித்த பேரழகுடைத்தா முரைநடையை யொழி வில்லாத சுத்தசாத்துவிககுணத்தோடும்பயின்று வரம்பறுத் துட்கொண் டூழ்த்தி யனுபவித்துத் தெவிட்டாத வீறில்பேரின்பம்பவித்துள்ளார் தாமே சந்தயமில்லை; அஃதெப்படிபோலுமெனி லொலிக்குந்திரையை யுடைய திருப்பாற்கடல்பெற்ற சங்கநிதிமுதலிய செல்வத்தோடும் பொருந்தியதா மமிர்திணைப் பசும்பொன்னாலாய குடம், தனதுவாய்க் கொண் டுள்ளடக்கியு முறக்கொள்வதனோடும் பரிமளிப்பதல்லா லதற்கு யோக்கியமான மதுரத்தை யருசித்தறியாதென்பதூஉம், அதற்கத்தலரோ யிரதிக்கும் பெருமையுடையோ ரென்பதூஉ முலகத்து ளான்புற்றுத் தெளிய[illegible]லியாதலா லப்படியொன்றெனக்கொள்க.

இதனுண் முதலே குறித்தபொருளாவது திருவாய்மொழியும் பத்தரும். அவை யப்படியே முதல்வந்து அதன்பின்ன ரதனோ டொப்புமைக்கொள்ளும்படிக்குத் தெளிவைத்தரும்படிக்குக் குறித்த அமிர்தமாம் பொருட்டிறமு மதன்பின்ன ரிச்செய்யுளகத்துக் கூறிய துஉங்காண்க. எனவே, போந்தபொருள் திருவாய்மொழிப் பாடம்போற்றுவதோடும் அதனகத் தைந்துபொருளேயுங் குருபரம்பரையா யோரான வழியாய்வரும் வியாக்கியானங் கேட்பதே பேரின்பமெய்துதற் குறுதியென்பதாயிற்று. திணை—பாடாண். துறை—ஓம்படை.

ஆதித்திருமாலடியார்நிரப்பிடுமைபை
வாதிக்கிலும்வளர்ப்பார்வண்மையே—பாதிப்
பிறையாகியுமதியம்பேரிருள்சீத்தற்குக்
குறையாகுறையாகுணம். (312)

இதுவுமது. நிரப்பு—வறுமை. வண்மை—கொடை. திணை—இதுவு துறை—கொடுப்போர்ப்பழிச்சல்.

ஈத்துவக்குமின்பமியைந்தார்களேற்பவர்க்குச்
செய்த்திருந்து மீத்துவப்பார் திண்ணமே—வாய்த்தமுகில்
வானம்பதியாயுமானிலத்தார்க்கேயுதவுந்
தானந்தவறாது தான. (313)

இதுவுமது. இதனுள், மானிலத்தார்—மாயோனுலமைக்கப்பட்ட பூமியினகனுள்ளார். இதுவுந் திணையுந் துறையு மது. (சஅ)

கூ-வது தீட்டாந்தம் முற்றும்.

---

## கo-வது தற்குணவலங்காரம்.

134. ஒருபொருட்குணத்தைமற்றொருபொருள்சார்ந்துமிழ்ப்
பற்றுதறற்குணமெனப்பகர்ந்தனரே.

(எ-ன்) வைத்தமுறையானே தற்குணமென்னுமலங்கார முணர்—ற்று,

(இ-ள்) யாதாயினு மொரு முக்கியப்பொருளினதுகுணத்தைச் சார்ந்தவிடத் தக்குணத்தைப் பிறிதொருபொருள் பற்றுதல், தற்குண மென்னும் அலங்காரமா மென்றவாறு.

காமர்திருப்பாற்கடலுங்கருங்கடலா
நாமந்தனைப்பயிலுநாடோறும்—பூமடந்தை
சீர்மேனியைத்தழுவுந்தேவசனகனையான்
கார்மேனிவண்ணங்கவர்ந்து (314)

கவர்ந்து—உட்கொண்டு.

சாந்தமலர்ப்பொதும்பர்ச்சார்ந்தவெளிற்றுந்தருவுஞ்
சாந்தமணநல்குஞ்சால்பிற்றே—யேந்தெழில்கூர்
வாசவனார்நான்முகனார்வந்திறைஞ்சிவாழ்வுபெறுங்
கேசவனார்சேடகிரி. (315)

இதுவுந் தற்குணம். சேடகிரி—திருமலை. ஒழிந்த அகல முறையிற் கொள்க. அஃதேல், குணவதிசயத்திற்குந் தற்குணத்திற்கும் வேற்றுமை யாதோவெனின், அதிசயஞ் சிறுமையை மிகுத்துக்கூறும்; இது மிகுந்ததை மிகுந்ததாய்க்கூறல். இவ்விரண்டினுண் முன்னையது கடவுள் வாழ்த்து. இது மலைவருணனை. (சக)

க0-வது தற்குணம் முற்றும்.

---

## கக-வது பிரத்தியநீகவலங்காரம்.

—(o)—

135\. ஒருபொருட்கொருதிறத்துடைபொருண்மற்றதற்
கத்திறத்தினிலொப்புடைப்பொருளதன்மே
லமர்விளைப்பதுவேபிரத்தியநீகம்.

(எ-ன்) வைத்தமுறையானே பிரத்தியநீகமென்னு மலங்கார மூணர்—ற்று.

(இ-ள்) யாதாயினு மோருவமேயப்பொருட் கொருதிறத்தாற் றோற்ற வுவமைப்பொருளத்திறத்தா லதற்கொத்ததோருவமப் பொருண்மே லமர்விளைப்பதாகக்கூறுதல் பிரத்தியநீகமென்னு மலங்கார

மா மென்றவாறு. அநீகம்-படை. இது தற்குறிப்பேற்றத்தைப் பின் சென்றதோர்பேதம்.

தேமலர்வாவிப்புதுவைச்செல்விமுகப்பொற்பினுக்குத்
தூமதியந்தோற்றதற்பின்றோலாத—காமருசீ
ரந்தாமரைமேலமர்விளக்குங்கங்குலின்கண்
வந்தாடல்பெற்றமதி. (316)

இது பிரத்தியநீகம். தேமலர்வாவிப்புதுவைச்செல்வி-சூடிக் கொடுத்தசெல்வி, ஆழவார்திருமகள். ஒழிந்த அகல முறையிற்கொள்க. துறை-பெண்பாற்கடவுள்வாழ்த்து. (௫0)

கக-வது பிரத்தியநீகம் முற்றும்.

---

## கஉ-வது சந்தயவலங்காரம்.



136. உற்றதோர்பொருளினையையுற்றுணர்தல்
கற்றவர்சந்தயமெனக்கழறினரே.

(எ-ன்) வைத்தமுறையானே சந்தயமென்னும் அலங்கார முணர்-ற்று.

(இ-ள்) புலனுகர்பொறிகளானுதல் கருத்தினானுத லுற்றதோர் பொருளினை யையமுறுதலுந் தெளிதலுஞ் சந்தயமென்னும் அலங்காரமா மெனறு கற்றோர்கூறின ரென்றவாறு. (௫க)

137. அதுவே,
சுத்தசநதயநிச்சயகொப்ப
நிச்சயாந்தமென நிகழ்மூன்றும்.

(எ-ன்) இதுவு மதன் கூறுபா டுணர்—ற்று.

(இ-ள்) அச் சந்தயமென்னு மலங்காரம் சுத்தசந்தயமென்றும், நிச்சயகொப்பமென்றும, நிச்சயாந்தமென்றும் மூன்றுகூறாய் நடைபெறு மென்றவாறு.

திருமகளோவயார்மகளோசதென்னரங்கன்வெற்பில்
வருமகளோவயாரோவிம்மா (317)

இது சுத்தசந்தயம். பகுதி - இயற்கை. துறை - ஐயுறல். பா-குறள்வெண்பா.

மெய்த்தமிழ்மாறன் றடரிவெற்பிலெதிர்நின்றது பூங்
கொத்தமைந்தபொன்னங்கொடியோகொ—வித்தரணி
யீதாயுடுத்தொடுத்துமேயதகைமின் னுருவோ
யாதாயதொன்றோவிது.' (318)

இதுவுமது. இதனுள், பூங்கொத்தென்றது கோடு, கொடி, நீர் என்னும் பல்வகைப்பூக்களை. அமைந்தது - மிகுந்தது. இத்தரணி ........................மினனுருவோ-மேகத்தைவிட்டுப் புவியிடத்தாய் மேக படலத்தின்மேலாய வுடுக்கணத்தினை த தனக்குறுப்பாக் தொடர்புடுத்திப் பொழிலிடத்தடைந்ததொரு மின்னுருவமோ. யாதாயதொன்றோவிது என்பது எவ்வுருவ மவ்வுருவாயதொன்றெனத் தெரிதற்கரிதென்ற வாறு. பகுதி - இயற்கை. துறை - ஐயுறுதல்.

குன்றுபோற்புடைத்தெழுந்ததனத்தாளைச்சிறைவைத்த
கொடுமையானைத்
துன்றுபோர்க்களத்தெதிர்ந்துதொலைகணையான்முரணழியத்
துயரம்பூட்டி
யின்றுபோய்நாளைவாவெனவியம்மையோர்கணம்பரவ
வெம்பிரானே
யன்றுபோர்க்களத்துரைத்ததறிநிலையோமறநிலையோ
வறிகிலேனே. (31

இதுவுமது. திணை - பொதுவியல். துறை - வில்வென்றி. திணை வாகையெனினுமாம்.

மூண்டகத்தானென்னின் முகமொன்றேநான்குமுகங்
கண்டனமற்றில்லையாற்கண்ணனெனிற்—றண்டுளபத்
தாமத்தானன்றுமகிழ்த்தாமத்தானைத்துதித்தெங்
நாமத்தானென்றுரைப்பேனாம். (3

இது நிச்சயகேர்ப்பம். திணை-பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. து
யைப்புரைத்தல்.

பாடற்சுரும்பெனிலோ பண்மிழற்றுங்காவியெனி
லோடைக்குளன்றியுதியாதா—லேடவிழ்தார்
வள்ளல்நுண்மாறன் மால்வரைமான்கண்ணேயென்
னுள்ளந்திறைகொண்டது. (321)

இது நிச்சயாந்தம். பகுதி - இயற்கை. துறை - தெரிந்து தெளிதல். (௫௨)

௧௨-வது சந்தயம் முற்றும்.

---

## ௧௩-வது அற்புதவலங்காரம்.

—❁—

138. அற்புதவாய்மையினறைவதற்புதமே.

(எ-ன்) வைத்தமுறையானே அற்புதமென்னுமலங்காரமுணர்—ற்று.

(இ-ள்) ஆச்சரியந்தோன்றுமுண்மையினுன்மொழிவதற்புதமென்னுமலங்காரமா மென்றவாறு.

உண்ணீர்மையற்றவர்க்கண்டாலவர்மன்னுயிர்க்கிரங்கிக்
கண்ணீர்பனிற்றும்புன்மனுராமன்கைக்கொள்வதொன்றே
வெண்ணீர்மையுற்றநிருதரைச்சாலவெறுத்தவர்மேற்
புண்ணீர்பனிற்றச்சரமாரியன்றுபொழிந்ததுவே. (322)

இது, அற்புதம். திணை - பொதுவியல். துறை - வில்வென்றி.

சங்கத்தமிழ்ச்சொற்கவிப்புலவீர்சலராசிமண்மே
லுங்கட்குமற்புதமாவதொன்றேசிங்கவோங்கலின்வாய்த்
துங்கப்படைக்கையிரணியனுகஞ்சுகிர்ந்தநர
சிங்கத்தின்மார்பின்மலர்மகளாம்பிணைசேர்ந்ததுவே. (323)

இஃது துருவகவாய்பாட்டால்வந்த அற்புதம். சிங்கவோங்கல்—சிங்கவேள்குன்றமென்னுந் திருப்பதி. மலர்மகளாம்பிணை-பெரியபிராட்டி. சிங்கம் - அழகியசிங்கர். சிங்கத்தின்மார்பிற் பிணைசேர்ந்ததென்பதனாலற்புதமாயிற்று. துறை - கடவுள்வாழ்த்து. (௫௩)

௧௩-வது அற்புதம் முற்றும்.

## ௧௪-வது நிதரிசனவலங்காரம்.

———:(o):———

139. இவ்வகைக்குலகத்திவைநிகழ்திறமெனு
மவ்வகைக்கவைபோன்றொருபொருட்டிறங்களைக்
கோட்டமில்குணந்தீங்கெனுமிருகுறிப்பிற்
காட்டுமென்றேகழறுதனிதரிசனம்.

(எ-ன்) வைத்தமுறையானே நிதரிசனமென்னுமலங்காரமுணர்—ற்று.

(இ-ள்) உலகத்திவ்வகைப்பொருட்கிவை நிகழுங்கூறுபாடென்னுமக் கூறுபாட்டிற் கவைபோன்ற பிறபொருட்கூறுபாட்டை மாறுபாடின்றி நன்மையினுந் தீமையினுமிருதிறத்தாற் குறித்துக்காணக் காட்டுகின்றதெனக் கூறுவது நிதரிசனமென்னு மலங்காரமா மென்றவாறு.

வாழ்ந்தார்வரவரவேவறிதாவர்வறுமையொடுந்
தாழ்ந்தார்தலைச்செய்வரென்பது காட்டுந்தரியலரைப்
போழ்ந்தார்திகிரிப்பிரான்புருடோத்தமப்பொன்னகரைச்
சூழ்ந்தாய்மதிகுறைவாய்நிறைவாம்வகைதூநகையே. (324)

இது நிதரிசனம். இது பரத்தையிற்பிரிந்துவந்ததலைமகன் வாயில் வேண்ட வூடியிருந்து வாயின்மறுத்த தலைமகளோடும் வாயினேர்விக்குந் தோழிகூறியது. அன்றித் திணை - பாடாண். துறை - வள்ளிவாழ்த்தெனினு மாம்.

இதனுள் 'வாழ்ந்தார்வரவரவே வறிதாவர் வறுமையொடுந், தாழ்ந்தார் தலைச்செய்வ ரென்பதுகாட்டு' மென்பது உலகத்து நல்வினையடிக்கொள வாழ்வெய்தினோர் நல்வினைதேய்ந்து தீவினையடிக்கொள வறுமையெய்துவர்; தீவினையடிக்கொளத் தாழ்வெய்தினோர் தீவினைதேய்ந்து நல்வினையடிக்கொளச் செல்வமெய்தித் தலைப்படுவ ரென்பதைக் காண்பிக்கு மென்பதாம். தரியலரைப்போழ்ந்தார் திகிரிப்பிரானென்பது சத்துருக்களுடலைப்பிளந் துயிரைப்பருகுஞ் சக்கரத்தையுடையானென்பதாம். ஆய் மதி-இயற்கைமதி. குறைவாய் - இளம்பிறையாய். நிறைவாம்—பூரணையாம்.

அஃதேல், திட்டாந்தத்தோ டிதனிடைவேற்றுமையாதோவெனின், திட்டாந்தம் புலவன் றன்னாற்குறித்த வொரு பொருட்கூறுபாட்டிற்குப்

பிறிதொருபொருளின்கூறுபாட்டை யதற் குவமைதறிக்கொளும்படிக் குவமைவாய்பாடு தோன்றுதொகத் தன்வினையாக அப்புலவன் கூறுதல்; இஃது தன்னதன்று. ஒருபொருளின் பண்பு தொழில் பயன் முதலிய கூறுபாட்டைப் பிறிதொருபொருள் காட்டுவதாகப்படுத்திப் பிறவினையாற் கூறுதல் இவைதம்முள் வேற்றுமையாமென்றுணர்க. (௫௪)

௧௪-வது நிதரிசனம் முற்றும்.

## ௧௫-வது தற்குறிப்பேற்றவலங்காரம்.

140. உலகினுளொருபொருட்குற்றதன்மைத்திறம்
விலக்குபுபிறிதின்விளைந்ததென்றட்கொண்
டேற்றுதலாகுந்தற்குறிப்பேற்றம்.

(எ-ன்) தற்குறிப்பேற்றமென்னும் அலங்காரமுணர்—ற்று.

(இ-ள்) உலகின்கணுண்டான விருதிணைப்பொருள்களுள் யாதாயினு மொருபொருட் கெய்திய தன்மைக்கூறுபாட்டை விலக்கிப் பிறிதொருகாரணத்தால் விளைந்ததெனப் புலவன் விதித்துட்கொண் டதனை யதன்கண்ணதாக வேற்றுவது தற்குறிப்பேற்றமென்னு மலங்காரமா மென்றவாறு. (௫௫)

141. அதுவே,
சராசரமெனுமிரண்டினுஞ்சார்தருமே.

(எ-ன்) இதுவும் அவ்வலங்காரத்தினதுகூறுபாடுணர்—ற்று.

(இ-ள்) அத் தற்குறிப்பேற்றமென்னு மலங்காரம் இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய விரண்டினுஞ் சார்ந்துபிறக்கு மென்றவாறு.

செங்கேழ்கிளர்வேணியனுணுருவிற்
பைங்கேழுமையாளொருபாகமெனச்
சங்கேதமடைந்ததிவன்சமரிற்
றிங்கேறுவனென்றெதிரெண்ணியதே. (325)

இது, உயர்திணையிடத்துத் தற்குறிப்பேற்றம். செங்கேழ்—சிவப்பாகியநிறம். கிளர்வேணி—ஒங்கியசடை. பைங்கேழுமை — பச்சென்ற

நிறத்தையுடைய வுமாதேவி. எதிரெண்ணியது—வருங்காலங்குறிக் கொண்டது. திணை—வாகை. துறை—பொருநன்வென்றி.

பிலம்புகுந்தீரேழ்புவனமுந்தரித்தபெருந்தகையெம்பிரான்றனிவெண்
சலஞ்சலந்திகிரியெனப்புரப்பவர்கள்சந்த்ரசூரியரெனச்சயிலம்
வலம்பயின்றனரந்தரத்தவர்வருந்தாவகைதரித்திலமெனத்தரிப்பா
னிலம்புகுந்துயர்பூஞ்சினையெர்டுந்தருவாய்நிலைமரீஇயினதெனலாமே.()

இது நிலைத்திணைத் தற்குறிப்பேற்றம். இது பாடாண்புறத்திணை யுட்சார்ந்த தாவரவாழ்த்து. (இவை குருகாமான்மியம்.)

தற்பயந்து முற்றத்தனைவளர்த்ததண்டடநீ
ரெற்பயந்தவெப்புற்றிடையாதே—பொற்கமல
மின்பாசடைக்கவிகைமீநிழற்றுநீரகமே
யெண்பாலுறைமாறகிடம். (327)

இதுவும் நிலைத்திணைத்தற்குறிப்பேற்றம். நிழற்றும்—நிழலிடும். திணை—பாடாண். துறை—நகரவாழ்த்து. (௫௬)

142. உவமச்சொற்புணர்ந்தொழுகலுமுளதே.

(எ-ன்) இன்னு மதற்கோர் புறனடையுணர்—ற்று.

(இ-ள்) அத் தற்குறிப்பேற்றம் போல மான வென்னு முவமவுருபு புணர்ந்து நடப்பனவு முளதாமென்றவாறு.

மாயன்குருகூர்வளர்மறையோர்விண்புரப்பான்
றாயவழல்வளர்ப்பத்தோன்றுபுகை—சேய
வகைத்தோட்டுவார்குழலாய்வாசவனைவிண்போய்ப்
புகைத்தோட்டுகின்றதுபோன்ம்போன்ம். (328)

என்பது ஈரோற்றுடனிலையாய ஒப்பில்போலி. இது உவமவுருபுபுணர்ந்த தற்குறிப்பேற்றம். துறை—நகரவாழ்த்து. (௫௭)

௧௫-வது தற்குறிப்பேற்றம் முற்றும்.

---

## ௧௬-வது அதிசயவலங்காரம்.

———:(o):———

143. விதந்தொருபொருளினைவிழுமிதினுரைப்புழி
யுயர்ந்தோர்மதிக்குறவுரைப்பததிசயம்.

(எ-ன்) வைத்தமுறையானே அதிசயமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) ஒருபொருளினை யுயர்த்தி நன்றாகவுரைக்குங்காற் கற்றுயர்ந்தோரறிவிற்குப்பொருந்தவுரைப்ப ததிசயமென்னு மலங்காரமாமென்றவாறு. (ருஅ)

144. அதுவே,
வையம்புகழ்பொருள்பண்புவினைதிரி
யையந்தெளிவெனுமாறினும்வருமே.

(எ-ன்) இதுவும் அவ்வலங்காரத்தை விரித்துணர்—ற்று.

(இ-ள்) அதிசயவலங்காரமென்னுமது பெரியோர்புகழும் பொருளும் பண்பும் வினையும் திரிபும் ஐயமும் தெளிவு மென்னும் ஆறுகூறுபாட்டினும் வருமென்றவாறு.

வென்றித்தனுராமன்வேலைவாய்நீறெழவே
கன்றிப்பொழிந்தகனல்வாளி—யன்று
வடவைநடுநடுங்கமாநீர்சுவறச்
சுடவைகியதாஞ்சொலின். (329)

இது பொருளதிசயம். வடவைநடுநடுங்க—வடவையும் வெருவி யோடுவான். மாநீர் – சமுத்திரம். சுடவைகியதன்று – அன்றுசுட்டு அதன்கண் வைகாநின்றது. சொலின் – அத்தழலின்பெருமையைக் கதைகூறியபடிகேட்டதனைச் சொல்லுமிடத்தென்றவாறு. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணை - வஞ்சி. துறை - உழபுலவஞ்சி.

அம்பொன்மதிட்சோதியம்புலியைப்புத்தேளிர்
தம்பொன்னகாக்குந்தன்மைசால்—செம்பொன்செய்
கோயிற்றிருமால்குணங்கற்றெழுகாதார்
நாயிற்கடையாதார். (330)

இது குணவதிசயம். இதன்பொரு ளுரையிற்கொள்க. துறை—நகரவாழ்த்து.

குழித்ததலத்தொடுநிலத்தையடிவைத்துயர்
குடிற்படர்முகிற்றிரளையே
கிழித்ததுபுழைக்கையினடுக்கலையடுக்கொடு
கிளைத்ததுகவுட்கள்வழியே
சுழித்தெழுமதத்தினையுயிர்த்தொளிர்கடைக்கன
றுணுக்குறநெருப்பொழுகவே
விழித்ததுதெழித்ததுருமுக்குலம்வெருக்கொள
வெயர்த்ததுமழைப்பெயலெனு. (331)

இது தொழிலதிசயம். திணை - வாகை. துறை - யானைமறம்.

பூந்தேறல்வழிந்திழிந்துபொதும்பரினெண்புளினமுறம்
புரிவெண்சங்கந்
தீந்தேறல்வழிதவழ்ந்துதுழனியுடன்கழனிபுகத்
திணிதோண்மள்ளர்
தாந்தேறலுகக்களைகட்டெறிதவளமரைமுகையைச்
சார்ந்துசார்ந்து
மேய்ந்தேறவரிவுளையைக்கொழுநனையென்றளிபுலம்பி
வீழுமோர்பால். (332)

இது திரிபதிசயம். துழனி—ஆரவாரம். திணிதோள்—திண்ணிய தோள். தவளமணிமுகை—வெண்டாமரைமுகை. துறை-நாடுவாழ்த்தாம். (இவையிரண்டுங் குருகாமான்மியம்.)

இருநிலமுதலாமேழ்பெரும்புவனமும்
பெருவிறன்மாவலிபெய்புனலேற்றபின்
னீரடியெனத்தாண்டிணையடியொடுநின்
கூர்திருவுருவமுஞ்சொரூபமுங்குணனு
மோரடிமுதற்கணுற்றுளத்தடங்கியதாற்
பார்புகழ்குருகைப்பரமநின்பதமோ
காரிதந்தருள்குருகாபுரிப்பரமன்
படைத்தவண்டமிழ்மறைப்பதமோவுணர்வோ
தடைத்தயாதெனவெவர்தமிதெளிபவரே. (333)

இஃது தெய்வவதிசயம். இதனுள் உருவமுஞ் சொரூபமுங் குணனு மென்பது திருமேனியுந் திவ்வியான்மாவுஞ் சுத்தசாத்துவிககுணனும். ஓரடிமுதற்கண் என்பது திருவாய்மொழி முதற்பத்தின் முதற்பாட்டில் "உயர்வறவுயர்நலமுடையவனெவனவன்" என்னு முதற்பதம் திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப்பரவல், பாடாண்சார்ந்தபனுவல் வாழ்த்துமாம்.

பொருள்கோடித்தெழுபடிவத்திரணியற்குமழவிடையோன்
பொருட்டிற்பொன்று
வொருகோடியிருகோடியரைக்கோடிவாழ்நாள்பெற்
றுலந்துளார்க்கு
மருள்கோடித்தெழுந்தசிசுபாலனுக்கும்வீடளிப்பான்
மாயாவுள்ளத்
தருள்கோடியென்றுலிங்குணைத்தொழுவார்பெறுங்கதிகட
கையம்பாதே. (334)

இது தெளிவதிசயம். துறை—கடவுள்வாழ்த்து. (௩௬)

145. இடஞ்சினைகாலமென்றிவற்றேடுஞ்சிவணும்.

(எ-ன்) இதுவு மதனைப் பின்னுமோர்வகையான விரித்துணர்-ற்று.

(இ-ள்) அவ் வதிசயம் இடமுஞ் சினையுங் காலமுமென்னு மூன்றி னோடும் பொருந்தியும்வரு மென்றவாறு.

வருமென்னும்வினைச்சொ லெச்சமாகி விரிந்தது. அதுசயமென்ப ததிகாரத்தாற் கூட்டியுரைக்கப்பட்டது.

சிகாபந்திமேற்குடமதியகடுரிஞ்சியவாய்ப்
பகரும்வானமதுரகனுச்சியிற்பதிபடித்தா
யகலகாவலர்தீவொருங்குறினுமுய்த்தடக்கும்
புகலிடத்ததாலதனையாரளவிடும்பொற்பார். (335)

இது, இடவதிசயம். துறை - சினகரவாழ்த்து.

கறுத்தவனறத் துவீழ்வன்கரிமருப்பகிலபாம்
பொறுத்ததிக்கயமோசெட்டும்பொறுக்குமேலவற்றினுற்ற

லொறுத்ததென்றிமையோருட்கயமனுநின்றட்குமெல்லை
நிறுத்ததுபுழைக்கைபற்றிநிறைமதியகடுபோழ்வான்.. (336)

இது சினையதிசயம். திணை - வாகை. துறை - யானைமறம்.

காலவதிசயம்

மாலையாயாமமாய்வைகறையாய்வைகுறுநன்
காலையாய்க்கங்குல்கழிந்தகமாம்—வேலை
யெழுபார்புகழ்மாறனேந்துபுகழ்மார்பந்
தழுவாத்தமியேன்றனக்கு. (337)

இது காலவதிசயம். திணை—பெருந்திணைப்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை-கங்குற்கிரங்கல். (௬0)

௧௬-வது அதிசயம் முற்றும்.

---

## ௧௭-வது சிலேடையலங்காரம்.

———:(o):———

146. உயர்வுறுமொருமொழிதொடர்மொழிசெய்யுளி
னியல்பினுந்திரிபினுமியன்றுபல்பொருளைத்
தருபெயர்வினைபிற்சார்வதுசிலேடை.

(எ-ன்) வைத்தமுறையானே சிலேடையென்னுமலங்கார முணர்—ற்று.

(இ-ள்) ஒருமொழியாதல் தொடர்மொழியாதல் செய்யுளடத்துச செம்மொழியினும் பிரிமொழியினும் மொழுகலாறுடைத்தாய்ப் பல பொருளைத் தருவனவாய்ப் பெயரினும் வினையினுஞ் சார்வது சிலேடை யலங்காரமாமென்றவாறு உயர்வுறுமென்றதனல் அத்தச்சிலேடையென் பதூஉ முன்னர்க்கூறப்படும். (௬௧)

சிலேடை

147. அவற்றுள்,
இயல்புசெம்மொழிதிரிபுபிரிமொழியே.

(எ-ன்) கூறியசூத்திரத்து ளியல்பினுந் திரிபினுமென்ற வவை பொருளுணக்கத்தா னிப்பெயரினவாமென்ப துணர்—ற்று.

(இ-ள்) இயல்பு திரிபு என்ற விரண்டினுள் இயல்பு செம்மொழி யென்றும், திரிபு பிரிமொழியென்றுங் கூறப்படுமென்றவாறு.

பொன்னாழிமேவும்புவனமகத்தடக்கு
மன்னாகத்துச்சிவளேந்தாடு—நன்னீர்க்
களந்தழைமெய்காட்டுங்கலைமதியுட்டோயும்
வளந்தழையும்விண்ணகர்வாழ்மால். (338)

இது செம்மொழிச்சிலேடை. திருமாலுக்கும் மேகத்திற்குஞ் சிலேடை. மேகத்தின்மேற்சொல்லுங்காற் பொலிவினையுடைய கடலுட் செறியும் புனலையுண்டு வயிற்றுளடக்கும், நிலைபெற்ற மலையினது கொடு முடியைப் பொதிந்து பாக்கும், உவரறுத்த நல்லதண்ணீர்க்கிடமாகப் பெருத்தசொரூபத்தைப் புலப்படுத்தும், கிரணத்தையுடைய சந்திர மண்டலத்தைத் தனதுமண்டலத்திற்குமேலாகச் சேரும், உலகிற்கு வேண்டு மெல்லாவளங்களையுந் தழைக்கும், விசும்பினிடத்து மேகமெனவும், திருமான்மேற்சொல்லுங்கால், திருமகளையுந் திருச்சக்கரத்தினையும் பொருந்தும், விராட்புருடனாகி யண்டத்தை யுள்ளடக்கும், பகையெனப் பெருகின பாம்பினுச்சியிலே பதிந்தாடும், நல்லவியல்பினையுடைய களங் கனிபோலுந் தழைபாநின்ற மேனியைத் தோற்றும், சுருதிமுதலிய கலைகளினறிவிற்கு மேலாயிருக்கும், சகல செல்வமும் வளராநின்ற திரு விண்ணகரத்து வாழ்வுபெறுந் திருமாலெனவுங் கொள்க. துறை—கடவுள் வாழ்த்து.

பாமாறன்வெற்பிற்படர்மின்பயோதரங்க
டாமங்கவட்டந்தனைமறைக்கும்—காமன்
வினைவளர்ப்பதன்றிமிகுபோகமென்ப
தனைவளர்த்தவம்பகற்றித்தான். (339)

இது, மேகத்திற்குந் தனத்திற்கும் பிரிமொழிச்சிலேடை. மேகத்தின் மேற்சொல்லுங்கால், வெற்பிற்றவழாநின்ற மின்னோடுங்கூடிய மேகங்க டாமதங்கட்பரப்புத்தன்னை மறைத்தன, காவினிடத்துப்பொருந்துங் கிரியையுண்டாக்கின, அவையன்றியுந் தமதிடத்துண்டான தண்ணீரைப் பெய்தெங்கும்பரப்பிச் சந்தனம் அகில் சாலி முதலிய போகங்களையும் வளர்த்தன வெனவும், முலைமேற்சொல்லுங்காற் பாமாறன்றடரிவரை

யிடத் தியான் மானிடமெனக்குறித்த மின்போலும் இடையினையுடை யாண் முலைகளிரண்டுந் தம்மைப்பெற்ற மார்பினகலத்தளவைத் தோன் றாதுமறைத்தன, காமனாலெழுப்பப்படு மோகமாகிய வினையை யென் னிடத்து வளர்ப்பதன்றி மிக்க போகசுகத்தையும் வம்மையகற்றிநிறைத் தன வெனவுங் கொள்க. இதனுள், பிரிமொழியாவன:-மாகவட்டம் ஆக வட்டம், காமன் காவினிடத்துமின், அம்பகற்றி வம்பகற்றி என்பனவாம். வம்பு—கச்சு. பயோதரம்—மேகமும் முலையும். பகுதி—இடந்தலை. துறை- நலம்புனைந்துரைத்தல். (௬உ)

148. இவையினிவிரிப்பனவாமெவற்றினும்வரும்.

(இ-ள்) செம்மொழி பிரிமொழியாகிய விவ்விரண்டு மினி முன்னர் விரிப்பனவாஞ் சிலேடையனைத்தினும் பொதுவாய் விரவிவரு மென்றவாறு.

மேற் சிலேடைக்குரைத்த முதற்சூத்திரத்தினு ளியல்பினுந் திரிபி னும் பல்பொருளைத்தரு பெயர்வினையிற்சார்வது சிலேடை யென்று தியன்று பல்பொருளைத்தருவ தென்றதனாற் சிலேடை நாலுவகைப் படும்; அவையாவன:—அயல்பட விரண்டுபொருளை யொன்றுவமையாகவு மொன்றுவமேயமாகவுங் குறித் தவற்றைப் பாடுமிடத்துச் செம்மொழியி னும் பிரிமொழியினு மிரட்டுறமொழியுமிடத் துவமைப்பாற்படுத்திக் கூறுதலும், இரண்டுபொருளைக் கவிநாயகனுக்குவமையாய்க் குறித் தவற் றைப் பாடுமிடத் தொருமொழியினாலாதல் தொடர்மொழியினாலாதல் புலவனாற் றொடுக்கப்படுஞ்சொற் கவிநாயகன் கிரியையோடு மூன்று பொருள் பயப்பதாகப்புணர்த் தவனுமவைபோலிருந்தானெனக் கூறுத லும், இரண்டுபொருளை யொருமொழியினாலாதல் தொடர்மொழியினாலாத லிரட்டுறமொழிந்து கவிநாயகன்மேற் சிலேடையின்றிக் கூறுதலும், ஒருசொல் லியல்புபெயரானு மாதுபெயரானு நாலுபொருள் பயப்பதாக உருவகவாய்பாட்டாற்கூறும் உடனிலைச்சிலேடையுமெனை. அவற்றுள், முன்னையவிரண்டுஞ் சிலேடையுவமைப்பால் வந்தன. ஒழிந்தவிரண்டும் வருமாறு:—

தேசுபெறுஞ்செவ்வித்திருமகிழ்மாறன்சரணங்
கசினிமேலென்ஞான்றுங்காத்தருள்க—மாசிலா
வாய்ந்தபுகழ்ப்பூதூர்மகிபதியைநான்மறைநூ
லாய்ந்தவெதிராசனை. (340)

இது, அயல்பட விரண்டுபொருளைத் தொடர்மொழியா விரட்டுற மொழிந்து கவிநாயகன்மேற் சிலேடையின்றிவந்தது. என்னை? திருமகிழ்மாறன்சரணமென்பது திருமகள் விரும்பப்பட்ட மாயோன்றிருவடியென்றும், அழகிய வகுளமாறன்றிருவடிகளெனவும் ஒரு தொடர்மொழி வந்து அவை யெதிராசனைக் காக்கவெனக் கவிநாயகன்மேற் சிலேடையின்றிவந்ததனாலென்றறிக. திணை—பாடாண். துறை—புறநிலைவாழ்த்து.

தேங்கமலமாசிலாச்செங்காந்தள்பைங்குமிழ்பொற்
கோங்கரும்புகாவியுடன்கொண்டதோர்—பூங்கொடியை
வண்டுகளிக்கின்றமகிழ்மாறனூர்மால்வரைமேற்
கண்டுகளிக்கின்றனவென்கண். (341)

இதனுள், கமலமுதலிய உவமப்பொருளைந்தனுள் கோங்கரும் பென்றதொன்று மியல்புபெயராகவு மொழிந்த நான்கு மாகுபெயராகவும் வந்து அவையைந்தும் நாலுபொருள் பயப்பதாகவும் பாடினமையால் உருவகவாய்பாட்டால்வந்த உடனிலைச்சிலேடையென்ப திதன்பெயர். என்னை? தாமரையென்னு முதலைக்கூறச் சினையறிகிளவியாகிய வாகுபெயர் தாமரைப்பூவையும், முகமாகியதாமரையென மாட்டேறில்லாத வுருவகவாய்பாட்டான் முகத்தையும், அத்தாமரைப்பூவைக் கருப்பொருளாகவுடைய மருதநிலத்தையும், அந்நிலத்து நிகழும் ஒழுக்கமாகிய வூடலையும் காட்டிநிற்றலானென்றறிக. ஒழிந்த காந்தள் முதலிய நாலுபூவானு மிம்முறையே நாலுபொருள் கொள்க. எனவே, இப்பெண்ணாகிய பூங்கொடி யூடிக் கூடி யிருந்து பிரிந் திரங்குதற்குரித்தாமெனவுட்கொண்டு களிக்கின்றன வென்கண் ணென்றானென்க. ஒழிந்த அகல முரையிற்கொள்க. பகுதி—இயற்கை. துறை—காட்சி. (கூ)

149. ஒன்றுபலமுரணொன்றியவினையே
நியமநியமவிலக்குவிரோத
மவிரோதத்துடனதன்விரியேழுள.

(எ-ன்) அங்ஙனம்வகைப்பட்ட சிலேடையணியின்விரியுணர்-ற்று.

(இ-ள்) ஒருவினைச்சிலேடை, பலவினைச்சிலேடை, முரண்வினைச் சிலேடை, நியமச்சிலேடை, நியமவிலக்குச்சிலேடை, விரோதச்சிலேடை, அவிரோதச்சிலேடையென விரி யேழுளவாமென்றவாறு.

வினையென்பதனை முதலேவந்த மூன்றனுக்கு மிறுதிவிளக்காக்கி, அதன் என்பதனை யதிகாரத்தாற் சிலேடையதன்விரியெனக் கொள்க.

150. அவற்றுள்,
ஒருவினைகொள்வதொருவினைச்சிலேடை.

(எ-ன்) வைத்தமுறையானே ஒருவினைச்சிலேடை யுணர்-ற்று.

(இ-ள்) இரண்டுபொருளை, ஒருமொழியினாலாதல் தொடர் மொழியினாலாதல் இரட்டுறமொழிந் திரண்டுபொருட்கு மொருவினை கொள்ளமுடித்தல் ஒருவினைச்சிலேடையா மென்றவாறு.

நாதமுனிதம்பிரானுவீறன்வண்குருகூர்
மாதராணிமன்னிமழைதோயு—மேதி
யிருக்துதும்பியுந்தேனுமெப்போதும்பாண்டும்
பொருந்திப்புரியும்பொறை. (342)

இது ஒருவினைச்சிலேடை, மலைக்கும், மாதராள்குழற்குஞ் சிலேடை.

(இ-ள்) நாவீறுடையபிரான் வளப்பத்தையுடைய குருகூரி னிடத்துப் பெருமைபெற்ற ஆதித்தியமண்டலத்தை யணவப்பட்டு மேகந்தவழு மலையானது, பெரிய யானைத்திரளையுந் தேனிறாட்டினையு மெக்காலத்து மெவ்விடத்தும்பயிலப் பொறைபுரியுமெனவும், இம்மாதரா ளழகுசெறிந் திருண்டநிறத்தைப்பயிலுங் குழலானது, கரியவண்டினையுந்

தேனினையுங் கார்தண்முதலிய வெள்ளைப்பூக்களினையு மெவ்விடத்தும் பயின்று பொறுத்தலைப்புரியுமெனவு மாம். இதனால் எப்போதும் யாண்டும் பொருந்திப்புரியும்பொறை யென்பதற்குப் பொறைபுரியு மென்ப திரண்டுதலைக்கு மொருவினை. ஓதியென்பது மலையும், குழலும். திணை-ஆண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை-நலம்பாராட்டல். (சரு)

151. பலவினைகொள்வது பலவினைச்சிலேடை.

(எ-ன்) பலவினைச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ-ள்) ஒருசெய்யுளகத்துப் பலவினை யிருபொருட் கிரட்டுறக் கொள்வது பலவினைச்சிலேடையா மென்றவாறு.

ஆம்பன்மலர்த்தியகவிருள்சீத்தொண்கலைக
டாம்புல்லியதண்மதிவரவுந் — தீம்பர்
செறிவகற்றுமாறன்றிருவாக்கும்பேதை
யறிவகற்றியேநின்றன. (343)

இது பலவினைச்சிலேடை, சந்திரோதயத்திற்குந் திருவாய்மொழிக்குஞ் சிலேடை.

(இ-ள்) ஆம்பல்—பண்ணும், குமுதமும். அகவிருள்—உள்ளமயக்கமும், உலகினிடத்தந்தகாரமும். ஒண்கலைகள் - சுருதி·மிருதி புராணமும், சந்திரகிரணமும். பேதையென்பது அறிவிலியும், மகடூஉவும். அறிவகற்றியேநின்றன என்பது அறிவினைப் பெருப்பியாநின்றதென்றும், அறிவினை யழியாநின்றதென்றுமாம். "அறிவகற்று, மாகவாழுற்றக்கடை" என்பதனு லறிக. மலர்த்தி, சீத்து, புல்லிய என அடைவேவந்தவாறுகாண்க. திணை — பாடாண்சார்ந்தபொதுவியல். துறை—பனுவல்வாழ்த்து. அல்லது திணை—பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை—தோழிநிலவுகண்டழுங்கலுமாம். (சசு)

152. மொழிவினைமாறுதன்முரண்வினைச்சிலேடை.

(எ-ன்) முரண்வினைச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ-ள்) மொழியப்பட்டவினைப்பொருண்முரணச் சிலேடைப் படுத்துவது முரண்வினைச்சிலேடையா மென்றவாறு,

இன்பநந்திபுவானகமதனையெய்துவதுந்
துன்பமுந்துறுமறநிலையடைவதுந்துணிவா
மன்பெறு நம்புகழ்மாறனைவாழ்த்துபுவணங்கி
யன்புறார்பினர்தாமெனுநாளுமிவ்வகிலம். (344)

இது முரண்வினைச்சிலேடை. அன்பில்லார்க்கு மன்புள்ளார்க்குஞ் சிலேடை.

(இ - ள்) நிலைபெற்ற பெரியபுகழையுடைய காரிமாறப்பிரானை வாழ்த்தி வணங்குவதுமின்றி மனத்தினு லன்புறாருமாகிய மாறுபட்ட கிரியையுடையோர் பேரானந்தமென்பதுகெட்ட பெரியபாவங்களைக் கூடுவதுந் துன்பம்வந்தெதிர்கொளுங் கொலைமுதலிய மறத்தினிலையை யடைவதுஞ் சந்தயமில்லையெனவும், காரிமாறப்பிரானை வாழ்த்துவதுடன் வணங்கி மனத்தினுனினைந் தன்புமிகுமன்புடையோர் பேரானந்தமல்கிய பாமமைகுண்டத்தைப்பெறுவதுந் துன்பங்களைதன்மிகும் அறநிலை யடைவதுஞ் சந்தயமில்லையெனவும் உலகங்கூறு மென்றவாறு. உலக மென்ப துயர்ந்தோரை. மாறனை யென்பதற்கு மால்தன்னையெனினுமாம். திணை — பாடாண். துறை — பழிச்சினர்ப்பரவலும், பாடாண்பகுதிப் புறத்திணைப்பாற்படும் பரவார்ப்பழித்தலுமாம். (சுஎ)

153. இயல்புடைப்பொருள்கட்குளதிலதிட்டுற
நியமித்துரைத்தனியமச்சிலேடை.

(எ - ன்) நியமச்சிலேடையாமா றுணர் - ற்று.

(இ - ள்) உயர்திணை அஃறிணை யென்னு மிரண்டினுள் விகாரப் படாதவியல்பினையுடையபொருள்கட் குள்ளது மில்லதுமாகச் சிலேடித்த பொருளைத் தேற்றம்பெற நியமஞ்செய் தவற்று ளொன்றினைக் குறிப்பி னுற்கொள்வனவாய்ப் புகல்வது நியமச்சிலேடையாமென்றவாறு. நிய மித்தல் — தெளிதல்.

வண்டுளர்முண்டகக்கொழும்பொற்றுணரொன்றேபங்கமுற
வளர்ந்ததெல்லாந்
தண்டமிழைவானகமிஞ்சுஞ்சண்பகமேயளிதுறந்த
சால்பிற்றென்றும்

வெண்டாளப்பொறையுயிர்க்கும்வலம் புரியேகோடியதும்
விழவின்மாதர்
மொண்டலைவார்குளிர்புனலேகம்பலையுட்கொண்டதுவு
மொழியின்மன்றே. (345)

இது நியமச்சிலேடை.

(இ-ள்) பங்கமுறவளர்ந்ததெல்லாந் தாமரைப்பூவினது சாதி யொன்றுமே; அளிதுறந்த சால்பினையுடையது சண்பகமாமொன்றுமே; கோடியதும் வலம்புரிக்குலமே; குளிர்புனலே கம்பலையுட்கொண்டதும் என்று உலகங் கூறப்படுமாதலால் ஒழிந்த உயர்ந்தோருள் மானவீனமுற வளர்ந்தோருமில்லை; கொடையைக் கைவிட்டோருமில்லை; மனக்கோட்ட முடையோருமில்லை; நடுக்குற்றோருமில்லை யென்பதாம்.

பங்கம் - சேறும், மானவீனமும். அளி - வண்டும், கொடையும். கோடியது - வளைவும், மனக்கோட்டமும். கம்பலை - ஆரவாரமும், நடுக்க மும். இவற்றுள், பின்னையநான்கும் உயர்திணையைக்குறித்துக் குறிப்பி னாற்கொண்டவாறு காண்க. உளர்தல்-குடைதல். பொறையுயிர்த்தல்- பெறுதல். திணை - பாடாண். துறை - நாடுவாழ்த்து. (சுஅ)

154. விளம்பியநியமம்விலக்குதல்விலக்கே.

(எ-ன்) நியமவிலக்குச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ-ள்) இங்ஙனங் கூறப்பட்ட நியமத்தின்கூறுபாட்டைவிலக்கிப் பிறிதும் ஒன்றுகூறுவது நியமவிலக்குச்சிலேடையா மென்றவாறு.

கடம்புணர்ந்தகளிக்கணம்பொங்கரினிழைத்ததேக்கெறிதேங்
கமழ்செந்தேனே
திடம்புணர்ந்தகெழுதகையாடவர்கடவுஞ்சிந்துரத்தின்
றிரளொன்றுண்டான்
மடம்புணர்ந்தாரியற்கொழுநருளந்தவறுமடந்தையரே
மறித்துநாடி
னடம்புணர்ந்ததுகிற்கொடித்திண்டேர்மறுகுந்திருமறுகே
நவிலின்மன்றே. (346)

இது நியமவிலக்குச்சிலேடை.

(இ-ள்) கொள்கலத்துட்பொருந்தியது, வண்டின்கூட்டம் கொம்பர் மதாறும்வைத்ததா பெடுத்துண்டார்யாவருந் தேக்கிடுவதாய் மிகவும் பரிமளிக்குஞ் சிவந்த தேனே; அதுவுமன்றி, உண்மையோடுங்கூடிய நட்பையுடைய வாடவர்களாவும் யானைத்திரள்களு மதத்தோடுங்கூடிய துண்டு. மடப்பத்தைப் பொருந்தினவர் தமதில் லறத்திற்குரிய விலக்கணத்தையுடைய கொழுநருள்ளக்குறிப்பிற் பிழையாத கற்புடைய மகளிரே; மீட்டு மாராயி லாடுதலைப்பொருந்தின துகிற்கொடியை யுடைய திண்ணியதேர்கள் சூழ்வரும் பொலிவினையுடைய வீதிகளும் அறச்சாலையை மருவும். அவையன்றி வறுமையுற்றுத் தனிசுகொண் டவருமில்லை; அறியாமையுடையோரு மில்லையென்றவாறு.

கடம் - பாத்திரம், மதம், கடன்கோடல். மடம் - மடப்பம், அறச்சாலை, அறியாமை. இதனுள்ளு மிறுதிநின்ற விரண்டுங் குறிப்பினுயர்திணைமேற்கொண்டவாறு காண்க. இழைத்தல் - திரட்டிவைத்தல். இதுவும் நாடுவாழ்த்து. (சுசு) 6

155. சாதிமுதலாச்சாற்றியநான்கொடுந்
தீதறுபெயரினும்வினையினுந்திரிந்து
மேதகவிரோதத்தறைவதுவிரோதம்.

(எ-ன்) விரோதச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ-ள்) சாதிமுதலாகப் பொருளீறாகக்கூறப்பட்ட நான்கினோடுங் கூடிக் குற்றமற்ற பெயரினும் வினையினுந் திரிந்துந் திரியாதும் பெருமை தருவதாய் விரோதமாகச் சிலேடையாற்கூறுதல் விரோதச்சிலேடையா மென்றவாறு.

திரிந்துமென் னு மும்மை யெச்சமாதலாற் றிரியாது மென்றாயிற்று. சிலேடையென்பததிகாரத்தாற் பெற்றது. மேதகவென்றதனாற் சாதியோடு நான்கும், கிரியையோடு மூன்றும், குணத்தோடிரண்டும், பொருளோ டொன்றுமாக விரோதச்சிலேடை பத்துளவென் றறிக. அவற்றிற் கெல்லாஞ் செய்யுள் வருமாறு:—

எத்திரமென்றேயறியேனென்னளவிற்காரிதரும்
புத்திரனூர்பொன்னம்புயப்போது—முத்தநகை
மின்குமுதப்போதகலவேனிலானெய்வதற்கு
மன்குமுதப்போதாயவாறு. (347)

(இ-ள்) முத்தைப்போன்ற நகையினையும், மின்போன்ற இடையினையு முடையாய்! காரிமாறப்பிரான் பொலிவினையுடைய புயத்திற் புனைவதாம் வகுளமாலிகை, (வாங்கிச் சூடப்பெறாத) என்னளவில் யான் மகிழ்வெய்தும்போ தென்னைவிட்டு நீங்காநிற்பக் காமன் பஞ்சபாணங் களையுந் தொடுப்பதற்கு நிலைபெற்ற கலகப்போதானபடி யென்னகாரண மென் றறியேனென்றவாறு.

இதனுள், பொன்னம்புயப்போது-பொன்போலும் நிறத்தையுடைய தாமரைப்போது. மன்குமுதப்போதாயவாறு - ஆக்கஞ்செய்யு மாம்பற் போதானபடி யென்னகாரணமென் றறியேனென் றதனால், சாதிக்குச் சாதியினோடே விரோதச்சிலேடையாயிற்று. மின் - அண்மைவிளி; உவமப் பெயர். குமுதமிரண்டினுண் முன்னையது மகிழ்ச்சி. பின்னையது கலகம். போது-பூவும், காலமும். இணை-பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை-தாமம்பெறாது தளர்வுற்றுரைத்தல். இது சாதிக்குச்சாதியோடே விரோதச்சிலேடை.

காடறியமேனுணடந்ததலவின் றுளதாய்ப்
பீடழியவந்ததற்கென்பேசுகேன்—றாடகையென்
றாளையுயிருண்டானழுந்தூரான்வெற்பிள்மான்
காளையுயிருண்டகதை. (348)

(இ-ள்) தாடகையென்பாளுயிரை வாளியினாலுண்ட திருவழுந்தூர் மாயோன்வெற்பினி லிளையமான் முதியகாளையினுயிரை யுண்டதென நீ கூறியகதை மேனாளுடறியநிகழ்ந்ததொன்றல்லவாகியு மஃதின் றுன்னிடத்துளதாகி யுனது பெருமையழியவந்த துன்பத்திற் கியான்பேசுவ தென்னென்றவாறு.

இதனுள், இளையமான் முதியகாளையுயிரை யுண்டதென் றதனால், சாதிக்குக் கிரியையோடே விரோதம். உயிரென்ற தீண் டறிவு. இளமான் - தலைவி. காளை - தலைவன். முதியவென்ற தெதிர்மறைச்சொல் லெச்சம். துறை - பாங்கன்கழறல்.

மாகருடனடுங்கமம்மர்தருவதன
யோகமயிலினூரத்தோங்கி—யாக

நடங்குமுடன்பிறப்பைநோக்காதொறுக்கத்
தொடங்குமெமையென்செயாதோ. (349)

இதுவுமது.

(இ-ள்) துறக்கத்துள்ளாரு முடனடுக்கமுறும்படிக்கு அவ ருள்ளத்திற்கு மருந்து பிறிதில்லாத தீராப்பிணியைக்கொடுப்பனவாகிய முலையினது கூட்டம், மயிலினது சாயல்போலுஞ் சாயலையுடையாண் மரு மத்தின்கண்ணே புடைத்துயர்ந்து தம்மைத்தாங்கி யுடல்வளையு முடன் பிறப்பாகிய விடையை யுடன்பிறப்பென் றுட்கொள்ளாது கொல்வதைத் தொடங்காநிற்கும்; ஆகையால் நெஞ்சமே! நம்மை யென்செய்யாதென்ற வாறு.

எனவே, மாகருடனடுங்க - பெரிய கருடனும் உடல் நடுங்க. மம்மர் தருவது-வருத்தத்தைத்தருவது. அனையோகம்.... ஓங்கி-அன்னத்தின் கூட்டம் மயிலினூரத்தோடும் பெருத்தென்பதனால் இதுவுஞ் சாதிக்குக் கிரியையோடே விரோதமாயிற்று. பகுதி - இயற்கை. துறை-தகை யணங்குறுத்தல்.

கோபம்பயின்றவிடங்கூர்தாபரங்குறுகத்
தாபந்தவிர்ந்துயிருந்தண்ணென்ற—பூபதிகைத்
தூரிகையாலேயமைத்தசொற்றமிழ்மாறன்றுடரிக்
காரிகைசெவ்வாயெனவேகண்டு. (350)

(இ-ள்) இந்திரகோபங்கள்விட்டுநீங்காத இடமிருந்தசோலையைக் குறுகினகாலத்து விரகாக்கினியினாலுண்டான எனது வாட்ட நீங்கி யுயிர்தண்ணென்று குளிர்ந்தது. நெஞ்சமே! யங்ஙனம் நீங்குதற்கேது யாதெனில், தாமரையை யிடவகையாயுள்ள பிரமகன் கையினாற் றூரியக் கோலையெடுத்தெழுதியுண்டாக்கின வழகினையுடையாள்செவ்வாய்க் கொப் பெனவேகண் டென்றவாறு.

சொற்றமிழ் மாறன் றுடரிக்காவெனக் கூட்டுக. நெஞ்சமே யென்னு மொழிவாய் முன்னிலையெச்சம். கோபம்பயின்றவென்பது சென்றுவிட்டு நீங்காதவென்பதாய், இடக்கூர்தாபரம் விடங்கூர்தாபரமெனத் திரிந்து, தாபரமென்பது ஆகுபெயராய்ச் சினைமிருந்த நச்சுமரமாச்சோலையைமுடிக வாட்டந்தீர்ந் துயிர் தண்ணென்றது எனவே இது சாதிக்குக் குணத் தோடே விரோதத்திலேபட்டதாயிற்று. பகுதி - இடந்தலை. துறை- பொழில்கண்டுமகிழ்தல்.

கார்க்கடற்பார்வாழ்வுபெறக்காரிதருங்கண்ணனுளத்
தேர்க்கருணைக்கேசரியாயெய் துருவைப்—போர்க்கழியா
மெய்யனன்குபேரனென்பமெய்யுணர்ந்தவாரணங்க
ளையமின்றியேதெளிந்துளார். (351)

என்பது, கரியகடல்சூழ்ந்தபூமியின்கணுள்ளார் முத்தியாகியசெல் வத்தையெய்தக் காரியார்பயந்தளித்த கண்ணபிரான்றிருவுள்ளத்தழகிய கருணைக்கிணையாய்வந்தவுருவத்தைப் போர்க்கழியாகிய சத்தியவாய்மை யுடையோனுக்கு நன்குமதிக்கும் பேரனென்றுகூறுவர் சித் தசித் தீச் சுரங்களி னுண்மையுணர்ந்த சுருதியினுண்மையைச் சந்தயமறத் தெளிந் துளாரென்றவாறு.

இதனுள், கண்ணபிரானழகிய திருவுள்ளக்கருணையைப்பெற்றுப் பரசமயகளியானைகட்கோர் சிங்கவேறாகிய சொரூபத்தை, நல்ல குபோ னென்பவெனத் திரிந்தமையா விது சாதிக்குப் பொருளோடே விரோதச் சிலேடையாயிற்று. திணை - பாடாண். துறை - முனிவர்வாழ்த்து.

பரவாதியையேபணித்தருள்பாமாற
னுரவாவருமருகர்க்குண்மை—காவாது
கோட்டமதமால்யானைகூறியமால்வீட்டின்பங்
காட்டுவன்மன்னோபுலவீர்காள். (352)

என்பது, நித்தர் முத்தர் முதலாயுள்ள பத்தரும் பெத்தரு மேத்தப் பட்ட பரமபதநாதனைப் புகழ்ந்திடுந் திருவாய்மொழியாகியபாவையுடைய மாறன் ஞானதிண்ணியராய்த் தன்னிடத்து வந்தடைந்தவர்க்குப் பொய் யின்றித் திருமால்பதத்திலுள்ள பேரின்பத்தை யுண்டாக்கித்தருவன் புலவீர்கா ளென்றவாறு.

எனவே, நீரும் அவனையே சரணாகதியெனப்பற்றும்; உமக்கும் முத்தியெய்தலாமென்பது பயன். இதனுள், பரவாதியைப் பணித்தருள் பாமாறன் – அந்நியசமயத்தைத் தாழ்த்தப்போடப்பட்ட திருவாய் மொழியென்னும் பாடலையுடைய காரிமாறப்பிரான். உரவாவரு மருகர்க்கு-தம்மோடு வாதுக்குத் திண்ணியராகிவரும் அருகனைத்தெய்வ மாகவுடையார்க்கு. யானை மூலமே யென்றழைப்ப வந்தருள்செய்த ஸ்ரீமந் நாராயணன் வீட்டின்பத்தைத் தருவனெனவே கிரியைக்குக் கிரியை யோடே விரோதச்சிலேடையாயிற்று. திணை—வாகை. துறை—அறிவன் வாகை.

இங்குளனோவெனச்சொன்னதானவனைப்
பொங்கியடலாளரியாய்ப்போர்வென்றான்—சிங்கவரைக்
கண்புற்றிருப்பானெதிர்கொண்டசுராரிடத்
தின்புற்றிருந்தவளனென். (353)

என்பது, மதலையே! நீ யெங்குளனென்றமாயோ னித்தூணிலுளனோ வென்றுகூறிய இரணியாசுரன்முன் அடலாளரியாய்த்தோன்றி யவனோடு பொருதவனைவென்று கொன்றோன், சிங்காத்திரியிடத் தன்புற்றிருப்போன், அவனை நாவே! தன்னையெதிர்கொண்ட தேவர்களிடத் தின்புற்றிருந்த வளத்தையுடையவனென்றுகூறுவாயாக வென்றவாறு.

இதனுள், எதிர்கொண்டசுராரிடத்தென்பதனைத் தன்னோடு மாற்றங்கொண்ட அசுரனைக்கொன்றவன் மாறுகொண்ட அசுரரிடத் தின்பமுற்றிருந்தவளன் யாது தானெனக் கிரியைக்குக் குணத்தோடே விரோதமானசிலேடையாயிற்று. இப்பொருட்குச் செய்தவென்னும்பெய ரெச்சத்தீற்றினகரஞ் செய்யுள்விகாரத்தாற் றொக்கது; என்னை? "புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை" யென்பதுபோலக் கொள்க. துறை – கடவுள் வாழ்த்து.

கருத்தகலாக்கண்ணனெனக்காவலருள்வானை
யுருத்திரனுமென்பதனோடொண்மைப்—பொருட்பாத
கண்டத்தாகிச்சிறந்தகங்கைக்கோடுற்றவிடக்
கண்டத்தானென்னுமுலகம். (354)

என்பது, திருவுள்ளத்தைவிட்டுநீங்காத கண்ணோட்டமுடையானென்று சொல்லும்படிக் குலகுயிர்களைக் காவல்செய்வானைத் திவ்வியாத்தும சொரூப மழிவிலானென்பதோடு நல்லபயனைத்தரும் பாதகண்டத்தாகி யழகெய்திய கங்கைக்கரையையுற்றவிடமாகிய கண்டத்தானுமாமென்று உலகங் கூறுநிற்கு மென்றவாறு.

கங்கைக்கோடுற்றவிடக்கண்டமென்பது கங்கைக்கரைக்கண்ட மென்னுந் திருப்பதி. ஆதலால் அன்னனைக் கண்ணோட்டமுடன் காவல் செய்வானை நெஞ்சமே! என்னுடன்கூடிப் பற்றுவாயாக; நமக்கு முத்தி யெய்து மென்பது பயன். ஒண்மை – நன்மை. பொருள் —,
இனிக் கண்ணனென்னுந் திருநாமமுடையானென் றுலகக்

குயிர்களைக் காவல்செய்வுரனைச் சங்காரமூர்த்தி யென்பதனோடும் பிர சிரத்தை யிரத்தற்குக் கையிலோடாகவுடையனுமாகி நஞ்சையணிந் மிடற்றையுடையனுமாமென் றுலகங் கூறுநிற்கு மென்னும் பொ டோன்றுதலா லிது கிரியைக்குப் பொருளோடே விரோதச்சிலேடை யாயிற்று. உருத்திரன்-சொரூபமழிவிலாதான்; சங்காரமூர்த்தி என்றும், கம் - சிரம். கைக்கோடுற்ற - கைக்கோடாகவெய்திய. இட கண்டத்தான்-இடமாகிய கண்டமென்னுந்திருப்பதியான்; விடக்கண்ட தான் - நஞ்சையணிந்தமிடற்றான் எனவுங் கொள்க. திணை-பாடாண் துறை - ஓம்படை.

என்னென் றறியேனியற்றமிழ்தேர்காரிதரு
மன்னன் றனையுலகமாறனென—முன்னுரைத்தோர்
வன்புலனையொன்றுமதியாமுனிவரிடத்
தன்புடையானென்னுமது. (35

இதனுள், காரியார்பெற்ற விளவரசை மாறனென்னும் பிள்ளை திருநாமத்தையுடையானென் றுலகின் முதலேகூறுவார், அதனோடு வலியபுலன்களை யொருபொருளாக மனக்கொளாத இருடிகளிடத் தன் புடையானென்றும்புகலுவர் என்பது போந்தபொருள்.

இனி இதனுள் அது என நின்றதனோடும் அன்றியு என்பதனைச் சொல்லெச்சமாகவிரித்து அஃதன்றியு மெனக்கூட்டி காரியார்பெற்ற இளவரசை யுலகம் யாவரோடும் மாற்றங்கொள்ளு குணத்தையுடையானென்று முதலேகூறுவதோடு மனத்தை யதுசென் விடத்துச்செலவிடா தப்புலத்தி னன்மைதீமைகளை யாராய்ந்து தீமை களைநீக்கி நல்லதன்கட்செலுத்தும் வலியவறிவினையுடையோரையு மொரு பொருளாகமதித்திடாது, கோபிக்கப்பட்டவரிடத்து மன்புடையானு யிருப்பனென்றுங் கூறுமஃ தியாதென்றறியே னெனக்கூறியதாய் பொருள்கொள்ளக்கிடந்தமையா னிது குணத்திற்குக் குணத்தோடே விரோதச்சிலேடையாயிற்று. திணை-வாகை. துறை-சால்புமுல்லை.

புனமலிதேமாவின்புனர்சினையின்றண்மை
இனமகலிற்சேர்ந்தாலைக்கோல்லி—பெனலாரு

நாடிப்பாணையுணர்நாவீறன்றண்சிலம்பிற்
கூடிப்பிரிந்தார்குணம். (356)

என்பது, நண்பனே! ஞானத்தாலாராய்ந்து சிமந் நாராயணனே பர தத்துவமென வுட்கொண்ட நாவீறுடையபிரான் குளிர்ந்தமலைப்பக்கத் திற் புனத்தின்கண்ணே யிருந்த பெண்பாற்கடவுளாகிய திருமகள தூயவுறுப்பாகிய முலைகளிற் றண்ணென்றகுணந் தம்மைப் பரிசித்தகாலத் துத் தண்ணென்னும்; செய்த்தாயகாலத்துப் போதுதோறும் நினைவையுஞ்சுடும் நெருப்பாய்நின்றன வாதலான் வாடினே னென்றவாறு.

தேமா - கடவுளாகிய திருமகள். புணர்சினை—உபயமுலை. பகுதி—பாங்கற்கூட்டம். துறை - உற்றதுரைத்தல். இதனுள், புனமலிதேமாவின் புணர்சினையின்றண்மை...........யென்பது, புனத்தின்கணெருங்க வைத்த தேனையுடைய மாமரங்களி னெருங்கின கொம்பரிற் சிவந்ததளிர்களின் குளிர்ச்சி தம்மைப்பரிசித்தகாலத்துத் தண்ணென்னும்; செய்த்தாய் நீங்கினகாலத்து நினைவோடும் பார்த்தகண்ணிற்கு நெருப்பாய்த் தோன்றிப் பயங்கரமாகி யுள்ளத்தையுஞ் சுடாநின்ற தெனப் பிறிதுமோர்பொருடோன்றலாற் குணத்திற்குப் பொருளோடே விரோதச் சிலேடையாயிற்று. சேர்ந்தாரைக் கொல்லி - நெருப்பு. சினை, தினம் ஆகுபெயர். நண்பனேயென்னு மெழுவாய்முன்னிலையும், வைத்த தேனென்பதுமுதலாக வாடினே னென்பதீறுய சொற்களு மெஞ்சி விரிந்தன. இதன்பொருளுண் மாட்டுறுப்பா யெச்சமுங் கூடின.

நாடகத்தையீறுய்நயந்ததமிழ்நன்குணர்ந்தோ
னாடகத்தைப்பித்தளையென்றாக்கினீதூஉ—மேடவிழ்பூந்
தாமக்குழலிவளேதண்டமிழ்மாறன்சிலம்பி
லேமப்பொழிலுமிது. (357)

என்பது, இயன்முதலாக நாடகமீறாக வுலகம்விரும்பப்பட்ட தமிழ் மூன்றினையு நன்றாயறிந்தோன் வெற்றியையுடையபுத்தியை மையலாவாயாக வென்று கற்பித்ததும், இதழ்விரிந்த பூமாலையைச்சூடினகுழலையுடைய விவளே; தலைவன்கூறிய தண்டமிழ்மாறன்வரையி லின்பத்திற்கிடங் கொடுத்த சோலையு மிஃதே; பிறிதில்லை யென்றவாறு.

ஏகாரம் தேற்றம். தலைவன்கூறியவென்ப தெச்சம். இதனுள் ஆடகத்தைப் பித்தளையாக்கிற்றென்பதனாற் பொருட்குப் பொருளோடே

விரோதச்சிலேடையாயிற்று. பகுதி - பாங்கற்கூட்டம். துறை—குறி வழிச்சென்றபாங்கன் றலைவியைக் காண்டல்.

ஆக்ப் பத்தும் முன்னர்ச் சிலேடித்தவற்றைப் பின்னரும் விரோதமாகச்சிலேடித்த சிலேடை யடைவே வந்தமை காண்க.

திருமகிழ்மாலையனுமென்பர்மெய்யைச்சிறைப்படுத்திப்
பொருதலைகட்டுண்டறியானளியுறும்போதனென்பா
ருருவளர்பாரிபடைத்தறியானொண்புனிதனென்பா
ரருள்புரிவாய்வைத்தருந்தான்மின்சொர்க்கத்தமிர்திணையே. (358)

இதனுள், திருமகிழ்மாலையனுமென்பர் என்பது திருமகள் விரும்புமியல்பையுடைய திருமாலுக்கும், 'அழகியவகுளமாலிகையினையுடைய மாறனுக்கும் பெயராமெனறுகூறுவர் பெரியோர். திருமால் திருமேனியையொளித் துறியினையெதிர்ந்து தயிரைக் களவுகண்டறிவான்; மாறன ஞானத்தைத் தனக்காளுக்கிக்கொண்டு தனனோடு பூசல்பெருக்கும் பாசத்தனையிற் கட்டுப்பட்டறியான்; என்றும், அளியுறும்போதனென்பார் என்பது வண்டுகள்சென்று மூடும் பூவிலுள்ள பிரமனுக்கும், தண்ணளிமிக்கஞானத்தையுடையமாறனுக்கும் பேர். பிரமன் வடிவகன்ற பூமியைப் படைத்தறிவன்; மாறன் காந்திதழையாநின்ற இல்லறக் கிழத்தியைக் கொண்டறியான்; எனறும், ஒண்புனிதனென்பார் என்பது நல்ல இந்திரனுக்கும், ஒள்ளியஞானத்தோடுங்கூடிய பவித்திரவானும் மாறனுக்கும் பேர். இந்திரன் திருமால்கருணைபுரிந்துகொடுப்ப வொளிருஞ் சுவர்க்கத்திருக்கு மமிர்தினை வாய்வைத்துண்டறிவான்; மாறன் மின்போலு மிடையையுடைய நங்கை யிரங்கித்தொடுக்குந் திருமூலைப் பாலினைத் திருப்பவளவாய்வைத்துண்டறியா னென்றுங் கூறியவாறாக வுணர்க.

இங்ஙனஞ் சிலேடை நீழ்த்தலா விதுவும் பொருளோடே கிரியைக்கு விரோதமாகவந்த சிலேடைவேறுபாடெனக் காண்க. இன்னும் வேறுபடவருவனவெல்லாம் பொருளுணக்கமறிந்து கொள்க. அவையெல்லா மீண்டுரைப்பிற் பெருகும். திணை — வாகை. துறை — தாபத வாகை. (எo)

156. அவிரோதத்தறைவது மவிரோதம்.

(எ-ன்) அவிரோதச்சிலேடையாமாறுணர்—ற்று.

(இ-ள்) அவிரோதச்சிலேடையென்பது முன்னர்ச் சிலேடித்த பொருள் பின்னரும்விரோதியாமற் சிலேடிப்பனவாய்க் கூறுவதாமென்றவாறு.

குருகையிடங்கொண்டான்மெய்க்கோலமுறுதுப்பான்
பெருமனத்தானிலஞ்சிபெற்றோ—னொருபுனித
னாகதருநிழலானன்னருறுமாதவன்பொன்
னாகமலம்வருநண்பான் (359)

(இ-ள்) திருமால், பாஞ்சசன்னியத்தை யிடதுகையிற்றரித்தான்; அழிவில்லாத வாராகரூபமாய்ப் பூமிதேவிதோன்றுதற்குப் பற்றுக்கோடாயினன். மாறன், குருகாபுரியை யிருப்பிடமாகப்பெற்றுளான்; திருமேனியினது அழகு மிக்க பவளம்போல்வான். பிரமன், பெருமையெய்து மன்னவாகனத்தை யுடையான்; மாயோன்றிருவுந்தி பெறப்பட்டவன். மாறன், ஞானமிகுந்த மனத்தையுடையான்; மகிழமாலிகையையுடையவன். இந்திரன், புனிதனென்னும ஒரு பெயரை யுடையவன்; சுவர்க்கத்திற் றருவினது நிழலையுடையவன். மாறன், ஒப்பற்ற பவித்திரவான்; சேடாவதாரமான திருப்புளிநீழலையுடையான். ஆதித்தன், நன்மைமிகும் வடமேருவை வலம்வருவான். மாறன், முதகிலைப்பெறும் பெரியதவத்தையுடையவன்; பெரியபிராட்டிதிருவுளத்தி னிறைவெய்தும் அன்பினையுடையான. ஆதலால் அவன் திருவடிகளைப்பற்றுவாரும் முத்திபெறுந்தன்மையுடையவராவரென்பது பயன். இதனுள், கோலம்-பன்றியும், அழகும். துப்பு-பற்றுக்கோடும், பவளமும். இலஞ்சி-கொப்பூழும், வகுளமாலிகையும் [redacted]கதரு-சுவர்க்கத்துக் கற்பகதருவும், திருப்புளியாழ்வாரும் நன்ன[redacted]மம, முத்தியும். இஃ தாகு பெயர். ஆகம்-திருவுளம். அலமவரல-[redacted]றுதலும், நிறைவெய்துதலும். இது, அவிரோதச்சிலேடை; இரண்டுங் கடவுள்வாழ்த்து.

அந்தணரறைந்தவுரையினைச்செவிக்கொண்
டகனமர்ந்தணிதிகழுரையிற்
ந்தரப்பிதாம்பாத்தினைநெகிழ்த்துச்
சுற்றுவிட்டதன்பினோர்வெண்பட்

டிந்துவினைறிப்பவரையுமஇக்கடன்க
ளியற்றிவான்பொருளையுட்படியா
வுந்திபினுதித்தோனெனும்பெயர்பிரமற்
குண்மையாமெனும்படிக்கெழுந்தான் (360)

திணை-பாடாண். துறை-மண்ணுமங்கலம்.

வெம்புலால்கமழ்ந்துழுபடைவேடுவன்விறல்கண்
டும்பல்யாவையும்பறந்துவான்குரல்கிளைத்தொசிந்த
கொம்பின்மொய்த்தடர்போதகத்துற்முறைகுறுகித்
தும்பியாமெனப்புலவரார்ப்புணர்பெயர்துணிவார். (361)

திணை-வாகை. துறை-பேராண்முல்லை.

பாய்கதிர்க்கடவுளும்பனிவெண்டிங்களுஞ்
சேயிகந்திரிதருஞ்செம்பொன்மாளிகைத்
தூயநுண்டுகிற்கொடிதுவன்றித்தோன்றலாற்
காயமம்பரமெனும்வாய்மைகாட்டுமே. (362)

இது நகரவாழ்த்து. இங்ஙனம்வருஞ் சிலேடைவேறுபாடுகளுங் காண்க. இவைமூன்றுங் குருகாமான்மியம். இனி ஒருதொடர்ச்சொ லிரண்டுமுதலாக ஐந்துபொருள்காட்டுவனவாஞ் சிலேடைகளு முள. அவை சொல்லணியினு ளிடைவிடாமடக்கினுண் முந்துறக் காட்டுதும். அவை யாண்டுக்காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும். (௭௧)

௧௭-வது சிலேடை முற்றும்.

## ௧௮-வது பின்வருநிலையலங்காரம்.

———:(o):———

157. நெறிப்படுசெய்யுண்முன்னிலைபெறுசொற்பொருண்
மறித்துறுபலவுடைவயிற்பின்வருநிலை.

(எ-ன்) வைத்தமுறையானே பின்வருநிலையென்னுமலங்காரமாமா றுணர்—ற்று.

(இ-ள்) முன்னர்க் கூறியநெறியே யுண்டான செய்யுட்களின் முதலேவருஞ் சொல்லாயினும் பொருளாயினும் அச்செய்யுளின்கண் மீட்டும் பலவிடத்தும் வருமெனின் அது பின்வருநிலையென்னும் அலங் காரமா மென்றவாறு. (எஉ)

பின்வருநிலை

158. அதுவே,
சொற்பின்வருநிலைபொருட்பின்வருநிலை
சொற்பொருட்பின்வருநிலையெனமூன்றும்.

வகை 3

(எ-ன்) இதுவும் அவ் வலங்காரத்தினது விரியுணர் —ற்று.

இதன்பொருள், சூத்திரத்தானே விளங்கும்.

சொற் பின்வரு

மாளைப்பொருகயற்கண்மானைக்கமலமலர்
மானைப்புவனமடமானை—மானைப்
பரித்தபிறையுஞ்சுடுமோபாடகத்தான்றெண்மேற்
றரித்ததுளபத்தார்தரில். (363)

இது சொற்பின்வருநிலை. பாடகம்-திருப்பதி. ஒழிந்த அங்கல முறையிற்கொள்க. திணை - பெண்பாற்பெருந்திணை. துறை - நிலவு கண்டழுங்கல்.

2

மாய்த்தேன்செனனம்வதைத்தேனென்வல்வினையைத்
தேய்த்தேனறிவின்சிறுமையினைச்—சாய்த்தே
னனிவினையாங்கூற்றைநறையூர்வருமால்
பணிமலர்த்தாள்போற்றிப்பணிந்து. (364)

பொருட்பி வருநி

இதன்பொருளை முறையிற்கொள்க. இது பொருட்பின்வருநிலை. மாய்த்தேனென்பதனோடும் ஒழிந்தவினை பரியாயமாகப்பொருள்கோடலா னென்றறிக. திணை-வாகை. துறை-அறிவன்வாகை.

வலம்புரிதுவைத்தனவாம்பிலாம்பனின்
றலம்பினகாடிகையுலப்பில்பேரிகை
சிலம்பினமுழவுடன்றெழித்ததெங்கணு
மலம்புரிவின்னார்நகின்றனாதமே. (365)

இதுவுமது. இதன்வேறுபாடேல் காண்க.

மாதர்மாதர்கூர்வாளமருண்கண்மாநிலத்து
மாதர்மாதர்கூர்வண்டிமிரளியதாமரைப்பூ
மாதர்மாதர்கூர்மாலும்வேலையுமெனவளர்வான்
மாதர்மாதர்கூர்கெழுதகைபடைத்தமாண்பினவே. (366)

இது சொற்பொருட்பின்வருநிலை.

(இ-ள்) இம்மாதரான்விருப்பத்தைமிகுத்த வாள்போன் றமர் விளைக்குங்கண்களானவை, பூலோகத்துங்களிர்காரணவிருப்பமிகும் வண் டுகளாரவாரிக்குந் தாமரையிற் கருணையோடுங்கூடிய பெரியபிராட்டி விருப்பமிகு மாயோனும் பாற்கடலுமொப்பெனக் கரியகுணங்களா லொளிவளராநின்ற பொன்னுலகி னரமகளிர்விருப்பமிகுநட்பினை யளிக்கும் பெருமையுடையவாமென்றவாறு. பகுதி-சேட்படை. துறை-கண்ணயப்புரைத்தல். (எகூ)

159. உவமானப்பொருட்பின்வருநிலையுந்
தவலருஞ்சிறப்பிற்றன்வாலுளதே.

(இ-ள்) அப் பின்வருநிலை உவமானப்பொருட்பின்வருநிலை யென வும் வருமென்றவாறு.

பொன்னசலம்வண்கோபுரமாடகசயில
மன்னுசிகரம்வடபொருப்பா—நன்ன
ருராங்கொண்மதிண்மேருவதாகுமாயோ
னரங்கமணிமாளிகை. (367)

ஈஃது உவமானப்பொருட்பின்வருநிலை. இதனுள் அசலம், சயிலம், பொருப்பு, மேரு எனப் பரியாயச்சொல்லா லுவமானப்பொருட்பின் வருநிலை வந்தவாறு காண்க. துறை-நகர்வாழ்த்து. (எச)

கஎ-வது பின்வருநிலை முற்றும்.

## க௯-வது தீபகவலங்காரம்.

—(o)—

160. தொழில்குணஞ்சாதிபொருளெனுமிவற்றொரு
மொழிபுணர்செய்யுளின்முதலிடைகடைநின்
றுங்கதன்பலவுடையடைபொருள்விளக்கும்
பாங்குறுதீபகம்பன்னிருபாற்றே.

(எ-ன்) வைத்தமுறையானே தீபகம் என்னும் அலங்கார முணர்—ற்று.

(இ-ள்) தொழில், குணம், சாதி, பொருளென்னு மிவற்றி னொன்றைக்காட்டும் மொழி புலவனாற் புணர்க்கப்பட்ட செய்யுளின் முதல் இடை கடை யென்னு மோரிடத்துநின்று பலவிடத்துநின்ற சொற்களோடுமடைந்து பொருளை விளக்குவதாய்ச்செய்யுந் தன்மையை யுடைய தீபகம் பன்னிரண்டுபகுதியுடைத்தென்றவாறு.

ஒழுகுங்கயற்கண்ணீரொண்டளிர்க்கைச்சங்க
மழுகுப்பிறைநுதல்வேர்மன்னு—முழுதுமுணர்ந்
தார்பந்தழுவாரணத்தமிழ்செய்ந்நாவீறர்
மார்பந்தழுவாமயிற்கு. (368)

இது முதனிலைத்தொழிற்றீபகம. இதனுள் ஒழுகுமென முதலே நின்ற நிகழ்காலவினைச்சொல்லைக், கண்ணீர், சங்கம், வேரென்னு மூன்றிடத்தும் ஒட்டுக. திணை—பெண்பாற்பெருந்திணை. துறை—கண்டுகை சோர்தல்.

வளைத்தது ராமன்கைவல்விற்பகழி
துளைத்தவரக்கரைப்பேய்ச்சுற்றந்—திளைத்தசெருக்
கண்டகளம்புண்ணீர்கடலிலங்கைமாநகரைச்
சண்டதான்வியபாசம். (369)

இதுவுமது. இதனுள் இராமன்கை வில்லைவளைத்தது. அரக்கரைப் பேய்ச்சுற்றம் வளைத்தது. செருக்களத்தைப் புண்ணீர்வளைத்தது. சண்டதான் வியபாசம் இலங்கைமாநகரைவளைத்தது. என முதலே நின்ற இறந்தகாலவினையை யெங்கு மொட்டுக. திணை—வாகை. துறை—பேராண்முல்லை.

பூரித்ததுகோசலநாடன்விற்புணர்தோள்
பாரிற்பொடித்தாள்பருவமுலை—தேரிற்
றடுகளத்துவீழ்ந்தவரக்கரைத்தின்றூழ
மடிநிகர்த்தபல்பேய்வயிறு. (370)

இது முதனிலைக்குணத்தீபகம். இதனுள், பூரித்ததென முத னின்றபண்பைத் தோள், பருவமுலை, பேய்வயிறு என எங்குமொட்டுக. பூரித்ததெனக் காலந்தோன்றிநிற்றலும் பொருளின்புடைபெயர்ச்சியல் லாமையாற் குணமாயிற்று. திணையுந் துறையு மிதுவுமது.

பாம்பாடல்வாகனமாம்பாயலாம்பாதுகையாந்
தீம்பாற்பரவைத்திரைகடைநாட்—டாம்பாகுந்
தாசரதிகொற்றக்குடையாந்தனிவிளக்கா
மாசனமாம்பின்னவனுமாம். (371)

இது முதனிலைச்சாதித்தீபகம். பாம்பென்பது சாதி. ஆடல் வென்றி. பாதுகை - திருவடிநிலை. பின்னவன - தம்பி. துறை—அரச வென்றி. திருவனந்தாழ்வானும் நித்தருண் முதலாதலால் அறுமுறை வாழ்த்துள்ளுமாம்.

மாறன்சடகோபன்வண்குருகூரான்பொருநை
யாறன் றடரியருளாளன்—வீற
னொருநான்மறைத்தமிழாலொண்பொருளைக்காட்டுந்
திருஞானமுத்திரைக்கைத்தே. (372)

இது முதனிலைப்பொருட்டீபகம். துறை - கடவுள்வாழ்த்து.

தேர்வண்டமிழ்மாறன்றென்குருகூர்வீதிதொறுஞ்
சார்வண்டாளமுகுஞ்சங்கினங்க—ளூரும்
பெருமாளிகைமுகட்டிற்பெய்முகில்கள்சூழ்
வருமாலையில்வெண்மதி. (373)

இஃது இடைநிலைத்தொழிற்றீபகம். இதனுள் ஊரும் என்பதனை ஊரும் தேரும்; ஊரும் சங்கும்; ஊரும் முகில்களும்; ஊரும் மதியு என முன்னும் பின்னு மொட்டுக. துறை - நகாவாழ்த்து.

பூண்டுறந்தவாசவன்றன்பொற்புயமுமுன்னோன்பின்
னூண்டுறந்துசென்றோனுடக்கம்பு—நாண்டுறந்த
கொற்றவிராவணிதன்கொள்கைக்குலக்கோதைக்
குற்றதிரள்கண்டமும். (374)

இது பெயரோடுங்கூடி யிடைநின்ற தொழிற்றீபகம். முன்னோன்- இராமன். அவன் பின் னூண்டுறந்துசென்றோன் - இளையபெருமாள். உடக்கம்பு—நாணிற்செறிந்தபாணம். நாண்டுறந்த—எய்தகாலத்து நாணை விட்டுநீங்கின. ஈண்டு நாண் - விற்சரடும், வின்னாணுமாம். பூண்டுறந்த வாசவன்றன்பொற்புயமும் நாண்டுறந்த என்பது இராவணி சமர்முகத்துக் கட்டினவன்றே வாகுவலயமென்னும் ஆபரணத்தை மானபங்கத்தா லணியாதுவிட்ட இந்திரன்புயத்தில் அவன்கட்டினநாணும் அன்று விட்டுநீங்கின எனவும், கொற்றவிராவணிதன் கொள்கைக்குலக்கோதைக் குற்ற திரள்கண்டமும் நாண்டுறந்த என்பது, இராவணிகுலத்திற்குரிய பாரி திரண்ட கண்டமும் மங்கிலிய மன்று விட்டுநீங்கின எனவும் முன்னும் பின்னுங் கூட்டுக. திணை—வாகைசார்ந்த பொதுவியல். துறை- வில்வென்றி.

வட்டமுலைக்கண் குளிர்ப்பவண்பனிநீரிற்குழைத்துக்
கொட்டியகத்தூரிக்கொழுங்குழம்புஞ்—சுட்டதுந்தோ
செய்வளைக்குந்தென்குருகூர்ச்செண்பகமாறன்றழுவாப்
பெய்வளைக்கும்விண்மேற்பிறை. (375)

இஃது இடைநிலைக்குணத்தீபகம். இதனுள், சுட்டது கத்தூரிக் குழம்பும், விண்மேற்பிறையும் என முன்னும் பின்னுங் கூட்டுக. திணை— பெண்பாற்கைக்கிளை. துறை - கண்டுகைசோர்தல். கொட்டியது - அப்பியது. கொழுங்குழம்பு-நெகிழ்ந்தொழுகுங்குழம்பு. அந்தோவென்ப திரக்கத்தின்சட்குறிப்பு.

வஞ்சநிருதர்மறப்படைக்கோர்கூற்றமா
நஞ்சனையமாயைக்கோர்நன்மருந்தா—மஞ்சனைதன்
கன்றுமனுராமன்கவசமாம்வாகனமா
மன்றுகுறித்தேவியதுதாம். (376)

இஃது இடைநிலைச்சாதித்தீபகம். அஞ்சனைகன்று - திருவடி. கன் றென்றது அவப்பின்கண் மயக்கம். "பரிலறிமாபிற்பொருநர்கண்ணும்,

அணைநிலைவகையோடாங்கவையுளப்பட" என்பதனால் வாகைப்புறத் திணையுள், துறை - வானரவென்றி.

தன்னிகரொன்றில்லாத்தனிமுதலாய்நின்றானு
மன்னுயிர்க்குமன்னுயிராவாழ்வானுந்—தென்னரங்க
னாரவமுதன்றமரர்க்களித்தானு
மோராயிரம்பெயரானும். (377)

இஃது இடைநிலைப்பொருட்டீபகம். ஓராயிரம்பெயர் - ஒப்பற்றளவிறந்த திருநாமம். ஒழிந்த அகல முறையிற்கொள்க. துறை—கடவுள் வாழ்த்து.

'பெருவிறல்கூர்நாகப்பிடர்மேன்மராமு
முருகெழுதோள்வாலியுரமு—மிருபதுகைக்
குன்றின்வரமுந்துணராமன்வாளிபின
லன்றாதுளைபட்டது. (378)

இது கடைநிலைத்தொழிற்றீபகம். இருபதுகைக்குன்றென்றது இராவணனை. திணை—வாகைசார்ந்தபுறத்திணை. துறை—வில்வென்றி.

மைம்மாண்புயல்கிழிக்கும்வண்சுடர்மீதாமிமையோர்
தம்மாநகராணவுஞ்சால்பிற்றே—பெம்மான்
முருகவிழ்பூந்தார்வகுளமுன்னோன்குருகூ
ருருவளர்பொன்மாடவுயர்பு. (379)

இது கடைநிலைக்குணத்தீபகம். துறை - நகரவாழ்த்து.

நன்னெவ்வநோக்காதுதாயர்வெறுத்துளதா
மென்னெவ்வநோக்குமிகல்விளைப்பான்—மன்னருண்மால்
மோகூரனைத்தொழுதேன்மோகமிகக்காமாகூ
கூகூவெனுங்கோகிலம். (380)

இது கடைநிலைச்சாதித்தீபகம். திணை—பெண்பாற்கூற்றுப் பெருந்திணை. துறை - குயிலொடுவெறுத்துக்கூறுநிற்றல்.

தாடகைகைக்குலமுரண்சாய்த்தானும்வில்லிறுத்துச்
சூடகக்கைச்சானகிதோடோய்ந்தானுங்—கேடகத்தான்

செம்பொன்மணிமாடத்தென்னிலங்கைசெற்றானு
மம்பொன்மணிக்கூடத்தான் (381)

இது கடைநிலைப்பொருட்டீபகம். கேடகத்தான் - கேட்டோடுங் கூடியவுள்ளத்தையுடையான்; அவன் இராவணன். துறை - கடவுள் வாழ்த்து. (எ௫)

161. அதுவே,

ஒருபொருளுவமையுட னுறல்சிலேடை
விருத்திமாலையென் றிவற்றொடும்விரவும். ௫

(எ-ன்) இதுவும் அவ்வலங்காரத்தி னொழிபுணர்—ற்று.

(இ-ள்) அத்தீபகம் ஒருபொருட்டீபகமுதலாக மாலாதீபகமீறாகக் றப்பட்ட வைந்தினோடும் விரவிவரு மென்றவாறு. ஒருபொருள் தீபகம்

வெங்கதிரோன்மெய்வருடும்வெண்மதியின்மெய்தடவு
மங்கணுயர்வானகடணவு—மெங்க
ளனகனபிராமனுழியான்மூழிக்
கனகமணிமாளிகை. (382)

இஃ தொருபொருட் கடைநிலையிடத்தீபகம். ஒருபொருளாவன:- வருடும், அணவும், தடவும் என்பன. துறை - நகரவாழ்த்து. 2 உவமான தீபகம்

பொன்னங்கொடியனையள்பொற்பமைந்துமென்னடைகற்
றன்னந்தனையனையளாயிழாய்—நன்னுதலாள்
வாய்ந்தவியல்பெற்றுமயிலனையண்மின்னனைய
ளாய்ந்தநுடங்கிடைபெற்றாங்கு. (383)

இஃ துவமானப்பொருட்டீபகம். வாய்ந்தவியல்-தோற்றமுள்ள சாயல். பகுதி - சேட்படை. துறை - தலைவன் பாங்கிக் கவயவங்கூறல். 3 சிலேடாதீபகம்

ஏகாவடநிலைபெற்றின்புட்டகமணந்து
மாகாமருவாமொய்வாழ்வுறலாற்—றோகை
முலைக்குமகிழ்மாலைமுன்னோன்றடரி
மலைக்குமகிழ்வெய்துமனம். (384)

இது சிலேடாதீபகம். துடரிமேற்சொல்லுங்கால், ஏகாவடம் (=இயங்காத ஆலமரம்) நிலைபெற்று நல்லபுள்ளுக்கள் பெருமையோடு பொருந்துவனவாய்க் கரிய அழகிய யானைத்திரள்கள் செறியும்படி வாழ்வுற்றெனவும், முலைமேற்சொல்லுங்கால், ஏகாவடமென்னும் ஆபாரணம் நீங்காது கண்ணுக்கினிமைதரும் படாந் தன்மேற் றகவோடு தழுவுவனவாய்ப் பெரிய விருப்பத்தையளிக்கு மிளமைத்தன்மையுடனிறுகி வாழ்வு பெறுதலால் எனவுங்கொள்க. பகுதி - இயற்கை. துறை - நலம்புனைந்துரைத்தல்.

தணந்தாருயிர்குறைக்குந்தந் துணைவர்பொற்றோண்
மணந்தாருயிர்நிறைக்குமானே—புணர்ந்தார்நல்
யாகத்துதிமாவிபகிரிமேன்மைதவழ்நீண்
மாகத்துதிமாமதி. (385)

இது விருத்ததீபகம். இபகிரி-அத்திகிரி. விருத்தம், குறைக்கும் நிறைக்குமெனபன. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - நிலவு கண்டழுங்கல்.

வாவிக்கழகுமலர்கமலமன்கமலப்
பூவிற்கதனுட்பொலிதேவி—தேவிக்கு
நாளுமபுதியதமிழ்நாவீறனையடிமை
யாளுந்திருநாரணன். (386)

இது மாலாதீபகம். இதனுள் அழகென்னுமதனை முதனிலைக் குணத்தீபகமாக்கிக் கமல முதலாக எவ்விடத்தும் மாலைப்படுத்திக் கூட்டுக. துறை - கடவுள்வாழ்த்து. (எசு)

கசு-வது தீபகம முற்றும்.

---

## ௨௦-வது நிரனிறையலங்காரம்.

162. குறித்திடும்பெயர்வினைகூறியசெய்யுளி
னெறிப்படநிரலுறனிரனிறையாகும்.

(எ-ன்) வைத்தமுறையானே நிரனிறையலங்கார முணர்—ற்று.

(இ-ள்) இடுகுறியெனவுங் காரணமெனவுங் குறிப்பனவாம் பெயரேயாதல் வினையேயாதல் புலவனாற் கூறப்பட்ட செய்யுளினிடத்து முறையே யிரட்டிப்பது நிரனிறையென்னு மலங்காரமாமென்றவாறு. நிரனுதல் - இரட்டித்தல். (௭௭)

163. அவற்றுள்,
பெயரொடுபெயர்நிரனுதல்பெயர்நிரனிறை.

(எ-ன்) அவ்விரண்டினுட் பெயர்நிரனிறையாமா றுணர்—ற்று.

இதன்பொருள் உரையிற்கொள்க.

தாதிவர்பூந்தாமந்திருநாமந்தந்தைதாய்
மேதினியேழும்புகழ்நாவிறற்கு—மாதராய்
வேரியார்வண்டிரைக்கும்வெய்யமகிழ்மாறன்
காரியார்நங்கையார்காண். (387)

இது பெயரோடுபெயர்நிரனிறை. இதனுள் தாமம், திருநாமம், தந்தை, தாய்:—மகிழ், மாறன், காரியார், நங்கையார் என அடைவே நிரைந்தமை காண்க. துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. (௭௮)

164. பெயரெதிர்நிரனுதல்பெயரெதிர்நிரனிறை.

(எ-ன்) பெயரெதிர்நிரனிறையமா றுணர்—ற்று.

இதன்பொருளும் உரையிற்கொள்க.

ஏடவிழ்தாரோதியெழில்வாகனந்தனிம
மாடரவமஞ்சிறைப்புள்ளாழிதுழாய்—நீடுபர
மேட்டியூர்வெண்டிரைவாயென்றுந்துயின்றதிருக்
கோட்டியூர்வாழ்நெடுமாற்கு. (388)

இது பெயரோடுபெயர்நிரனிறை. அரவம் தனிமம் அஞ்சிறைப்புள் வாகனம், ஆழி ஏதி, துழாய் தார், எனப் பெயரொடுபெயரெதிர் நிரனிறையாயவாறு காண்க. துறை - கடவுள்வாழ்த்து

165. உயர்வுறுபெயரொடுவினையுறநிரல்வது
மயர்வறுபெயர்வினைநிரனிறையெனவரும்.

(எ-ன்) பெயரொடு வினை நிரனிறையாமா றுணர்—ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

மற்றளபம்போர்வேழும்வாராழிமுல்லைநிலங்
கொற்றமகிழ்மாறனையாட்கொண்டருளும்—விற்றுவமா
லாடினதுஞ்சூடினதுமட்டதுவுந்தட்டதுவும்
பாடினதுநேடினதும்பண்டு. (389)

இது பெயரோடுவினைநிரனிறை. மல்லென்பது கூத்து. முல்லை-பண். நிலம் - பூமிதேவி. அட்டது - கொன்றது. தட்டது - முடைத்தது. நேடினது - தேடினது. இதுவுங் கடவுள்வாழ்த்து.

பணிமொழியுண்கண்மலராள்பங்கயத்தாள்செய்ய
மணிமலர்க்கைபற்றியவாட்டாற்று—னணிமலர்த்தாள்
போமுதுண்சேடமெழில்பேரின்பமுற்றுமுகஞ்
சேரடியர்க்கேவல்செயல். (390)

இது பெயரோடுவினைமுறைநிரனிறை.

(இ-ள்) நெஞ்சமே: தாமரையாள் சிவந்த மணியு மலரும்போன்ற திருக்கையைப்பற்றின திருவாட்டாற்று னழகிய திருவடிகளைப் பணி; நாமத்தை மொழி; அமுதுசெய்த சேடத்தை உண்; திருமேனியின் காந்தியைத் தியானஞ்செய்; அதன்பின்னருற்ற பேரின்பத்தான் முக மலர்; அவன் றிருத்தொண்டர்க்கேற்ற ஏவல் செய்வதனை ஆட்சிசெய்வா யாக வென்றவாறு.

நெஞ்சமேயென்னுமெழுவாய்முன்னிலை யெஞ்சிநின்றதாக விரிக்க. இதனுள், பணிமொழியுண்கண்மலராளாகிய தாமரையாளெனத் தொடர் புடைத்தாய்நின்றனவுமாய்த் தொடர்பிற்பிரித்த தன்றெழிலேவலாயின வாறுங் காண்க. திணை - பாடாண். துறை - ஓம்படை. (௪0)

166\. ஓதியபெயரிறேனுடுயர்வினையெதிரி
னிதிகொள்பெயர்வினையெதிர்நிரனிறையாம்.

(எ-ன்) பெயரொடுவினை யெதிர்நிரனிறையாமா றுணர்—ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

வேதியனேயீன் றளித்தமேன்மைத்திருவுருவே
வாதியர்தம்வாய்மதமேவண்டமிழே—யோதிமமே
யேறியதுங்கூறியதுஞ்சீறியதுமீசனெனத்
தேறியதுங்காரிதருஞ்சேய். (391)

இது பெயரோடுவினையெதிர்நிரனிறை. இதனுள் வேதியனையீன் றளித்த மேன்மைத்திருவுருவென்றது சிமந்நாராயணனை. வாதியர் வாய் மதமென்றது அகம்பிரமிமுதலாயவர் புன்சாத்திரமதம். வண்டமிழ்—திருவாய்மொழி. ஏறியது ஓதிமம்; கூறியது வண்டமிழ்; சீறியது பாவாதியர்மதத்தை; பரதத்துவமெனத்தேறியது சிமந் நாராயணனை; அவன்யாரெனிற் புலவீர்காள்! காரிமாறப்பிரானுமென்றவாறு. திணை-பாடாண். துறை-பழிச்சினர்ப்பரவல். மொழிமாற்றுநிரனிறையுமிது. ()

5.

167. வினையொடுவினைநிரல்வதுவினைநிரனிறை.

(எ-ன்) வினையொடுவினை நிரனிறையாமாறுணர்—ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

வானுலகெண்ணில்வளைத்துமாநீர்செறுத்தவுணர்
கோனுதகம்பெய்ததுகைக்கொண்டுதான்—சானகிதோண்
மேயினுன்றென்னிலங்கைவென்றுனெழுபுவியுந்
தாயினுனீர்மலையத்தான். (392)

இது வினையோடுவினைநிரனிறை. அவுணர்கோனென்றது மாவலியை. தாயினுன் - அளந்தான். துறை - கடவுள்வாழ்த்து. (அஉ)

6

168. வினையெதிர்நிரல்வதுவினையெதிர்நிரனிறை.

(எ-ன்) இது வினையொடுவினையெதிர்நிரனிறையாமாறுணர்—ற்று.

இதனுள் வினையொடு என்பதனை முதலே விரித்துரைக்க.

வன்சயிலமேர்திவளைமுழக்கிவெண்டயிர்கட்
டன்புறக்கட்டுண்டமர்வென்றுவளித்தா—னன்புட்
கடவெர்தைவானோர்கடிகாவிடந்த
விடவெர்தையில்வாழிறை. (393)

இது வினையோடுவினை யெதிர்நிரனிறை. ஆவளித்தான்—ஆவினைக் காத்தான். நன்புட்கடவெந்தை - நல்லகருடனையேறப்பட்ட வெமது சுவாமி; என் னப்பனென்றுமாம். துறை - இதுவுமது. (அரு)

169. வினைபெயர்நிரல்வது வினைபெயர்நிரனிறை.

(எ-ன்) வினையொடுபெயர்நிரனிறையாமா றுணர்—ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

எந்திறன்வேய்ந்தானிறுத்தானினிகாக
மாந்திறனேழிது மாய்வன்சிலைபார்—காந்தன்
றொலைவில்லிமங்கலத்தான்றோலாதார்வென்றி
தொலைவில்லிவானோர் துணை. (394)

இது வினையோடுபெயர்நிரனிறை. காந்தன் - அழகன். தொலைவில்லிமங்கலத்தான்-தொலைவில்லிமங்கலமென்னுந் திருப்பதியையுடையவன். தோலாதார்வென்றிதொலைவில்லி - போர்க்குப் புறமிடாதசத்துருக்களது வென்றியைத்தொலைக்கப்பட்ட வில்லையுடையான். வானோர் துணை – வானோருயிர்க்குகற்றுணை யென்றவாறு. வானோர் – நித்திய சூரியர். (அச)

170. வினையொடுபெயரெதிர்கொளவருநிரனிறை
வினையொடுபெயரெதிர்விதிநிரனிறையே.

(எ-ன்) வினையொடுபெயரெதிர்நிரனிறையுணர்—ற்று.

விதிநிரனிறை—இலக்கணத்தால்விதிக்கப்பட்ட நிரனிறை. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

நடித்தானொடித்தானடந்தானிடந்தான்
பொடித்தானொருதுணிற்புள்வாய்—வடித்ததமிழ்ப்
பாவலன்பின்கோதண்டம்பையரவிற்பல்லுயிர்க்குங்
காவலவன்றென்னரங்கன்காண். (395

இது வினையோடுபெயரெதிர்நிரனிறை தூணிற் பொடித்தான், புள்வாய் இடந்தான்; பாவலன்பின் நடந்தான்; கோதண்டம் ஒடித்தான்; பையரவில் நடித்தான் என வினையொடுபெயரெதிர்நிரனிறை காண்க

பொடித்தல் – தோன்றுதல். இடந்தது – பிளந்தது. ஒடித்தல் – முறித்தல். (அரு)

171. இருபெயர்க்கமைநாலெழுத்தைமுறைமாறிப்
பொழிப்புறப்பிரித்துப்புணர்த்துநிரைவகை
யெழுத்துநிரனிறையென்மனார்புலவர்.

(எ-ன்) இதுவும் அந் நிரனிறையலங்காரத்திற்கு எழுத்தாலாய தோர் சிறப்பிலக்கண முணர்—ற்று.

(இ-ள்) செய்யுளகத் திரண்டுபெயர்க்கு நிரம்பின நாலெழுத்தை மாறுடி யொரோவொன் றிடையிட்டுப் பிரித்துக்கூட்டி நிரையுங் கூறுபாடு புலவ ரெழுத்து நிரனிறையென்றுகூறுவ ரென்றவாறு.

மேவாருளிமுலேகண்ணண் பாரிளிர்விபதுண்
பூவார்வதனமொழிபொன்மகள்சேர்—தேவாதி
தேவேபிரமமெனத்தேர்மகிழ்மாறன்சிலம்பிற்
காவேயவட்கிடமாங்காண். (396)

இஃதெழுத்துநிரனிறை. இதனுள் மேவாருளி என்றமொழிக்கண் நின்ற நாலெழுத்தினை ஒரோவொன்றிடையிட்டு மேரு வாளி எனப் பிரித்து, மேரு முலே; வாளி கண் எனக் கூட்டியும், விபதுண் என்ற மொழிக்கண் நின்ற நாலெழுத்தை ஒரோவொனறிடையிட்டு விது பண்: வதனம் மொழி எனக் கூட்டியு நிரனிறையானவாறு காண்க. இவற்றுள் உவமைமுதலிய அலங்காரங்கள்விரவினு மீண்டு நிரனிறையே நோக்க மெனக் கொள்க. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பிடங் கூறல். (அசு)

172. முறைமுறைநிரைவதுமுறைநிரனிறையே.

(எ-ன்) இதுவும் நிரனிறைக்கோர் சிறப்பிலக்கணங் கூறுத லுதலிற்று.

(இ-ள்) பெயர் வினை யென்னு மிரண்டினையு மொருசெய்யுளகத் தொருமுறை முதலேகூறியவற்றுன்முற்றுது அவற்றைப் பயனிலே முற்றுவிப்பான் மறித்தும் பெயரும் வினையுமாகநிரைத்து முறைபெற முடிப்பது முறைநிரனிறையா மென்றவாறு.

பொன்னனைவாளரக்கனைநூற்றுவரைக்காவைப்
 பொருசிலையைக்கருங்கடலைப்பொன்னனின்ற
கன்மதற்காய்ச்சுரர்க்காயைவருக்காய்க்காத
 னப்பிணைக்காய்ச்சானகிக்காய்நடைவைக்காக
மன்னுகிரால்வடிக்கணையால்வளையாற்புள்ளால்
 வளங்கெழுதோள்வலியால்வானரங்களாலு
முன்னுடல்கீறிச்சிரங்கொய்தமரில்வீழ்த்து
 முதலொடுங்கீண்டிறுத்தடைத்தான்மோகூரானே. (397)

இது முறைநிரனிறை. இதனுள அங்ஙனம் பெயரும், வினையு மோவ்வொருபொருட்டொடர்ச்சிக்கண்ணே யொருமுறைவந்தவற்றோடு மறித்து முறைமுறையாக வந்தமைகாண்க. இதன்பொருள் உரையிற் கொள்க. துறை - கடவுள்வாழ்த்து. (அஎ)

173. இணைபெறவிடைநின்றிருவயிற்பெயரொடும்
 புணர்தகைநிரனிறைபுகலிலொன்றுளதே.

(எ-ன்) இன்னுமவ் வலங்காரத்திற்கோரொழிபுகூறுதனுதலிற்று.

(இ-ள்) செய்யுளினிடைக்கண் இருமொழிபெறநின்று முன்னும் பின்னுமாகிய வீரிடத்தும் பொருள்களுட னெடுத்துநிரைக்கும் இடையிணைநிரனிறையுங் கூறுமிடத் தொன்றுளதா மென்றவாறு.

அருண்மனையாளாயுவந்தாழியான்கோடு
பொருதிரைப்பாற்றெள்ளமிர்திற்போந்த—திருவரங்கம்
பூம்பதுமக்கண்முகிழ்த்துப்புத்தேளிர்கைதொழமால்
பாம்பணைமேல்வைகும்பதி. (398)

இஃ திடையிணைநிரனிறை. இதனுள், இடைநின்ற திருவரங்க மென்னுந் தொடர்மொழியைத் திரு அரங்கம் எனப் பகுத் திருமொழி யாக்கி திரு ஆழியா னருளோடுங்கூடிய பாரியாயுவந்தது ; அரங்கம் மால் பாம்பணைமேலாய்ப் பள்ளிகொள்ளும்பதி யென முன்னும் பின்னும் நிரனிறையாக்கி முடிக்க. அல்லது ஆழியானாகியமால் பாரியாகவுவந்தது திரு; புத்தேளிர் கைகளாற்றொழப் பாம்பணைமேல்வைகும் பதி அரங்கம்

எனச் சேர்த்துக் கொண்டுகூட்டெனினுமாம். கோடு - கரை. போந்தது தோன்றியது. ஆதலாற் பரமபதத்தினுந் திருப்பாற்கடலினுஞ் செய்து தாயவன் உலகத்துயிர்களீடேற அர்ச்சாவதாரமாகிச் சேவித்தற்கெளி தாய் அணித்தாய்க் கண்வளர்கின்றான்; அவனைச்சேவிப்பார்க் கிம்மைப் பயனாகிய அனைத்துச்செல்வமும், மறுமைப்பயனாகிய பேரின்பமும் பெறலாம்; சேவிப்பீராக வென்பது பயன். திணை - ......துறை ................"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" என்னுங் குறட்பாவு மிது. (அ அ

174. உரைபயின்முதலீற்றாறும்பெயரொடுபெயர்
நிரைநிறையெதிர்பெறநிகழ்ந்தீறுமுதல்
புரைதீர்தாவிற்பூட்டுறுவதுமுள.

(எ-ன்) நிரனிறையென்னும்பொருள்கோளலங்காரம் பூட்டுவி பொருள்கோளோடு விரவுமாறுணர்—ற்று.

(இ-ள்) செய்யுளகத்து விட்டுநீங்காத பெயரொடுபெய ரெதிர்நி னிறையலங்காரமாகநடைபெற்றுச் செய்யுளீற்றுப்பெயரொடு செய்யுள முதனின்றபெயரெழுவாயுடனெதிர்வனவாய் விற்பூட்டுப்பொருள்கோ ளாவனவுமுள வென்றவாறு.

காவிகமலங்கமழ்தளவஞ்செங்காந்த
ளாவியனையாயரங்கத்தான் —பூவிற்
பிரமனைமுன்பெற்றபெருமான்வரைமான்
காமுறுவலானனமுண்கண். (39

இது பெயரொடுபெயரெதிர்நிரனிறை; எழுவாயு மீறு மெதிர்வ வாய்ப் பூட்டுவிற்பொருள்கோளாயிற்று. பகுதி-பாங்கற்கூட்டம். துறை இயல்பிடங்கூறல். (அ

உ௦-வது நிரனிறை முற்றும்.



## உக-வது பூட்டுவில்லலங்காரம்.

—:(ௐ):—

175. செய்யுளினிறுவாயெழுவாய்புணர்ந்து
மெய்யுறப்பொருணிலைவிளக்கல்விற்பூட்டே.

(எ-ன்) வைத்தமுறையானே விற்பூட்டலங்காரமுணர்-ற்று.
இதன்பொருள் உரையிற்கொள்க.

வருமதற்குமுன்னேமதிட்குருகூருள்புக்
கிருமகிழ்மாறற்கடிமையென்னுங்—கருமமிது
மற்றொப்பிலாதமதிப்புலவீர்பாசமுடன்
கொற்றப்பகடேறிக்கூற்று. (400)

இது விற்பூட்டு. இதனுள், கூற்றுவரு மதற்குமுன்னேயெனச் செய்யுளிறுவா யெழுவாயுடன்புணர்ந்து பொருளுணர்க்குடைமைகாண்க. திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

மறவாதுகூறுமதிப்புலவீரொன்றும்
பிறவாதபேறுபெறலாக்—துறவாளர்
தோய்ந்தமறையாதியந்தந்துதிப்பதற்கு
வாய்ந்தமுதற்றிருநாமம். (401)

இதுவுமது. துறவாளர் - மனத்தாற்றுறப்பனவற்றைத் துறப்ப தாட்சியுள்ளார். மறை யாதியந்தந்துதிப்பதற்குவாய்ந்த முதற்றிரு நாமம் அரியென்னுந்திருநாமம். நாமம் மறவாதுகூறுமெனப் புணர்க்க. திணை, இதுவுமது. துறை - செவியறிவுறூஉ. (௬௦)

உக-வது பூட்டுவின் முற்றும்.



## உஉ-வது இறைச்சிப்பொருளலங்காரம்.

—:(ௐ):—

176. கருப்பொருள்களனுங்கட்டுரைபயின்ற
பொருட்புறத்தனவாமிறைச்சிப்பொருளணி.

(எ-ன்) வைத்தமுறையானே இறைச்சிப்பொருளலங்கார முணர்-ற்று.

(இ-ள்) ஐந்துநிலத்தினும் அவ்வவநிலங்களிற் கருப்பொருளே தனக்குநிலைக்களனு மாகியவுரையோடும்பொருந்திப் பொருட்குப்புறத்த வாய்ப் பயன்றரும் இறைச்சிப்பொருளலங்கார மென்றவாறு.

ஏனலுமிறடியுமிடர்சிறிதின்று
வான்வளஞ்சுரத்தலும்வயின்வயின்வனப்புற
விளைத்தவர்பலரொடுமிசைதிறத்தேவலின்
வளைத்தரிகுநரரிதற்கருமையவா
யொழிந்தபல்வளங்களுமோங்கினசெழுந்தேன்
வழிந்தொழுகியமகிழ்மாம்பினன்வரைவாழ்
சேயரிக்கருங்கட்டிருநுதல்,
வாய்மையின் வழாஅமன் மரீஇயபைம்புனமே. (402)

இதனுள் வாய்மையின்வழாஅ மன் என்பதே கூறவேண்டும் பொருள். அதன்புறத்தே இங்ஙனம் வழாஅ மன் மரீஇயபைம்புனத் தும் ஏனல் முதலிய பலவளங்களும் அழுங்குமிக வானுந் தன்வளனுகிய புனலைச் சுரந்துபொழிவதென்னென இறைச்சிப்பொருளணி தோன்றிய வாறு காண்க.

திருநுதல் - அண்மைவிளி. வாய்மையின்வழாதோன் என்றது இகழ்ச்சிக்குறிப்பு. ஏனல் - செந்தினை. இறடி - கருந்தினை. வான்வளம்- மழை. சுரத்தல் - பெருகுதல். வயின்வயின் - இடந்தொறுமிடந்தொறும். விளைத்தவர் - விளைவித்தார். மிசை திறத்து - துய்த்தற்பொருட்டு. அரிகுநரரிதற்கருமையவாய் - அறுப்பவர் அறுத்துத்தொலைத்தற்கரிய தன்மையவாகி. ஏனையவளங்களும் - அவையிரண்டுமொழிந்த பலவளங் களும். ஓங்கின - அவற்றோடும் பெருத்தன. வழாஅமன் - வினையெதிர் மறுத்த வினைத்திரிசொல். பகுதி - வரைபொருட்பிரிதல். துறை தலைவினைத் தோழி யியற்பழித்தல்.

அகத்திற்குரியவா மிறைச்சிப்பொருள்கோளெல்லா மிகுதியாய் வருவன தலைவன்கொடுமைகூறுமிடத்தென வுணர்க. ஏனையுவப்பினுஞ் சிறுபான்மைவரும். இப்பொருள்கோள் கருப்பொருளே தனக்கு நிலைக் களனுகவரு மென்பது இதற்கு முதனூல்செய்த ஒல்காப்புலமைத் தொல்காப்பியனாரும், பொருளியலுள் "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" என்பதனுலுங் கண்டுகொள்க.

கறையடிச்சிறுகட்களிநல்யானை
யறைபொருக்கெழவெயிலழலுமிழதரிடை
யுருப்பமதாற்றா துயங்கியபிடியி
னடிக்கீழ்முடிக்கடியளிதகவிலாழியைப்
பிணர்படுபுழைக்கையிற்பெய்துபெய்தாற்றி
யுடனமர்ந்தொரீஇயவொண்சுரமூடறுத்
திகந்தவர்நின்கவினிறந்துபாடெய்த
நெடுநாள்வைகுநரல்லரின்னே
செய்பொருண்முற்றுபுவருவர்
மையமருண்கணாய்வருந்தனீயே. (403)

இது, "அன்புறுதகுநவிறைச்சியுட்சுட்டலும், வண்புறையாகும் வருந்தியபொழுதே" என்பதனா லிறைச்சிப்பொருண் முற்கூறியவற்றின் வேறுபடவருமென்கின்றது. என்னை? முன்னே நெஞ்சத்தன்புடையார், அதன்மேலுங் களிறு தன்பிடியின் கறையடிவெப்பத்தினை விலாழியைக் கையால்வாங்கி யடிக்கடி யிறைத் தாற்றி யுடன்கொண்டு சுரத்தினைக் கடந்து மன்பினையுடைத்தென்றனர்; அவர் அதனை யிப்பொழுதுங் காண்பர்கா ணென்று அன்புறுதகுநகூறிப் பிரிவாற்றாதவட்குத் தோழி வற்புறுத்தினவாற்றா னறிக.

கறையடி - உரல்போன்ற அடி. அறைபொருக்கெழ - பாறை தகடுதகடாகவெடித்துச்சிந்த. வெயிலழலுமிழதரிடை - ஆதித்தன் அழலைச்சொரியுங் கடத்தற்கரிதாய சுரத்துவழியில். உருப்பமதாற்றா துயங்கியபிடியின் - வெப்பமானதற் காற்றாது வருந்திய பிடியின். அடிக்கீழ் முடிக்கடி யளிதக விலாழியை - அப்பிடியினடிக்கீழ்ப் பலகாலு மன்புமிக விலாழியை. பிணர்படு புழைக்கையிற் பெய்துபெய் தாற்றி - சருச்சரையுடைய துளைக்கையா லிறைத்து வெப்பத்தைநீக்கி, உடனமர்ந் தொரீஇய - உள்ளு முடனு மொன்றெனக் கலந்து கடந்த. ஒண்சுர மூடறுத்திகந்தவர் - ஒள்ளியசுரத்தினது வழியைத்தொலைத்துக்கடந்த வர். நின்கவி னிறந்துபாடெய்த - நினது மேனியினழகு மேனியை விட்டுப் புறம்போக. நெடுநாள்வைகுநரல்லர் - நெடுநா ளங்குத் தங்குவா ரல்லர். இன்னே செய்பொருண்முற்றுபுவருவர் - இக்காலத்துத் தாம் ஈட்டுதற்கமைந்த நிதியீட்டுங்கருமமுற்றி வருவர், மையமருண்கணாய்

வருந்தனீயே - ஆகையான் மையெழுதவிரும்பிய மையுண்கண்ணாய் வருந்தாதிருப்பாயாக வென்றவாறு. பகுதி - இதுவுமது. • துறை வருத்தங்கண்டு தோழிவற்புறுத்தல்.

நீடியவியன்சினைநிலாய்நறைவிளைவுறு
பாடிமிழருவிப்பனிவரைநன்னாட
விட்டகல்கின்றாய்விழுமியோர்நுவலுங்
கட்டுரைமதியாக்காவலன்போலவும்
பாகரையடங்காப்பகட்டுளம்போலவு
மோகமுற்றனையாய்முதுரைப்படுத்திய
வொருவழித்தணத்தலுடன்கொண்டேகலென்
றிருவழித்தாயதிலிசைந்ததொன்றுள்ளாய்
வயல்வளஞ்சிறந்தமருங்குடைப்பொன்னியுட்
புயல்படிந்ததுபோற்பொறியரவணைத்துயி
லரங்கனைவழிபட்டவனருட்கிலக்காய்
வரம்பெறுநரினயாமனமகிழ்வெய்த
விரைவொடுமுயல்வையேல்விரைமென்
மரைமலர்மடந்தைநின்வயத்தினளாமே. (404)

இது, "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே, திறத்தியன் மருங்கிற் றெரியு மோர்க்கே" என்பதனால் எய்தியதிகந்து படாமற் காத்தது; என்னை? கருப்பொருள் பிறிதோர்பொருட் குபகாரப்படும் பொருட்டாதலேயன்றி யக்கருப்பொருடன்னுள்ளேதோன்றும் பொருளு முள. அஃது தள்ளுறையுவமமன் றிறைச்சியென் றாராய்ந்துகொள்ளும் நல்லறிவுடையோர்க்கென்றார், இதனுள்ளு மவ்வாறே அரசியற்கமைந்த நீதியை விட்டுநீங்குதலின்றி யமைச்சியன்முற்றவு முணர்ந்தோர் காலமு மிடனுந் துணிந்துரைத்த வுறுதிக்கட்டுரையையுறுதியென் றுட்கொள்ளா மன்னரைப்போலவும், பாகர்க்கடங்கா மதயானையினுள்ளம்போலவும் மயக்கமெய்தினையாய், முதியவுரையாக வனதுணர்வுட்கொளுத்திய வொருவழித்தணத்த லுடன்கொண்டேகலென விருமுறையுள்வருவன வற்று ளொனறுபுத்திக் கொன் றிசைவதாக வுட்கொண்டொழுகும் குறிப்புமில்லையாயினை; இனியாயினும் பொன்னியுள் அரங்கனைவழிபட்

டவனருட்கிலக்காகித் தாஞ் சிந்தித்த வரம்பெற்றாரைப்போல யாங்களு மனமகிழ்வெய்த விரைவினோடும் வரைந்துகொள்வது முயல்வையேற் றுமனாமலர்மகளையனையா ளினக்குரிமையாவளென்றமையா னிறைச்சி யாயிற்று; என்னை? வண்டுகளென்றவுவமை யெச்சமாகநின் றவை தமக்குப் பின்னைக்குப் புசிப்பதாகவைத்த தேனின்விளைவையோர்ந் தங்கிலத்துவாழ்வார் மால்பியற்றிக்கொண்டுபோமாறுபோல நீயும் மேல் வரைந்துகொள்ளலாமென்றிருக்கு மிவளையும் முதிர்ச்சிகண் டயலவர் பொன்னணிந்துகொடுபோவரென வுள்ளுறையுமவமெய்திற் றேனும், பின்னர்நின்றபொருளோ டியையாமையி னிவ்வுவம முள்ளுறையுற்றுப் பொருள்பயவாதுவமையாகக்குறிக்கப்பட்ட அவ் வண்டுகளெஞ்சிநிற்பது சோக்சமாக நீ யினி வரைந்துகோடல்வேண்டுமென்றுகூறுதலே கருத் தாதலை யறிவித்ததால் இறைச்சியாய் நாடவென்பதனுள் வேறோர்பொரு டோன்றுவித்துநின்றதாதலின். "நீடிய வியன்சினை நிலாய்நறை விளைவுறு, பாடிமி ழருவிப் பனிவரை நன்னாட" வென்றது பிற ரிவளைப் பொன்னணிந்துகொடுபோவரென்னுந் துணையன்றி யுள்ளுறையுவமப் பொருளை முற்றவுணர்த்தாமை யுணர்க "கன்றுதன் பயமுலை மாந்த முன்றிற், றினைபிடி யுண்ணும் பெருங்கன் னாட" வென்ற குறுந்தொகைப் பாட்டும், "வேங்கைதொலைத்த" வென்னுங் குறிஞ்சிக்கலியு மது பகுதி- வரைவுமுடுக்கம். துறை - வரைவுகடாதல். (கூக)

உஉ-வது இறைச்சிப்பொருண் முற்றும்.

---

## உ௩-வது பொருண்மொழியலங்காரம்.



**177. ஊதியமெய்ப்பொருளுணர்த்தல்பொருண்மொழியாம்.**

(எ-ன்) வைத்தமுறையானே பொருண்மொழியென்னும் அலங்கார முணர்—ற்று.

(இ-ள்) ஆன்மலாபமான வுண்மைப்பொருள் புலவனாற் செய்யு ளிடத் துணர்த்தப்படுவதும் பொருண்மொழியென்னும் அலங்கார மென்று சொல்லப்படுவதாமென்றவாறு,

இது தாஅனுடாத்தனுது நிறுத்த லென்பதாம். உம்மை செய்யுள் விகாரத்தாற் ரொக்கது. அலங்காரமென்பது அதிகாரத்தால் வருவிக்கப் பட்டது.

இந்தவுடல்பெற்றிருக்கப்பெறுபொழுதே
நந்திபுரவிண்ணகர்மாலைச்—சிந்திப்பா
ரன்றறிவாமென்னுதறஞ்செய்வார்பேரின்பஞ்
சென்றறிவார்நெஞ்சேதிடன். (405)

(இ-ள்) நெஞ்சமே! நால்வகைத்தோற்றத்துட் பெறுதற்கரிய ஆராவமிர்தமாம் இந்த மானிடவுடலம்பெற்றதோடு மின்னிலுநிலையில் லாத இந்தயாக்கை யிருக்கபெற்றபொழுதே நாம் இதுபொழுதிளையமாக வின் இறக்குஞான்றுசிந்திப்போமெனக்கருதாதே நந்திபுரத்திருமாலைக் காலம்பெறச்சிந்திப்பாரும, அறத்தினை நாடோறுஞ் செய்வாரும் இவ் வுலகத்தின்பமெய்துவதோடும் அவ்வுலகத்துப் பேரின்பமுமெய்துவ துண்மையாமென்றவாறு.

ஆதலால் நாமு மவைசெய்வதே நமக்குறுதியென்பது பயன். சிந்திப்பார், அறஞ்செய்வார், பேரின்பம் என்னும் மூன்றிடத்தும் உம்மை தொக்கனவாக விரிக்க. அறிவாரென்பது காண்பரெனபதாயிறறு. பொருள் எனபது மெய்; "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு, மருளானு மாணுப் பிறப்பு' என்பதனுலறிக. திணை - வாகை. துறை - பொருளொடுபுகறல். (கூஉ)

உ௩-வது பொருண்மொழி முற்றும்.

---

## உ௪-வது அதிகவலங்காரம்.

—❧—

178. ஆதாரத்தினுமாதேயம்பெருத்
தகலம்பெறுதடங்கியதெனலதிகம்.

(எ-ன்) வைத்தமுறையானே அதிகமென்னும் அலங்கார முணர்—ற்று.

இதன்பொருள் சூத்திரத்தானே விளங்கும்.

வசையிலாவிரசதத்தினுல்வயின்வயினமைத்த
வசையிலாப்பணிவரைக்குலமளவிடற்கரிதாக்



திசைகளெங்கணுஞ்சென் றிடம்பெறு தவாமதன
திசைகணின் றவண்செறிந் தடங்கியதெனலாமே. (406)

இது அதிகம். வசையிலாவிரசதம் - மாற்றிற்குறையாவெள்ளி அசைவிலா - நடுக்கற்ற. இசைகள் - கீர்த்திகள். செறிந்தடங்கியது மிகவுஞ்செறிந்தது. ஆதாரம் பூமியும் ஆகாயமும். ஆதேயம் - கீர்த்தி. (குருகாமான்மியம்.) துறை - நகரவாழ்த்து. (கூ௯)

உச-வது அதிகம் முற்றும்.

## உ௫-வது வகைமுதலடுக்கலங்காரம்.



179. பொதுப்படவொருவகைமுதலடைபுணரா
தடுக்கலும்வகைமுதலடுக்கணியெனக்கூறும்.

(என்) வைத்தமுறையானே வகைமுதலடுக்கணியுணர்-ற்று.

(இ-ள்) நால்வகைத்தோற்றத்துட் பொதுப்பெயர்க்கூட்டமான முதற்பொருள்களை அடை சினை புணராது முதல்களை முதலாம்படி புலவர் செய்யுண்முழுது மடுக்குவதும் வகைமுதலடுக்கணியா மென்ற வாறு.

வகைமுதலடுக்கென்பது பண்புத்தொகை. வகையாவன:—மரம், விலங்கு, புள், மீன், ஊர்வன, மணி, பண், நாள், மக்கள், தேவர் எனக் றப்பட்ட ஒரு பலவகைமுதலாம.

மாவமுங்கடம்பும்பனசமுமருதும்வடமுமாதவியுமாதளமும்
குரவமுமிலவுந்திலகமும்விளவுங்கொன்றையுஞ்செருந்திலுங்குமிழு
மரசகாவலுந்தான்றியுமரிதகியுமாமலகமுகாந்தமுமாம்
பிரமுமேலமுஞ்சண்பகமும்வேழமுஞ்சம்பீரமுந்தழைந்துளவொருசார். (407)

இது மரமெனப் பொதுப்படக்கிடந்தவகைமுதல்களை யடைசினை புணராதெண்ணும்மைப்பட அடுக்கினதாம். துறை - நகரவாழ்த்து.

இந்தளமுகாரிகுச்சரிபௌளிமல்லமைசீராகம்வயிரவிதனுசா
கிரிவசந்தன்பழம்பஞ்சரங்கொல்லிமருளிந்தளஞ்சாதாரிசா
மந்தமல்லாரிபுந்நமுகாரியாரியவராடிகொல்லவராடிகை
ளமிராமக்கிரிகுறிஞ்சிகாம்போதிபூவாளிசௌராட்டகாட்டை

சென்றுருதியருமவதிதக்கேசிகௌடிகௌசிகமேகராக்குறிஞ்சி
செவ்வழிப்பாலைவிளரிப்பாலைசெம்பாலைசீகாமரஞ்சிகண்டி
யந்தாளிமலகரிகளுத்தைகாந்தாரமுரலளிசெறியும்வகுளமார்பு
னமலன்வருகனகதண்டிகைவாழ்வினைக்காணவாயிரங்கண்வேண்டுமே. ()

இது, பண் இராகமெனப் பொதுப்பட்ட வகைமுதற்பொருள்களை யடைசினைகூடாதடுக்கின வகைமுதலடுக்கு. பகுதி - பாடாண்சார்ந்த பொதுவியல். துறை - பவனிவாழ்த்து. (கூச)

உ௫-வது வகைமுதலடுக்கு முற்றும்.

---

## உசு-வது இணையெதுகையலங்காரம்.

———:(✓):———

180. வாய்ந்தயாப்பினுள்வருமிணையெதுகை
யாய்ந்தவெதுகையணியெனத்தகுமே.

(எ-ன்) வைத்தமுறையானே யிணையெதுகையலங்காரமுணர்-ற்று.

(இ-ள்) வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா, பரிபாடல், ஏனைப் பாவினமெனத் தோன்றப்பட்ட செய்யுளகத்துப் பெருக வரும் இணையெதுகைகளடையினையும் எதுகையலங்காரமென்று கூறவுந்தகு மென்றவாறு.

ள அடுக்கலுமென்னும் உம்மையைச் சிங்கநோக் காக்கி யதற்குமேலே புதியனவாகக் கூறியவற்றிற்கும், இதுமுதலாக முன்னர்ப் புதியனவாகப்புணர்த்தவற்றிற்கும், தகுமென்பதனை யாண்டு மேற்றிக்கொள்க. ஆய்ந்தவெனவே யிது வுந் தன்குறிப்பிடுதலென்னுந் தந்திரவுத்தியு ளடங்கும்.

கணையும்பிணையுங்கடுவும்வடுவு
மிணையொன்றியவிழியாரெய்தார்—துணைதனக்குத்
தானேயெனுமாயன்றண்காநுள்வேள்கணைக்கும்
யானேயிலக்காகுவேன். (409)

இஃ திணையெதுகையலங்காரம். இதனுள் வேள்கணைக்கும் என்றதனால் ஒழிந்தபடைக்கு மிலக்காயது பெற்றதாம். திணை - ஆண்பாற் கூற்றுக்கைக்கிளை. துறை-புணர்ச்சிபெறாதழுங்கல்.

ஆய்ந்த வெதுகை யென்றதனுன் மூவசைச்சீர்முழுதொன் றிணையெதுகையலங்காரமுமுள.

துடியிடையார்பிடி நடையார் துணைமலையாமிணை முலையா
ரடிபிடியாமடிபடியாவணைந்தழிசாந்தகலத்தாய்
வடிபுரைமாண்கருநெடுங்கண்மடநல்லார்நாடுகிவிப்
படியிரத்தல்பழுதொன்றாற்பற்றேலெங்கைத்தலமே. (410)

இது மூவசைச்சீர்முழுதோன்றிணையெதுகையலங்காரம். துணைமலையாமிணைமுலையாரடிபிடியாவென்பது உபயமலைபோலு முபயமுலையையுடையாராம் பரத்தையர்பாதத்தை நீ பிடித்தென்க. மடிபடியாவென்பது இடக்கர். அணைந்தழிசாந்தகலத்தாய் என்பது அதன்பின்னர் அவர்களைத் தழுவுதலாலழிந்த சந்தனத்தையுடையமார்ப வென்க. இப்படியிரத்தலென்பது இவ்வண்ணநின்று நீ பெம்முட்ன் குறையிரத்தலென்பதாம். பற்றேல் என்பது அல்லீற்றுவியங்கோள்வினைச்சொல்; அல்ஏலென ஈறுதிரிந்ததாம். பகுதி-பரத்தையிற்பிரிதல். துறை-பள்ளியிடத்தூடல்.

குயில்போன்மொழியுமயில்போல்விழியுங்
கொடிபோலிடையும்பிடிபோனடையும்
பயில்வோரரவிற்றுயில்வோர்மயிலைப்
பதியார்முகமாமதியார்முலைதான்
மயில்போலியலாள் பயலாகதியும்
மதியும்பதியுஞ்சடையார்விடையா
ரெயில்போர்பொருநாள்வளைவார்சிலையே
யெழில்வானுதலுப்புதலுஞ்சிலையே. (411)

இதனுள் நாலசைச்சீர்முழுதொன்றியதூஉங் காண்க. துறை-இயல்பிடங்கூறல். (திருப்பதிக்கலம்பகம்) (௩௫)

உ௩-வது இணையெதுகை முற்றும்.

---

பயல் - பாதி.

## உஎ-வது விரோதவலங்காரம்.

———(ௐ)———

181. சொற்பொருண்முரணத்தொடுப்பது விரோதம்.

(எ-ன்) வைத்தமுறையானே விரோதமென்னும் அலங்கார முணர்—ற்று.

(இ-ள்) சொல்லினாலும் பொருளினாலும் மாறுபாடுதோன்றப் புணர்ப்பது விரோதமென்னும் அலங்காரமாமென்றவாறு. (கூகூ)

182. அதுவே,
சொல்லும்பொருளுமொருமையிற்பன்மையிற்
றம்மின்முரணுஞ்சால்பொருநான்காய்ச்
சொல்லும்பொருளுஞ்சொல்லொடும்பொருளொடு
மொல்லுமுரணவினைரைந்தாகும்.

விரோ
வண

(எ-ன்) இதுவும் அவ்விரோதத்தினை விரித்துணர்—றறு.

(இ-ள்) அச் சொல்லப்பட்ட விரோதமென்னுமது, சொல்லொடும் பொருளொடு மொருமையிலும் பன்மையிலுந் தம்மிற்று மாறுகொள்ளு மொழுக்க மொருநான்காயும் அவ்விரண்டுஞ் சொல்லொடுபொருளும் பொருளொடுசொல்லும் விரவிப் பொருந்துபு மாறுகொள்வதோடு மைந் தாகு மென்றவாறு.

மெய்யுரைப்பாரென்பதுபொய்மெல்லியலாளின்றெண்மையும்
பொய்யுரைப்பாரென்றுபுகலுமே—வையாவி
லாடுந்திருமாலரங்கத்தேதேர்வலவா
வோடும்புயனமுந்துறின். (412)

இது சொல்லுஞ் சொல்லும் முரணியது. மெய் பொய்யென்பது பொருளின்றிச் சொல்லு முரணினமையானென்றறிக. "செவ்வி வாய்த்த செம்பாட் டீரத்து, வெள்ளைவெண்மதி" யென்பது மிது. அடிமுரண் பகுதி - பொருட்பிரிதல். துறை - பாகனொடுகூறல்.

செம்மையேனர்வெண்மையோராகித்திடனழிந்தோர்
தம்மையோர்கட்பாகச்சார்வரோ—வெம்மையோ
ராளாயுவந்தாரரங்கத்துளாயினுமுயாய்
வாளாதென்கண்புதைத்தவாறு. (413

இது பொருளும் பொருளும் முரணியது. என்னை? செம்மையோரெனவும், வெண்மையோரெனவு மிரண்டுயர்திணைப்பொருளுளவாய்த் தம்மின் முரணியதா லெனக்கொள்க. செம்மையோர் - அறிவுடையோர். வெண்மையோர்—அறிவிலாதோர். ஆளாயுவந்தான்—அடிமையாக ஆளுதற்கு விரும்பினேன். வாளாது - பேசாது. என்கண்புதைத்தவாறு - புறம்புல்கி எனது கண்களைப் புதைத்தபடி யாதுதா னென்றவாறு. பகுதி—பரத்தையிற்பிரிதல் துறை — நினைவறிகண்புதை. இஃதோராள ..ங்கண் ணிணைமுரணாயிற்று. இவையிரண்டு மொருமை.

வெந்தழலைத்தண்ணீர்மைமேதகுவெண்சாந்தமென
சந்ததமும்பூசுவதென்றையன்மீர்—பைந்துளபக்
கொத்தணிந்ததாரழகர்கூடாநாட்கண்பனிநீர்
முத்தணிந்தபொற்பூண்முலைக்கு. (414)

இது சொல்லும் பொருளுஞ் சொற்களோடு முரணின. என்னை? வெம்மை - வெப்பம். தனியேபொருளின்றிச் சொல். தழல் பொருள், ஆதலால் அவை சொல்லும் பொருளுமாம் தண்ணீர்மை: தண்மை— குளிர்மை. நீர்மை - நன்மை. இரண்டுந் தனியே பொருளின்மையாற் சொல்லாயிற்று. மேதகுவெண்சாந்து—பெருமைபொருந்தியவெண் சாந்து. கண்பனிநீர்முத்து — கண்கள்சொரியாநின்ற தண்ணீராகிய முத்து. திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - மெலிவொடு கூறல்.

கண்காலருவிகொடுங்கைம்மேல்வீழ்ந்தொழுகும்
பெண்காதனீக்கலார்பேதைமீர்—மண்காவல்
பூண்டவராமுன்னம்பொருகணைபாற்றேவியைமீட்
டாண்டவராம்பொருளாளர். (415)

இது பொருளுஞ் சொல்லும் பொருளோடு முரணின; என்னை? —ன் பொருள்; காலென்ப துறுப்பன்றி, உகுமருவியெனத் தனிநிற்கும் பொருளின்றிப் புனலினது கிரியையாதலாற் சொல். கொடுங்கை பொருளாதலானென்றறிக. திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை— கண்டுகைசோர்தல்.

கருவிடமும்வெண்மருந்துங்கைக்கொண்டகண்ணம்
பிருபுருவவிற்கிழிலகுர் — திருமகட்குக்
கற்றார்புகழ்மாறன்கார்வரைமேற்கோங்கரும்பு
முற்றாதபொற்பூண்முலை. (416)

இதனுள், சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணின. என்னை? கருவிடம்: கருமை சொல்; விடம் பொருள். வெண்மருந்து: வெண்மை சொல்; மருந்து பொருள் ஆதலால் அறிக. இதனுள், கைக்கொண்ட கண்ணம்பென்பனவும் அம்பு வில் என்பனவும் முரண். துறை - இயல்பிடங்கூறல்.

தம்பின்முரணுஞ் சால்பென்றதனால் இணைமுரண்முதலாகிய வெழுவிகற்பமும் ஒரு செய்யுளகத்துவரும் விரோதவலங்காரமும் உள. அவை வருமாறு:—

அறிவிலருணர்வுளரெனுமவாளவினி
லருவமொடொளிர்திருவுருவமதுடையனை
யெளியனைபடியவர்க்கேனையோர்க்கரியனைக்
கனவினுநனவினுமறிதுயிற்கண்ணும்
வெண்சங்காழிசெம்மணிப்பொன்முடி
காலையுமாலையுங்கண்டெண்பகலினு
மின்புறத்துன்பமற்றிம்பரொடும்பர்
நறவார்மலர்மகணாதனை
மறவாதவர்பதம்வழுத்துமென்னாவே. (417)

இதனுள் இணைமுரண்முதலாகிய எழுவிகற்பமும் முறையே வந்தவாறு காண்க. முரணுவது விரோதம். உலகத்துட் பொருளெல்லாம் காட்சிப்பொருளும் கருத்துப்பொருளுமமெனினும் ஈண்டுக் கருத்துப் பொருள் சொல்லாயிற்று. இதனுள் அறிவிலர் உணர்வுளர்-பொருளும் பொருளும். அருவமொடுருவம்-சொல்லொடுபொருள். ஒழிந்தனவும் மொழியினும் பொருளினும் முரணினவாறு கண்டுகொள்க. இணை-பாடாண். துறை-பழிச்சினர்ப்பரவல். (கஎ)

கஎ-வது விரோதம் முற்றும்.

---

(இ-ள்) காம்பனூருத்தமன்வாகனமாகவருகளிறே! நீ இவனைக் கொண் டலாவரும்பவனிகண் டிவன்மார்பத்தைவிரும்பின இவளை எய்வதற்குக் காமன்கைச்சிலையான கரும்பை உனது பனைபோன்ற கையினாற் பற்றி முன்னின்றுதின்பையெனில் இக் கரும்புபோன்ற மொழியினையுடையாள்மையலுந் தீரும், உனதுபசியுந் தீரும், ஆதலால்-இருதலைக்கும் இதுபோற் றெள்ளியசூழ்ச்சி பிறிதில்லை யென்றவாறு.

ஏகாரம் பிரிநிலையாதலாற் பிறிதுபாயமில்லையென்பதாயிற்று. திணை-பெண்பாற்பெருந்திணை. துறை—பவனிகண்டழுங்கிய பைந்தொடி தோழி இவளுயிர்தருகென ஏற்றம்வேண்டல். (கூஅ)

உஅ-வது உபாயம் முற்றும்.

---

உகூ-வது விசேடவலங்காரம்.



184. சாதிகுணந்தொழில்பொருளிடமுறுப்பென்
றோதியவிருமூன்றினுமுறுகுறைபட
லேதுவினதற்கதற்கிசைமேம்பாட்டா
னீதிகொள்புலவர்நிகழ்த்துதல்விசேடம்.

(எ-ன்) வைத்தமுறையானே விசேடமென்னும் அலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) சாதியும் குணனும் தொழிலும் பொருளும் இடனும் உறுப்பும் என்னும் ஆறினும் மிக்க குறையுண்டாதல்காரணமாக அதற்கதற்கிசைமேம்பாட்டானே இலக்கணநீதியுட்கொள்புலவர் கூறுவது விசேடமாம் என்றவாறு.

கொச்சைப்பொதுவர்குலச்சிறுவன்சிற்றடிமீ
திச்சைப்படுபார்த்தனிட்டமலர்—நிச்சயமாய்
முன்னுண்முடிக்கொண்டான்முக்கட்கடவுளா
மென்னுமுரைப்பெயிதற்கு. (420)

இது சாதிக்குறைவிசேடம். கொச்சை—ஆடு. நிச்சயம்—உண்மை. முடி—சடாமகுடம். இதற்கு—இப்பெருமைக்கு. என்னுமுரைப்பேம்—யாம் யாதுரைப்பேம்; என்பது ஆச்சரியம். துறை—கடவுள்வாழ்த்து.

வண்ணமகிழ்மாறன்வாய்மலர்ந்தநாண்மூரல்
வெண்ணிலவுசற்றேவிரியாமுன்—கண்ணகன்ற
தானமளவும்விரிந்தனவேதத்துவமெய்ஞ்
ஞானமெனும்வெண்ணிலா. (421)

இது குணக்குறைவிசேடம். மூரல்வெண்ணிலவு - திருமுத்தின் வெண்மை. கண்ணகன்றதானம் - பரமபதம். திணை - வாகை. துறை—சால்புமுல்லை.

தில்லைத்திருச்சித்திரகூடத்தான்றிருக்கை
வில்லைக்குனித்தருநாண்வீக்காமுன்—பல்பெரும்போர்
நாக்கினரென்னுஞ்சலநிருதர்மெய்புறநாண்
வீக்கினன்றென்றிசைவாழ்வேந்து. (422)

இது தொழிற்குறைவிசேடம். குனித்து—குனிக்க. அருநாண்—அருந்தவில்லாதவிற்சரடு. வீக்காமுன்—கட்டாதமுன். சலநிருதர்—தீய செய்கையுடைய அரக்கர். தென்றிசைவாழ்வேந்து - இயமன். திணை—வாகை. துறை - வில்வென்றி. போரான்முல்லையுமாம்.

உள்ளபடியேயுழக்கென்னுந்தண்டுலத்தால்
வெள்ளமெனவேவிருந்துறினு—நள்ளாணத்
தாவிதானன்புற்றமுதமைத்தாளவருக்குந்
தேவியாஞ்செல்வத்திரு. (423)

இது பொருட்குறைவிசேடம். தண்டுலம் - அரிசி. வெள்ளம்—வெள்ளம் என்னும் இலக்கம். நள்ளாணம்—நடுக்காடு. அமுதமைத்தல்—அசனம்நிறைத்தல். திணை—பொதுவியல். துறை—இல்லாண்முல்லை.

ஞாலந்தனிலடங்குமொருபுனிதப்
பாலன்பசித்தசிறுபண்டிக்கே—மேலைநாட்
பல்லண்டமாகப்பாரித்தபோண்ட
மெல்லாமடங்கிற்றெனும்.* (424)

இஃ திடக்குறைவிசேடம். புனிதப்பாலன் - அநிருத்தன். பாரித்தது - பரத்தினது. போண்டம் - அளவிறந்த அண்டம்; "பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே" என்பதனால் அறிக. எனும் - என்று புராணங்கள்கூறும். துறை - கடவுள்வாழ்த்து.

உறுப்புக்குறை 6.

கரமுஞ்சிரமுங்கணக்கின்றுரமும்
வரமும்வரம்பின்றரக்கர்—சரராமன்
றன்மானிடனிருகைசானகியைநீங்குதளர்
வானாகவும்வென்றனன். (425)

இஃ துறுப்புக்குறைவிசேடம். கணக்கின்று - எண்ணிறந்தன. அரக்கர் - மூலபலப்படை. தளர்வான் - தளர்ச்சியையுடையான். ஆகவும் வென்றனன் இத்தனையெல்லாம் உறுப்புக்குறைவுண்டாயிருக்கவும் வென்றான்! என்ன ஆச்சரியமோ என்பதாம். முன்னுள்ள இடக்குறை விசேடத்திற்கும் இஃதென்ன அகடிதகடிதசாமர்த்தியகுணமோ எனக் கூட்டுக. திணை - வாகை. துறை - போரண்முல்லை. (௬௬)

௨௬-வது விசேடம் முற்றும்.

## ௩௦-வது சமாயிதவலங்காரம்.

185. ஒருவினைமுயன்றதனுறுபயனமற்
றொருவினைதரவுறுவதுவேசமாயிதம்.

(எ-ன்) வைத்தமுறையானே சமாயிதமென்னும் அலங்காரம் உணர்—ற்று

(இ-ள்) முதலே ஒருவர் ஒருவினையை முயல அதனைச்செய்தற்குக் காரியத்தைப் பிறிதொன்றன்வினைதர அதுகாரணமாக அக்காரியத்தை யெய்துவது சமாயிதம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

ஊடினாளூடியபினுள்ளத்துவகையெழ
வாடினாள்வண்சுடர்தான்வாடையினால்—விடியதாற்
காதல்பொன்னாகங்கலந்தாளருள்கலப்ப
மாதவன்றன்மோகூர்மயில். (426)

இது சமாயிதம். இதன்பொருள் வெளிப்படை கூற்றான்விளங் பகுதி - பரத்தையிற்பிரிதல். துறை - துறைகூறல். (௧00)

௫0-வது சமாயிதம் முற்றும்.

---

## ௫௧-வது ஏதுவலங்காரம்.

:0:

186. ஏதுவென்பதிதனினிஃதாயதென்
றேதுவதாமெனவுரைத்தனர்புலவர்.

(எ-ன்) வைத்தமுறையானே ஏதுவென்னும் அலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) ஏதுவென்றுகூறப்படுவது இப்பொருட்டிறத்தினான் இதனிடத் திஃதுண்டாயதென்றுகூறப்படுவதாமென்றுகூறினர் அறிவுடையோரென்றவாறு. (௧0௧)

187. அதுவே,
காரகஞாபகமெனவிருகாட்சிய.

(எ-ன்) இதுவும் அவ்வலங்காரத்தின்கூறுபாடுணர்—ற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட ஏதுவெனத் தொகையானொன்றாய் நின்றவது காரகவேது ஞாபகவேது என இருவகைப்படுமென்றவாறு. (௧0௨)

188. அவற்றுள்,
முதலுமுதல்வனுங்கருவியுங்கருமமுங்
காலமுமிடனுங்கண்ணியநெறித்தாய்ப்
போக்கறுபொருளொடும்புகலிருமூன்றினு
மாக்கமுமழிவுமென்றமர்தருகிரித்தே.

(எ-ன்) இஃ தவ் விருவகையினுட் காரகவேதுவின்விரித்தொகை யுணர் - ற்று.

(இ-ள்) அக் காரக ஞாபக மிரண்டனுள் முதலேவந்த காரகவேது, முதல்வன்முதலாக இடமீறாகக்கூறப்பெறும் ஐந்தினோடுங்கருதப்பட்ட மார்க்கத்தையுடைத்தாகியும் குற்றமற்ற பொருளோடுங்கூடி யாறுமார்க் கத்தினு மாக்கமும் அழிவுமென்றுபொருந்தும் விரியையுடைத்தா மென்றவாறு. (கoகூ)

189 ஏவன்முதல்வனியற்றுதன்முதல்வனென்
றுவயின்வருமுதல்வனுமிரண்டாகும். கருத்தா உ.

(எ-ன்) இஃ தவ்வாறனுள் முதலே வந்த முதல்வன்கூறுபா டுணர்—ற்று.

(இ-ள்) அக் காரகவேதுவின்கண்வரும் முதல்வனும் ஏவன்முதல் வன் இயற்றுதன்முதல்வனென விருவாவரென்றவாறு.

முதல்வன் என்பவன் கருத்தா. முதல்வனுமென்றவும்மையாற் கருவியும் முதற்கருவியும் துணைக்கருவியுமென இரண்டாம். கருவி யென்பது காரணம். இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வருமாறு:—

சீதானோகாதனெனத்தேர்ந்துலவாப்பொன்னுலகை
யாதரவாற்றன்னுலகென்றாக்கினன்—மாதரா
யெங்கண்மாறன்குருகூரெம்பிரானின்னருள்கூர்ந்
தங்கண்ஞாலத்துதித்தேயன்று. (427)

இது கருத்தாகாரகவேது. திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப் பரவல்.

பல்வினைக்கைச்சானகிதோள்பைம்பொற்றடக்கையால்
வில்வினைத்துமேனுனின்மேவினன்—சொல்வினையா
மெய்ம்மாதவர்சேரிமேயவின்னகர்வாழ்
பெம்மானிமைபோர்பிரான். (428)

இது கருவிக்காரகவேது. சொல்வினையாமெய்ம்மாதவர்-உரை யுண்மையுடையமாதவர். கருவி-தடக்கை. இது முதற்கருவி. வில்லும்

காணும் முதலியன துணைக்கருவி. திணை - வாகை. துறை - வில்வென்றி. இவையிரண்டும் செய்வதன்றொழிலாக்கம்.

ஆழியுடையான்பொன்னாழிகொடுத்தேவ
வாழிகடந்தன்றடலனும—னாழி
யளித்தலிற்கைக்கொண்டணைத்தவாகம்போன்றுவி
தளிர்த்ததுவேசானகிக்குத்தான. (429)

இது கருமக்காரகவேது. திணை - பாடாண்சார்ந்தபொதுவியல் துறை கண்கண்டுகளித்தல். கருமம் - திருவடி திருவாழியைக் கொடுத்தலாற் பிராட்டி திருக்கைகொண்டணைத்தல். இதுவும் ஆக்கம்.

போற்றிப்படைத்தபொருண்மாறனன்பரையே
போற்றிப்புறத்தபொருளிரண்டும்—வேற்றுமையாய்க்
கொள்ளாதேமையுமுடன்கொள்கென்றெதிர்த்தவென
விள்ளாவிழிநீர்மிகும். (430)

இதுவுமது. புறத்தபொருளிரண்டும் என்பன அறனும் இன்பமும். கொள்கென் றெதிர்த்தவென விள்ளாவென்பது எம்மையுங் கைக் கொள்வாயாக எனப் படைத்தபொருளையுடைய காரிமாறப்பிரானன்பரை முயற்சியின்றி யெதிர்கொண்டன என யான் வாய்திறப்ப அக்காலத்து எ - று. விழிநீர்மிகும் - அன்பக்கண்ணீர் மிகாநின்ற வென்றவாறு. இதனுள், கருமம் வாய்திறப்ப என்றது. இது அழிவு. இவையிரண்டும் செய்விப்பதன்றொழில். பகுதி-பொருள்வயிற்பிரிதல். துறை-வாட்டங் கூறல். தலைவன்கூற்று

தோலாதமாவலிபாற்றொல்லுலகமூன்றுமிரு
காலாலளந்துமுனங்கைக்கொண்டான்—மேலாய
வத்தியூர்நின்றானடியார்தமக்கழியா
முத்தியூர்காட்டுமுதல். (431)

இதுவும் கருவிக்காரகவேது. இதன்பொருள் உரையிற்கொள்க.
வுள்வாழ்த்து.

பொறிவழிபோகாக்கும்புலனைத்தவித்த
வறிவழியாபோகமதனு—லெறிநினைவி

ராறன்றுயிலாயமர்ந்தானடிசேர்தன்
மாறன்றனக்கேவரும். (432)

இதுவும் கருமக்காரகவேது. ஆறன்றுயிலாயமர்ந்தான்' என்பது ஆலமரத்தைத் தான் றுயில்கொள்ளுந் திருவனந்தாழ்வானுகவைத் ததனிற் றுயில்விரும்பினு னென்றவாறு. ஆல் - ஆகுபெயர். திணை - வாகை. துறை - தாபதவாகை. இவையிரண்டும் செய்வதன்றொழில் ஆக்கம்; இவைநாலும் அடைவே எவற்கானத்தாவும் கருமக்கருத்தாவுமா மெனக்கொள்க.

4. காலக்காரக வேது

இமிழ்திரைநீர்ஞாலமிருள்விழுங்கச்சோதி
யுமிழ்கதிரும்புள்ளுமொடுங்க—வமிழ்தொத்
தருண்மாலையெய்தாதவர்மனம்போன்மாலு
மருண்மாலைவந்தென்மனம். (433)

இது காலக்காரகவேது. ஒடுங்க - அடங்க. மாலும் - மயக்கத்தை யெய்தும். மருண்மாலை - மயக்கத்தைத்தரும் மாலை. திணை - பெண் பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - மாலையம்பொழுது கண்டிரங்கல். 5.

இடக்காரக

சங்கனழியாத்தமனியநாடெய்தியதும்
பொங்குபுகழ்த்தாக்தன்புலவீர்கா—ளெங்கோனுஞ்
சோதிபதமெய்தியதுஞ்சொற்றமிழ்மாறன்னருள்கூ
ராதிநகர்த்தெய்வீகத்தால். (434)

இஃது இடக்காரகவேது. துறை - நகரவாழ்த்து. 6

பொருட்கா
வேது

நந்திபுரமறலேவகன்மாருதிகொளுத்தும்
வெந்தழலால்வெந்துவிளிந்ததே—முந்தைப்
பெருவானவர்வாழும்போறமும்பொன்றப்
பொருவானிலங்காபுரம். (435)

இது பொருட்காரகவேது. மாருதி - அநுமான். திணை வஞ்சி. துறை - உழபுலவஞ்சி. இது செய்விப்பதன்றொழில். இதற்கு மேலைச் சூத்திரத்துள்ளமுதல்வனை "ஏவன் முதல்வ னியற்றுதல் [illegible]" என்று ஒருபான்மேல் உயர்திணைசேர்த்துவைத்தாரேனும், "ஒருமொழி

யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால் ஐந்துபாலினுங் கொள்க. இவற்றுள் முன்னதும் பின்னதும் அழிவு. இடைநின்ற இடக்காரகவேது ஆக்கம்.

கற்பணிமேற்கொண்டொழுகுங்கடைப்பிடியார்வயிற்றிருநாண்
பொற்புறுமாற்றலிற்பொறித்தபொருவருசெவ்வணிநோக்கித்
தற்போதிவாட்டுறந்தகெழுதகைத்தாயபுனலூரா
னிற்புகலால்வெஞ்சினநஞ்சேனக்கூர்த்தமருணோக்க
முற்பலர்தெள்ளமிர்துயிர்த்தற்றொளிநிகழ்சீர்பயின்றனவே;

அதனொடும்,

அநகனிங்கெமையாணடருணமகிழ்மாறன்
புனல்வறங்கூராப்பொருநையுட்புரைதீர்
தினகரோதயத்திற்செவ்விபெற்றலர்ந்த
தண்மலர்புரைதகைத்தாரு
மொண்ணுதலரிவையுவகைவாண்முகமே. (436)

இது செய்வதன்றொழிற்கருத்தாகாரகவேது. பா - தாவு, தனிச் சொல், சுரிதகம் என்னும் மூன்றுறுப்பால்வந்த தாவுகொச்சகக்கலிப்பா. இதனுள் அழிவும் ஆக்கமும் முறையேநிகழ்ந்தமை காண்க பகுதி - பரத்தையிற்பிரிதல். துறை - முகமலர்ச்சிகூறல்.

புத்தேளிர்நிரப்பிகப்பான்பொருதிரைப்பாற்கடல்கடைந்து
மெய்த்தேவர்பெருமானும்வேங்கடத்தெங்கண்ணபிரான்
புராந்தருணன்மருந்திறுததபுலந்துவாத்துறந்திழைத்த
வரந்தருபெண்ணமிர்தாயிம்மடவரன்மென்றொடுறந்தே
யில்லறத்தின்றொடர்புடையோர்க்கின்பமுமாதுலர்க்கனிக்கு
நல்லறத்தின்றொடர்ப்பாடொனிதருஞ்செம்பொருளென்றே

(இது தாவு.)

ஒருதலைபெற்றனனுயுருப்பவிர்வெங்கடத்திடைப்போய்
வருபொழுதிற்பொருவறக்கூர்மணிநாவின்மம்மர்கோ
யருண்மடந்தையிலவிதழ்த்தெள்ளமிர்தருந்தத்துறந்தனவே

அதான்று,

வேணுதல்வன்பாற்கடத்தாரிடைவேனில்வெயிற் றுமையாள்
கோணுதற்கட்டழற்குளித்தமதனெனமெய்கூர்த்தநோய்
பானலங்கட்கிளிமொழிமெய்ப்பரிசத்தாற் றுறந்தனவே;

அதான்று,

உருவிலாவுருவிற்றூழுருளிலாமசாதத்தைப்
பருகுவான்புனலெனச்செல்பாலையுட்சார்ந்துளங்கொதிநோய்
திருமகளாற்பெறுமின்பத்திரையாடத்துறந்தனவே;

அதான்று,

வரையிருமருங்கினுமரியபவெவ்வட்டம்
புரைசுரத்தாரதர்ப்புக்குயிர்க்குறுநோ
யம்மென்சாயலணிமயில்பைம்பூட்
கொம்மைவெம்முலைக்குன்றிடைமுயங்கலி
னனவுகனவாகயந்துழி
நினைகலாநீளிடைநீத்தனவே. (437)

இஃ திடையிடை தனிச்சொற்பெற்றுத் தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் எனனும் நான்குறுப்பினோடு நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவிற் சிறிதுவேறுபட்டுவந்த சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா. இதுவும் கருவிக்காரகவேது. இதனுள்ளும் ஆக்கமும் அழிவும் கூடிவந்தமைகாண்க. பகுதி—பொருள்வயிற்பிரிதல். துறை—உண்மகிழ்ந் துரைத்தல். (௧௦௪)

ஞாபகவேது.

190. வினையதொன்றுவெளிப்படமற்றது
தானுணர்விற்புலப்படுந்தன்மையதாய்க்
காரணகாரியந்தாமுறழ்ந்துணர்த்துஞ்
சால்பினுநடைபெறுஞ்சாற்றுங்காலே.

(எ - ன்) கருத்தாமுதலாகப் பொருள் ஈறாகக் கூறப்பட்ட அறு வகைப்படுங் காரகவேதுவினையுணர்த்தியொழிந்த ஞாபகவேதுவுணர்த்துவான்றொடங்கி அதன் பொதுவிலக்கணம் உணர் - ற்று.

(இ - ள்) காரகவேதுவொழிந்த ஞாபகவேதுவென்னுமது ஒன்று வெளிப்பட்டு வெளிப்படாததொன்றையறிவிப்பதுவாய்க் காரணகாரியங்கண்மாறியுணர்த்துமொழுக்கத்தினுங்கூடிநடைபெறுங் கூறுமிடத் தென்றவாறு.

காரகம் ஞாபகம் என்பது முறையே செய்விப்பதும் அறிவிப்பதுமா மாதலால், காரண காரிய முறழ்தலாவது புகையுண்மையால் அதன்கீழ் எரியுண்மையை எரியினது காரியமாம்புகை அறிவித்தலெனவுணர்க ()

191. எய்தியவின்பந்துன்பமிவற்றிற்
கையமில்பான்மையாக்கமுமழிவும்.

(எ-ன்) இதுவும் அவற்றிற்கோர்புறனடையுணர் - ற்று.

(இ-ள்) இங்ஙனங்கூறப்பட்ட காரகம் ஞாபகம் இரண்டிற்கு மாக்கமும் அழிவுமெனறுகூறப்பட்டன• அவவேதுக்களாலெய்தும் இன்பந் துன்பங்களாமென்றவாறு.

காரண ஞாப ஏது.

அணியாமென்றேனுமயில்விழியுஞ்சறதுங்
தணியாதிடந்துடிக்குஞ்சால்பான்—மணிமாடக்
கோயிலார்வெற்பிறகொடியிடையாய்வைகறைநம்
வாயிலாங்காவலர்தேர்வந்து. (438)

இது காரணங்கணடு காரியமபுலப்பட்ட ஞாபகவேது. பகுதி-வரைபொருட்பிரிதல். துறை-ஏதுக்காட்டி வருத்தந்தணித்தல். தணியா தென்றல்—இடைவிடாதென்றல். ஒழிந்தஅகலம் உரையிற்கொள்க.

காரிய ஞாபக ஏது.

காவிநெடுங்கண்சிவப்பக்கர்மருசெவ்வாய்விளர்ப்ப
வாவிதளிர்ப்பதுவுமன்றியே—யோவியமே
வண்ணக்தனில்வெயர்ப்புமாறனூர்பூஞ்சிலம்பிற்
றண்ணஞ்சுனையேதரும். (439)

இது புணர்ச்சியாலுண்டான தோற்றப்பொலிவாங் காரியம் ஞாபகவேதுவாய்ப் புணர்ச்சியாகிய காரணத்தை யறிவித்தது. பகுதி - களவு காட்டம். துறை - புணர்ச்சியுரைத்தல். (௪0௯)

ஞாபகஏது வின் வகை 4

192. இருளறவறிவிப்பனவாமேதுவும்
பொருளிடம்வினைபண்பவற்றெடும்புணரும்.

(எ-ன்) இது ஞாபகவேதுவின்கூறுபா டுணர் - ற்று.

(இ-ள்) முற்கூறிய ஞாபகவேது என்பதும் பொருள், இடம், வினை, பண்பு என்னும் நான்கினோடும்பொருந்துவனவாம் என்றவாறு.

தேக்குகதிர்வெய்யோன் றினமும்பகனுடிப்
போக்குவரவுபுரிதலாற்—காக்குந்
திருநாரணனுளனுஞ்செம்மையுணர்வித்தான்
குருநாதனுகியவெங்கோன். (440)

இது பொருண்ஞாபகவேது.

(இ-ள்) .லகமெங்குந்நிறைக்குங்கிரணங்களையுடைய ஆதித்தன் பகல் இரவு என்னும் பொழுதிரண்டினுள் இரவின்கண்மறைந்து பகற் பொழுது ஒருகணமு மேறாது குறையாது விதித்தநாழிகையுள் ஒடுங்கி மீளவுங் காலையிற்றோன்றினுகலான் நாராயணனென்று ஒருபானுளனென்பதையும், அவனியமித்தபடி இக்கதிரோன் நடவாநின்றுனென்பதையும் குருநாதன் ஏதுக்காட்டி யெமக்கு அறிவித்தானென்றவாறு.

இதனுள், பொருளாகியஞாபகம் ஆதித்தியன். திணை – வாகை. துறை–அறிவன்வாகை; திணை–பாடாண்........குரவனைவாழ்த்தலுமாம்.

ஓங்கொலிநீர்ஞாலத்தையுண்ணுதுயக்கோடல்
பூங்கமலவுந்தியுடைப்புண்ணியன்ற—னீங்காத
வாச்சினைகாணென்றேயறிவித்தானரியனும்
கோச்சரிதைநீங்காக்குணன். (441)

இஃ திடஞாபகவேது. இதன்பொருள் மேலையதுபோலக் குறித் துணர்ந்துகொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும். துறை–இதுவுமது.

மூன்றெருகைக்குஞ்சரமாய்முரிப்பிணையாகி
மின்னிடையெங்கென்றுவினையதாற்—றென்னனந்தை
மால்வரைமேலின்றிவர்தம்வாய்மையெலாம்வஞ்சமெனச்
சால்புடையநெஞ்சேதரி. (442)

இது வினைஞாபகவேது. அஃதென முனையவிரண்டு மிது போலப் போக்குவரவுபுரிதலும் உண்ணுதலுங் கிரியையாயன்றே ஞாபகவேதுவாயதாதலால் அவற்றையும் வினைஞாபகவேதுவென்னுத

தென்னையெனின்? அஃதே, நன்றுசொன்னாய்! அவை கிரியையே யாயினும் பொருளோடும் இடத்தோடும் சார்ந்திக்கொள்ளநின்றனவாத லாற் பொருளும் இடனும் வசனமின்றி ஞாபகவேதுவாயிற்று. இஃ தன்னதன்று. வசனமாகியகிரியை ஞாபகவேதுவாயிற்று; என்னை? மின்னிடையெங்கென்ன அயல்படவினையதாலென்றறிக. அன்றியும், காரகவேதுவிற்கும வினைகூடாதே யேதுக்கள்கூடாதெனவுணர்க. இதன் பொருள் உரையிற்கொள்க. பகுதி-இருவருமுளவழியவன்வரவுணர்தல். துறை—அறிவுநாடல்; அயல்படவினைதலுமாம்.

ஆய்ந்ததமிழ்மாறனணிவரைமேலின்றொருவர்
பூந்தழைகொண்*டொன்றுபுகலாமுன்—வாய்ந்த
புதுமலர்ச்சிகொண்டதிந்தப்பொன்வதனமென்று
னொதுமலர்மேலானதிவணோக்கு. (143)

இது பண்புஞாபகவேது. வாய்ந்தபுதுமலர்ச்சியென்பது உள்ளக் குறிப்பைத்தோற்றுவித்த புதிதாயமலர்ச்சி யென்றவாறு. நொதுமலர்—அயலாவார். நோக்கு - உள்ளக்குறிப்பு. பண்பு - முகமலர்ச்சி. பகுதி—குறையுறவுணர்தல். துறை - அவள்குறிப்பறிதல்.

ஆக ஞாபகவேது பொருள் முதலாகப் பண்பு ஈறாக நான்கும் அடைவே கண்டுகொள்க. அவற்றொடும்புணரும் என்ற வும்மையாற் பிறவிடங்களோடும் வருவனவும் உள. அவையும் வந்தவழிக்கண்டு கொள்க. (கoஎ)

193. இன்மையுமதன்கணெய்துதலுரித்தே.

(எ-ன்) இதுவும் அவ்வேதுவினை விரித்துணர்—ற்று.

(இ-ள்) இல்லாததன்மையவும் ஆகிய அவையும் அவ்வேதுவின் பாற்பொருந்துதற் குரித்து என்றவாறு.

இன்மையென்பது ஒன்றின் இல்லாமை. தண்டியாசிரியர் அபாவ மென்பதும் இது. (கoஅ)

194. அதுவே,

ஒன்றினொன்றின்மையுள்ளதனின்மை

டென்று - பிரதிபேதம்.

இன்மையின்வரி 5

யென்றமின்மையிரேடின்மையினின்ம |
யழிவுபாட்டின்மையோடைந்தாகும்மே.

(எ-ன்) அவ் வின்மையை விரித்துணர்—ற்று.

(இ-ள்) அவ் வின்மையென்னுமது, ஒன்றின்கண் ஒன்றினதின்மையும்,| ஓரிடத்தும் ஒருகாலத்தும் உள்ளபொருள் பிறிதோரிடத்தும் பிறிதோர்காலத்தும் இன்மையும்,| எக்காலத்தும் இன்மையும்,| இன்மையான் இன்மையும்,| முன்புள்ளது அழிவுபட்டின்மையும் | என்பதனோடு ஐந்தாகும் என்றவாறு. இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வருமாறு:— |

ஒன்றினொன்றின்மை

புல்லறிவாளரைப்புல்லாரிஞாப்புல்லறிவு
நல்லறிவாளர்தமைக்குறுகாமறைநாலினுட்பச்
சொல்லறிவாற்றமிழ்தேர்மாறனன்னகர்ச்சூழ்பொருட்குச்
செல்லறிவாளர்சொற்கோடாதழுங்கலொண்சேயிழையே. (444)

இஃ தோன்றினொன்றின்மை; என்னை? ஒன்றின்கண் ஒன்றின்மையும் அதன்கண்ணும அஃதின்மையுமாயினமையான் அறிக. சூழ்பொருள் - அறனும் இன்பமும் தருமென விசாரித்தபொருள். பகுதி— பொருள்வயிற்பிரிதல். துறை - பருவநினைந் தாற்றளாயதலைவியைத் தோழி வற்புறுத்தல்.

2. உள்ளதனின்மை.

இன்றிருந்துநாளேயிறப்போர்பெயரினையு
மன்றதொறுமேந்திமறுகினவே—பன்றொருகாற்
சேமந்தரித்ததிகிரித்திருமலையா
ளுமந்தரித்தறியாரா. (445)

இஃ துள்ளதனின்மை. என்னை? இவ்வுலகத்து இப்பொழுதினுள்ளகிரியையானது முற்பிறப்பில் ஒருகாலத்தும் இல்லாதகிரியையை யறிவிப்பதாலென்றறிக. திணை - பாடாண்சார்ந்தபொதுவியல். துறை— பாவார்ப்பழித்தல்.

3. என்றுமின்மை

கள்ளார்பசுந்தண்டுழாய்மாதவன்கழலைச்சிலம்பி
லுள்ளார்பிறதெய்வமென்றமுள்ளாரென்பதுள்ளிலடுத்

தள்ளாமறலிதன்றூ தரைக்கவித்தடியர்வரி
னெள்ளாதிறைஞ்சியயற்போமினென்னுமிரங்கிரங்கே. (446)

இஃ தென்றுமின்மை ; என்னை ? திருமால்கடிகைச்சிலம்பினுள்ளா ராகியதொண்டர், பிறதெய்வம் என்றும் உள்ளாராயினாராகையால் அவர் இன்றும் உள்ளாரென்பது தொனியினாற்கொள்ளக்கிடந்தமையின், என்றுமின்மையாயிற்று. இதற்கு என்றுமுள்ளித்தொழுரென்பது இன்று முள்ளித்தொழாரென்பதறிவித்தற்கு ஏதுவாயிற்று. திணை இதுவுமது. துறை - பழிச்சினர்ப்பரவல்.

4\. கல்லாற்கடலடைத்தகண்ணன்பேர்கல்லாநா
ளில்லாதவர்க்கினிமேலில்லையே—நல்லார்கள்
சூழ்ந்தேதுதியமிர்திற்றேய்வதல்லாற்றீநரகில்
வீழ்ந்தேபதைக்கும்விதி. (447)

இஃ தின்மையினின்மை; கண்ணன்பேர் இச்செனனத்துக் கல்லா நாள் இல்லாதவர்க்கு மேல் எரிவாய்நரகத்துவீழ்ந்து பதைப்பதில்லாததி னால் அறிக. நல்லார்கள்சூழ்ந்தேதுதியமிர்தம்—பரமபதம். திணை—இது வுமது. துறை-ஓம்படை. ஆதலாற் றொண்டர்காள்! இக்காயம் இருக்கப் பெற்றபொழுதே அவன் திருநாமத்தை வீழ்நாள்படாமைச் சொல்லுவீ ராக என்பது பயன்.

5\. மானிடரைவாழ்த்துமதியின்மைதீர்ந்ததற்பி
னீனநிலைதீர்ந்ததெனைவிட்டே—போனதற்பின்
மன்னெறியேநின்றுமகிழ்மாறனுரைத்து திக்கு
நன்னெறியேபெற்றனனன்று. (448)

இஃ தழிவுபாட்டின்மை ; என்னை ? மானிடரை உண்டிப்பொருட் டால் வாய்மையிழந்துவாழ்த்தும் அறியாமை யென்னிடத்தில் [illegible]பான தேதுவாக வென்னிடத் தீனமென்றிகழப்படும் இரப்பென்பது என்னை விட்டுநீங்கியது; நீங்கியபின்னர் நிலைபெற்றமார்க்கத்திலேநின்று காரிமாறப்பிரானைவாழ்த்தும் நல்லமார்க்கமேபெற்று வாய்மைபடைத்தது எனது நன்று என்றதனால் அறிக. திணை-வாகைசார்ந்தபுறத்திணை(யுள்) துறை - புலமைவென்றி. இன்மையதேதுவைந்தும் அடைவே காண்க. இவையும் ஞாபகவேதுவின்பாற்படும்,

195. காரியமுந்துறுகாரகக்காரண
காரியமொருங்குறுகாட்சியுத்தமு
மயுத்தமுமெனமேலனைந்ததோடொன்றாம்.

(எ-ன்) இது மேலேகூறிய காரகவேதுவைப் பிறிதொருவகை யான் வகுத்துணர் - ற்று.

(இ-ள்) காரியமுந்துறுகாரகம் முதலாயநான்கும் ஒருவகைக்காரக வேதுவின்பாற்படு மென்றவாறு.

பொன்மேதருநற்பொருளென்றேதேர்ந்துரைக்கு
முன்னேநெடுமாயன்மோகூர்வாழ்—மின்வாடைத்
தண்டுளிவந்தாற்றணந்தார்தம்முயிரையுண்குமெனக்
கண்டுளியாநொந்தனளாகம். (449)

இது காரியமுந்துறுகாரகவேது. இதனுள், தேர்ந்துரைக்குமுன்னே யென்றது தேர்ந்துரைக்கும் உரை கூடுமுன்னேயென்றவாறு. தணந் தார்—தலைவரைப்பிரிந்தார். கண்டுளியா—கண்ணீரைத்துளித்து. பகுதி—பொருட்பிரிதல். துறை - வாட்டங்கூறல். தலைவன்கூற்று. தோழி முன்னிலை.

தெண்முத்தமிழ்மாறன்றென்குருகூர்ச்சேயிழைக்குன்
உண்முற்றியபோக்குணர்த்துரையிற்—கண்முத்
துடனேவரு,மென்றுலொண்பொருட்குமேகல்
கடனேயிறைவாகழறு. (450)

இது காரணகாரியம் ஒருங்குநிகழ்வேது. உண்முற்றியபோக்கு— உள்ளமொருமித்தசெலவு. கண்முத்து - கண்ணீர்த்துளியாகியமுத்து. உடனேவரும் - ஒக்கவரும். ஒண்பொருட்குமேகல் - ஒள்ளியபொரு ளாயினும் அதற்குப் பிரிதல். கடனேயென்றது முறையன்றென்றவாறு. ஏகாரம் - எதிர்மறை; ஒழியிசையெனினுமாம். உம்மை - சிறப்பும்மை. பகுதி - இதுவுமது. துறை - ஆற்றுமை கூறிச் செலவழுங்குவித்தல். தோழிகூற்று.

மாயிருஞாலந்தழைப்பவாசமகிழ்மாலை
ஞாயிறுமெய்வேதலன்சிறந்த—வாயிரப்பாத்

தூயகதிர்விரித்துத்தோன்றலாற்றொண்டரகத்
தாயவிருடீர்ந்தன. (451)

இது, யுத்தவேது. இதனகத்து உருவகவாய்பாடும் விரவிவந்தவாறு காண்க. அவை மகிழ்மாலைஞாயிறு, ஆயிரப்பாத்தூயகதிர், தொண்டரகத்தாயவிருள் என்பனவாம். இவற்றுள் முதலும் ஈறும் ஏகதேசவுருவகம். மகிழ்மாலைஞாயிறு — மகிழ்மாலைமாறனாகிய ஞாயிறு. அகத்தாயவிருள் - அறியாமையாகியவிருள். துறை - பழிச்சினர்ப்பாவல்; கடவுள்வாழ்த்துமாம்.

நற்பால்விழைந்தபுகழ்நாவீறன்மெய்வேத
மூற்பாடல்வாய்மைமுழுதடக்குஞ்—சொற்பா
வுரைமலர்ந்ததூய்மதியாற்கற்றோருளத்தா
மரைமலர்ந்தமன்னோமகிழ்ந்து. (452)

இஃதயுத்தவேது. இதனுள் நற்பால்விழைந்தபுகழ் நாவீறனென்பது நல்லறத்தின்வழியொழுகினோர்விரும்பப்பட்ட நாவீறுடையபிரான் எ-று. நற்பால்—ஆகுபெயர். சொற்பாவுரை கீர்த்தியோடுகூடிய பாக்களாற்றோன்றினநூல்; அது திருவாய்மொழி. தூய்மதியாலென்பது திருவாய்மொழியினிடத்துப் பாந்த தூயஞானமாகியமதி உதித்தலால் எ-று. கற்றோருளத்தாமரை மலர்ந்தமன்னோ மகிழ்ந்து என்பது கற்றுவல்லோர் இதயதாமரை மிகவும் மகிழ்ச்சியோடு மலர்ந்தன எ-று. துறை - பாடாண்சார்ந்தபுறத்திணையிற் பனுவல்வாழ்த்து. (கக0)

196. உணர்வுறினையவேதுவுமுளவே.

இதுவுமது.

(இ-ள்) அவ்வேது ஐயவேதுவினும் வருவதுண்டு என்றவாறு.

வெயாவிசைதந்தமால்பரமேச்சுரவிண்ணகர்வாய்த்
தோயாதாவுற்றுணைப்பிரிந்தாலினித்தோயுந்தன்மை
பேயாதெனநினைந்தோரெடிதாமெல்லையெய்துமின்
மாயாப்பழியெய்துமென்றோகைநின்றதுவாறுதலே. (453)

இஃது தையுறவேது. இதனுள் இனிப் புணர்ச்சிகூடுதல் பொருந்தாதெனவிசாரித்தோ, அல்லது (நெடிதாமெல்லையெய்துகில்-) நெடும்பொழுதெய்துமாகில் (இன்மையாப்பழியெய்துமென்றே-) நமது குடிக்கு நீங்காத அவகீர்த்தியுண்டாமென்றே (நைகின்றது வாணுதலே-) இவ்விரண்டினுள் வருந்துகின்றதற்கேது யாதுதான் என்றவாறு. பகுதி - இயற்கை. துறை - பருவாலறிதல். (கககக)

ரூக-வது ஏது முற்றும்.

---

## ரூஉ-வது சுவையலங்காரம்.

———:(ⵔ):———

197. பொறியுணர்வொடுமொருபொருளினையெதிர்ந்த
நெறியுடைமனத்துணிகழ்தரும்பான்மை
யயலவருறப்புறத்தாய்ப்பொருளெட்டி
னியல்வதுசுவையென்றியம்பினர்புலவர்.

(எ-ன) வைத்தமுறையானே சுவையென்னுமலங்காரம் உணர்-ற்று.

(இ-ள்) இந்திரியங்களினறிவினோடும் யாதானுமொருபொருளைக் காணப்பட்டமனததுள் அப்பொருள் ஏதுவாகநிகழ்ந்ததன்மை நிகழ்ந்த வாறே புறத்தார்க்குப்புலப்படுவதோராற்றான வெளிப்படு மெய்ப்பாடெட்டாற் றோனறுவது சுவையெனனும அலங்காரமா மெனறவாறு.

பொருளென்பது மெய்ப்பாடு. இயல்வது - உண்டாவது. பொரு ளெட்டின் இயல்வது சுவையென்பது பொன்னினியன்றகுடம் என்பது போலக்கொள்க. (ககஉ)

198. அவைதாம்,
பெருமிதநகைமழுகைபிளிவர
லுருத்திரநகையியப்புவகையென்றாகும்.

(எ-ன) மேற் பொருளெட்டின் இயல்வது என்றார், அவ்வெட்டும் இவையென்பது உணர் - ற்று.

(இ-ள்) பொருளெட்டென்னும் அவைதாம், பெருமிதமுதல் உவகையீறும் இவ்வெட்டுமாம் என்றவாறு.

பெருமிதம்.

திருமால்பரனெனவேதேற்றுதற்கன்பாக
வருமாரியன்றனையிம்மண்மேற்புலவீ
ரொருமானிடனென்றுணராதவனெம்
பெருமானுமென்றுணர்ந்தப்பெம்மானருள்கூர்
பத்தர்தம்மடியிணைபரவுமினதுவே
யுத்தமவிலக்கணமுரைசான்
முத்தியைவிளைக்குமுயற்சியுமஃதே. (454)

கல்வி இது கல்விபற்றியபெருமிதம். பா - மருட்பா. திணை - பாடாண். துறை - செவியறிவுறூஉ; ஓம்படையுமாம்.

நாராயணனேநமவென்றுரைப்பவர்பால்
வாராவொருநாளும்வல்வினைகள்
சாராரொருநாளுஞ்சண்டதான்சாராவாம்
போரதமாயப்பிறப்பு. (455)

இதுவுமது. என்னை? "கல்வி தறுகணிசைமை கொடையெனச், சொல்லப் பட்ட பெருமித நான்கே" என்பதனால் அறிக. பா - "வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்" என்ற செய்யுளியற்சூத்திரத்துள் வெண்பாவிற்கு ஈறுணர்த்தப்புகுந்து முச்சீர்த்தென்னாது ஆகும் என்று ஆக்கங்கொடுத்தமையான் அத்துணை ஆக்கமின்றி இடையினும் முச்சீராய் அவ்வீற்றுச்சீர் அசைச்சீராகாது வருமென்றுட்கொண்டுணர்த்தினார் தொல்லாசிரியர்; அங்ஙனம் தனிச்சொல்லுமின்றிவந்ததோர் வெண்பாவில் விகற்பமாம். இங்ஙனம்வருவதனை அதன்பின்னர் வரும் ஒருசாராசிரியர் சவலைவெண்பாட்டென்றும் பெயரிட்டுவழங்குவதாம்; என்னை? "தனியிரு குறள்ராய் நான்கடி யுடைத்தாய்த், தனிவா[illegible]க சவலைவெண் பாட்டே" என்பதனையும் உணர்க.

தறுகண் கிலாலங்குளிறுதிரைகெழுகடன்முற்[illegible]ஞாலத்
தாலாலமிசைபவளவருவரையுங்கருவ[illegible]யுந்
தமிதமியென்னதுவெனலாந்தவலருமாண்டொழிற்றன்மை
யெமதெமதென்றெதிருநரின்னுயிர்செகுத்தீத்திருநோக்கிற்
கடைசிவந்துகருமையவாய்க்கவின்பெறுவார்குழைபோழ்ந்த
வடிபுரைமாண்மதர்மலர்க்கண்மதி[illegible]ரைவாணறுநுதாஅல்;

இடந்தழுவுங்குனிசிலைக்கையிகன்மறவர்கொடுங்கணையோ
டடன்றெழிலென்சுடர்வடிவேற்குணவாதலொருதலையாற்
றொடர்ந்தெழுநின்றமரேற்செண்பகமாறன்றுணையடிசேர்
திடந்தழுவுதகியனெனத்தெருளுறுமன்கருளுவனே ;

வாட்டானைத்துறுமறவர்வயிரவழுற்பிழம்புருகட்
கோட்டானையுடன்வரிலென்கூரிலைவேலவர்மார்பிற்
றீட்டானைவினையளிப்பனுமரேற்றிவ்வியதுளபத்
தோட்டானைததொழுமாறன்றொண்டரினன்கருளுவனே;

குளிர்மதிவானகடுரிஞ்சுங்கொடித்தேரின்குழுவினொடு
மொளிதிகழ்வன்படைமறவருடங்கெழின்வைந்நுதிவேலாற
களிபயில்வெந்தொழில்புரிவனுமரேல்வண்கருணைச
னளிதிகழ்தேமகிழ்மாறனடியரினன்கருளுவனே ;

எனவாங்கு,

காணுதிகாணுதிகனலிதெற்கெழினுந்
தாணுவினிலைதவறினுநதவறுவுரை
குன்றுசூழ்கூர்ம்பாற்கொடுகெறிக்
கொனறுமீயழுங்சஞ்ருறலேகுதியே. (456)

இது தறுகண்மைபற்றியபெருமிதம். பகுதி – உடன்போக்கு. துறை – அடலெடுத்துரைத்தல்.

கொன்றேன்கொடுவினையைக்கூற்றுவனாட்டமெலாம்
வென்றேனினிநரகில்வீழ்கலேன் — சென்றுமறை
தேடிப்பிடித்ததிருமாலேதெய்வமென
நாடிப்பிடித்ததனான். (457)

இதுவும் தறுகண்மைபற்றியபெருமிதம். திணை–வாகை. துறை–சால்புமுல்லை.

இசைமை

அரியாயவன்பானுமென்பதாதுயிலன்றழைத்த
கரியாதுமுண்மைபுறாரிதென்னேகற்றுணர்ந்துசெம்பொன்
உரியார்கடைசென்றிரப்பவரோடொன்றெனவெணயுஞ்
சிரியாதருள்செய்தலாமகிழ்மாலிகைத்தேசிகனே. (458)

இஃது திசைபற்றியபெருமிதம். திணை — வாகையைச்சார்ந்தபுறத்திணை. துறை - புலமைவென்றி.

*அன்றுதரவிற்கரிசொன்னகாரணகேசன்வெற்பி*
*னின்றுதைசொன்னநிதியமெல்லாமுமபர்நீடுசெம்பொற்*
*குன்றுமெனக்கொணர்ந்துய்ப்புன்பின்னேயின்பக்கொம்பின்செவ்வி*
*பொன்றுதிங்கவ்வளவுய்க்கொள்வதாநின்புகழென்பதே.* (459)

கொடை இது கோடைபற்றியபெருமிதம. பகுதி - வரைபொருட்பிரிதல்.
2 துறை - பொருட்பிரிவுணர்த்தல்.

அச்சம் *கூற்றங்கொடிதென்றுணர்ந்துங்கொடுநாகை*
(நடுக்கம்) *மாற்றுந்திறந்தெரிந்துவாய்மைபா—னோற்பதற்கிங்*
*கென்னறிவொன்றின்றலினியாங்கத்தெம்மானே*
அணங்கே *யுன்னருளுண்டாமாகிலுண்டு.* (460)

இஃது தணங்குபற்றிய அச்சம்; கூற்றும் அணங்கேயாதலின், "அணங்கே விலங்கே கள்வர்தம மிறையெனப், பிணங்கல் சாலா வச்சநான்கே" என்றாகலின். மாறறுந்திறந்தெரிந்து - நீக்குங்கூறுபாடறிந்து நோற்பதற்கிங்கென்னறிவொன்றின்றால் - நல்ல நோன்புகளை நோற்பதற்கு எனக்கெனச் சிறிதும் அறிவில்லையாகையால். இனியாங்கத்தெம்மானே யுன்னருளுண்டாமாகிலுண்டு - இனி உனது திருவுள்ளக் கருணை உண்டாமாகில் யமனகையில் அகப்படாமல் முத்தியைப்பெறுதல் உளதாம் என்றவாறு.

*வெறியாலிம்மம்மர்நோய்மீளுகிலென்மீளா*
*நெறியாலென்னாயினெஞ்சே—குறிதாய*
*கன்றால்விளவின்கனியுதிர்த்தோன்காட்கரைவா*
*யொன்றுலும்வாழாதுயிர்.* (461)

இது, பிறர்கட்டோன்றிய அணங்குபொருளாகப்பிறந்த அச்சம். நடுக்கமென்பதும் இது.

(இ-ள்) நெஞ்சமே! மருந்துபிறிதில்லாப் பெருந்துயரிழைக்கும் இக்காமமாகியபிணி வெறியாடலாற்றீருமேயென்னில் அது தலைவர்க்கு எம்மிடத்துண்டாகிய அன்பினைக் கெடுக்கும், தீராதிடில், இஃதியாதென

அன்னையர் எமது காவினை யாராய்ந்தறியப்படு மாதலான் இருவழியானும் இவ்வுயிர் வாழா தென்றவாறு; ஆதலான் மீளிலென் மீளாவிடிலென் என்பதாயிற்று. விளவின்கனியுதிர்த்தான்—வினைப்பெயர். பகுதி—வரைபொருட்பிரிதல். துறை—இன்னலெய்தல். அணங்கொழிந்தமூன்றும் வந்தவழிக்காண்க. அவையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். 3. அழுகை.

சோலைமலையழகர்தோண்மாலைகாமுறுமுன்
மாலையாயாமமாய்வைகறையாயல்கிரவின
-றென்னேநீட்டித்ததெவன். 462)

இது, தன்கட்டோன்றிய வறுமைப்பொருள்பற்றிவந்த அழுகை; என்னை? "இளிவேயிழவேயசைவேவறுமையென, விளிவில் கொள்கையழுகை நான்கே" என்றாராகலின். வறுமையென்பது இச்சித்தபோகந் துய்ப்பப்பெறாத பற்றுள்ளம். திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - இரவினீடுபருவரல். பா - இரண்டுவிகற்பத்தின்னிசைச்சிந்தியல் வெண்பா.

அருணோக்கிறைபிறழிலார்பிரிவென்றுந
மருணோக்குறலறிந்துமன்னன்—பொருணோக்குற்
றேறுவானவங்கத்தென்றெங்கண்மால்வெள்ளறைவாய்க்
கூறுவாளிற்கொடிதோகூற்று. 463)

(இ-ள்) அருணோக்கு - அன்புறநோக்கு. இறைபிறழில் -சிறிதுமாறில் ஆர்பிரிவு - நெடும்பிரிவு என்று - என்றுகருதி. ஆனமருணோக்குறல்............கூற்று - நீங்காத எனதுள்ளம் மருணோக்குமிகுதியைத் தனதுள்ளத்தால் அறிந்தும், நமதுமன்னன் பொருண்மேலன்புற்று முந்நீரிடத்து வங்கத்துச்செல்வானென்று எம்முடைய திருமால் திருவெள்ளறையிடத்துக்கூறுவானைப்போலக் கொடுமையுடையதன்று கூற்ற மென்றவாறு.

ஓகாரம் ஒழியிசை. இது, அசைவுப்பொருள்பற்றிவந்த அழுகை; என்னை? பண்டைநிலைமைகெட்டு வேறொருநிறத்தளாகிவருந்தலினெனவறிக. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - ஆற்றாதுபுலம்பல்

புரவலர்செய்பொருண்மேற்போகுநியேலாக்கந்
தாவலளன்றீங்கிவளுஞ்சாற்றி—விரவலர்க்கோன்

நீத்திகல்செற்றின்பமுறல்யாரோடுமேலெவ்வுளின்கண்
வாய்த்தபுகழில்லறமேல்வந்து. (464)

இது; பிறர்கட்டோன்றிய இழவுப்பொருள்பற்றிவந்த அழுகை. இழவென்பது தந்தையும் தாயும் முதலாகிய சுற்றத்தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சிமுதலாயவற்றையும் இழத்தல்.

(இ-ள்) காவற்றொழிற்குவல்லவனே! நீ செய்யப்படும் பொருண் மேற்போகாநின்றனையேல் இவ்விடத்து இவளும் கூறுகில் உயிர்சிவித்திருப்பவளன்றுகையாற் செயப்படும்பொருளோடும்வந்து திருமாலெவ்வுளின்கண் புலப்படும்புகழையுடைய இல்லின்கணிருந்தில்லறத்தொழுகி யிரவலர்மாட்டு அவர்வேண்டியவற்றையீந்தும், சத்துருக்களைச் செற்றும் இன்பமெய்துவது யாரோடுகூடி யென்றவாறு பகுதி - இதுவுமது செலவழுங்குவித்தல்.

ஊர்வலவாவென்றொழுகின்மூந்திற்செங்கண்மால்
காரகத்தாட்கென்வாசகம். (465)

இஃது தளிவரல்பற்றிவந்த அழுகை இளிவரலென்பது பிறரால் இகழப்பட்டெளியனுதல். பகுதி - இதுவுமது. துறை - வலவனொடு கூறல். பா - ஒருவிகற்பக்குறள்வெண்பா.

அறிவின்மையன்றிப்பொருளின்மையக்தோ
நிரப்பென்னுநீணிநலகு. (466)

இது, பிறர்கட்டோன்றியவறுமைப்பொருள்பற்றிவந்த அழுகை. என்னை? ஞானச்செல்வமே பேரின்பநுகர்விக்குஞ்செல்வமாகலி னஃதின்மையே வறுமையென்றுயிற்று. ஞானமின்மையே வறுமையென்பது "அறிவினுற் குறைவில்லா வகன்ஞாலத் தவரேடும்" எனப் புவிப்பாவலர் தம்பிரான் நாவீறுடையபிரான் தெய்விகப்பாடலானுணர்க. திணை - வாகை. துறை - பொருளொடுபுணர்தல். எனவே தன்கட்டோன்றிய வசைவு பிறர்கட்டோன்றிய வறுமைப்பொருள்பற்றியும் அடைவே வந்தமை காண்க.

மெய்வேலவனடிக்கவெண்மதிகோறற்றிசைக
மைவேல்விழிபிறந்திம்மம்மர்நோய்—செய்கைக்குப்
பூங்காவளம்பாடிப்புண்ணியன்றன்வெற்பினிற்செய்
நீங்காவளம்பாடிநின்று. (467)

இஃது இளிவரல்; என்னை? "மூப்பே பிணியே வருத்த மென்மை யோ, டியாப்புற வந்த இளிவர னான்கே" என்றாராகலின். இது பிறர்கட்டோன்றிய பிணிப்பொருள்பற்றிவந்த இளிவரல். நடிக்க, இசைக என்பன வியங்கோள்வாய்பாடு; இகழ்ச்சிக்குறிப்பு. மம்மர்நோய்செய்கைக்கு என்பது மருந்துபிறிதின்றிப் பெருந்துயரிழைக்குங் காமமாகிய பிணியைத் தன்கட் செய்வித்துக்கொண்டமைக் கென்றவாறு. பகுதி வரைபொருட்பிரிதல். துறை - வேலனையழைத்தல்.

மலமாயருவருப்பாய்மாறாப்புழுவின்
புலமாங்கருக்குழியுள்புக்கி—கலமருமென்
மம்மர்நோய்தீர்க்குமருந்திலையோமாசறுசீர்ச்
செம்மலைவேங்கடவாசெப்பு. (468)

இது, தன்கட்டோன்றிய பிணியும் வருத்தமும்பற்றிவந்த வரல்.

5. உருத்திரம்

ஒன்றாய்ப்பரந்தபுனலுண்டநாளெவ்வுயிரும்
பொன்றாதுட்கொண்டபொருளாகி—நின்றான்முன்
செய்ந்நன்றிகொன்றுழலுந்தேவாந்தரர்தமக்கு
உய்ந்நன்றியுண்டாகுமோ. (469)

இஃதுருத்திரம். உருத்திரமெனினும் வெகுளியெனினுமொக்கும். அஃதாக, இஃதுருத்திரமென்பதென்னை? "உறுப்பறை குடிகோ ளலைகொலை யென்ற, வெறுப்பின் வந்த வெகுளி நான்கே" என்றாராகலின், செய்ந்நன்றிகொல்வதே மிக்ககொலையாதலிற் பிறர்கட்டோன்றிய கொலைப்பொருள்பற்றிப்பிறந்த வெகுளி. இதனுள், ஒன்றாய்ப்பரந்த வுறபுனலென்றது ஏகோதகப்பிரளயத்தை. தேவாந்தரர்-ஸ்ரீமந்நாராயணனன்றி வேறு பரதத்துவம் உண்டென்போர். ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

பொய்ச்சாதமின்னார்வன்பொன்னணியுட்செறிந்த
நச்செயிற்றுள்ளரவைப்பதாய்—மிச்சி
றலைப்பெய்தமோகனைவாய்த்தம்பர்சேயேயென்
மூலைப்பெய்வதென்னேமொழி. (470)

7. வியப்பு

ஆள்வினையில்லாதேற்கருமருந்தைத்தந்தெனையின்
றாள்வினையாற்றெய்வமதையல்லால்—வேள்வினையை
வென்றான்மகிழ்மாறன்வெற்பினிவேறுதெய்வ
மொன்றாகவும்வியப்பேனோ. (473)

இது வியப்பு ; என்னை ? "புதுமைபெருமைசிறுமையாக்கமொடு, மதிமை சாலா மருட்கை நான்கே" என்றாராகலின், தன்கட்டோன்றிய புதுமைப்பொருள்பற்றிவந்த வியப்பு. மருட்கையெனினும் வியப்பெனினும் ஒக்கும்.

(இ-ள்) முயற்சியென்பதுசிறிதுமில்லாத எனக்கு இப்பெண்ணாகிய அமிர்தினையெளிதாக இவ்விடத்துத்தந்து என்னையாண்டுகொண்ட நல்வினையாற்றெய்வமென்பதனையல்லால், வேளாலெய்தும் காமவிகாரமாகிய தீவினையைவென்ற வகுளமாலிகைமாறன்வெற்பிடத்து வேறொருதெய்வத்தை யொருபொருளாகமதியேனென்றவாறு. ஓகாரம்—ஒழியிசை. பகுதி - இயற்கை, துறை - தெய்வத்தைவியத்தல்.

அண்டமெலாமுட்கொண்டதுவுமணுவகத்தாய்க்
கொண்டதிறமுங்குறிக்கொளீஇப்—பண்டை
மறையுந்துணியாமதிளரங்கநின்னை
யிறையுந்துணிகலேம்யாம். (474)

இஃது இறப்ப மகிமையும் இறப்ப அணுமையும் தன்கட்டோன்றினமைபொருளாகவந்த வியப்பு. துறை - கடவுள்வாழ்த்து.

8 உவகை.

சொல்லாமைமுன்பிரிந்துசூழ்நிதிக்குவைந்ததிவன்
கல்லாழல்வெங்கடங்கடந்த—தெல்லா
மடலாழியான்கடலாயிழைதன்னின்பக்
கடலாடநீங்கினவேகாண். (475)

இது, தன்கட்டோன்றிய புணர்ச்சிப்பொருள்பற்றிவந்த வுவகை; என்னை ? "செல்வம்புலனேபுணர்வுவிளையாட், டல்லல னீத்த வுவகை நான்கே" என்றாராகலின். இதனகத்துக் கடங்கடந்ததெல்லாமென்பது சாங்கடந்துபோயதால் உடலுயிர்கட்குச் சாத்தின்வெம்மையாலுற்ற துன்பமெல்லா மென்றவாறு. ஆயிழைதன்னின்பக் கடலாட நீங்கின

வெனபது அங்ஙனம் உண்டான வெம்மையெல்லாம் ஆராய்ந்தணிந்த பூணியையுடையாள் குளிர்ந்த இன்பமாகியகடலகத் தாடினகாலத் தென்னைவிட்டுநீங்கிற் றென்றவாறு. பகுதி - பொருட்பிரிதல். துறை- உண்மகிழ்ந்துரைத்தல்.

கேளா திருந்திலேன்கேசவர்வென்பதனை
வாளா திருந்திலேன்வாழ்த்தினே—ளொனுர்க்
காளானேனென்னிணையிங்கார். (476)

இது பெருமிதஞ்சார்ந்த வுவகை. திணை - வஞ்சி. துறை-நெடு மொழிவஞ்சி. பா - ஒருவிகற்பநேரிசைச்சிந்தியல்வெண்பா.

ஈசன்றிறமுமெழின்மா யிர்த்திறமு
மாசின் றுணரமதிகொளீஇ—கேசித்
துணர்த்துமோ நூல்களொருதலையாய்மாறன்
புணர்த்ததமிழ்வேதப்போல். (477)

இது தன்கட்டோன்றிய கல்விப்பொருள்பற்றிவந்த வுவகை. மாசின்றி என்பது மாசின்று என்றாயிற்று; "அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம், *செய்யுளு ளுகா மாகிட னுடைத்தே" என்பதனாலறிக. ஓகாரம் ஒழியிசை. நூல்கள் - சுருதி மிருதி புராணங்கள். ஒருதலையாய்- உண்மையாய். தமிழ்வேதம் - திருவாய்மொழி. திணை - வாகைசார்ந்த புறத்திணை. துறை - பனுவல்வென்றி.

மென்சிறகர்வேதால்விழுப்பேட்டினையெகின
மென்புருகப்புல்லியிறைபிரியா—முன்பனியாற்
போதாய்தொடைத்திருமால்புல்லாணிமெல்லியற்கங்
கேதாயதெனறறியேனே. (478

இஃ தச்சத்தைச்சார்ந்தமருட்கை.

(இ-ள்) விழுப்பேடு - விழுமியபெடை. இறைபிரியா - கண பொழுதும் விட்டுநீங்கா. முன்பனி - மார்கழியும் தையும். போதா தொடைத்திருமால்...............றறியேனே என்பது பூக்களுள் நல்லதா ஆராய்ந்தெடுத்த பூவினாற்றொடுத்த மாலையையுடைய திருமால் திரு

---

தொடர்பினு மென்றும் பி - ம்; "தொடர்பினு ளுகா மாய்வரின் என்பது நன்னூல்.

புல்லாணியின்கண் மயில்போலு மெல்லியஇயலையுடையாட்கு அவ்விடத் தெய்திய துன்பம் யாதென்றறியே னென்றவாறு. பகுதி-வேந்தர்க்குற் றுழி. துறை - வாளைக்கிவருந்தல். இவற்றின்வேறுபாடுங் காண்க.

புழைத்தடக்கைமால்யானைபோதருநாளன்பு
தழைத்தென துமன் னுயிரைத்தந்த—மழைத்தடக்கை
மன்னவற்கோமாயன்மதிளரங்கத்தாய்பிறர்க்கோ
முன்னுறநின்றார்க்குமுரசு. (479)

மெய்ப்பாடு இதுவுமது. பகுதி - வரைபொருட்பிரிதல். துறை மணமுரசுகேட்டுவருந்தல் போதருநாள் - வருநாள்.

உவகையினும் என்னும் உம்மைத்தொகைவாய்பாட்டாற் சாந்தர மென்பதுங் கூட்டிச் சுவை யொன்பதெனவும்படும். அஃதாவது "செஞ்சாந்து பூசினுஞ் செத்தினும் போழினு, நெஞ்சோர்க் கோடா நிலைமைத் தாகும்". அது, காம வெகுளி மயக்கம் நீங்கினார்கண்ணே நிகழ்வதாம். சமநிலை, நடுவுநிலையென்பது மிது.

ஏதிலருற்றார்பேறிழவின்பந் துன்பமெனப்
பேது றுதலாம்வன்பிதற்றறவே—போதுந்
திருமகிழமாறன்பதமேசிந்தித்தெப்போது
மிருதரும்பேரின்பமிது. (480)

இது சாந்தரதம். இதனுள், நெஞ்சமென்னு மெழுவாய்முன்னிலை யெச்சமாயிற்று. நெஞ்சமே! சிந்தித்து வாழ்த்தியிரு, இது பேரின்பந் தருமெனக் கூட்டுக. இன்பந்தருமென்பது வினைமுற்று. திணை - பாடாண். துறை - ஓம்படை.

புகழ்ந்தாலும்வெந்தழலைப்போற்சுடுஞ்சொற்சொல்லி
யிகழ்ந்தாலும்பேறிழவென்றாலு—மகழ்ந்தாலும்
வெண்டிரைப்பாலாழியான்மெய்யடியார்மெய்யுணர்வுட்
கொண்டிருப்பார்கோடார்குறி. (481)

இதுவுமது. இவையிரண்டும் திணை - வாகை. துறை - சால்பு முல்லை இதனுள் உவமைமுதலிய அலங்காரங்கள் விரவினவெனினுஞ் சுவையே மிகத்தோன்றலாற் சுவையேநோக்கமாகக்கொள்க. இதனை வடநூலார் இரதமென்ப. (ககூ)

௰௨-வது சுவை முற்றும்.

## ருரு-வது பரியாயவலங்காரம்.



199 தொன்மையினொருபொருட்டொடர்பவம்பலவயிற்
பன்முறைபயின்றதெனல்பரியாயம்.

எ-ன்) வைத்தமுறையானே பரியாயமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) யாதாயினும் ஒருபொருள் பழமைத்தாகித்தொடர்புறப் பலவயினும் பலமுறையே பலபிறப்புப் பயின்றதென்றுகூறுவதும் பரியாயமென்னும் அலங்காரமாமென்றவாறு.

அன்றுமலரிலயிர் திற்கொழு மூனையிற்
றன்றுதுழாய்க்காட்டிற்றோன்றியே—யின்று
நினையிற்றமிழ்மாறனீள்குன்றவாணர்
மனையிற்பிறந்தனள்பூமாது. (482)

இது பரியாயம். பரியாயமென்பது பலமுறை. பகுதி - இடந்தலை. துறை - நலம்புனைந்துரைத்தல். பயின்றதெனலும் என்னும் உம்மை செய்யுள்விகாரத்தாற் றொக்குநின்றுவிரிந்தமையால், தண்டியாசிரியர், "கருதியது கிளவா தப்பொருடோன்றப், பிறிதொன்று கிளப்பது பரியா யம்மே" என்றார்; அவ்வாறு புணர்ப்பதும் பரியாயமாமெனக் கொள்க. அதற்குச்செய்யுள்:—

சொற்பாவலர்தம்பிரான்மகிழ்மாறன்றடரிவெற்பிற்
பொற்பார்பிறைநுதற்பூண்முலையாய்ப்பொதும்பரின்வாய்
நிற்பாய்நறுமென்மலர்கொணர்கேனவணீபெயரிற்
கற்பாய்தரக்கன்றுநூபுரபாதகமலங்களே. (483)

என்பதனலறிக. பகுதி - பகற்குறி. துறை - இடத்துய்த்துநீங்கல்.

(இ-ள்) புவிப்பாவலர்தம்பிரானாகிய திருமகிழ்மாறன் றடரி வெற்பினிற் பொலிவுநிறைந்த இளம்பிறைபோன்ற நுதலினையும் பூண் அணிந்தமுலையினையு முடையாய்! இச்சோலையின்கண் நிற்பாயாக, நின் குழன்மேற்சூட்ட நறுவிதாகிய மெல்லியமலர் கொய்துகொண்டுவருவன், நீ என்னோடும் அவணைகுவையெனில் உனது சிலம்பணிந்த பாதகமல மானது சிறுபாறுறுத்தக் கன்றுமாதலா னென்றவாறு.

இதனுள், தோழி கருதியதுவிளவாது பிறிதொன்றுவிளத்தியது உணர்ந்துகொள்க.

அன்றியும், இளங்கோவடிகள, மனையறம்படுத்தகாதையுள, "தயங் கிணர்க் கோதை தன்னொடு தருக்கி, வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்து செல்வுழி"யென்றவற்றுள், தயங்கல், வயக்கல் இரண்டும் விளக்கமாதலின் அதற்கு விரித்துரையெழுதிய அடியார்க்குநல்லாராகிய ஆசிரியர் அதனை யும் பரியாயமென்னும் அலங்காரமாகக் குறித்தார். அது இப்பொரு ளணியுள் மூன்றுறக்கூறிய பொருட்பின்வருநிலையுள் அடங்கு மென்றறிக. (௧௧௪)

௩௩-வது புரியாயம் முற்றும்.

---

## ௩௪-வது இலேசவலங்காரம்.

:o:

200. தெண்ணிறப்பளிங்கிற்சிறுபுழைச்செந்நூ
லொண்ணிறம்புறம்பொசிந்தொளிரும்படித்தாய்க்
கருத்தினைவெளியிடுங்காமர்சத்துவங்களை
யருத்தியின்மறைத்துரைப்பதுவேயிலேசம்.

(எ-ன்) வைத்தமுறையானே இலேசமென்னும் அலங்கார முணர்-ற்று.

(இ-ள்) தெளிந்தநிறத்தையுடைய படிகமணித்துளையில் ஏற்றப் பட்ட செம்பட்டுநூலினது ஒள்ளியநிறம் புறத்தேயுருவித்தோன்றுமாறு போன்றுள்ளக்குறிப்பைவெளியிடும் விருப்பத்தோடுங்கூடிய சத்துவங் களை யுன்பிறனொடு மறைத்துக்கூறுவது இலேசமென்னு மலங்காரமாம் என்றவாறு. (௧௧௫)

201. மெய்ம்மயிர்பொடித்தல்வெதும்பல்வெயர்த்தல்|
துய்யபொற்பசலைதோன்றனடுக்குறல்|
விழிபுனலரும்பல்வெவ்வுயிர்ப்பாவித்தல்|
மொழிதளர்வுற்றனவைமுதலியசத்துவம்.

(எ-ன்) சத்துவம் இவையென்பதுணர்-ற்று.

(இ-ள்) நகைமுதலாக மெய்யினிடத்து உரோமஞ்சிலிர்த்தலும் மெய்வெதும்பலும் வெயர்வுதோன்றலும் தூயதாய பொன்போன்ற பசலை தோன்றலும் மெய்ந்நடுக்கமுங் கண்ணீரரும்பலும் நெட்டுயிர்ப்புந் தொட்டாவியும் மொழிகுழறலும் ஆகிய பத்துஞ் சத்துவங்களாம் என்றவாறு.

*சேதாம்பல்வாவித்திருவல்லிக்கேணியர்திண்சிறைப்புண்*
*மீதாம்பவனிதனைத்தொழுதேவிருப்புற்றிடுமெய்ப்*
*போதாம்பசலைதன்மெய்க்கேதளிர்த்ததைப்பொய்த்தவர்தம்*
*பீதாம்பரத்தொளியென்னுமின்னார்க்கிந்தப்பெய்வளையே.* (484)

*தேலாதகேமிப்படையார்* நிலாத்திங்கட்டுண்டத்துள்ளார்*
*சோலாகலப்புட்பவனிகண்டேதொழுங்கோதைகொண்ட*
*மாலானடுக்கம்பயின்றமெய்ப்பான்மையைவாய்ந்தசிறைக்*
*காலானடுக்குற்றதாகமின்னார்க்குய்க்குங்கட்டுரைத்தே.* (485)

இவையிரண்டும் இலேசம. இவற்றின்பொருள் உரையிற்கொள்க. திணை—பாடாண். துறை—"ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப" என்றாராகலின், பவனிகண்டடைந்தபான்மை மறைத்தல். (கககூ)

௩௪-வது இலேசம் முற்றும்.

---

## ௩௫-வது தற்பவவலங்காரம்.



20௨. யாதொருபொருட்டினென்றிறந்தது மறித்துமவ்
வெதுவிற்பிறந்ததென்பதுவேதற்பவம்.

(எ-ன்) வைத்தமுறையானே தற்பவமென்னு மலங்கார முணர்-ற்று.

(இ-ள்) யாதொருகாரணத்தினான் யாதொன் றிறக்கப்பட்டது அது மீட்டும் அப்பொருட்பொருட்டுப் பிறந்ததென்பது தற்பவமென்னு மலங்காரமா மென்றவாறு.

---

*நிலாத்திங்கட்டுண்டம் - தொண்டைநாட்டுத்திருப்பதியுளொன்று.

போர்பட்டவேற்கண்பொருநோக்கினுக்கிலக்காய்
நேர்பட்டிறந்தநிறைமன்னே—கூர்பட்ட
நேமியான்முட்டத்துநேரிழைதன்னேனுக்கிற்
காமியாவந்ததுவேகாண். (486)

இது தற்பவம். தற்பவமென்பது மூன்றுவதன்றேகை; என்னை அது தன்னுற்பிறத்தல்.

(இ-ள்) போருற்பவமான வேல்போன்றகண்கள் என்மேற் பூசல்புரி நோக்கத்தாற் றுறந்த எனது நிறை நண்ணிய ஆபாணத்தினையுடையாள் நாணோடுகூடியநோக்கினுல் என்னைவிரும்பி மறித்தும் என்னிடத்துப் பிறந்தது என்றவாறு. பகுதி - இயற்கை. துறை - குறிப்பறிதல் (கசுஎ)

ரு௬-வது தற்பவம் முற்றும்.

---

ரு௬-வது அசங்கதியலங்காரம்

—❀— (தூரகாரியவேது

203. காரியமயலதாய்க்கழிதிறனசங்கதி.

(எ-ன்) வைத்தமுறையானே அசங்கதியென்னுமலங்கார முணர்—ற்று.

(இ-ள்) யாதாயினு மொருகாரணத்திற் கேற்ற காரியம் அயலே தோன்றிக் கழியுங்கூறுபாடு அசங்கதியென்னு மலங்காரமா மென்றவாறு.

வள்ளலணிமார்பின் மற்றொருத்திகண்ணிணைவேல்
கொள்வது நீஇயெங்கைகுறுங்குடியா—ளுள்ளமது
புண்பெற்றதனுவிப்பொன்னிறைவனின் றுயிரென்
றெண்பெற்றதுண்மையாமின்று. (487)

இஃது அசங்கதி. மற்றொருத்தி - பரத்தை. எண்பெற்றது யாமெண்ணப்பட்டது. பகுதி - பரத்தையிற்பிரிதல். துறை - உலாப் போந்து பள்ளியிடத்தானுனதலைவனுடனாடியதலைவிநிலைமை உழையருரைத்தல். (கசுஅ)

204. அதுவே,
சிலேடையினெய்துந்திறனுமுடைத்தே.

(எ-ன்) அசங்கதி பிற அலங்காரத்துடன் விரவிவருமென்ப துணர்—ற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட அசங்கதி சிலேடையுடன்கூடி முற் றுங்கூறுபாடு முடைத்தென்றவாறு.

மன்னிளவல்விண்மேன்மறைந்தவிராவணிவன்
சென்னியின்மேல்வாளிசினத்தேவ—நன்னுதலாய்
ஞாலத்தசங்கதியேநாடிவிராவணனார்
காலற்றதென்னுங்கதை. (488)

இது சிலேடைவாய்பாட்டான்வந்த அசங்கதி.

(இ-ள்) மன்னிளவல், மேகத்துண்மறைந்த இராவணிதலையறுக் கும்படி கோபித் தேவியபாணம் இராவணிதலையையறுக்கப் பூமியிலிருந்த இராவணனார்காலற்றதென்னுங்கதைநடையை விசாரிக்கில் அசங்கதியா மென்றவாறு.

மன்னிளவல்-இராமனுகியமன்னனுக்கிளைய இலக்குவன். இராவணி-இந்திரசித்து. கால் - சந்ததி. விண்ணின்மேல்நின்றவன் றலையற விட்டவாளி பூமியில்நின்றவன் காலற்றதாயகாரியத்தைவிளைத்ததால் அசங்கதியாயிற்று. முன்னர் அக்கனும் அதிகாயனும்படப் பின்னர் இராவணியும்பட்டதாற் காலற்றதாயிற்று. திணை - வாகையைச்சார்ந்த புறத்திணை. துறை - வில்வென்றி.

காணிலசங்கதியேதென்னிலங்கைகட்டழித்தா
ணுணிலுடக்கிநடுக்குழையப்—பாணம்
புரக்கவளைத்ததனுப்பொன்றுதிருப்ப
வரக்கர்தனுநாணறல். (489)

இதுவுமது. பாரமும் தாரமுங்கொள்ள நடுக்குழையவாங்கிய வில்லும் நாணும் அறுதிருப்ப அரக்கர்தனுவும் நாணும் அற்றது விசா ரிக்கில் அசங்கதியா மென்றவாறு.

காணில் - விசாரிக்கில். தனு - உடல். நாண் - மானம். அரக்கர் நான்கு மூலபெலப்படை.

ஒண்டியாசிரியர் ஏதுவுள், தூரகாரியமெனவிரித்தது மிது. இவர்
புதலைப் பிறருடம்பட்டது தானுடம்படுதல் என்னும் உத்தியால்
னியே ஓாலங்காரமாக்கினூர். (௧௧௯)

௱௬-வது அசங்கதி முற்றும்.

---

## ௬௭-வது தடுமாறுத்தியலங்காரம்

———(஽)———

205. உரைதடுமாறுவது தடுமாறுத்தி.

(எ-ன்) வைத்த முறையானே தடுமாறுத்தியலங்கார முணர்-ற்று.

(இ-ள்) ஒருகாரணத்தினை தொருகாரியமே, அக்காரியத்தாற்
றோற்றமான தக்காரணமென உரைதடுமாறக்கூறுவது தடுமாறுத்தி
யலங்காரமாம் என்றவாறு. உத்தி - உரை.

வையந்திருநாரணன்றோற்றம்வண்டமிழோ
ரையன்மகிழ்மாறனுலெனனுங்—துய்யமகிழ்த்
தாமத்தான்றோற்றமும்பொற்றாமரையாள்கேள்வனருட்
சேமத்தாலென்னுந்தினம். (490)

இது தடுமோறுத்தி. வடநூலார் அன்னியோன்னியமென்பது மிது.
திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப்பரவலும், கடவுள்வாழ்த்து
மாம். (௧௨௦)

௱எ-வது தடுமோறுத்தி முற்றும்.

---

## ௬௮-வது புணர்நிலையலங்காரம்.

———:(஽):———

206. நன்றிகொள்பண்புவினையிவைகாலத்
தொன்றவிருபொருட்குரைப்பதுபுணர்நிலை.

(எ-ன்) வைத்த முறையானே புணர்நிலையலங்கார முணர் - ற்று.

(இ-ள்) தன்மையையுட்கொண்ட பண்பாதல் வினையாதல் இரண்டு பொருட்கு வினையுடனிகழ்ந்ததாகப் புணர்த்துக்கூறுவது புணர்நிலையலங்காரமா மென்றவாறு.

பண்புப் புணர்நிலை

பொங்குகதிர்வெய்யோன்புறந்தரவேவேர்விழுந்த
கங்குலுடனேயிருண்டகாட்சித்தே—யெங்க
ளருளாளன்வேங்கடவனம்புயத்தார்வேட்டு
மருளாதரித்தாண்மனம். (491)

இது பண்புப்புணர்நிலை. திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - கண்டுகைசோர்தல்.

உ வினைப் புணர்நிலை

அந்தணராயந்தமுணர்வாரிதயார
விந்தமுடனேமலருமேன்மைத்தே—பைந்துளப
மாலைப்பெருமானேவான்பிரமமென்னுமகிழ்
மாலைப்பெருமான்செவ்வாய். (492)

இது வினைப்புணர்நிலையலங்காரம். திணை - பாடாண், துறை - அறமுறைவாழ்த்தினுள்ளாம். (கஉக)

ருஎ-வது புணர்நிலை முற்றும்.

---

## ருஅ-வது வேற்றுப்பொருள்வைப்பலங்காரம்.

———:(ஓ):———

207. ஒருபொருணிலைமுதலுரைத்ததைமுடித்துத்
தருபொருணிலைபினுந்தான்வைப்பதுவே
புகழ்புணர்வேற்றுப்பொருள்வைப்பாகும்.

(எ-ன்) வைத்தமுறையானேவேற்றுப்பொருள்வைப்பென்னுமலங்கார முணர் - ற்று.

(இ-ள்) முதலே ஒருபொருளினது தன்மையையுரைத்துப் பின்வரும் அதனைச் சாதித்துத்தருவதோர்பொருணிலைமையினை யதனிறுதியில்வைப்பது வேற்றுப்பொருள்வைப்பென்னு மலங்காரமாமென்றவாறு

208. அனைத்தினுஞ்செறிதலொருவகையடைதன் ।
மாறுமொழிதவிரட்டுறமொழிதல் ।
கூடுதல்கூடாவகையிற்கூறுத ।
லிருமையினவிளம்பல்விபரீதத்தியம்பலென் ।
றெண்வகையான்வருமியலுடைத்ததுவே.

(எ-ன்) இதுவும் அவ்வேற்றுப்பொருள்வைப்பை விரித்துணர்—ற்று.

(இ-ள்) அனைத்தினுஞ்செறிதன்முதலாக விபரீதத்திசைத்தலீறாக எண்வகைத்தாகவரும் இலக்கணத்தையுடைத்து அவ்வேற்றுப்பொருள் வைப்பென்னு மலங்காரம் என்றவாறு.

நாடாளுதற்குவசிட்டனிடுநன்னயநாள்
காடாளுநாளாகக்காட்டியே—வீடாளுந்
தொல்லாழியான்றனையுந்தூக்காதுவென்றதென்றால்
வெல்லாததாரைவிதி. (493)

இது முழுவதுஞ்சேறிதல். நன்னயநாள்—இராசநீதிக்கமைந்தநாள். தூக்காது - விசாரியாது. வெல்லாததாரை விதி என்பது விதியால் வெல்லப்படாதா ரொருவருமில்லையென்பதாம். திணை - காஞ்சி. துறை—................

தன்பார்ப்பினையருந்துந்தண்ணளியற்றேமுதலை
பென்பார்புதல்வனையுமேந்திழாய்—வன்றுதை
பொன்பயிலாகத்தான்பொருணுமஞ்சொன்னதற்குத்
துன்பமிழைத்தானிலையோசொல். (494)

இஃதொருவகையடைதல். பொன்பயிலாகத்தான்பொருணாமம்—நாராயணனை திருநாமம். பொன்பயிலாகத்தானுகியபொருளின் திருநாமமெனக்கூட்டுக. திணை—பாடாண்சார்ந்தபுறத்திணை. துறை—பாவார் பழித்தல்.

அன்றுமழுவாளியன்புடையசுந்தரர்க்காய்ச்
சென்றனன்காண்டூது திருநுதாஅ—லென்றதிலென்
னுதியினிற்பஞ்சவர்மேலன்புடைத்தாயத்திகிரிச்
சோதியுஞ்சென்றானிலையோதூது. (495)

இதுவுமது. துறை - பாடாண்சார்ந்தபுறத்திணையுள், தூதுநிலை யுரைக்கலாம்.

நன்றறிந்தார்மானிடரைநல்குரவுற்றும்பாடச்
சென்றறியாதாரேதிருவுடையர் — றொன்றறியாப்
புல்லறிவாரேனுமொருபொய்யுரையாமாந்தரையே
பல்கலைதேர்நாவலரென்பார். (496)

இது முரணுறமொழிதல்.

(இ-ள்) ஆன்மலாபமான முத்தியைத்தரும் பரப்பிரமம் ஸ்ரீமந் நாராயணனேயென்னும் உண்மையையுணர்ந்தவர்கள், உம்மைப்பிறப்பிற் செய்த நல்வினையால் இம்மைப்பிறப்பிற்பலித்த கல்வியோடுகூடிய கவியை யுடைய நாவலர் உண்டிப்பொருட்டால் நிரப்பிடும்பை மிகுந்தாலும் அக் கவிகளான் மனிதரைச்சென்றுபாட மனத்தினாலுங் குறித்தறியாத வரைப் பேரின்பச்செல்வம் பெற்றவரென்பர்; அஃதன்றியும், இறைநிலை யும் உயிர்நிலையும் சிறிதுமுணராத புல்லறிவாண்மையுடையோராயினும் ஓரிடத்தும் ஒருபொழுதும் சிறிதும் பொய்சொல்லாதவரையே அற நூல்கள்பலவற்றையுங் கற்றுணர்ந்த நாவலரென்பா ரென்றவாறு.

நன்று—ஆகுபெயர். உற்றுமென்னும் உம்மை எதிர்மறை; உறுது என்பதை விளக்கிற்று. திணை—வாகை. துறை—"கட்டமை யொழுக் கத்துக் கண்ணுமை யானும்" என்பதனால் இது கட்டமையொழுக்கத் துக்கண்ணுமை.

ஏதிலார்கூட்டத்தினிதாகியவாடை
மாதராய்மாறன்மகிழ்துடரிச்—சூதமலர்
வாளியினுமின்னுயிரைவாட்டியதானீடுகருங்
காளியுறவாகாதுகாண். (497)

இது சிலேடைவேற்றுப்பொருள்வைப்பு. இரட்டுறமொழித லென்பதுமிது. ஏதிலார்—அயலானோர். கூட்டத்து—புணர்ச்சிக்காலத்து. இனிதாகியவாடை—குளிர்ந்தவாடை. சூதமலர்வாளி—மாமலர்ப்பாணம்; வாட்டியது - சுட்டது. கருங்காளி—கரியகாற்றும், கரிய பத்திரகாளியும். ஆதலால் இஃது இரட்டுறமொழிதலாயிற்று. திணை—பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - வாடைக்கு வருந்தல்.

காளி - காற்று.

வைவேல்விழியாளைவர்தளித்தவாழ்வெனக்கு
நைவேதுமில்லாநலனளித்த—மெய்வேதப்
பாவினைத்தேர்மாறனருட்பார்வைக்கிலக்கானார்
தீவினைப்பாலெய்துவரோசென்று. (498)

இது கூடுமியற்கை. வாழ்வு - நல்வினைப்பாலதாகிய தெய்வம். பகுதி - இயற்கை. துறை - தெய்வத்தைமகிழ்தல்.

பாலுஞ்செழுந்தேனும்பாகுங்கடலமிர்து
நாலுந்துணைதுறந்தநன்னுதலார்க்—காலமா
மின்பமாநல்வினைப்பாலீசனருளில்லாதார்க்
கன்பனேதீவினைப்பாலாம். (499)

இது கூடாவகையிற்கூறுதல். பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - செலவழுங்குவித்தல்.

ஏதிலர்தஞ்சொற்போலவின்னுயிரையீன்றவள்சொற்
கோதறவேயுண்ணுங்கொடுமையான்—மாதராய்
வெங்கதிரோன்பாலன்றிவெண்மருந்தினுலியன்ற
திங்களினுந்தோன்றுமோதீ. (500)

இஃது திருமையினியம்பல். ஏதிலார் - இக்காலத்து அயலவராகிய தலைவர். சொல் - நின்னிற்பிரியேன் பிரியி லாற்றேனென்று தலைவனி யிற்கூறிய கூற்று. பகுதி - இதுவுமது. துறை - செலவுநினைந் திரங்கல்.

தம்முனிலைவிட்டான்றனிமகுடஞ்சூடினு
னம்முனிலைநின்றானரசிழந்தான்—றெம்முனையி
லென்றாலிருவினையுமெங்களிராமன்னினைந்த
தொன்றாவிபரீதமாகும். (501)

தம்முனிலைவிட்டான்............சூடினான் - வீடணன் அரசியல்பெற்றான். தம்முன் - தமையன். அம்முனிலைநின்றா னரசிழந்தான் - அந்தத் தமையனிடத்திலே நின்றான் (கும்பகருணன்) அரசுரிமையும் உயிரும் இழந்தான். இது, உலகியலுக்கு விபரீதமாதலால் விபரீதத் திசைத்தல். துறை - கடவுள்வாழ்த்து. (௨௰௧)

௩௰௨-வது வேற்றுப்பொருள்வைப்பு முற்றும்.

## ௪௰-வது விபாவனையலங்காரம்.

209. மேதகவுலகம்விளம்பியகாரணத்
தாதலைவிலக்குபுவயலொருநெறித்தா
மேதுவிற்றன்மையிற்குறிப்பினெய்தியம
போதுதல்விபாவனையெனவுரைத்தனரே.

(எ-ன்) வைத்தமுறையானே விபாவனையென்னு மலங்காரமுணர்ற்று.

(இ-ள்) ஒன்றன்வினையுரைக்குங்காற் பெருமைபொருந்தவுலகங் கூறியகாரணத்தா னஃதுண்டாதலையொழித்துப் பிறிதொரு வழியாங் காரணத்தானாக, இயல்பானாக, குறிப்பானாக, உண்டாயமரபுகூறுதல் விபாவனையென்னு மலங்காரமாமெனக்கூறினர் புலவரென்றவாறு.

ஆரமிர்தமுண்ணுதடங்காச்சுவைபடைத்த
தோரமுஞ்செய்யாதொழிலிலாப்—பேரின்ப
முற்றதுநங்கோமாறனுய்த்ததிருவாய்மொழிப்பாக்
கற்றுணர்ந்தோர்நாநெஞ்சகம். (502)

இஃ தயற்காரணவிபாவனை. உய்த்தது - பாடித்தந்தது. திணை பாடாண்சார்ந்தபுறத்திணை. துறை - பனுவல்வாழ்த்து.

மாணீலந்தோயாதுமைந்நிறமேகூர்ந்ததுமெய்ந்
நீணீருஞ்சேறுநிறையாதே—வானுதாஅல்
கோடார்பொழிற்குடந்தைக்கொற்றமாலுந்தியின்மேல்
வாடாதேநிற்குமரை. (503)

இஃ தியல்புவிபாவனை. மரை-தாமரை. கூர்ந்தது - மிகுந்தது. துறை - கடவுள்வாழ்த்து (௧௨௪)

210. வினையெதிர்மறுத்துப்பொருள்புலப்படுத்தலு
நினைவுறுபொதுவகையாலும்விலக்கிக்
காரியம்புலப்படுத்தலுமெனக்குறி
ஞரிரண்டாகுமுயர்குறிப்பினவே.

(எ-ன்) குறிப்புவிபாவனையின்கூறுபாடுணர்-ற்று.

இதன்பொருள் உரையிற்கொள்க. குறிப்புவிபாவனை.

ஆட்டாக்கரும்பினரும்பானமுண்பதைவிட்
டீட்டாய்நிதியென்றியக்கியே—பூட்டுருளற்
றோடுதேர்க்கானிடைநின்றேதுளமேயொன்றினைநீ
நாடுதிநின்பின்னெழுகேனன். (504)

இது வினையெதிர்மறுத்துப் பொருள்புலப்படுத்தல்விபாவனை.

(இ-ள்) ஆட்டாக்கரும்பினரும்பானமென்பது தலைவியிதழ்ப் பானம். பூட்டுருளற்றோடுதேர் என்பது கொளுவப்பட்ட வண்டியின்றியும் ஓடுமாபோன்றியங்கும் பேய்த்தேர். இது குறிப்பு. பகுதி—பொருள்வயிற்பிரிதல். துறை—பொருள்வயிற்பிரிந்ததலைவன் சுரத்திடைநின்று நெஞ்சொடுநோதல்.

காட்டியகண்டாமேகலுழுந்திறமேது
தோட்டிலஞ்சிமாறன்றுணைப்புயத்தை—வேட்டவர்த
முள்ளந்தளரவதற்குருவிலானுருவங்
கொள்ளுந்திறமிஃதென்கொல். (505)

இது பொதுவகையாற் காரணம்விலக்கிக் காரியம் புலப்படுத்தது.

(இ-ள்) காரிமாறப்பிரான் வகுளமாலிகையணியப்பட்ட திருப்புயங்களிற் காந்தியை யெனக்குக்காட்டி யித்துன்பத்தினை எனக்களித்த கண்கள் அவன் நமதுவீதியையகன்றகாலைத் தோழீஇ! அத் திருப்புயங்களை யெமக்குக் காட்டுவாயாகவென் றழுகின்றதென்? இன்னுந் தாங் காட்ட யான்காண்பதல்லது என்னாற் காட்டல்கூடாது; அஃதன்றியும், அத்திருப்புயங்களை விரும்பியவருள்ளம் தளர்வெய்தியதற்கு உருவிழந்தகாமன் உருவங்கொண்டு எனதுமுன்னிற்றற்குக்காரணம் யாதென்றவாறு. இது பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - பவனிகண்டழுங்கல்.

வெரித்திறம்பயிலாமென்கமலத்தேமரா
மூரிக்கிளைவண்டுமொய்த்தார—வாரிக்கு
நாதர்தனிலோதிமமுறங்குகாகையே
வேதர்தொடர்ந்துறைமால்வீடு. (506)

இதனுள், வெரித்திறம்பயிலாமென்கமலம் என்பது தண்ணீர். ஏடுளராமுரிக்கிளைவண்டு என்பது பூந்தோடுகளைக் குடைந்தறியாத கட்டுவல்லிபுரி. உளர்தல் - குடைதல். இதுவும் குறிப்பு. இதன் வேறுபாடுங் காண்க. திணை - பாடாண். துறை-நகரவாழ்த்து. (௧௨௫)

௪௦-வது விபாவனை முற்றும்.

## ௪௧-வது ஊர்வமொழியலங்காரம்.



211. விழுமிதினூர்வமொழிந்துரைப்பது
பழிதீரார்வமொழியெனப்பகர்வர்.

(எ-ன்) வைத்தமுறையானே ஊர்வமொழியென்னுமலங்காரமுணர்—ற்று.

இதன்பொருள் சூத்திரத்தானே விளங்கும்.

ஞானமிலாநாயேற்குநன்குயர்தன்றொண்டனெனும்
வானுயர்தோற்றம்புரந்தவாழ்விற்குத்—தேனுலவுந்
தாதோடுறுமகிழ்த்தார்த்தம்பிராற்கென்பொருட்டால்
யாதோகைம்மாறிங்கினி. (507)

இஃது ஆர்வமொழி. இதனுள், வானுயர்தோற்றம் - மிகுதியாக வுயர்ந்ததலைமை. என்பொருட்டால்—யன்னே. இனி யிங்குக் கைம்மாறியாதோ - யான் மே லிவ்வுலகத்துச்செய்யுங் கைம்மாறியாதென்றவாறு; எனவே அதற்குச் சரியாகச்செய்யுங்கைம்மாறில்லையென்பதாம். துறை - கடவுள்வாழ்த்து.

பொன்போற்சுடர்பல்கதிரோனடைத்தமென்போதிருக்கை
நன்போதகற்றுந்திறங்கற்றிடர்களினிருளிடையோர்
மின்போற்றமிவர்தருள்செய்ததாலின்பமெல்லியலா
யென்போற்றவஞ்செய்ததாரருளாளரிபவிரிக்கே. (508)

இதுவுமது. இதன்பொருள் உரையிற்கொள்க. பருதி—இரவிற்குறி. துறை - தளர்வகன்றுரைத்தல். (௧௨௬)

௪௧-வது ஆர்வமொழி முற்றும்.

## ௪௨-வது நெடுமொழியலங்காரம்.



212. இகல்புரிந்தொருவனிருநிலத்துந்தனை
நிகரிலையெனமேம்படுத்துதனெடுமொழி.

(எ-ன்) வைத்தமுறையானே நெடுமொழியென்னுமலங்கார முணர்—ற்று.

(இ-ள்) போரைவிரும்பினவொருவன் மண்ணினும் விண்ணினும் தனக்கு ஒருவர் நிகரில்லையெனத் தன்னைத் தான் உயர்த்திக்கூறுதல் நெடுமொழியென்னுமலங்காரமா மென்றவாறு.

புரிந்த வொருவன் என்னும் பெயரெச்சவாய்பாட்டீறறகரம் செய்யுள் விகாரத்தாற் றொக்கது. தனக்கென்பது தனையென நான்காவது இரண்டாவதாய் மயங்கிற்று.

அரசர்மறவரகத்து நித்தபொன்னை
முரசதிரக்கொண்டிடமான்மோகூர்—வரையயலே
யானைமேல்வந்தாராம்பையரைவெட்டவரும்
வானையேசார்ந்தார்மடிந்து. (509)

இது நெடுமொழி. துதாவென்னும் முன்னிலையெழுவா யெச்சம். திணை - காஞ்சி. துறை - மகட்பாற்காஞ்சி.

தானக்கரிமருப்புத்தாழ்வாரத்தூணிதுபார்
ஞானத்தவர்புகழ்மாறுகைவரைக்—கானத்
துறவரொனுமெம்மிடத்தாமொண்ணுதற்காய்த்துதா
மறவரிவணேறிவரும். (510)

இது திணை - உழிஞை. துறை - மகண்மறுத்துமொழிதல்.

இச்செய்யுளிரண்டினும் வரையயலே யெனவும், வரைக்கானத் தெனவும் பகர்ந்தமையால், "பாலை தானே குறிஞ்சியது புறனே" என்றாராகலின், பாலைநிலத்துமறவரெனக் கூறினார். மறவரென்பது மறக்குடியிலேபிறந்த சூத்திரர். "நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி, மகட்பா டஞ்சிய மகட்பா லானும்" என்பதனு லறிக. பாலென்றதனை முதுகுடிகளேயன்றி அனைநிலவகையெனப்பட்டார் கண்ணும் இத்துறைநிகழ்தல் கொள்க. (௪௨௭)

௪௨-வது நெடுமொழி முற்றும்.

## ௯௧-வது பரிவருத்தனையலங்காரம்.

———:( ):———

213. உரியதோர்பொருள்கொடுத்தொருபொருள்கோடல்
பரிவருத்தனையெனப்பகர்ந்தனர்புலவர்.

(எ-ன்) வைத்தமுறையானே பரிவருத்தனையென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) யாதாயினுமொருபொருள் தன்னிடத் துரியதொரு பொருளினைப் பிறிதொருபொருட்குக்கொடுத்துத் தானும் அதனிடத் தோர்பொருளினைக்கோடல் பரிவருத்தனையென்னு மலங்காரமா மென்று கூறினர் அறிவுடையோ ரென்றவாறு.

நாவலவர்தம்பிரானுவீறன்றேமகிழ்த்தார்
காவலர்க்கும்வாசங்கலந்தளித்து—வாவிப்
பலமலர்வாசங்கவரும்பான்மைத்தேவிண்ணோர்
குலமுதல்வந்தேத்துகுருகூர். (511)

இது பரிவருத்தனை. இதனுள், காவலர்க்கும் என்னும் உம்மை எச்சமாதலால் வாவியின்கண்ணுள்ள மலர்க்கும் அளித்தமை யுணர்க. வாவிப்பலமலர்வாசமும் என்னும் உம்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கமையாற் காவிற்பலமலர்வாசமுங் கவருமெனக்கூட்டி விரிக்க. கலத்தல்-பாலும் நீரும்போலக் கலத்தல். அளித்தல் - புரத்தல். கவர்தல் — கொள்ளுதல். விண்ணோர்குல முதல் - தேவர்கூட்டமும் இந்திரனும். விண்ணோர்குலமுதல்வந்தேத்து குருகூர்நாவீறன்வகுளமாலிகை தனது வாசம்புரந்து அவற்றின்வாசங் கவரும்பான்மைத் தெனக் கூட்டுக.

பண்டாழியிற்றுயினமாலிமையோரைப்பருவரல்சென்
றண்டாதுதன்கைப்பகழியொன்றேகொடுத்தன்புபுறங்
கண்டார்நிருதர்நிறந்திறந்தாவிகணக்கிறந்த
கொண்டானிருதர்குலாந்தகனும்பெயர்கொள்வதற்கே. (512)

இதுவும் பரிவருத்தனை. ஆழியிற்றுயின்மால் - திருப்பாற்கடல் நாதன். அண்டாது - அணுகாது. நிருதர் - மூலபெலப்படை. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. இதன் வேறுபாடுங் காண்க. துறை - வில்வென்றி.

பொன்மாளிகையினில்வெண்பொற்குடங்களானிரவி
தன்மாண்படிவந்தமிபுரந்து—நன்மாமைத்
தாமாயிரம்படிவம்வாங்குந்தகைத்தலாள்
கோமான்விளங்குகுருகூர். (513)

இதுவுமது. இதனுள், வெண்பொற்குடங்களான் என்னும் ஆகுபெயர் குடங்கடோறுமென்றாயிற்று; என்னை? "தகுதி யெனவொன்று நனறே பகுதியாற், பாற்பட் டொழுகப் பெறின்" என்னுங் குறட்பாவா னறிக. அன்றியும், வழக்கினுள்ளும் ஊரானோர்தேவகுலம், வீட்டாற் குறுணி எனவும் ஆகுபெயர் இயல்பினுந் திரிபினும் தொறுவின்பொருட் டாய்வழங்குவ தறிக. (௧௨௮)

௪௩-வது பரிவருத்தனை முற்றும்.

---

## ௪௪-வது காரணமாலையலங்காரம்.

:0:

214. காரணந்தொடர்புறிற்காரணமாலை.

(எ-ன்) வைத்தமுறையானே காரணமாலையாமா றுணர்—ற்று.

இதன்பொருள் உரையிற்கொள்க.

நன்மாணிடப்பிறவிநல்லறிவிற்கேதுவது
சொன்மாண்பொருளைத் துணிவுறாஉந்—தன்மை
வருவதற்கேயேதுவதுமாசறுமந்தாமந்
தருவதற்கேயேதுவெனுந்தான். (514)

இதனுள், எனுமென்பது என்று உலகங்கூறுமென்பதாம். தான் அசை. நல்லறிவு - உண்மைஞானம். சொன்மாண்பொருள் - சுருதி கூறும் பெருமையையுடைய ஸ்ரீமந்நாராயணன். மாசறுமந்தாமம்—பரம பதம். திணை—வாசை. துறை – பொருளொடுபுணர்தல்; அருளொடு நீங்கலுமாம். (௧௨௯)

௪௪-வது காரணமாலை முற்றும்.

---

## சரு-வது காரியமாலையலங்காரம்.



215. காரியந்தொடர்தலுங்காரியமாலை.

(எ-ன்) வைத்தமுறையானே காரியமாலை யுணர்—ற்று.

இதன்பொருள் சூத்திரத்தானே விளங்கும்.

பார்புனலின்காரியநீர்பாவகன்றன்காரியநீக்
கூர்பவனன்காரியங்கால்கொம்பனையாய்—பேர்விசும்பின்
காரியமாமேனையவுங்காரணமாயோனருளா
லாரியங்கூறுந்தொடர்பிற்றும். (515)

இது காரியமாலை. இதனுள், ஏனையவு மென்பன அஃறிணைப் பன்மைவாக்கியமாதலாற் பூதாதி மகான் மூலப்பிரகிருதிகளாம். திணை- இதுவுமது. துறையும் அது; பொருளொடுபுணர்தலன்றும் இவை யிரண்டும் அறத்திறகேற்ற மெய்ப்பொருளொடுபுணர்தலாம் ஆரியம்- சுருதி மிருதி புராணங்களாம். (கக0)

சரு-வது காரியமாலை முற்றும்.

---

## சகூ-வது ஏகாவளியலங்காரம்.

———(::)———

216. ஒருபொருண்முதல்வைத்ததற்குயர்பினையே
தருபொருண்மேல்வைத்ததனொடும்பலசால்
பேற்புடைத்தொடர்படுத்திசைப்பதேகாவளி.

(எ-ன்) வைத்தமுறையானே ஏகாவளியென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) ஒரு முக்கியபொருளை முதல்வைத்து அதற்கு உயர்பினையே தருவதாகப் பிறிதொருகூட்டத்தினுள் ஒரு முக்கியப்பொருளை யதன் மேல்வைத்து அப்படிப் பலசாலபின் முக்கியப்பொருள்களை யொன்றோ டொன் றேறவுடையனவாகத் தொடர்படுத்து முக்கியப்பொருள்பயக்கு மூற்றாகவுரைப்பது ஏகாவளியாம் என்றவாறு.

ஏகாவளியென்பது பலவளையத்தை யொன்றாக்கப்பட்ட சங்கிலி போலத் தொடர்தலின் அப்பெயர்த்தாயிற்று.

அலையாதல்சான்றோருண்டாமே தசான்றோர்
கலையுறுகன்றூ றுணர்க்கொர்கன்று—லைமையுமா
மொன்றுமதனையுணர்த்தலதுவுந்திருவைக்
குன்றுதேகூடியதாகும். (516)

இது ஏகாவளி. திருவைக் குறையறக்கூடியது ஸ்ரீமந்நாராயண ஞகிய பரப்பிரமம். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. இனியும் துறையும் இதுவுமது. (௪௩௪)

௨௪௬-வது ஏகாவளி முற்றும்.

---

## ௨௪௭-வது பிரதீபவலங்காரம்.

217. உவமையைமதியாதுவமேயந்தனைத்
திவ்வியமெனமதிப்பதுபிரதீபம்.

(எ-ன்) வைத்தமுறையானே பிரதீபமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) உலகத் தியாதாயினும் சுடர்மயமாம் ஒருமுக்கியப் பொருட்கு ஒப்புடையனவாம்பொருளாலெய்துங்காரியத்தை யம்முக்கியப் பொருளான் மிகவுமெய்தப்பெற்றதா யதனைமதித்து நல்லதென வுரைப் பது பிரதீபமெனனு மலங்காரமாம் என்றவாறு. திவ்வியம் - நல்லது.

வேலாவலயம்விளக்கியகவிருளைத்
தோலாதுடற்றுஞ்சுடர்மயமா—கோலாகலந்
தமிழ்வேதச்செங்கதிருதிப்பவும்பர்
தலக்கதிரென்வேண்டுமினித்தான் (517)

இது பிரதீபம் இதனுள், வேலாவலயம் என்பது பூமி. அக விருள் - அறியாமை. தோலாது - தோற்பணசெய்யாது. உடற்றும்—கனியாநிற்கும். கோலாகலம் — அழகு. தமிழ்வேதச்செங்கதிர் — திருவாய்மொழியைப் பாடித்தந்த காரிமாறப்பிரான். தமிழ்வேதமாகிய கதிரென்னுது செங்கதிரென்றதனுல், தமிழ்வேதமாகிய வோராயிரக்

கதிரைப்பரப்பின காரிமாறப்பிரானுகிய செங்கதிரோன் என மாட்டே றில்லாவுருவகவாய்பாட்டான்வந்த பிரதீபமானது காண்க. புறவிருளன்றி அகவிருளேயும் தோலாதுடற்றும் என்றதனுன் முக்கியமான சுடர் மயத்தை மிகுத்ததூஉங் காண்க. உம்பர்தலக்கதிர் - ஆதித்தன். என்வேண்டுமினி என்பதனை இனி என்வேண்டுமெனப் பாடமாற்றி மேலென்னகாரியத்திற்குவேண்டுமெனக் கூட்டுக தான் அசை. துறை கடவுள்வாழ்த்து. (ருகூஉ)

சஎ-வது பிரதீபம் முற்றும்.

---

## சஅ-வது பிறவணியலங்காரம்.

218. பொன்னினுமணியினும்புனையணியிகழ்தரு
தன்மையிற்பிறவணிசாற்றுதல்பிறவணி.

(எ-ன்) வைத்தமுறையானே பிறவணியென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) ஒருவர்க்குப் பொன்னினலாதல் மணியினலாதல் பொற் கொல்லாற் கைபுனையப்பட் டழகுகொடுக்கும் ஆபரணங்களேயும் இகழ்ந் திடுந்தன்மைத்தாக அவர்க்கு அழகுகொடுப்பதான பிறவணிகள் புலவ ராற்கூறப்படுவது பிறவணியென்னு மலங்காரமா மென்றவாறு.

கைக்கணியென்றீகைகருத்திற்கணிஞான
மெய்ச்செவிகட்கேற்றவணிமேதகுநூ—லுய்த்தறிதல்
சென்னிக்கணிமாறன்சேவடிமேற்கொண்டிறைஞ்சல்
என்னுக்கணிவேறினி. (518)

இது பிறவணி.

(இ-ள்) யாவராயினும் ஒருவர்கைக் கணியாவது அத்தகடகமும் ஆழியுமன்று; இல்லெனவிரந்தோர்க் கொன்றீவதேயணி. மனத்திற்கணி யாவது மகளிர்தனத்திற் செவ்வியைக் கண்காட்டக்கண்டு உட்கொள்வு

தோடும் அவரால்வருஞ் சிற்றின்பத்தைத் தரித்துப் பொசிப்பனபொசித் தின்புறுதலன்று; இப்பொருள் நிலையாதது, இப்பொருள் நிலையிற்று என்றுணர்வதோடும் இது ஆன்மா, இது பிரமமென்றுணர்ந்து அப்பிரம மாகிய ஸ்ரீமந்நாராயணன்சொரூபரூபகுணங்களைத் தெரிசித்துக்குழை யும் உண்மைஞானம். மெய்ச்செவிகட்கணியாவது குண்டலமுதலிய மெய்யணியோடும் பொய்ப்பனுவலமார்க்கம் உட்கொண்டுகுழைவதன்று, மெய்ப்பனுவல்கூறுந் தத்துவத்திரயங்களை யுட்கொண்டுமகிழ்வதாம். சென்னிக்கணி மயிர்முடியும் மணிமகுடமும் பூமாலையும் முதலியன வன்று; காரிமாறப்பிரானதிருவடிகளாகிய அரவிந்தத்தைத் தாங்கி வணங்குவதாம். ஆதலால் வேறுபாரணம்வேண்டுமோ என்றவாறு. திணை - வாகை. துறை - பொருளொடுபுணர்தல். (௧௩௩)

சஅ-வது பிறவணி முற்றும்.

---




## சகூ-வது முன்னவிலக்கலங்காரம்.



219. மன்னியகுறிப்பின்மாற்றுதருனே
முன்னவிலக்கெனமொழிந்தனர்புலவர்.

(எ-ன) வைத்தமுறையானே முன்னவிலக்கென்னுமலங்காரமுணர்—றறு.

(இ-ள்) மனத்தின்கண் நிலைபெற்ற குறிப்பினுனேவிலக்குவது முன்னவிலக்கென்னுமலங்காரமாமென்றுகூறினர் அறிவுடையோரென்ற வாறு. குறிப்பினுன்மாற்றுதருனென்னுது தேற்றேகாரம்புணர்த்தமை யாற் கூற்றினுனமாற்றினும் அவ்வலங்காரமாமெனினும் குறிப்பினுனை மாற்றுதலே பொருட்பொலிவுஞ் செய்யுட்சிறப்பு மெனபதுநோக்கிப் புணர்த்தார்; ஏனையது அத்தனைய தன்மையின் இலேசினுனுடம்பட்டா ரென்றவாறு.

அவை காலம் மூன்றினுேடுங்கூட்ட அறுவகைப்படும். அவை முன்னர்க்காட்டுதும். முன்னம் - குறிப்பு. அதனுல்விலக்குதலின் ஈறு கெட்ட வாய்பாட்டாற்கூறினர். விலக்குதல் - மாற்றுதல். (௧௩௪)

220. அதுவே,

இறப்பெதிர்நிகழ்வென்றேத்தியகாலம்
பெறப்பொருள்புலப்படும்பெற்றித்தாகும்.

(எ-ன்) அங்ஙனங் குறிப்பினுங் கூற்றினும்வரும் முன்னவிலக்குக் காலமூன்றுடன்கூட்ட அறுவகைப்படுமென்றூர், அக்காலமூன்றின் பெயரும் முறையும் உணர்—ற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட முன்னவிலக்கு இறப் பெதிர் நிகழ் வென் றுலகங்கொண்டாடப்பட்ட காலமூன்றும்பெற்றுப் பொருடோன்று மிலக்கணத்தையுடைத்தாம் என்றவாறு.

இதனுள் நிகழ்வென்றேத்தியகால மென்றதனுல் நிகழ்காலமின் றென்பார்குறிப்பைநீக்கி உண்டென்பார்குறிப்பே யிந்நூலுடையாரும் உடன்பட்டாரென்பதாம்.

வண்டேல்குந்தண்டளபமாயோனையனை ந்துயிர்க்கும்வசதியாய
வண்[...]டபகிரண்டமகத்தடக்குமுழுமுதனீயாயிற்றென்றூற்
பண்[...]கமனைத்தையுமோரயிலெயிற்றுவிடந்தளந்தபாண்மையல்லா
துண்டுமிழ்ந்தபடியயல்கண்டிருந்தவாரெவணிருந்தன் றுண்டவாறே ()

இஃ திறந்தவினைவிலக்கு. துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்.)

போவனிறைவன்பொருட்கெனவேபோமிவடன்
ஞவிதனைமீட்டருள்வசனங் — காவலனே
நற்றுளயத்தார்மாயனுகையின்முன்கற்றறியப்
பெற்றுளதுண்டாமேற்பிரி. (520)

இஃ தெதிர்வினைவிலக்கு. வன்பொருள்-கல்விப்பொருள், வசனம்-மந்திரம். இறை - தலைவன். இவளென்பது இடமயக்கம். கற்றறியப் பெற்றுளதுண்டாமேல் என்பதனுல் வன்பொருள் கல்விப்பொருளாயிற்று. பகுதி - ஓதற்பிரிதல். துறை - செலவழுங்குவித்தல்.

பூம்புனல்வாயாமொழுகப்பொற்புயமுன்பானணைத்த
தாம்புணைமெய்த்தெய்வதமுன்பாயிருக்கப்—பூம்பணைசேர்

மெய்யமால்வெற்பில்விரைந்து பலிக்கெய்தணங்குன்
பொய்யையார்முன்புரைப்பேன்போய். (521)

இது நிகழ்வினைவிலக்கு. இதனுள் யாமென்பது தோழி தன்னையுந் தலைவியையுங்கூட்டி யுளப்பாட்டுத்தன்மையாற்கூறியது. பொற்புயமுன்பானணைத்ததாம் புணைமெய்த்தெய்வதமென்பது உருவகவுருபாக வாய்பாடுவிரவினதாம். எய்துமென்பது எய்தென்றாயிற்று. மெய்த்தெய்வதம் எனவே பலிக்கெய்தியது பொய்த்தெய்வமாயிற்று. அணங்கென்பது அண்மைவிளி. திணை - பெருந்திணை. துறை — வெறிவிலக்கல். (கூ௫)

221. கூர்பொருள்காரணங்காரியங்குணமெனு
மீரிரண்டினும்புணரியற்கையதாகும். (4)

(எ-ன்) இஃ தவ்வலங்காரத்தின்கூறுபா டுணர்—ற்று.

(இ-ள்) மிகுந்த பொருள்விலக்கும், | காரணவிலக்கும், | காரியவிலக்கும், | குணவிலக்குமென்னும் | நான்குவகையானுங் கூடிவரும் இயல்பினையுடைத் தங்ஙனங் காலமூன்றினோடும்பொருந்திவரும் முன்னவிலக்கென்றவாறு.

1 பொருள்விலக்

வெங்கோபமால்யானைவிண்பகவேமூலமெனப்
பொங்கோதையையுணர்ந்ததத் தவனும்புத்தேளிர்
தங்கோனைத் துருவுந்தானுனைசாரூப
வெங்கோனவனல்லால்யாரோவிறைநிலையே. (522)

இது பொருள்விலக்கு; (குருகாமான்மியம்.) துறை - கடவுள் வாழ்த்து.

2. காரணவிலக்கு

படைக்கின்றசெழுங்கமலத்தயன்றன்வாழ்நாள்
பற்றுவிடப்பகிரண்டபதவிமாந்தி
யுடைக்கின்றபெரும்புனலினகததாயாக்கை
யொருங்கிழந்தேயலகிறந்தவுயிர்கள்யாவும்
புடைக்கின்றபொழுதினகப்படுத்திராவிப்
புடைக்கனாற்றவகையிற்புறத்தேமீட்டு
மடைக்கின்றநினதுபெருங்கருணைக்கெந்தா
மவையளித்தகைம்மாறென்றறிகிலேனே. (523)

இது காரணவிலக்கு. இதனுள், வாழ்நாள் - பிரமகற்பம். பற்றுவிட - கூட. நாவிப்புடைக்கனல் - உதராக்கினி. துற்றுவகையின்- உண்ணுதகூறுபாட்டிற்கு. புறத்தே மீட்டு மடைக்கின்றது - திருவுதரத்தைவிட்டுப் புறத்தே ஆன்மகோடிகளை வினைவழியடைத்தல். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. துறை-கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்).

போர்செய்யுமுல்லைப்புதுமலர்ச்சிகேள்குறித்த
கார்செய்ததன்றேகயற்கண்ணா—யேர்வகுளத்
தோடுறுந்தார்மாறன்றடரிமலைச்சந்தனப்பூங்
கோடுழுங்கார்செய்தகுறி. (524)

இது காரியவிலக்கு. கார்செய்ததன்று - கார் பருவமுற்றிச் சுபாவத்தாலேபெய்த மழைத்துளியாங்காரியமல்ல; வினைவெய்தாமுன் கொம்புகளுழுதலாற்பெய்த மழைத்துளியின்முல்லைமலர்ந்தது.

இ-ள்) கயல்போன்ற கண்ணினையுடையாய்! நின்னறிவோடும் பூசலைச்செய்யாநின்ற முல்லையரும்பு புதிதாகமலர்ந்தமலர்ச்சி நினது தலைவர் குறித்த பருவக்கொண்மூப் பெய்துசெய்தகாரியமல்ல; அழகிய வகுளமாலிகையையுடைய காரிமாறப்பிரானது றடரிமலையிடத்துச் சந்தனக்கொம்பாலுழப்பட்ட பருவமல்லாக்கார்பெய்துசெய்த காரியக்குறியாமென்றவாறு. ஆகையால் நின்வருத்தந்தணிவாயாகவென்பது பயன். பகுதி - வரைபொருட்பிரிதல். துறை - பருவமறைத்தல்.

அங்கண்மாஞாலத்தமைந்தவணுவுடம்பாய்த்
தங்குமணுவாந்தாத்தானைச்—செங்குன்றார்ச்
சிற்றுயனைநெடுமாலென்றெவனோதிண்ணிதினால்
கற்றார்மொழியுங்கடன். (525)

இது குணவிலக்கு அணு - உயிர். உடம்பாய் - (அணுமயமாகிய வுயிர்கள்) உடம்பாய். தங்குதல் - அதனகத்தந்தரியாமியாயிருத்தல். உரனொடும்நூல்கற்றோரென்க. துறை - கடவுள்வாழ்த்து.

ஆடலமைந்துளராமாறனுமப்புடன்கைக்
கோடலமைவிற்குழைதழையே—நேடல்
சினவுவாவென்றேதிருவாங்கர்வெற்பில்
வினவுவார்வேட்டையுமெய்ம்மெய். (526)

என்பது காரணகாரியவிலக்கு ; என்னை ? வேட்டைகாரணமாகவந்தேனென்பதும், யானையையெய்தேன் எய்தவாளியோடுப்போந்தேனென்னுங் காரியமும் குறிப்பினால்விலக்கினமையாற் காரணகாரியவிலக்காயிற்று. ஆடலமைந்துள்ளார் என்பது மனவலியுங் காயவலியுமுடையாரென்பதாம் ; அன்றி வெறுநிறைந்துளராமெனினு மாம். அமைவில்—மூங்கிலாற் கைசெய்துகொள்ளுதலமில. குழைதழை - குழையுந்தழை தேடல்—தேடல். சினவுவா - சினத்தைப்பெருக்குமயானை. மெய்ம்மெய் என்பது இகழ்ச்சிக்குறிப்பில்வந்த எதிர்மறையடுக்கு. பகுதி - இருவருமுளவழியவனவரவுணர்தல். துறை—அறிவுநாடல் ; நகைத்துறையுமாம். (௨௧௬)

222. கடுஞ்சொல்லாசிதலைமையிகழ்ச்சி
யுடன்படன்முயற்சிதுணைசெயலுபாய
மையம்பரவசம்வெகுளிபிரமகல்
கையறலுடன்விரிகாட்சியுமுளவே.

விலக்கின
பிறிதொரு
(13) விரி
(13)

(எ-ன்) இதுவும் அதனையே விரித்துணர்—றறு.

(இ-ள்) கடுஞ்சொன் முதலாகக் கையறவிறுதியாகக்கூறிய பதின்மூன்றும் விரிந்துவருந்தோற்றமுடைத்து அம் முன்ன விலக்கு என்றவாறு. (௨௧௭)

223. அவற்றுள்,
கடுஞ்சொலினவிலக்குதல்கடுஞ்சொல்விலக்கே

கடுஞ்சொல
விலக்கு

(எ-ன்) இச் சொல்லப்பட்ட பதின்மூன்றினு ளொன்றற்குக் காரணப்பெயருணர்—ற்று.

(இ-ள்) அச் சொல்லப்பட்ட பதின்மூன்றனுள் வன்சொற் சொல்லி விலக்குதல் கடுஞ்சொலவிலக்காம் என்றவாறு. (௨௧௮)

224. ஒழிந்தவுந்தம்பெயருரையிற்கொள்ளும்.

(எ-ன) ஒழிந்த பன்னிரண்டிற்கும காரணப்பெயர் தொகுத துணர்—ற்று.

இதன்பொருள் உரையிற்கொள்க.

ஊன்சுவைக்கொண்டொன்றனுயிர்க்கிடுக்கண்செய்துழல்வீர்
தேன்சுவைக்கொள்பூந் துளபச்செங்கண்மால் — வான்சுவைமேல்
வைக்கும்புலனுடையோர்மன்னுக்கொடுநரகத்
துய்க்குங்கொடுங்கூற்றென்றுண்டு. (527)

இது கடுஞ்சொல்விலக்கு. இதனுள் ஒன்றனுயிர்க் கிடுக்கண் செய்தல - உயிரைக் கூட்டைவிட்டுப்பிரிதது அதனூனை யுண்டல். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணை—பாடாண். துறை—வாயுறை வாழ்த்து.

2. வாழ்த்து விலக்கு

மண்டாரழற்கானமழைதழைகவானபொருள்வாழ்
வுண்டாகநீகுறித்ததொப்பென்று—லண்டர்
மருந்தேம்பறப்புயந்தமால்கடித்தானத்தா
ளிருந்தேதிறந்தேதிதற்கு. (528)

இது வாழ்த்துவிலக்கு. ஆசியெனினும் ஒக்கும். மண்டாரழல்—கொழுந்துவிட்டெரியுமழல். குறித்தது - பொருட்பிரிவு ; இஃ தாகு பெயர். இருந்தேதிறந்தேதமதென்பது இருந்ததனால்வரும் பயனேது இறந்ததனாலுள்ள தாழ்வேதுனக்கென்பதாம். பகுதி-பொருட்பிரிதல். துறை - செலவழுங்குவித்தல.

3. தலைமை விலக்கு

உரவுநீர்ஞாலமுணர்ந்தநிலையாமை
காவிலாநூன்முகத்தாற்கற்று—மாவின்
பிடர்மேற்குனிததருண்மால்போகத்தாய்கற்கப்
படர்மேற்படர்மேற்பமம. (529)

இது தலைமைவிலக்கு. உரவுநீர்ஞாலம்—போக்குவரவுசெய்யு நீரை யுடைய கடல்சூழ்ந்த ஞாலம். ஈண்டு ஞாலமென்பது உயர்ந்தோர். காவிலாநூல் - உண்மைநூல். கற்கப்படர் - ஓதப்பிரிவாயாக. மேற் படர்மேற்பமம் - நீ பிரிநதபின்னர் இவளிடத்துத் துன்பம் பெருக்கு மென்றவாறு. நிலையாமை—யாக்கையும், இளமையும், செல்வமும். பகுதி - ஓதற்பிரிதல் துறை - இதுவுமது.

4. இகழ்ச்சி விலக்கு

என்னுயிர்க்குமென்னுயிரோடொன்றாகியவிறைவா
வுன்னுயிர்க்குமன்புற்றுரைப்பேனசொன் —மின்னுயிர்க்குஞ்
சேட்டாழிமால்பிருதிச்செய்பொருளேபொன்னெனநீ
வேட்டாற்செவிக்கினிதாமே. (530)

இஃ திகழ்ச்சிவிலக்கு. என்னுயிரென்றது தலைவியை. உன்னுயிரென்றதுந் தலைவிதன்னை. செம்பொருள் - உண்மைப்பொருளாகிய திருமால். பொன்னென-செல்வப்பொருளென்றட்கொண்டு. வேட்டால்-நீ விரும்பினல். செவிக்கினிதாமே - பிரிவது முறையன்றென யான் கூறுவது நின்செவிக் கினிமையாய்விரும்புங்கூற்றாகா தென்றவாறு. மின்னுயிர்க்கும் - ஒளியைத்தோற்றுவிக்கும். சேடு - பெருமை. ஆழி-சக்கரம்; அது சேட்டாழியென ஒற்றுமிருந்தது. ஏகாரம் எதிர்மறை. துறை - இதுவுமது.  5. உடன்படல்விலக்கு

சுத்தப்பொருட்கேகநந்தோரையுநோக்தாள்விசும்பிற்
புத்தப்புதுமதியம்பூணித்தான்—முத்தி
வழிக்கிலக்காமாயோன்வடமதுரைவாழ்பெண்
பழிக்கிலக்கார்மன்னுபகர். (531)

இஃ துடன்படல்விலக்கு. இதனுள், புத்தப்புதுமதியம் என்றது பண்டுகாணுத அழலைப்பரப்பும் மதி. பூணித்தல்-தோற்றுதல். முத்தி வழிக்கிலக்காமாயோன் என்பது அரி அயன் அரன் என்னு மூவருள் வீட்டின்பந்தருநெறிக்கு எதிர்நிற்கும் ஸ்ரீமந் நாராயணன் என்பதாம். பெண்பழிக்கிலக்கார் என்பது நீ பிரிந்தால் இவளிறப்பது உண்மையென்றால் இப்பெண்பழிக் கேதுவாவார் யாவரென்றவாறு. பகுதியுந் துறையும் இதுவுமது.  6. முயற்சிவிலக்கு

முத்திரைக்கைம்மாறன்மொழிந்ததமிழ்வேதப்
புத்தமிர்தையுண்டின்புறவேனைப்—பத்தர்காள்
வேறுதமிழ்கேட்பிப்பான்வேட்குமனங்கேட்கிலதைச்
சீறுமெனதின்பச்செவி. (532)

இது முயற்சிவிலக்கு. இதனுள், தமிழ்வேதமென்பது வடமொழியாகிய சுருதியென்னும் முதனூலின்வழிவந்த திருவாய்மொழி; எனவே ஆன்மலாபமாகிய முத்தியைத்தருவது திருவாய்மொழியல்லதில்லையாதலாற் பத்தர்காள்! வேறுதமிழ் கேட்பீரல்லவென்று அவர் முயற்சியைவிலக்குதல் பயன். திணை - பாடாண்சார்ந்தபுறத்திணை. துறை - பழுவல்வாழ்த்து.  துணைசெயல்விலக்

வெறுக்கைக்கிறப்பதுவேவேட்டாய்மின்மின்னார்
வெறுக்கைக்கிறப்பதுவேமெய்யா—லொறுக்கைப்

படையாழியானைபார்த்தன்பள்ளியிற்பட்டகூறு
இடையாமத்தேர்கடாயேகு. (533)

இது துணைசெயல்விலக்கு. இதனுள், வெறுக்கையென்றது பொன். இறப்பது - பிரிதல். வெறுக்கைக்கிறப்பது - அயலாரேசுகை கேட்டுயிர்விடுதல். பகுதி - பொருட்பிரிதல். துறை - செலவழுங்குவிதல். துணைசெயல்விலக்காவது அப்பிரிவிற் கூடன்பட்ட துணையார் போலக்கூறி விலக்குவது

8 உபய விலக்கு

பூண்டநிதிக்கேகப்பொருந்தினையேற்செய்த்தாரு
மாண்டகைநின்பூந்தாரகமார்பமே—காண்டகைக்குக்
கஞ்சனைமுன்வென்றமால்-கார்வனமெல்லியல்கட்
கஞ்சனமோவாறன்றேலநன். (534)

இஃதுபாயவிலக்கு. உபாயவிலக்காவது விலக்குவதனை ஒருபாயங் கூறி விலக்குவது. பூண்டநிதி - மனத்தாற்பற்றப்பட்டபொருள். ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. துறை - இதுவுமது.

9. ஐய விலக்கு

ஐயவிலக்கென்பது ஐயுற்றதனை விலக்குவது:—

கண்ணாகவன்றிக்கயலாகவென்றுகவர்ந்
தெண்ணாததெண்ணியினைமனனே—விண்ணாடெண்
பொற்புடைமால்பாடகத்துப்பூவைமார்மையெழுதுங்
கற்பனையுமுண்டோகயற்கு (535)

இஃதையவிலக்கு. இதனுள், கண்ணாக கயலாக வென்பது கண்ணாகவேண்டும், கயலாகவேண்டும் என்பனவாம். உண்டோவென்னு மோகாரம் ஒழியிசை விண்ணாடு - ஆகுபெயர் இது நிச்சயாந்தமென்னுஞ் சந்தயவலங்காரம் முன்னமிலக்கினுள் விரவியதென்றுணர்க. பகுதி - இயற்கை. துறை - தெரிந்துதெளிதல்.

10 பரவச விலக்கு

பாவசவிலக்கென்பது தன்வசமல்லாமைகூறிவிலக்குவது:

ஈண்டுன்குறிப்பிஃதேயென்றற்பொருளொனுமுன்
மாண்டுய்ந்தவள்போன்மருணீங்கி—மீண்டு
வருநாளின்றேவெனுமாண்மையிலத்தீர்த்தாழிப்
பொருணுவாய்மன்னவனேபோ. (536)

---

கார்வானம் - தொண்டைநாட்டுத்திருப்பதியுளொன்று.

ர்பது பரவசவிலக்கு. இதனுள், மாண்டேயர்தவள்போலம்மருளீங்கி ர்பது நின்பொருட்பிரிவை நீ குறிப்பாலுணர்த்த அப் பிரிவையுள்ளி றந்துபிழைத்தவள்போல மருண்டனளாய் நீ தேற்றத் தெருண்டனளா ன்றவாறு. மீண்டுவருநாளின்றே என்பது பொருள்செயன்முற்றி ண்டுவருநாள் இன்றே என்றவாறு. மையலைத்தீர்த்தென்பது மயலைத்தீர்ப்பது என்வசமன்று உன்வசமென்றவாறு. பகுதி—பொருட் ரிவு. துறை - செலவழுங்குவித்தல்.

வெருளிவிலக்கென்பது வெருளிதோன்றக்கூறி விலக்குவது:— வெருளி விலக்கு

கோட்டானைமுன்னம்பகர்மாயன்கண்ணங்குடியினிற்பைந
தோட்டாற்புனைமென்சுரிகுழலாள்சமர்தோட்டிமதன்
பூட்டாடல்வாளிதனக்கிலக்காகப்புவிபுரத்தல்
வேட்டாய்புரவலநின்போற்றறுகண்ணர்வேறில்லையே. (537)

இது வெருளிவிலக்கு இதனுள், தோட்டாற்புனைமென்சுரிகுழ ாள் சமர் தோட்டிமதன் பூட்டாடல்வாளிதனக் கிலக்காகச் செய்த்தாய ாடுசெய்து காக்கவிரும்பின புரவலனே! நின்னைப்போற் றறுகண்ண ில்லையென்பதனால் வெருளிவிலக்காயிற்று. பகுதி—நாடுகாக்கப்பிரிதல். துறை - இதுவுமது.

12

இரங்கல்விலக்கென்பது இரங்கல்தோன்றக்கூறி விலக்கல்:— இரங்கல் விலக்கு

பொன்னைவிரும்பும்புரவலனேமெய்யடியா
ருன்னவருள்புரிமாலூரகத்து—மின்னிறந்தா
லெம்மனையெங்கென்றகிளிக்கென்னேமற்றேனையன
தம்மனையைக்காட்டியெவன்றான். (538)

என்பது இரங்கல்விலக்கு.

(இ-ள்) இவளைவெறுத்துப் பொருளைவிரும்புங் காவலனே! பிரிந்தகாலத் திவ ளிறப்ப தொருதலையென்றால் எம்முடைய அன்னை எவ்விடத்தாளென்று என்னொடுவினவு கிளிக்கு யான் வேற்றுக்கிளிகளை வளர்த்த அயலாகிய தாய்மாரை அதற்குக்காட்டியதனால் அதற் குண்டாம்பயன் யாதென்றவாறு. என்னேயென்பது இரக்கம். பகுதி— பொருட்பிரிவு. துறை - இதுவுமது.

13.

கையறல்விலக்கென்பது வேண்டியபொருண்மேன்முயலும் ஒழுக்க மின்மைதோன்றக்கூறி விலக்கல்:— கையறல் விலக்கு

சீதரன்பொற்றாளிணையைச்சிந்தித்துரைத்திறைஞ்சா
ராதரித்தமெய்யடியார்க்கன்புறார்—பாதகர்தாந்
தீதுசெயுஞ்சண்டதான்சென்றணுகும்போதிலதற்
கேதுசெய்வாரென்றறியேனே. (539)

இது கையறல்விலக்கு. ஏதுசெய்வாரென்றது அவன்செய்யும் இயமதண்டத்தையநுபவிப்பதல்லால் ஒருசெயலுமில்லை யென்பதாம். திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

ஆகப் பதின்மூன்று மடைவேவந்தவாறு காண்க. (கரு கூ)

225. வேற்றுப்பொருள்வைப்பேதுவென்றின்னவை
மேற்றொடர்ந்தியலும்விதியுமிதற்குள.

(எ-ன்) இதுவும் அவ்வலங்காரம் மேற்கூறிய அலங்காரங்களுடன் விரவிவருமென்ப துணர்—ற்று.

(இ-ள்) வேற்றுப்பொருள்வைப்பும் ஏ து வு ம் என்றுசொல்லப் பட்ட அவற்றினிடத்துங் கூடிவரும்விதியும் முன்னவிலக்கென் னுமிதற் குளவா மென்றவாறு.

எண்ணிறந்தபல்லாயிரகோடியண்டத்து
மெண்ணிறந்தபல்லாயிரமெனக்—கண்ணகன்று
மாழியானெய்தாவணுவுண்டேனுண்டேபடைப்
பூழியான்செய்யாவுரு. (540)

இது வேற்றுப்பொருள்வைப்புமுன்னவிலக்கு. இதனுள், கண்ணகன்றும் என்பது கண்ணகன்றாலும் என்பதாம். படைப்பூழியான்- படைக்குந்தொழிலாகிய முறைமையையுடையான் ; எனவே பிரமனென்பதாயிற்று. ஒழிந்தனவுந் தாமேவிளங்கும். துறை—கடவுள்வாழ்த்து.



மாதாவினன்மூலப்பான்மாந்தாததான்மறைநான்
கோதாதுணர்ந்துணர்த்துமுண்மையாற்—றாதாக்க
ளுள்ளுவதேனுருயிரொன்றொண்டமிழ்மாறுபானென்
றுள்ளுவதேயுண்மையுனை. (541)

இஃதேதுவிலக்கு. தாதாக்கள் - பெரியோர்கள். உன்னைப் பரனென்றுள்ளுவதே யுண்மையெனக் கூட்டுக. ஒண்டமிழ் - ஒள்ளிய தமிழ்; அது திருவாய்மொழி. பரன் - ஸ்ரீமந்நாராயணன், மாந்தாத

லும், உண்மையாலும் என்னும் மூன்றுவதனீற்றும்மை செய்யுள் நாரத்தாற் றொக்கது. ஒண்மையாலென்றும் பாடமோதி ஒள்ளிய ரனத்தாலும் என்க. திணை - வாகை. துறை - தாபதவாகை.

இன்னவையென்பதனூற் பிற அலங்காரங்களுடன் கூடிவருவனவும் அவையும் வந்தவழிக் கண்டுகொள்க. (௪௪0)

௪௯-வது முன்னவிலக்கு முற்றும்.

---

## ௫0-வது அபநுதியலங்காரம்.

226. குன்றலில்சிறப்பினும்பொருளினுங்குணத்தினு
மொன்றியவுண்மைமறுத்துமற்றொன்று
யொருபுகழ்தோன்றவுரைப்பதபநுதி. (3)

(என்) வைத்தமுறையானே யபநுதியென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) குறையாத சிறப்பினதும் பொருளினதுங் குணத்தினது மாகவொருபொருட்கொன்றிய வுண்மையை மறுத்து அவற்றிற்கெதிராய மற்றொன்றாய்ப் பொருட்குயர்புதோன்றவுரைப்பது அபநுதியென்னு மலங்காரமாம் என்றவாறு.

சிறப்பபநுதி

மெய்த்திரைப்பார்மீதினிவிம்மெல்லியலாள்வேள்கணைதைத்
தெய்த்திருத்தல்கண்டுபிரங்கிலா—லத்திகிரி
யண்ணலாரும்பொருளாளான்றிவர்வன்
கண்ணராமாராயுங்கால். (542)

இது சிறப்பபநுதி. இதன்பொருளுரையிற்கொள்க. திணை பெருந்திணைப்பால். துறை - கண்டுகைசோர்தல்.

பொருளபநுதி

அண்டமாயெண்ணிறந்தவாருயிராயாருயிர்வாழ்
பிண்டமாய்த்தெய்வமெனப்பேருலகங்—கண்டதெல்லாந்
தானாகிநின்றதனிப்பிரமம்வெஃகாவுள்
யானுதரித்தவிறை. (543)

இது பொருளபநுதி. பேருலகம் - பெருமையையுடையபெரியோர். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. தெய்வமெனக் கண்டதெல்லாந் தானுகின்றதனிப்பிரமம் என்பது "அவரவர்தமதமதறிவறிவகைவகை, யவரவரிறையவரெனவடியடைவர்களவரவரிறையவர்குறைவிலரிறையவ, ரவரவர்விதிவழியடையநின்றனரே" என்பதனு லறிக. துறை-கடவுள் வாழ்த்து.

3 அபநுதி

மாமதுரப்பாகொழுகும்வாய்மையாய்நாவீறர்
தாமுரைத்தபாத்தண்டமிழன்று—பூமடந்தை
மன்னைப்பாவாதவாதியர்வாய்வஞ்சகச்சொற்
றன்னைச்சுடும்வெந்தழல். (544)

இது குணஅபநுதி. பூமடந்தைமன் - திருமகள்காந்தன். திணை-வாகைசார்ந்தபுறத்திணை. துறை - பனுவல்வென்றி. (கசக)

4. சிலேடை அபநுதி

227. இரட்டுறமொழிதலுமெய்தற்பாற்றே.

(எ-ன்) இது அவ்வபநுதி சிலேடையினும்வரவிவருமென்கின்றது. இதன்பொருள் வெளிப்படை. இரட்டுறமொழிதலாவது சிலேடை.

யாமின்புறக்கிடையாதென்றுலெழின்மாறர்
தாமமகிழ்மாலைதானன்று—காமவே
ளம்பிற்கிலக்காக்குமாறன்றிவாழ்நாளை
வம்பிற்கிலக்காக்குமால். (545)

இது சிலேடையபநுதி; என்னை? இதனுள், மகிழ்மாலையன்றென்பது விரும்பத்தகு மாலையன்று எனவும், வகுளமாலிகையன்றெனவும் வாழ்நாளைவம்பிற்கிலக்காக்கும் என்பது வறிதேகழியும்நாளாக்கும் எனவும், அயலார்கூறும் அலருக்கிலக்காக்கும் எனவும் இரட்டுறக் கொள்ளப்படுதலாலென் றறிக. இலக்காக்குமாதலால் விரும்பப்படு மாலையன்றெனக் கூட்டுக. திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை-தாமம்பெறாது தளர்ந்துரைத்தல்.

மொழிதலுமென்றவும்மையால் இறந்தது தழீஇயதோடும் பிறவலங்காரங்களுடன்கூடிவருவனவுமுள. அவையும் வந்தவழிக் கண்டு கொள்க. (கசஉ)

௫0-வது அபநுதி முற்றும்.

## ௫௧-வது நிந்தாத்துதியலங்காரம்.

—※—

228. இகழ்வதுபோனறலியற்கையின்வண்புகழ்
நிகழ்தரவுரைப்பது நிந்தாத்துதியே.

(எ-ன்) வைத்தமுறையானே நிந்தாத்துதியென்னுமலங்கார முணர்—ற்று.

இதன்பொருளும் வெளிப்படை.

மாயனையொத்திவருமாயவன்றாதாய்
மேயகவிக்கரசன்மேனாளிற்—றூயதெல்லா
முள்ளடக்குந்தாட்டாமரைக்கையான்முண்டமுனி
யுள்ளடக்கிக்கொள்ளுமுவர். (546)

இது நிந்தாத்துதி. இதனுள், கவிக்கரசன் என்றது திருவடி. தாயது - பாய்ந்தது. முண்டமுனி - குறுமுனி. உவர் - கடல். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணை - வாகையைச்சார்ந்தபுறத்திணை. துறை - தூதுவென்றி.

அம்பொன்மணிக்கூடத்தாழியான்பாண்டவர்க்குத்
தம்பமெனவாழ்சகாயனெனல்—பைம்பொன்னும்
விண்ணாடுமூற்றுவர்க்குமேதகுசீரைவருக்கு
மண்ணாடுமாக்கினான்வந்து. (547)

இதுவுமது. இதனுள், பாண்டவர்க்குத் தம்பமெனவாழ்சகாய னெனலென்பது நூற்றுவராலவர் நிலைசாயாநின்றகாலத்துச் சாயாது தாங்குவதாகி யவர்க்கொரு பற்றுக்கோடாகிய துணையாவானென்று சொல்லப்படுவதென்றவாறு. துறை - கடவுள்வாழ்த்து. (௧௪௯)

௫௧-வது நிந்தாத்துதி முற்றும்.

---

## ௫௨-வது புகழ்வதினிகழ்தலலங்காரம்.

—※—

229. மதித்தொருபொருளிணைவழாதுள்ளுறுத்துத்
துதிப்பதுபோன்றிகழ்வதுதுதிநிந்தை.

(எ-ன்) வைத்தமுறையானே புகழ்வதினிகழ்தலென்னுமலங்கார முணர்—ற்று. புகழ்வதினிகழ்தலெனினும் துதிநிந்தையெனினு மொக்கும்.'

(இ-ள்) ஒருபொருளினை வெளிப்படையான் வழுவுதலின்றாக மறைத்துப் புகழ்வதுபோலவும் புலவருள்ளத்தாற் குறித்துக்கொள்ளும்படிக் கிகழ்ச்சியாகக்கூறுவது புகழ்வதினிகழ்வதாம் எனறவாறு.

செகுத்தந்தகன்புரத்தேபிலவாழ்நர்செலத்திரளாய்ப்
பகுத்தங்கம்வென்றருள்பாடகத்தாய்மகவைப்பயந்த
முகுத்தம்புகலும்படிக்கெளிதோவென்முதன்மைக்கொப்ப
வகுத்தெங்கையென்றொருமங்கையைக்காட்டியும்வாழ்வித்ததே. (548)

இது புகழ்வதினிகழ்தல். செகுத்து - கொன்று. பிலவாழ்நர்—மூலபெலப்படை.

(இ-ள்) அந்தகன்புரத்தே பிலவாழ்நர்செலப் படையைத் திரள் திரளாகப் பகுதிப்படுதநிப் போர்வென்றருள் திருப்பாடகத்துப் பாண்டவர்தூதனுவானே! இப்புதல்வனைப்பெற்றமுகுத்த மெனக்களித்த வாழ்வின்பெருமை சொல்லும்படிக்கெளியதொன்றோ? என்றலைமைக்குப் பொருந்துவதாக என்மேல்வைத்த நினதுபுத்தியைப் பரத்தமை செய்வித்ததோடு மங்கைப்பருவத்தொரு தங்கையையுமுண்டாக்கி வாழ்வித்ததெனறவாறு.

இதனகத்துப் பாட்டுடைத்தலைவன் கிளவித்தலைவனுனதுங் காண்க. பகுதி - பரத்தையிற்பிரிதல். துறை - புதல்வன்மேல்வைத்து வாயின்மறுத்தல். (௧௪௪)

௫௨-வது புகழ்வதினிகழ்தன் முற்றும்.

---

## ௫௩-வது மாறுபடுபுகழ்நிலையலங்காரம்.

230. உற்றதோர்பொருளினைமறைத்து றுபழியது
பெற்றிடுமற்றொருபொருள்புகழ்பெற்றி
பொற்புடைமாறுபடுபுகழ்நிலையே.

(எ-ன்) வைத்தமுறையானே மாறுபடுபுகழ்நிலையலங்கார முணர்—ற்று.

(இ-ள்) கருதியபொருளினைமறைத் தது பழியெய்தும்படிக்குப் பிறிதொருபொருளினை வெளிப்படையாகப் புகழுந்தன்மை பொலிவினை யுடைய மாறுபடுபுகழ்நிலையலங்காரமா மென்றவாறு.

பூரித்தெழுந்தபுணர்முலையைப்புல்லிவிடா
வாரித்தரளவடநிரைதாம்—சேரிழாய்
மட்டார்பொழில்வண்பரிசாரமாதவற்காட்
பட்டாதரித்தனவோபண்டு. (549)

இது மாறுபடுபுகழ்நிலை.

(இ-ள்) சேரிழையாய்! இப்புணர்முலையைத்தழுவி யொருபொழுதும் விட்டுநீங்காத நித்திலவடங்கள், மேனாள் வண்பரிசாரமாதவனிடத்து அன்புவைத் தடிமைப்பட்டுப் பெறுதற்கரியவரம் பெற்றனவோ வென்ற வாறு; எனவே எனக் கிங்ஙனம் விட்டுநீங்காதமுயக்கங் கிடைக்கின்றில வால் யான் மேனாள் அவனிடத் தன்புவைத்துத் தவஞ்செய்யாமையா லெனக் குறிக்கக்கிடந்தமை காண்க. பகுதி—வரைவுமுடுக்கம். துறை— புணர்ச்சிபெறுதழுங்கல்.

வாவிப்பூம்பள்ளியின்மேல்வைத்தேகியோர்கணத்துண்
மேவிக்கொணர்ந்தவிரைமெய்ச்சேவ—லாவிமகிழ்
வுற்றருத்திநீங்காவுயர்புகழ்மால்கூடலின்முன்
பெற்றதவம்யாதெகினப்பேடு. (550)

இதுவுமது.

(இ-ள்) வாவியிடத்துண்டாய தாமரைப்பூவாயசயனத்தின்கண் பேட்டினைவைத்துப் பிரிந் தொருகணத்தின்கண்ணே நீர்ச்சிறையெய்தி யாராய்ந்துகொணர்ந்தவிரையை யுண்மைச்சேவலாகியவன்னந் தனது மனமகிழ்வுற் றதனை யதற்கருத்தி விட்டுநீங்காத, வுயர்ந்தபுகழையுடைய மாயோன்கூடலின்கண் எகினப்பேடு முன்னாட்செய்த தவம் யாதோ அறிகிலே னென்றவாறு.

எனவே யானும் அதுபோல எனதுகொழுநரோடும் விட்டுநீங்கா திருக்கத் தவஞ்செய்திலேன் எனக் குறிக்கக்கிடந்தமை காண்க. இது பொருட்பிரிதல். துறை - வரவுதாழ்த்திரங்கல். (௧௪௫)

௫௩-வது மாறுபடுபுகழ்நிலை முற்றும்.

## ௫௪-வது பரிசங்கையலங்காரம்.

—————(௨)—————

231 ஒருதிணைக்கூட்டத்தொருபொருளுயர்த்தும்
பிரிநிலையதுபீடுடைப்பரிசங்கை.

(எ-ன்) வைத்தமுறையானே பரிசங்கையென்னுமலங்காரமுணர்—ற்று.

(இ-ள்) உயர்திணை (அஃறிணை) யென்னு மிரண்டின்கண் ணொருதிணைக்கண் ணொருகூட்டத் தொருபொருளினைப் பிரித் துயர்த்திக் கூறுவது நிலைபேறுடைய பரிசங்கையா மென்றவாறு.

பதிகளினதிபதியரங்கநன்பதியே
நதிகளினதிபதிபகிரதிநதியே
நிதிகளினதிபதிசங்கநிதியே
யெதிகளினதிபதிபூதூரெதியே. (551)

இது பரிசங்கை. இதனுள், அதிபதியென்பது இராசா. நிதி—சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி. எதிகள் - சன்னியாசிகள். பூதூரெதி—எதிராசன். ஏகாரம்—தேற்றம். பா - அடிமறிமண்டிலவாசிரியப்பா. திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து, நதிவாழ்த்து, நிதிவாழ்த்து; "அமரர்கண் முடியு மறுவகையானும்" என்பதனால் முனிவனைவாழ்த்தலுமாம். வாழ்த்தெல்லாம் பாடாணாதலால் இவ்வண்ணங் கூறப்படும். பீடுடைப் பரிசங்கையென்றதனால் தொனியினால் வருவனவுமுள.

முதியநான்மறைமொழிமுதன்மாதலனே
புதியவாயினிமைகூர்புகழுவன்புகழே
வனிதையாயவணறைகமழ்மலர்மகளே
புனிதமாமுனிவரன்புகழ்ப்பராங்குசனே
மதமிராமாநுசன்மதமே
பதமெனத்தருவதும்பரந்தாமமதே. (552)

இது தொனியோடுகூடிய பரிசங்கை. இது தியிலும் மையைய பெய்கு மொட்டுக. பா—நேரிசையாசிரியம். திணை—இதுவுமது. துறை—கடவுள்வாழ்த்து. (௩௪௩)

௫௪-வது பரிசங்கை முற்றும்.

———

## ருரு-வது காவியலிங்கவலங்காரம்.

———:( ):———

232. வெளிப்படக்கிளந்ததன் வினைவினைவிளைபய
னொளித்திடவவைகுறித்தநுதொழிலொண்குறிப்
பளித்திடல்காவியலிங்கமென்றுமே.

(எ-ன்) வைத்தமுறையானே காவியலிங்கமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ-ள்) புலவரால் யாப்பினுள் முதலே வெளிப்படையாகக்கூறப் பட்டவினை யாதொன் றவ்வினைக்கெதிர்ப்பட்டதனு லுண்டான வினையு மவ்வினையாலாயகாரியங்களு மெஞ்சிநிற்க வக்காரியங்களைக் குறித்துண் டாயதொழில் கேட்டோ ருள்ளுறுத்துக்கொள்வதாக வொள்ளிய குறிப்பைத்தருவது காவியலிங்கமென்னு மலங்காரமா மென்றவாறு. காவியம் - கவி. இலிங்கம் - அறிகுறி.

சேதாம்பன்மலர்த்தடஞ்சூழ்சேறைமாயோன்
 சிறைக்கருடன் றனைப்புயத்திற்செகத்தைத்தாய
பாதாரவிந்தமலர்பதித்தகாலைப்
 பணைத்தெழலுமனுவெருவிப்பனுவலாய்ந்த
வேதாவைநோக்கினன்றன்குருவைப்பார்த்தான்
 விண்ணவர்கோன்புகரினைவீடணனும்பார்த்தான்
மூதாதையொடுமுணர்ந்தவுணர்ந்தபின்னர்
 முத்தரொடுந்திருவடிக்கீழ்முன்னினாரே. (553)

இது காவியலிங்கம். இதனுள் அவ்வாறு நிகழ்ந்தமுறை எங்ஙனேயோவெனின், நன்றுசொன்னாய்! சேறைமாயோன் கருடன் றனைப் புயத்திற் பாதாரவிந்தமலர்பதித்தகாலையென்பதூஉம், அக்கருடன் பணைத் தெழலும் எனபதூஉம் வெளிப்படக்கிளந்தவினை. அக் கருடன் சிறகசை யசைத்துச் சண்டவாயுவினையெழுப்ப என்னும் அவ் வினையாலாயவினையும், அச்சண்டவாயுவும் வடவாக்கினியையெழுப்புதலும், மீட்டுப் அவ்வாயுத்தானே சமுத்திரங்களிற் சல மூவட்டெடுத்தாலிற்குநிலைவிட்டு வழிந்துபொங்க வெழுப்புதலுமாம் மூவகைத்தாய வினைவினை பயனெஞ்சி யாப்பினுட் கிளக்கப்படா தொளித்துநின்றன. அவை

குறித்து றதொழி லொண்குறிப்பினை யளித்திடலாவன—மனு பிரமனைப் பார்த்தான், விண்ணவர்கோன் குருவினைப்பார்த்தான், வீடணன் புகரினைப்பார்த்தான் என்பனவாம்; என்னை? அவாந்தரப்பிரளய காலத்துச் சேடனுமிழ்கிற்றோன்றுங் காலாக்கினியுருத்திரன் சொலியா நின்றனனோ? சண்டவாயுவெழுந்து பருப்பதமுதலாயினவற்றைக் களையாநின்றதோ? பிரளயம் வழிச்சோாநின்றதோ? என விளங்கவேணு மென்று மூவருங் கணிதமுணர்ந்தோர்மூவரையு நோக்கினா ரென்னு மொள்ளியகுறிப்பினைச் செய்யுள்கேட்டார்க் களிப்பதாம். ஆகையால் அவர்களா லிது சேடனுமிழ்கிற்றோன்றுங் காலாக்கினியுருத்திரனுமன்று; சண்டவாயுவுமன்று; அவாந்தரப்பிரளயமுமன்று என்று உணர்த்தப் பட்டு உண்மையறிந்து மூத்தரோடுங்கூடிக் கருடனிலுலாப்போதலைக் கண்டு திருவடிகளைத் தொழுதனரென்றமையா லவ்வாறுநிகழ்ந்தமை காண்க. குரு - வியாழம். புகர் - சுக்கிரன். திணை - வாகை துறை— கணிவன்முல்லை. (௧௬௭)

௫௫-வது காவியலிங்கம் முற்றும்.

---

## ௫௬-வது பரிகரவலங்காரம்.

———:(ஃ):———

233. உரைத்ததுபோன்றுறுதொனிப்பலதொடைமொழி
நிரைப்பனவின்றியுநிபுணர்நுட்பமெனுஅ
வாங்குரைத்ததுமாய்நோக்கமைந்தேது
நீங்கவினில்லைமொழிச்சங்கையைவருமொழி
பாங்குறப்பாதுகாத்திடுதிடம்பரிகரம்.

(எ-ன்) வைத்தமுறையானே பரிகரமென்னுமலங்கார முணர்-ற்று.

(இ-ள்) முன்னருரைத்த காவியலிங்கத்திற் றொனிபோன்மிகவும் அருமையுடன் றொனியுடைப் பலவடிதொடர்ந்த பன்மொழி நிரைத்துக் காட்டுவதின்றியும், பன்மொழிநிரைத்துக்காட்டுவதுளதாயும், கற்று வல்லோர் நுட்பமென்றுபெயரிட்டு மூன்றுறுநுட்கூறியதுமுடைமிதுதானே யாய், நோக்கென்னும் இலக்கணத்தோடும் பொருந்தி, யாப்பினுட் காரணம்விட்டுநீங்காத வில்மொழியினுண்டாய சங்கையைக்காரியம்விட்டு நீங்காதுவருமொழி யதற்குரிமையெய்தப் பாதுகாக்குந்திடத்தையுடையது பரிகரமென்னு மலங்காரமா மென்றவாறு.

இன்றியுமென்னும் உம்மை எச்சவும்மையாதலால் உளவாயும் ன்பதூஉம், ஏது என்பதனாற் காரியமென்பதூஉம் எதிர்மறையாக ரிந்தன. நீங்கலிலென்பது முதனிலைத்தீபகமாகக் காரியத்தின்பின் ருங் கொண்டது.

நோக்கென்பது மாத்திரைமுதலாகநிரம்பும் அடிகளாலாம் தாடையுடையவாஞ் செய்யுளடங்கவடியெத்துணையவாயினும் அவை டியுங்காறும் வெள்ளைமையும் பிள்ளைமையுமின்றி வந்தவாக்கியங் கட்டோர் மறித்துநோக்கிப் பயன்கொள்வதோர்கருவியாகிய யாப்புக்கால்; ன்னை? "மாத்திரை முதலா வடிநிலை காறு, நோக்குதற் காரண நோக் கனப் படுமே" என்றாராகலின். அதற்குச்செய்யுள்:—"முல்லை வைந்நுனை தான்ற வில்லமொடு, பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ" என்னும் நடுந்தொகைப்பாட்டினுள் முல்லையென்பது முதலாகக் கானமென்ப ீறாக நாற்சொலியலான் மரபுவழிப்பட்டனவாயினும் பருவங்காட்டிவற் றுத்துந்தோழி பருவந்துடங்கியதுணைகாணென்று வற்புறுத்தினா ளென்பது நோக்கியுணரவைத்தானெனவும், "உதுக்காண் டோன்றுங் துறும்பொறைநாடன்" என்னுந்துணையுந் தலைமகனது காதன்மிகுதி கூறி வற்புறுத்தினாளென்பது நோக்கியுணரவைத்தானெனவும், ஒழிந்த அடிநிலைகாறும் பிரிந்தகால மணித்தெனக்கூறி வற்புறுத்தினாளென்பது நோக்கியுணரவைத்தானெனவும் படும்; என்னை? முல்லையென்றது வைந்நுனையென்றதனால் அவை யரும்பிய தணித்தென்பது பெறப் பட்டது; சின்னாள்கழியின் வைந்நுனையாகாது மெல்லென்னுமாகலின். ஒழிந்தவும் இவ்வாறே நோக்கியுணர்க. முழுதும் ஈண்டுரைப்பிற் பெருகும்.

பரியென்பது பாதுகாத்தல். கரம் என்பது இடம்; எனவே பாதுகாக்குந்திடத்தையுடையது பரிகரமென்றாயிற்று. அன்றியுஞ் சங்கையைப் பரிகரிப்பதாற் பரிகாரமென்பதனை விகாரவகையாற் பரிகா மென்றாரெனினுமாம்*

அற்றேல், காவியலிங்கத்தோடு பரிகரத்திற்கு வேற்றுமையாதோ வெனின் காரண காரிய மிரண்டு மெச்சமாய் அவற்றாலாயதொழில்க

* இவ்வலங்காரப் பெயர்விவரணம பிரதிகளிலெல்லாமிருந்தபடி பதிக்கப் பட்டது. பின்னதன் பிழையின்மை ஆராயத்தக்கது.

ளவற்றினையறிவிக்குங் குறியையுடைத்துக் காவியலிங்கம்; அவையிரண்டும் வெளிப்படையாயும், அவற்றாலாயதொழில்கள் பிறவற்றையறிவிப்பன பரிகரமாம்; இவை தம்முள் வேற்றுமையென்றறிக.

அடைக்கலமென்பவர்க்கருள்சீரரங்கத்தெம்மா
னுடனுவாவினைக்கடவுநிழலைக்காய்கட்
கடைக்கனல்வேலையைவளைப்பக்கன்னதானக்
கடுவளிவெற்பினைக்கிளைப்பக்காடதான
மடைக்கலுழிதிசைதிளைப்பவிலங்கைவேந்தன்
வானவர்கோனமனுப்புகர்பொன்மறையோற்சார
நடைக்கணிதமுணர்த்தவுணர்ந்தனராய்முந்நீர்
நானிலத்தோரெனமனத்துணடுக்கற்றாரே. (554)

இது பரிகரம். இதனுள், காரண காரிய மிரண்டும் வெளிப்படையாயும், பிறிதோர்பொருளை யறிவித்ததெங்ஙனேயோவெனின், நிழலைக்காய்கட்கடைக்கனல் வேலையைவளைப்ப, கன்னதானக்கடுவளி வெற்பினைக் கிளைப்ப, காடதான மடைக்கலுழி திசைதிளைப்ப வென்பன மூவகைப்பட்ட காரணகாரியங்கள்; அவை பிறபொருளைக் குறிக்கொள்ளும்படி அறிவித்ததாவன:—முன்னங்கூறினபடியே அவாந்தரப்பிரளயகாலத்துச் சேடனுசியிற் சுவாசத்திறன்றோன்றிய காலாக்கினியுருத்திரன்முதலாய மூன்றுமெழுந்ததோவென விளங்கச் சார்ந்தாரென வுட்கொள்ளும்படிக்குப் பிறவற்றையறிவித்தவாறு காண்க. வளைப்பவென்பது வளைத்தெரிப்பவென்பதாம். ஒழிந்த அகல முறையிற்கொள்க. ஆதலால் காவியலிங்கம் அருமைத்தொனியுடைத்தென்பதாயிற்று. (௧௪௮)

234. அதுவே,
குறிப்பினுந்தொழிலினுந்தமிகுறிக்கொளலாய்
வெளிப்படலொடும்விரவியும்வரும்வகைத்தே.

(எ-ன்) மேலைச்சூத்திரத்துள், "நுட்பமெனாஅ, வாங்குரைத்ததுமாய் நோக்கமைந்"தென்றார், அவை யிவையென்பதுணர்—ற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்டபரிகாரம் முந்துநூலாசிரியர் நுட்பமெனப்பகுத்துத் தம்மாற் புணர்க்கப்பட்டநூலகத் ததற்கொருவருள்ளக்குறிப்பினாலுந் தொழிலினாலுங் குறிப்பாதல் தொழிலாதல்

துறிக்கொள்ளவருமென்றார், அவ்வாறே பல தொடைமொழியுளையாது நிலைமொழித்தொடரொன்றால் வருமொழித்தொடரொன்றினோடு நோக்கமைந்து அவை தம்மிதம்மி குறிப்பிற்கொளவருதலோடுங் . குறிப்பும் வினையும் ஒருசெய்யுளகத்து விரவியுநின் றுணர்த்துங்கூறுபாடுமுடைத் தென்றவாறு.

1 குறிப்பு நுட்பம்

வடிக்குஞ்சுடரிலைவேலண்ணலேகைவறியருயிர்
பிடிக்கும்பொருட்குப்பிரிவதுநீஇனையவர்போலுநர்வென்
றிடிக்குந்துணைத்திருமாலிந்தலூர்த்திரையெற்றுகரைத்
துடிக்குங்கயலையுநீரையுநோக்கினள்சோர்குழலே. (555)

இது குறிப்பு; என்னை ! நீ பொருண்மேற்பிரிவதை யானுணர்த்த வுணர்வுற்றுத் திரையெற்றியகாலத்துக் கரையிற்கிடந்து துடிக்கும் நீரைவிட்டுநீங்கிய கெண்டை பிழைக்குமெனிற் றலைவர்நீங்கியகாலத்துத் தனதுயிர்பிழைக்குமென நோக்கியதெனத் தலைமகள்குறித்த குறிப்பினைக் குறிப்பிற்கொளவந்ததென் றுணர்க. நீ யென்பதும் யானென்பதும் சொல்லெச்சம். கைவறியர் - பொருளிலலாதார். உயிர்பிடிக்கும்பொருள்- சீவனைப் பிழைப்பிக்கும்பொருள். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. பகுதி - பொருட்பிரிவு. துறை - பிரிவுகேட் டழுங்கல்.

2 தொழில் நுட்ப

பாலாய்வழங்குமழைநீரியாவையும்பையுளெய்த
வாலால்வரையைக்குடைகொண்டமால்வல்லவாழிறைவா
குரலாய்வரிவண்டுகிண்டாக்குமுகைக்கொழுநனைமென்
விரலால்விரித்திளமாம்பொழில்வீசினண்மெல்லியலே. (556)

இது தொழில்; என்னை ? குரலென்பதோரிசையைக் காலத்திற் கேற்ப வாராய்ந்தெழுப்பும் பாட்டையுடைய வண்டுமலர்த்தப்படாத வாம்பலின் கொழுவியமுகையை மெல்லியவிரலான் மலர்த்திமாஞ்சோலையி னிடத்தே யெறிந்தாளெனவே யாம்பன்மலரு மிரவிலைகண் மாம்பொழி லின்கண் வருவானாகவெனத் தொழிலா னிரவிற்குறிக்குநேர்ந்துரைத்தா ளென்பது அறிவித்ததா லென்றறிக. பையுள் - துன்பம். குரல் - குரலென்பதோ ரிசை. ஒழிந்த அகல முரையிற்கொள்க. பகுதி - இரவிற்குறி. துறை - இரவிற்குறிக்கிடங்கூறல்.

காலையிலெழுகதிரவன்குடகடற்புகு
மாலையிற்கடைநாளினைவழிப்படுத்தி
யிடைநாளின்றி வெமுறவருதலு
முதலுளெதிர்கொளுமுழுநிலாமுன்றிற்
சதுமறைப்பொருளாற்றமிழ்மறைகொழித்துரை
மதுவிரிமகிழ்த்தார்மாறர்வண்குருகூர்க்
கற்பனைகடைப்பிடித்தற்புடைமகளிர்
பற்பலர்புகழ்பொறைப்பைந்தொடிநமதில்
லறங்காவலனையகற்று
புறங்காவலனுக்குதல்புன்மைத்தே. (557)

இதுவும் பரிகரம். இதனுள், கடைநாளென்ற திரேவதியை. இடைநாளின்றி என்பது துன்பமுறுநாளில்லையாக. முதனுள் - அச்சுவதி. கடைநாளினை வழிப்படுத்தினது - கடத்தினது. எதிர்கொள்ளுதல் - வழிபடுதல். கடைநாளினைக்கடத்தி இடையுநாளின்றித் தன்னிடத்தின்பமுறவருதலு முதனுளுடாதெதிர்கொள்ளு முழுநிலா வெறிக்குமுன்றிலெனவே, நீயும், பரத்தையர்பலரையுந்தோய்ந்து பண்ணுட்கழிந் திறுதியில் இற்பரத்தையிடத்திற்றங்கி யவளையுநீங்கி நின்னில்லின்கண்வந்த இல்லறக்கிழவனைத் துன்புறுத்தி நமது கடைகாவலனுக்காது வாயினோர்ந் தகங்காவலனுக்குவதே நினது பொறையுடைக் கற்பிற்குரியதொழில், எனதுள்ளக்குறிப்பு மஃதேயென நோக்குறக் கூறினாளாகலிற் கூற்றுங் குறிப்பும் விரவிய பரிகரம். பகுதி-பரத்தையிற் பிரிதல். துறை - மதிநிலையுரைத்து வாயினேர்வித்தல்.

புன்னைப்பொதும்பர்ப்புதுவதுவாகப்புணர்ந
ளுன்னைப்பிரியேமெனவுரைத்தா—ரென்னப்ப
னுகவரையாரென்றுனுடுகாத்தற்பொருட்டா
லேகவரையாரைவெறுத்தென். (558)

இதுவும் பரிகரம்; என்னை? நாகவரையாரென்றாற் பிரியேமென்ற வரும் பிரிவரென்றதற்குத் தொனி யதனகத்துக் காணப்படும். அஃதாவது நாகத்திற்கு நாக்கிரட்டையாதலில் இவரும் நாவிரண்டுகூறுவரென்று இயற்பழித்ததாம். பகுதி - நாடுகாவற்பிரிதல். துறை - தோழியியற்பழித்துரைத்தல்.

காதலென் றறிவைக்கவற் றிருணிலையையும்
போதெனப்புறவிருடிதிழைநிலையையுந்
தூது சென் றனமேது தித் துரீயுரைத்தி
மூது ணர்வெனுமுழுமதியுடன்
மாதர்கூர்முகமதிமகிழ்மார்பினர்க்கே. (559)

இதுவும் பரிகரம். இதனுள், போதெனப் புறவிரு டிதிழையென்பத ஞல் அறிவைக்கவற் றகவிருளையுமெனக் கூட்டியுரைத்துக்கொள்க. இது பெண்பாற்கூற் றுப்பெருந்திணை.* துறை - தூதொருப்படுத்தல்.

தாதிவர்தளிநறைததும்புபொற்றுமரை
மாதுறைதிருமறுமார்பினரங்கனைப்
புனல்படிந்தீர்ந்தண்பூம்புனலூரன்
றனதுணர்வுறவருச்சனைபுரிசால்பினிற்
கருனைமுக்கனிபயில்காமர்பாலடிசில்
பொருவருநளபாகத்தவாய்ப்பொலிதரப்
பொற்கலத்தருத்தியபுனிதநன்சேட
மிற்செறிவிருந்திஞேடிருந்தினிதருந்திப்
பொலந்துகிலரையுடீஇப்புனைமலர்புனைந்திம
சலந்தனிற்குழைத்தசெஞ்சாந்தமும்புழுகு
மான்மதக்குழம்பின்மார்புறமெழுகிக்
கானமர்பஞ்சவாசமுங்கவுட்கொண்
டெமிழ்தருகாலையின்மாலைவந்துறதலு
மமிழ்தெனுமின்னிசைக்காகாமாகிய
மாடகயாழ்தழீஇவார்தலாதியதொழிற்
பாடலைமடவாருடன்பயின்றிடலு
மொன்றியவேட்கையூர்தாவெழுந்தொருசிறை
மன்றன்மாதுளமலர்மணங்கொளமடந்தையுந்
தொண்டையங்கனியினைத்துதுளங்கனியில்லைத்
துண்கவென் றறுகிளிக்கூட்டினளாகி
யென்றாழ்தழைபாவிருண்மாச்சிறையுட்
பாடமைசேக்கைப்பள்ளியுளாக

வாடவன்றொடர்வுழித்தொடர்பவரயலெழ
விடுஞ்சுடர்நாகவிழுமணிநாயகக்
கொடும்பூண்மருங்குதாழ்கொம்பரினூற்றிக்
குரவையாடலிற்கோவலர்க்கிறைவனைப்
பரவுதற்கெழுகெனப்பாங்கரிற்செறியக்
கதிர்வளைத்தடக்கையுங்கடகத்தடக்கையுந்
தழுவலும்பானந்தலைதடுமாற
வேரிவான்றேன்மெய்யுயிரொன்றிய
வீறில்பேரின்பத்தின்றியமையா
நாணுநிறையுநனிதுறந்தனபோற்
பூணுந்துகிலும்புறம்போமொழுக்கிற்
றுணைமுலைமுகத்தினுந்தோளினுந்துயின்றுங
கிறந்தவர்பிறந்ததொன்றெனத்துயினீத்தெழ
நீத்தநுண்ணுணர்வுதன்னிலையிற்றோன்றலும்
னிதமுற்றனராய்ப்புகுமுகம்புரிதலிற்
குறிப்பிற்குறிப்புணர்கொள்கையிற்கோதாய்
மறித்துனக்கிணையெவரெனவாழ்த்தியதொடு
மூழ்வினையினைக்குறித்துவப்பின்
வாழியென்றுரைத்ததெஞ்ஞான்றும்வாழியவே. (560)

இதுவும் பரிகாரம். என்னை? ஒன்றியவேட்கை மாதுளமலர்மணங் கொள என்றமையானும், மடந்தையும் உண்கவென்று கிளிக்கூட்டினளாகி என்றமையானும், மாலைவந்துறுதலும் மணமகன் புணர்ச்சிமேல் வேட்கையனாகி முதலே யதரபானத்தின்மேன் மனம்வைத்த குறிப்பினை யவள் குறிகொள்வதற்கும், அங்ஙனங் குறிக்கொண்ட தலைமகளும் தனக்கு மதுவே குறிப்பென்பதனைத் தலைவனுங் குறிக்கொள்வதற்கும் கொவ்வைக்கனியினைத் தாதுளங்கனியினையொத்த தனது அதரத்தில் வைத்து வருகவென முன்கையில்வருங் கிளிக்கூட்டினமையானும், அன்றியும் என்றாழின்கிரணங்களுமுழைந்தறியா விருண்மாக்கா மாலைக் காலமாதலின் மிகவு மிருளுமாகலின் அவ்விருணீங்கப் புணர்ச்சிக் காலத்து மார்பிற்பூணுமிழிரோமெனக்கழித்த நாகமீன்ற மாணிக்க நாயகப்பதக்கத்தை நித்திரைக்கியற்றிய சயனத்தில்வையாது மருங்கு தாழ்ந்த கொம்பரினூற்றி என்றமையானு முணர்க. இவர்தல்—பாத்தல்.

த்தல் - துளித்தல். ஈர்ந்தண்பூம்புனல் - மிகவுங்குளிர்ந்த பூவோடுங் ப புனல். தனதுணர்வுற - தனதான்மஞானம் அரங்கநாதன் திரு ளிலே பொருந்த. அருச்சனைபுரிசால்பினில்–பூசனைபுரியுஞ்சோடச ாரத்தின் அமைதியோடும். கருனை - பொரிக்கறி. முக்கனி–வாழை மா வென்னும் முக்கனி. பொருவரும்–ஒப்பற்றவாகும். இற்செறி ந்திறனொடிருந்தினிதருந்தி - தமரோடுந் தினநிலைக்களமாகிய அவ டும் உண்டதோடும் புதுவதாக இல்லின்கண் வரும் விருந்தினொடு மகிழ்ந் தமிர் திருந் தினிதாகத் தய்த்து. இமசலம் - பனிநீர். சவாசம் - தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கர்ப்பூரம். ிழ்தருகாலே - தம்பர்போட்டகாலே. வார்தலாதியதெழில் - வார்தன் நற் பட்டடையிருயதொழில்க ளெட்டின். மாடகயாழ் - முறுக் ணியையுடைய யாழ். ஒன்றியவேட்கை–இருவர்க்கும் ஒருதலைமைத் கிய வேட்கை. ஊர்தர - மிகுதலால் ஈறில் பேரின்பம் - புணருந் ாறும் புணருந்தோறுந் தெவிட்டாது புதுவதுபுதுவதாம்*பே ரபம். நீத்தறுண்ணுர்வுதன்னிலையிற்றோன்றலும்–புணர்ச்சிக்காலத்து ரவுகனவாகநீங்கின இருவரறிவும் பண்டுபோல் நனவானகாலத்தில். ரிதமுற்றனராய் - பவித்திரம்பெற நீராடியபின்னரும். புகுமுகம் ிதலின் - அப்பவித்திரமெய்தியபின்னருந் தலைமகன் விரும்பிநோக்கிய ாக்கத்தைத் தலைமகளும் விரும்பிநோக்கியிருந்தகாலத்து. குறிப்பிற் றிப்புணர் கொள்கையிற் கோதாய் - உனதுள்ளக்குறிப்பால் என ள்ளக்குறிப்பினைத்தெளியப்பட்ட விருப்பத்தையுடையகோதையே. ரித்துனக்கிணையெவரெனவாழ்த்தியதொடும்-நினக்கு நீயே இணையென ாழ்த்தியதோடும். ஊழ்வினையினைக்குறித்துவப்பின், வாழியென் ரைத்ததெஞ்ஞான்றும் வாழியவே–இறைவனே நீயும் ஊழ்வினையாகிய கய்வத்தை வாழ்த்தியவாழ்த்தும் எக்காலத்தும் வாழக்கடவதென்ற ாறு. அழிந்த அகலம் உரையிற்கொள்க. கைகோள் - கற்பு. பகுதி– ில்வாழ்க்கை. துறை–புணர்ந்துடனமர்ந்த புரவலன்செய்கையையுணர்ந் ததிர்பாங்கி யுவகையினவாழ்த்தல். (௧௪௧)

ஸ்ரீசோடவது பரிகரம் முற்றும்.







## ருஎ-வது உறுசுவையலங்காரம்.

———:0:———

285. பண்புடைச்சுவைபலபகர்ந்தவற்றினுளோ
ரொண்சுவையினையிருத்துரைப்பதுறுசுவை.

(எ-ன்) வைத்தமுறையானே உறுசுவையென்னும் அலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) உலகத்துள்ள பலபண்புடை மதுரமாகியவற்றை பொன்றினுக்கொன்றுயர்வுடையனவாக அடைவே எண்ணி, ஈற்றில் ஒரு முக்கியமானமதுரத்தை யெண்ணியயாவையினும் மிகுந்தமதுரமுடைத் தெனக்கூறுவது உறுசுவையென்னும் அலங்காரமா மென்றவாறு வட நூலார் சாரமென்பது மிது.

நால்வகைத்தாய்த்தோற்றநயந்தபூந்தேன்சுவையிற்
சால்புடைத்தாமுக்கனியுட்சார்சுவையின்—ஞாலமெலா
மிக்கதெனுமான்பாலுள்வீழ்சுவையினும்விரும்பத்
தக்கதெனும்பஞ்சதாரையினி—லக்கடல்வாய்த்
தோற்றமுறும்புத்தேளிர்தப்புரவாந்தெள்ளமுர்தி
னேற்றமுறமின்சுவைத்தாமீதெனுந்—தேற்றமதாங்
கற்றவர்கொளுவீறன்காரிதருமாறன்
சொற்றமிழ்ப்பாநல்குஞ்சுவை. (561

இதனுள் அவ்வாறுவந்தமை காண்க. இஃதெட்டடியான்வந்த பஃறொடைவெண்பா. (கறு

ருஎ-வது உறுசுவை முற்றும்.

———

## ருஅ-வது விரோத்தியலங்காரம்.

———(::)———

286. முதன்மைபதாமொருமுக்கியம்பிறிதொரு
இதமுறுமுக்கியத்துடன்சொரதெனில்
விதமுறமுக்கியமன்றெனல்விரோத்தி.

(எ-ன்) வைத்தமுறையானே விநோத்தியென்னும் அலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) யாதாயினுந் தலைமையதா மொருமுக்கியப்பொருள் உண்மையாகிய பிறிதொருமுக்கியப்பொருளோடும் பொருந்தாதெனின் முக்கியமல்லவென்று வேறுபடுத்திச்சொல்லுவது விநோத்தியென்னும் அலங்காரமா மென்றவாறு.

சொல்லாற்பொருளாற்சுவைபெற்றலங்கார
மெல்லாமிழுக்கின்றியன்றாலும்—புல்லாணி
மன்னிலங்கும்பேரூர்வளம்பரவாப்பாவினையே
நன்னிலங்கைக்கொள்ளாநயந்து. (562)

இது விநோத்தி. நன்னிலம் என்பது நல்லபூமியின்கண் ணுள்ள பெரியோர். சுவைபெறுதல்—இனிமையுடையவாதல். இழுக்கின்றியன்றாலும் என்பது வழுவின்றிநடந்தாலும் என்றவாறு. கைக்கொள்ளா — அதனை ஒருபொருளாகக்கொள்ளா. புல்லாணிமன் - தெய்வச்சிலைப் பெருமாள். பேரூர் - பரமபதம்.

சொல்லினாலும் பொருளினாலும் இனிமையுடைத்தாய் எப்பெற்றிப் பட்ட அலங்காரங்களும் இழுக்குதலின்றிநடைபெற்ற யாப்பெனினும், அதுவும் பரமபதத்தையே வாழ்த்தும் யாப்பெனிற் கைக்கொள்வதுவே யன்றிப் பிறிதொருபொருளைவாழ்த்தினகாலத்துப் பெரியோர் அதனைக் கைக்கொள்ளாரென முடிக்க. திணை - பொதுவியல். துறை - பொருண் மொழிக்காஞ்சி.

மெய்ப்பொருளைப்பரவுவார் இவ்வுலகிற் பிறிப்பதுமின்றி வீட்டின்ப மெய்துவர், பிறபொருளைப்பாடுவோர் இவ்வுலகிற் பிறந்தும் இறந்தும் உழலும் நிலையாமையை யெய்துவர், என்பது இதன்பயன். (கூ௫௧)

ருச-வது விநோத்தி முற்றும்.

---

## ருரு-வது சமுச்சயவலங்காரம்.

——:(௦):——

237. ஒன்றினுக்கின்பமுந் துன்பமும்பலபல
வொன்றியதாகவுரைப்பது ஞ்சமுச்சயம,

(எ-ன்) வைத்தமுறையானே சமுச்சயமென்னும் அலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) ஒருபொருட் கின்பமாதல் துன்பமாதலுற்றதை யொன்றொன்றாயேகூறாது பலவாகக்கூறுவதுஞ் சமுச்சயமாமென்றவாறு.

கடிதுமலர்ப்பாணங்கடிததனிற்றென்றல்
கொடிதுமதிவேயுங்கொடிதாற்—படிதழைக்கத்
தோற்றியபாமாறன்றுடரியின்மானின்றுயிரைப்
போற்றுவதார்மன்னுபுகல். (563)

இதனுள், துனபஞ்செய்வதை யொன்றாயேகூறாது பலவாகவே திரட்டிக்கூறியவாறு காண்க. இதன்பொருள் உரையிற்கொள்க. பகுதி-பொருட்பிரிவு. துறை - ஆற்றாமைகூறல்.

மேலே "உரைப்பதுஞ்சமுச்சய"மென்ற வும்மையா லின்பமுந் துனபமும இருவயிற் பிறந்ததாகக் கூறுவனவும் முச்சயமா மென்றவாறு.

காரிதருமாறன்காசினிமீதேயுதிப்ப
வாரியர்மெய்பூரித்தகமகிழ்ந்து—பேரின்ப
முள்ளத்துடிக்குமுறுவலத்தோள்வாதியர்மெய்
துள்ளத்துடித்ததிடத்தோள். (564)

இஃ தின்பமுந் துனபமும் இருவயிற் பலவாய்ப்பிறந்த சமுச்சயம். திணை - பாடாண். துறை - அறமுறைவாழ்த்தினுள் அடங்கும்.

ஆசுரியர்கோத்திரத்துளாதிபனலாய்ந்தமதந்
தேசுறலாலேகதண்டர்செப்புமதம்—பாசுபதர்
வல்வாய்மதமருகர்வாய்மதம்வேதாந்திமத
மெல்லாமொளிமட்கின. (565)

இதுவுமது. திணை - வாகை. துறை................இதன்பொருள் உரையிற்கொள்க. ஆசுரியர்கோத்திரத்துளாதிபன் - எம்பெருமானார்.

இன்னும், அவ்விலேசானே இன்பமாதல் துன்பமாதல் ஒருவர்பால் இருவயிற்றேன்றும் இரண்டாஞ்சமுச்சயமு முள.

உத்தமப்பேரின்பமுணர்த்துந்தமிழ்மறைப்பா
வித்தகத்தாற்றந்தவிதிநினைந்து—முத்தி

பலவயிற்றேன்றுது

யளிக்குமகிழ்மாறனருண் முகத்தைக்கண்டு
களிக்குமனம்போலவுமென்கண். (566)

இஃது திரண்டாஞ்சமுச்சயம். இதன்பொருள் உரையிற்கொள்க. திணை—பாடாண. துறை—அறுமுறைவாழ்த்தினுள் அடங்கும். (சுடுஉ)

ருசு-வது சமுச்சயம் முற்றும்.

---

கூ0-வது உதாத்தவலங்காரம்.

238. உயர்வறவுயர்ந்ததைவியந்துரைக்குமதே
மயர்வறவுதாத்தமெனவகுத்தனரே.

(எ-ன்) வைத்தமுறைமையானே உதாத்தம் என்னும் அலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) யாதாயினும் உலகிற்றனக் கிணையில்லாதுயர்ந்தபொருளை யுயர்த்தியுரைப்பதே மயக்கமற உதாத்தமென்னும் அலங்காரமாமென்று கூறுவர் புலவ ரென்றவாறு.

உயர்ந்ததை வியந்துரைப்பதேயெனத் தேற்றேகாரம்புணர்த்தலை யான் உயராததை வியந்துரைப்பது அதிசயமாமெனக்கொள்க. (கருக

239. அதுவே,
பொருள்கொடைகாந்திபொற்புறுகற்பே
பெருவிறல்செல்வமனையவற்றொடும்பெருகும்.

(எ-ன்) இதுவும் அவ்வலங்காரத்தை வகுத்து விரித்துணர்-ற்று

இதன்பொருள் உரையிற்கொள்க. (கருச

240. அவற்றுள்,
பொருளினைமிகுத்துரைப்பதுபொருண்மிகுதி. பொரு

(எ-ன்) பொருண்மிகுதியை யுணர் - ற்று. உதாத்தமெனினு மிகுதியெனினும் ஒக்கும்.

இதன்பொருளும் உரையிற்கொள்க.

எழுறமன்னுயிரொடுபெறற்குரித்தோ
தாமரைப்பொகுட்டிற்சதுமுகனியற்று
நால்வகைத்தோற்றத்தெழுபிறப்பவற்று —
சால்புறுதக்கனதகாதனவறியா
வோரறிவுடைப்புன்முதலியவுயிரல
லீரறிவுடைநந்தினமுதலியவல
மூன்றறிவுடைச்சிதன்முதலியவுயிரல
நான்கறிவுடைநண்டாதியபிறப்பல
வையறிவுடைமாவாதியதாமல
மெய்யறிவெனவேவிதிவிலக்கறிவா
றாறறிவுடைத்தாமரும்பெறன்மக்கட்
பேறதுகிடைத்தபெருமையிற்சிறந்தும்
பிரமனைப்பயந்தபிரமமென்றறிந்து
மரணிரப்பொழித்தவடிகளென்றறிந்து
மேவலிற்படைத்தம்பிருவருளன்றியுங்
காவலிலைகெனத்தெனக்கருணையுற்றெடுப்பா
னனந்தயோனியினணுத்தொறுமணுவாய்
நணந்தலைவியாத்திரபாநதையறிந்து
மூலமென்றுரைத்தமொழியடங்காமுனத்
தோவிடர்கடிந்தசோதியென்றறிந்தும்
பொருளுரைதணுதுபுன்பெயரெனப்புவிமேன்
மருளுரைநடாதியமாழையனமகவுட
னிங்குளனோவெனச்செற்றியதுணைத்
தங்குளனாகியநரதிறலறிந்து
மாவலிமுன்பொருமாண்குறளாகிமண்
மூவடிவாங்கிமுழுதுலகையுமிரு
சேவடியிற்றாய்ச்சேணுறநிமிர்ந்து
குறைதருகெனவவன்கொற்றம்வாங்கிச்
சிறையினிலிருத்தியசெம்மலென்றறிந்துந்
தீதறுமுனிவனிற்றிருநகர்ச்செல்வுழிக்
கோதமன்மானினிகொண்டகற்படிவ
மாதியிற்பொலங்கழலணிபெறவனைகழற்

போதினன் பூழியிற்போக்கியதறிந்து
மிருபதுங்காத்திறமேதிபற்றினனுப்
பொருவலிநிருதனைப்பொருதுகொன்றதற்பின
றெய்வக்கற்புடைத்திருவொடும்பாதனன்
றய்தற்கெய்தியவொருவனென்றறிந்து
மின்னுச்சொற்கிளைத்திளிவரலெய்தத்
தன்னுண்டகைமைதலைப்படப்பழித்த
மன்னுகியசிசுபாலன்முடியினைக்
கொன்றுழியிறைக்கொய்தவனுன்மா
வங்காட்சாணினுட்புகக்கொளலறிந்தும்
பரவுபொற்றுளிற்பார்த்தனன்றணிமல
ரான்முடிமேற்கொண்டணிந்ததையறிந்துந்
தென்னாங்கேசன்புகழினைச்செம்மையி
னுன்னினராகியூழ்வினையொரீஇ
யுளநெகநெகப்புறம்புரோமம்பொடிப்ப
வளிநன்கண்ணீரடிக்கடிததும்பக்
கருமணிவண்ணங்காட்சிசெய்தனரா
யெட்டெழுத்ததனையினிமையினோதிச்
சிட்டர்தஞ்சேவடிசென்னியிற்சேர்த்தி
நமன்றமர்முடிமேனடித்தடிபெயர்த்துத்
தமஞ்செறிநிரயந்தனைப்பாழ்படுத்தி
மதனவிகாரமருங்கறக்களைந்து
வெஃகுளியுமயக்கமும்வேரறவீழ்த்திட்
டாராவின்பமமைவரமாந்தித்
தீராப்பிறவித்திரையினைநீந்தி
யேனையவுயிர்கட்கெல்லாமிரங்கு
ஞானநற்றுணையாநன்னெறியுறாது
பிறிதொருதெய்வம்பேணு
நெறியினர்புன்னெறிநினையுங்காலே. (567)

இது பொருண்மிகுதி. இதன்பொருள் உரையுட்கொண்டுணர்க. நண்டுரைப்பிற் பெருகும். நம்பெருமாள் மும்மணிக்கோவை விரித் துரையுள் விளங்கும். துறை - கடவுள்வாழ்த்து. (௩௫௬)

241. கொடைநலன்மிகுந்துரைப்பது கொடைமிகுதி.

(எ-ன்) கொடைமிகுதியுணர் - ற்று.

இதன்பொருளும் உரையிற்கொள்க.

படைக்கெதிர்நிற்பவரின்றுகுநேமிபரித்தபிரான்
கொடைக்கெதிர்நிற்குங்கொடையுளதோமறைகூறுமுண்மைத்
தொடைக்கெதிர்நிற்பக்கவிசொன்னமாறற்குச்சொன்னசொன்ன
நடைக்கெதிர்நிற்பவுபயவிபூதியுநல்கினனே. (568)

இது கொடைமிகுதி. இதனுள், மறைகூறுமுண்மைத்தொடைக கெதிர்நிற்பவென்றது பரத்துவத்தையும், ஆசிரியினையும், பூதத்தையும் உபநிடதங்கோத் தடைவேசொன்ன வுண்மைவாக்கியத்திற் கொப்ப வென்றவாறு. சொன்னசொன்னநடைக்கெதிர்நிற்ப வென்றது சொன் னலத்தினெழுகலாறறிற்கும், பொருணலத்தினெழுகலாற்றிற்கும் பொருநத வென்றவாறு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. (கடுசு)

242. காந்தியைமிகுத்துரைப்பதுவேகாந்தி.

(எ-ன) காந்திமிகுதி யுணர்—ற்று.

இதன்பொருளும் உரையிற்கொள்க.

வேணுக்குழலிசைத்தவேங்கடமாலைப்புலவி
ராணுத்தமனென்பதாரறியார்—நாண்மலருட்
பெண்ணுத்தமியிறையும்பேர்கிலாள்பேரழகைக்
கண்ணுற்றவன்மார்பகம். (569)

இது காந்திமிகுதி. முன்னையது பாடாண்சார்ந்தபுறத்திணையிற் கொடுப்போரேத்திக் கொடார்ப்பழித்தல். பின்னையது கடவுள்வாழ்த்து. ஆணுத்தமன - புருடோத்தமன். பெண்ணுத்தமி - பெரியபிராட்டி. இறையும்பேர்கிலாள் - நீங்கிற் பிறளொருத்தி குடிபுகுவளென்பது நத்து. (கடுஎ)

243. காமர்கற்புரைப்பதுகற்பின்மிகுதி.

(எ-ன்) கற்புமிகுதி யுணர்—ற்று.

இதன்பொருளும் உரையிற்கொள்க

பொற்பிற்குரியபுகழ்ச்சானகிபுனிதக்
கற்பிற்கிணையுளதோகாணுங்காற்—சிற்றிளவ
லிட்டதழற்றண்ணென்றெதிர்சுமந்ததன்றதனைச்
சுட்டதவள்கற்பாஞ்சுடர். (570)

இது கற்புமிகுதி. துறை - வாகைசார்ந்தகற்புவென்றி. (௬௱௭௰)

244. நயம்புணர்ஞானவீரியமமர்வீரமென் |
றியம்பியவிறலுமோரிரண்டென்ப. ஞானவீரியமி 5

(எ-ன்) இது விறன்மிகுதிப்பகுதியுணர்-ற்று.

இதன்பொருளும் உரையிற்கொள்க.

தாருலமேற்றந்தமாலருட்பாலன்றித்தாய்முலைப்பா
லொருநாளினுமருந்தாவரம்பேணியுணர்வழியப்
பொருமாயையையடங்கப்பொருதேபுறங்கண்டவொண்மைத்
திருஞானவீரியத்தான்மகிழ்மாறனென்சிந்தையனே. (571)

இது ஞானவீரியமிகுதி.

(இ-ள்) கற்பகாடவியைப் பூமியின்கண் பின்னைப்பிராட்டிக்களித்த மாயோன்கருணையாகிய வமிர்தத்தை நான்முகத்தான் ஞானத்தாற் பருகுவதன்றிப் பெற்றநற்றாயாகிய நங்கைதிருமுலைப்பாலையும் பிறந்த ஞான்று தொடங்கி யொருகாலத்துமுண்ணுதசேட்டத்தினையே முக்கிய மாக விரும்பியதால், உலகத்தாரறிவழிய அவ்வறிவினோடும் பூசலைப் பெருக்கும் பஞ்சதன்மாத்திரைகண்முழுதையும் பொருது புறங்கண்ட வொள்ளியதன்மைத்தாம் அழகிய ஞானவீரியத்தானாகிய காரிமாறப் பிரான் என்சிந்தையைவிட்டு அகலானென்றவாறு. ஆதலால் எனக் கியாதுகுறைபென்பது இதனபயன். திணை - வாகைசார்ந்தபுறத்திணை. துறை - ஞானவென்றி.

அண்டமென்றகன்றதையதனினுமகன்றுட
கொண்டதாமண்டபித்தியையுட்கொளலாய்
வாங்குவெண்டிரைப்பெரும்புனலாவரிப்ப
வோங்குமாழ்புனலினையொளிருமங்காரக
ஞங்ககலாநிலைமையினுயரிப்ப
வங்காரகன்றனையதிற்பதின்மடங்காய்

வங்கூழுயிர்த்தாவரிப்பதினதன்மேற்
கண்ணகலிருவிசும்பொழிவில்காரணமா
மண்முதலனைத்தையும்வளைத்தாவரிப்ப
வகல்விசும்பினைத்தாமதபூதாதி
தகவுடைத்தாயாவரித்திடுந்தன்மையி
னமைதரவதனைமானஃதாவரித்துச்
சமைதரவதனைமுற்றந்தாவரிக்கு
முறைமையிற்காலமுக்குணத்துடன்முளைத்த
வுறையுளாமாயையொழிவில்வான்பதத்தொடு
மொருபேருருவினொருங்கர்வரித்த
சுருதியுந்தொடர்தொடர்புடைத்தனிச்சோதியை
யாற்றல்கூர்தமிழ்மறையதனகத்தனவாம்
நூற்றுப்பத்தெனத்தொடர்நோக்குடையவற்றுண்
முந்தியபத்துண்முதற்பத்ததனில்
வந்ததோர்முதலாம்வனப்புடைப்பாட
லோடியதனகத்தொடுக்கியவென்றியின்
வரியளிமுரல்வகுளாம்புயமாறு
தெரிபவர்தெரிதொறுந்தெவிட்டாவினிமை
யோராயிரத்தினானுடைவென்றி
யாராய்பவரிவ்வகலிடத்தவரே. (572)

இதுவும் ஞானவீரியமிகுதி. திணையுந் துறையும் இதுவுமது.

குன்றுயிரஞ்சிரமுங்கையுமாயுருக்கொண்டதெனத்
துன்றுடன்மூலபெலப்படைதான்முற்றுஞ்சுற்றியநா
ளொன்றுமுருவமலகில்பல்கோடியுருவெனலாய்ச்
சென்றுடல்கொண்டவன்வின்மையிங்கேதென்றுசெப்புவனே, (573)

இது சமர்வீரியமிகுதி. அலகில்பல்கோடியுருவம் - எண்ணிறந்த பலகோடியுருவம். துன்றுதல்-நெருங்குதல். சென்றுடல்கொண்டவன் என்பது ஆயிரம்வெள்ளம்படைக்கும் ஆயிரம் வெள்ளம் இராமனென்னும்படி ஒவ்வொருவர்க்கோரோரிராமனென விரைந்தெதிர்முகநின்று சாமாரியைப்பொழிந்து வென்றிகொண்டவனென்றவாறு. வின்மை-வில்வென்றியினது தன்மை. இங்கேதென்று செப்புவனே என்பது இவ்

வுலகின்கண்ணிருந்த அறிவின்மையென் யாதென்றுகொண்டாடுவே னென்றவாறு. திணை - வாகை. துறை - போர்முல்லை; அல்லது வாகைசார்ந்தபுறத்திணையுள் வில்வென்றியுமாம். (கருக)

245. கல்விச்செல்வமுங்கவின்பொருளுடைமைச்
செல்வமுமெனவிருதிறத்தவாஞ்செல்வம்.

7 கல்விச்செல்வ மிகுதி

(எ-ன்) செல்வமிகுதியின்பகுதி யுணர் - ற்று.

இதன்பொருளும் உரையிற்கொள்க.

பல்வித்தகமறையின் றுறைபோயவற்றுட்பான்சீர்
சொல்வித்தகமறைதோய்ந்தெதிராசன் றுணிந்துகொண்ட
கல்விப்பொருளனபர்க்கெல்லாமளிக்கவுங்கண்ணகன்ற
நல்வித்தகமிறையுங்குறையாதுண்ணயந்தனவே. (574)

இது கல்விச்செல்வமிகுதி. இதனுள், மறையின்றுறைபோய் என்பது வேதத்தின்முடிவை யறிவினாற்கடந் தென்றவாறு. அங்ஙனம் பலவிதப்பட்ட சதிர்பெற்றமறை ஆதியோ டந்தமும் நடுவும் ஸ்ரீமந் நாராயணனைபரப்பிரமமென்பதனைச் சந்தயமற ஞானத்தாலறிந்து எதிராசனுட்கொண்ட ஞானமாகிய கல்விப்பொருளை யன்பொடு தன்பாற் கற்ற சீடர்க்குப் பரவுபகாரத்தாற் றானறிந்தபடியெல்லாவற்றையும் அவர்கள்வேண்டக் கொடுத்தும் அவனுள்ளத்து நிறைந்த நன்பொருட் சதிர்ப்பாடு சிறிதுங்குறையாது அவன்கண் ணயந் துறவுகொண்டன வென்றவாறு. திணை - பாடாண். துறை - அறமுறைவாழ்த்தினு ளடங்கும்.

8 பொருட்செல்வ மிகுதி

திருப்பூர்காள்வந்தபுத்தூர்மடந்தைதிருமுலைப்பொற்
பொருப்பூர்புயல்வடவேங்கடத்தான்மெய்ப்புழுகிற்பொத்துங்
கருப்பூரத்தூள்விலக்கோர்காட்சிற்றுண்டிகருணையுண்டி
விருப்பூரத்துய்ப்பதற்கொப்போபிறர்வைக்குமெய்ப்பொருளே. (575)

இது பொருட்செல்வமிகுதி. அஃதேல் இஃது ததிசயத்தின்பாற் படுமோவெனின் அதனகத தகப்படாது; என்னை? திருமேனியிற்பூசின புழுகுமறைபப்பொதிந்து திருமஞ்சனத்திற் கரையுங் கருப்பூரத்துளி யினசோதி மேலேதோன்ற மிகவும் பண்ணுட்பொதிதலானும், திருப் பணியாரவகை பொரிக்கறியமுதுவகை திருப்போனகவகை பிறர் அமுது

செய்பவற்றினும் மிகுந்தது மெய்யாதலானும் உதாத்தமேயாம். திணை—வாகைசார்ந்தபுறத்திணை. துறை - செல்வவென்றி.

அவ்வற்றொடுமென்னுமும்மை யெச்சவும்மையாதலாற் பிறவற்றோடும் வருவனவுமுள. அவற்றுள்ளுஞ் சிலவருமாறு:—

ஆங்கதற்கணியாமாதியாவரணமொன்றினுக்
களவில்போரண்டம்
வாங்குபுகவவுபுரிநெடுந்திகிரிவரைகளோர்
மருங்கினுக்காற்றா
வோங்குபிறங்குசிகரகோபுரங்களோரிரண்டி
ராயிரங்காங்கண்
டாங்குபுதூண்டிக்காண்டொறும்வரம்பு
தரித்திடற்கரியதன்மையவே. (576)

இஃது திடமிகுதி. திணை - பொதுவியல். துறை - புலவரேத்தும் புத்தேணாடுவாழ்த்து. (௧௬௦)

௬௦-வது உதாத்தம் முற்றும்.

---

## ௬௧-வது ஆசியலங்காரம்.

—❦—

246. வாழ்த்துவதாமேவாழ்த்தெனப்படுமே.

(எ-ன்) வைத்தமுறையானே வாழ்த்தென்னுமலங்காரம் உணர்த்துற்று.

வாழ்த்தெனினும் ஆசியெனினும் ஒக்கும். வாழ்த்துவதாமே யெனப் பன்மைப்பாலாகக் கூறியவதனா லவை பலவென்பனவாம். அவை மேற்கூறப்படும். (௧௬௧)

247. அதுவே,
கடவுள்வாழ்த்தேயறுமுறைவாழ்த்தெனத்
திடனுறவருமிருசிறப்பினவாகி
யியற்கையினமைதியியன்றமக்களை
வாழ்த்துதருனுமரீஇயதொன்றாகும்.

(எ-ன்) இதுவும் அவ்வாழ்த்தினை விரித்துணர்—ற்று.

(இ-ள்) அவ்வாழ்த்தென்னுமது, கடவுள்வாழ்த்தெனவும் அறுமுறைவாழ்த்தெனவும் உண்மையாய்நிகழும் இரண்டுகூற்றவாகி, அவற்றோடுஞ் செயற்கையானறி இயற்கையான் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடியென்னும் நான்கும் அமைவெய்திய நன்மக்களை வாழ்த்துதற்றனும் பொருந்தியதொன்றாகுமென்றவாறு. (௧௬௨)

248. மறையவர்துறவோர்மறைநாடாள்வுடன்
பொறைபுரியாசெனப்புகலிவையாவு
மமரர்கண்ணெனலாமமறுமுறைவாழ்த்தே.

[அறுமுறை வாழ்த்து]

(எ-ன்) வைத்தமுறையானே யறுமுறைவாழ்த்தினது பெயரும் முறையும் தொகையும் உணர்—ற்று.

இதன்பொருளுரையிற் கொள்க. இவற்றிற்குச் செய்யுள் வருமாறு:—

பூமாதுநிழலுமணிப்பூண்பொதியவிழ்பொன்னிதழ்ப்புனிதத்
தேமாலைநறுங்களபஞ்செறிமார்பத்திடைமுயங்க
வளப்பரிதாம்பகிரண்டத்தப்புறமுமகத்தடக்கி
யுலப்பிலிளங்கதிருதயத்தொளிகிளர்பேருருவாயும்
நனைநரங்கத்தனுக்கடொறுநயந்தனுவாகியுமெழில்கூர்
தென்னரங்கத்தரவணைமேற்சிறந்திருகண்வளர்ந்துளாய்!

இஃ தாறடித்தரவு.

ஒருசுடராஞ்சொருபமுடனுருவமமைந்தொருசுடரோ
டிருசுடராய்க்குணமொருமூன்றெனலாகிமுறைமுறையே
படைப்பதையுமழிப்பதையும்புறம்போக்கிப்பழிபிறங்கா
திடைப்படுகாவலையெனதெனவெடுத்தெவனருளுதியே

நின்றனவாயியங்குனவாய்நீடியபல்லுருவமைத்தோன்
பொனறியநாளெழுந்தபெரும்புனற்படிந்தவுயிர்களைநீ
யெம்மானேதிருவுதரத்திருத்தியகாவற்கவற்றாற்
கைம்மாறங்கெவனோநீகைக்கொண்டதருளுதியே

புறம்பயின்றவினைவழிசார்போக்குவரவினும்பிரியா
தறம்புரிவதனுவுளவேலதற்கவற்றையெடுத்தனையா

யுண்ணாமையற்றனமாய்ந்து றகாகிற்புதவதூஉறீஇக்
கண்ணீர்கொண்டகன்றகலாக்காவலெவனருளுதியே

இவை மூன்றும் ஒருபொருண்மேன்மூன்றடுக்கி நான்கடித்தாய் இரண்டுவிகற்பத்தால்வந்த தாழிசை.

தரணியுளவரொடுமுரணியபெருவிற
லிரணியன்வரனெனுமரணறவிகலினை

ஒருபதுசிரமுடனிருபதுகரமுள
நிருதனதுயிர்மிசைபொருகணைசிதறினை

மறையவரிறையவருறைவயின்வடுவுரை
பறையவனுயிர்புகுமறைகழலிணையினை

முதலையினிடருறுமதமலைமடிவினு
ளுதவுகவெனுமுரையதனொடுமுதவினை

இவைநான்கும் அராகம். என்னை? "உருட்டுவண்ணமாரகந் தொடுக்கும்" என்பதனாற் குறிலிணை உருட்டிவந்ததுகாண்க.

வஞ்சனையோர்வடிவெடுத்துமாதுலனுமறைபயின்ற
கஞ்சனைக்கொன்றாகேசன்கடும்பொறையைத்தவிர்த்தனையே

குருகுலத்தார்நூற்றுவரைக்கூற்றுவனூட்டினிலிருத்தித்
தருமனமுதலவர்க்கவனிதனியாளக்கொடுத்தனையே

இவை நாற்சீரடி யிரண்டம்போதரங்கம். இவை பேரெண்.

கழிபெருங்கற்பினளாடைகழியாமனயந்தனையே
வழிபடுந்தூதனுமாகிமடக்கோலைசுமந்தனையே
தருபாண்டவனணைக்கழியாத்தமணிபநாடளித்தனையே
விதிகாண்டற்குலப்பில்பலவேடமவைகொண்டனையே

இவை நாற்சீரோரடி நாலம்போதரங்கம். இவை அளவெண். அற்றேல் நாற்சீரடியிரண்டம்போதரங்கத்தோ டிதனிடை வேற்றுமை யாதோவெனின் எழுத்துமுதலா வீண்டியவடியிற் குறித்தபொருளை முடியநாட்டல் வேற்றுமையென்றறிக. இந்நோக்கம் மேல்வரும் இடையெண் சிற்றெண்ணிற்கும் ஒக்கும்.

நாடகையுடனுயிர்போக்கினை
தாபதன்மனதிடர்நீக்கினை
நீடகவிகைபழிதீர்த்தனை
நேயமுள்ளவனொடுசேர்த்தனை
வில்வினைமிதிலையில்வளைத்தனை
மெல்லியலிளமுலைதிளைத்தனை
வல்லரவடல்கெடநடித்தனை
மருதினைமுதலொடுமொடித்தனை

இவை முச்சீரோரடியெட்டம்போதரங்கம். இவை யிடையெண்.

உறித்தயிர்கட்டுண்டனையே
உரலிடைகட்டுண்டனையே
மறித்துநிரைகாத்தனையே
வழங்கினையைங்காத்தனையே
குடநடமுன்பாடினையே
குழலினிற்பண்பாடினையே
படர்சகடம்பொடித்தனையே
பகட்டுமருப்பொடித்தனையே
நாவலன்பின்னடந்தனையே
நடித்தனைமென்னடந்தனையே
சோவலரில்லிறுத்தனையே
கோள்விடையேழிறுத்தனையே
புள்ளினைவாயிடந்தனையே
புரந்தனைபாரிடந்தனையே
தெள்ளமிர்தங்கடைந்தனையே
தேவருளங்கடைந்தனையே,

இவைபதினாறும் இருசீரோரடியம்போதரங்கம், இவை சிற்றெண்.

எனவாங்கு, (இது தனிச்சொல்.)

இனையதன்மையவாமெண்ணருங்குணத்தி
னினைவருங்காவனிகழ்த்தினையதனு

னின்னருகருணையுரீயு
மன்னியதிருவுடன்வாழிவாழியவே. (577)

இது நான்கடியாய் நேரிசையாசிரியத்தாலிற்ற சுரிதகம்.

இது வாழ்த்து. இது, முதலே யாறடித்தரவொன்றும், இரண்டு விகற்பத்து நான்கடித்தாழிசை மூன்றும், எண் சீர் நான்காரகமும், நாற்சீரீரடியிரண்டடம்போதரங்கம், நாற்சீரோரடி நான்கம்போதரங்கம் முச்சீரோரடி எட்டம்போதரங்கம், இருசீரோரடிப் பதினாறம்போதரங்கம் என்னும் பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் ஆகிய நால் வகையும், தனிச்சொல்லும், சுரிதகமும் எனனும் ஆறுறுப்புங் குறை வின்றிவந்த வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா. இதனை வண்ணகவொத் தாழிசைக்கலிப்பாவென்பது வண்ணித்துப்புகழ்தலால் வண்ணகவொத் தாழிசைக்கலியென்றாயிற்று. இஃது தொல்காப்பெருமைத் தொல் காப்பியத்திற்குக் காண்டிகையெழுதின நச்சினார்க்கினியார்நோக்கம். இவ்வாறன்றி "அராகமுடுகியல் வண்ணகமாகும்" எனனுஞ்சூத்திரத்தால் அராகமென்னுமுறுப்புப் பெற்றமையால் வண்ணகவொத்தாழிசைக் கலியாயிற்றென்பாரும் உளர். அஃது யாப்பருங்கலக்காரிகையார் நோக்கம் இருவர்நோக்கமும் பகுத்துணர்ந்துகொள்க. துறை—கடவுள் வாழ்த்து.

வாழிமறையோர்மழைவாழியான்வாழி
வாழிவழுதிவளநாடு—வாழி
புலிப்பாவலர்புகழ்பூதூர்முனிவன்வாழி
கலிப்பாவலர்க்காசெங்கண். (578)

இஃது துறைமுறைவாழ்த்து. இவற்றைத் தனித்தனிவாழ்த்திற் றனித்தனி துறையும் வாழ்த்துமாம். இனி "வழங்கியன்மருங்கின் வகைபடநிலைஇப், பாவலும்" என்னுஞ் சூத்திரத்தான் மக்களை வண்ணப் பகுதிவரைவின்றாகப்பாடியவாழ்த்துஞ் செந்துறைப்பாடாண்பாட்டாகிய துறையான்வருவனவாம் வாழ்த்துக்களும் வந்துழிக் கண்டுகொள்க, அதுவும் இயற்கையால் அமைதியுடையமக்களைவாழ்த்துதலாம். (௧௯௩)

௬௧-வது ஆசி முற்றும்.

## ௯௨-வது சங்கரவலங்காரம்.

249. பாலுணீர்நிலையெனப்பருத்துணர்வரிதாஞ்
சால்பினீரணிதழுவுதல்சங்கரம்.

(எ-ன்) வைத்தமுறையானே சங்கரமென்னுமலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) பாலினிடத்துக்கலந்த நீர்போலவோரணி வெளிப்படையாய்த்தோன்றிப் பிறிதோரணி குறிப்பினாற்கொள்ளும்படிக் கிரண்டணியாய்நிற்பன சங்கரமென்னுமலங்காரமா மென்றவாறு.

நறையார்வகுளப்பிரான்குருகூரனன்னீர்ப்பொருநைத்
துறையான்வழுதிநன்னாட்டெங்கண்மாதுன்னைத்தோய்ந்தமுதுக்
குறையாலரும்பம்பலாயதுநாளுங்குறைநயந்துன்
மறையால்வரவரவேயலரானதுமன்னவனே. (579)

இது சங்கரம். என்னை? அரும்பம்பல் - சற்றேதோன்றப்பட்டுச் சிலரறிந்து தம்முட் புறங்கூறல்; அலராயது—இறைவனே! நீயிங்ஙனம் மறையினீட்டித்தொழுகலாற் பலரும் அறிந்து தூற்றும் அலராயிற்று என்பது பொருள்; அங்ஙனந்தொடர்ந்த தொடர்மொழியுள் வறிதே அம்பலென்னுது அரும்பென்னுங் கிரியையால் அம்பலாகிய அரும் பென்னு மாட்டேறில்லாதவுருவகந்தோன்ற, அலராயிற்றெனவே மலர்ந்த போதாயிற்றெனவுஞ் சிலேடை குறிப்பினாற்கொள்ளப்படுதலா லீரணி யாதலானென் றறிக. அரும்பம்பல் - வினைத்தொகை. அரும்புதல் — தோன்றுதல். பகுதி - இரவுக்குறி. துறை - அலரறிவுறுத்தி வரைவு கடாதல். (௧௪௭)

௯௨-வது சங்கரம் முற்றும்.

---

## ௯௩-வது சங்கீரணவலங்காரம்.

250. எட்பயறுடுதண்டுலமிவையொளிதிகழ்
கட்புலங்கொளவிரவியகாட்சியபோன்

றிரண்டிறந்தனவாயினிமையினணிபல
திரண்டனசங்கீரணமெனச்செப்பினர்.

(எ-ன்) வைத்தமுறையானே சங்கீரணமென்னுமலங்காரம் உணர்—ற்று.

(இ-ள்) மூங்கையதுபோற் குறிப்பின்றி யெள்ளும், பயறும், தண்டுலமுமென்னுமிவை கண்ணினதறிவிற்குத்தோன்றக் கலந்ததோற் றம்போல யாப்பினுள் இரண்டிறந்த பலவணி தழுவுவனவாய்க் கேட் டோருணர்விற்கொள்ளும்படி பாடுவது சங்கீரணமென்னுமலங்காரமா மென்றவாறு.

இழுதனைவாட்கண்ணுமிருளளகக்காரு
முழுமதிதேய்ந்துட்குமுகமுங்—கெழுதகைத்தாய்ச்
சேந்தவிழ்ந்துவேர்கூர்திறந்தருநாவீறாணி
தோய்ந்ததுடரிப்பூஞ்சுனை. (580)

இது சங்கீரணம். இதனுள், வாட்கண்ணெனவே யுவமையும், அளகக்காரெனவே யுருவகமும், முழுமதிதேய்ந்துட்குமுகமெனவே தற்குறிப்பேற்றமும், சேந்தவிழ்ந்துவேர்கூர்திறந்தருமெனவே நிரனிறை யும், சுனை வேர்கூர்திறந்தருமெனவே அயுத்தவேதுவும், நகையென்னுஞ் சுவையும் விரவியவாறுகாண்க. பகுதி - நாணநாட்டம். துறை புணர்ச்சியுரைத்தல்.

விள்ளாதகாதல்விழிவழியாய்த்தன்னிதயத்
துள்ளாயகாதலர்க்குச்சிட்டமதாமென்றுணவுட
கொள்ளாததேதுக்குறித்துறங்காக்கண்களுழ்வ
துள்ளாதெனுமாறனூர். (581)

இதுவுமது. இது, பொருள்வயிற்பிரிவின்கட் டலைமகனைத் தோழி யியற்பழித்துரைப்பத் தலைமகள் தனதாற்றாமையை மறைத்து இயற்பட மொழிந்ததனையுட்கொண்டு தோழி யவளது காதற்சிறப்புணர்தல்.

(இ-ள்) உண்டிபைவெறுக்கவுங் கண்டுயில்வெறுத்துக் கலுழவும் பொருள்வயிற்பிரிந்ததலைவர் கடைப்பிடியுடையரல்லரென் றியற்பழித்த தனைக்கேட்டுத் தலைமகன்மேல்வைத்தவுள்ளக்குறிப்பால் விட்டுநீங்காத காதலையுடையா ளிடைவிடாதுநோக்குதலால், விழிவழியாகத் தன

திதயத்துட்குடிபுகுந்த தன்றலைவர்க்குத் தான்றுய்ப்பதியாதாயினு மவர்க்குச்சேடமாமென்று உண்டியைவெறுத்ததையுங் காரிமாறப்பிரான் குருகாபுரியினுள்ளார் உண்மையென் றுட்கொள்ளா ரென்னுமதுவேயு மன்றி யித்துன்பத்திற் கேதுவாயினமென் றுட்கொண்டு தனதுகண்கள் உறங்காது கலுழ்வதனையும் உண்மையென்றுகொள்ளாரென்னுமாதலால் இவள்காதற்சிறப்பிருந்தபடி யென்னென்றவாறு.

மாறனூருள்ளாதென்பதனை யிறுதிவிளக்காக்கி யீரிடத்துங்கூட்டுக. எண்ணும்மை யீரிடத்துஞ் செய்யுள்விகாரத்தாற் றொக்கன. காதலும் மாறனூரும் ஆகுபெயர். உச்சிட்டம் - சேடம். இதற்கு இவளது காதற்சிறப்பிருந்தபடி யென்னென்பது சொல்லெச்சமின்றிக் குறிப் பெச்சமாய்ப் பயனிலையாயிற்று. பகுதி - பொருட்பிரிவு. துறை—காதற் சிறப்புரைத்தல்.

இதனுள் உண்டிவெறுத்ததனையும், கண்கலுழ்வதனையும் மறைத் துக்கூறினமையால் இலேசமும், உள்ளாதென்பது இறுதிவிளக்காகத் தீபகமும், விழிவழி யென்பது எதுகையலங்காரமும், விழிவழி யிதயத் துட்புக்காரென அற்புதமும், சுவை பெருமையைச்சார்ந்த அழுகையும் ஆகப் பலவணி காண்க. பா—ஒருவிகற்பத்தின்னிசைவெண்பா.

காவலர்போற்காவலர்போற்காதங்கமழனந்தை
காவலனைக்காவலர்தூஉய்க்காவலெனக்கற்றுணர்ந்தோர்
காவலனேகாவலனேகாத்தியெனக்கண்டுற்றுங்
காவலகாவென்னார்கலர். (582)

அலங்காரம் இதுவுமது. என்னை? காவலர்போற்காவலர்போ லெனச் சொற்பின்வருநிலையும், பூரணவுவமையும், காதங்கமழனந்தை யெனவே அதிசயமும், பிறர்கட்டோன்றியவருமைபற்றி அழுகை யென்னுஞ் சுவையும் வந்தமைபால் அறிக. திணை—பொதுவியல். துறை— முதுமொழிக்காஞ்சி பா - ஒருமொழியொருவிகற்பத் தின்னிசை வெண்பா.

கோங்கரும்புபோலுங்குவிமுலைகடாம்புயத்து
ளாங்கரும்புமுல்லையரும்பேய்க்கும்—பூங்குழற்குச்
செவ்வாயும்வெண்ணகையுஞ்செண்பகமாறன்சிலம்பிற்
காமர்சுனைக்காவிகண். (583)

இஃ திரண்டாமடியினிறுதி தனிச்சொற்பெற்று நேரிசைவெண் பாவிற் சிறிது வேறுபட்டு மூன்றுவிகற்பத்தான்வந்த இன்னிசை வெண்பா. அலங்காரம் இதுவுமது ; என்னை? முதலே யுவமையும், புயத்துள்ளாங்கரும்பென்ன மாட்டேறில்லாவுருவகமும் (?) கரும்பு முல்லையரும்பு செவ்வாய் வெண்ணகையென்ன நிரனிறையும் விரோத மும், தன்கட்டோன்றியபுணர்வுபற்றிய வுவகையும் வந்தமையாலென் றறிக.

முகத்தாமரையைமுழுதடக்கலோடென்
னகத்தாமரைகவர்ந்ததற்புதம்பொற்பூண்முலையாய்
காவிமலரனையகண்ணிணையைக்கைக்காந்தட்
பூவின்மறைத்திடுமிப்போது. (584)

அலங்காரம் இதுவுமது. இதனுள், முகத்தாமரை, கைக்காந்தள் எனவே உருவகமும், முகத்தாமரையை முழுதடக்கலோடு என் அகத் தாமரையையும் கவர்ந்ததெனவே அசங்கதியும், காவிமலரனையவெனவே உவமையும், கைக்காந்தள் காட்சிப்பொருளல்லாத அகத்தாமரையையுங் கவர்ந்ததெனவே யற்புதமும், உவகையுட்சார்ந்த வியப்பும் வந்தமையா லெனறறிக. பகுதி—இடந்தலை. துறை—நாணிக்கண்புதைக்கவருந்தல். பா - இரண்டுவிகற்பத்தால்வந்த இனனிசைவெண்பா.

மாதாரய்தென்னரங்கன்மால்வரைவாழ்மாதராள்
காமனிரதியெனுங்காட்சியாள்—காமவேள்
பூவாளியென்பவற்றுண்மன்னுயிருண்பூவாளி
கண்டார்நிறையிணையுண்கண். (585)

அலங்காரம் இதுவுமது. இதனுள் உவமையும், அதிசயமும், சொற்பின்வருநிலையும், வியப்பென்னுஞ் சுவையும் வந்தமையா னறிக. பா—அடிதோறும் ஒரூஉத்தொடைபெற்று நேரிசைவெண்பாவிற் சிறிது வேறுபட்டுவந்த இன்னிசைவெண்பா. பகுதி - சேட்படை. துறை — அவயவங்கூறல். (௧௧௩)

௬௱௩-வது சங்கீரணம் முற்றும்.

---

## ௬௪-வது பாவிகவலங்காரம்.

251. விளம்பியகாப்பியக்குணங்கள்பாவிகமே.

(எ-ன்) வைத்தமுறையானே யிறுதிநின்ற பாவிகமென்னுமலங் காரம் உணர்—ற்று.

(இ-ள்) விளம்பியகாப்பியக்குணங்களென்பது முன்னர்ப்பொது வியலுட்கூறிய காப்பியக்குணங்கள். பாவிகமே - ஈற்றில்நின்ற அறு பத்துநாலா மலங்காரமா மென்றவாறு.

குணமாவன: அப்பொருட்டொடர்நிலைமுழுவதூஉம் நோக்கிக் கொள்ளப்படுவதல்லது தனித் தொருபாட்டாற்கொள்ளப்படாதெனக் கொள்க. அவற்றுட் சில வருமாறு:—

"கற்றதனாலாயபயனென்கொல்வாலறிவ
னற்றாடொழா அரெனின்" (586)

"சிறப்பொடுபூசனைசெல்லாதுவானம்
வறக்குமேல்வானோர்க்குமீண்டு" (587)

"ஒழுக்கத்துநீத்தார்பெருமைவிழுப்பத்து
வேண்டும்பனுவற்றுணிவு" (588)

"சிறப்பீனுஞ்செல்வமுமீனுமறத்தினூஉங்
காக்கமெவனோவுயிர்க்கு" (589)

"இல்வாழ்வானென்பானியல்புடையமூவர்க்கு
நல்லாற்றினின்றதுணை" (590)

"சிறைகாக்குங்காப்பெவன்செய்யுமகளிர்
நிறைகாக்குங்காப்பேதலை" (591)

"பெறுமவற்றுள்யாமறிவதில்லையறிவறிந்த
மக்கட்பேறல்லபிற" (592)

"என்பிலதனைவெயில்போலக்காயுமே
யன்பிலதனையறம்" (593)

"விருந்துபுறத்ததாத்தானுண்டல்சாவா
மருந்தெனினும்வேண்டற்பாற்றன்று" (594)

"இன்சொலாலீரமளைஇப்படிறிலவாஞ்
செம்பொருள்கண்டார்வாய்ச்சொல்" (595)

"எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய்வில்லைச்
செய்ந்நன்றிகொன்றமகற்கு" (596)

"நன்றேதரினுநடுவிகந்தாமாக்கத்தை
யன்றேயொழியவிடல்" (597)

"ஒருமையுளாமைபோலைந்தடக்கலாற்றி
னெழுமையுமேமாப்புடைத்து" (598)

"மறப்பினுமோத்துக்கொளலாகும்பார்ப்பான்
பிறப்பொழுக்கங்குன்றக்கெடும்" (599)

"அறன்வரையானல்லசெயினும்பிறன்வரையாள்
பெண்மைநயவாமைநன்று" (600)

"அகழ்வாரைத்தாங்குநிலம்போலத்தம்மை
யிகழ்வார்ப்பொறுத்தறலை" (601)

"அழுக்காறெனவொருபாவிதிருச்செற்றுத்
தீயுழியுய்த்துவிடும்" (602)

"நடுவின்றிநன்பொருள்வெஃகிற்குடிபொன்றிக்
குற்றமுமாங்கேதரும்" (603)

"கண்ணின்றுகண்ணறச்சொல்லினுஞ்சொல்லற்க
முன்னின்றுபின்னோக்காச்சொல" (604)

"பல்லார்முனியப்பயனிலசொல்லுவா
னெல்லாருமெள்ளப்படும்" (605)

"மறந்தும்பிறன்கேடுசூழற்கசூழி
னறஞ்சூழுஞ்சூழ்ந்தவன்கேடு" (606)

"ஒப்புரவினால்வருங்கேடெனினஃதொருவன்
விற்றுக்கோட்டக்கதுடைத்து" (607)

"ஈத்துவக்குமின்பமறியார்கொறாமுடைமை
வைத்திழக்கும்வன்கணவர்" (608)

"புகழ்படவாழாதார்தந்நோவார்தம்மை
யிகழ்வாரைநோவதெவன்" (609)

"அருட்செல்வஞ்செல்வத்துட்செல்வம்பொருட்செல்வம்
பூரியார்கண்ணுமுள" (610)

"அவிசொரிந்தாயிரம்வேட்டலினொன்ற
னுயிர்செகுத்துண்ணாமைநன்று" (611)

"தவஞ்செய்வார்தங்கருமஞ்செய்வார்மற்றல்லா
ரவஞ்செய்வாராசையுட்பட்டு" (612)

"வலியினிலைமையான்வல்லுருவம்பெற்றம்
புலியின்றோல்போர்த்துமேய்ந்தற்று" (613)

"உள்ளத்தாலுள்ளலுந்தீதேபிறன்பொருளைக்
கள்ளத்தாற்கொள்வேமெனல்" (614)

"பொய்யாமைபொய்யாமையாற்றினறம்பிற
செய்யாமைசெய்யாமைநன்று" (615)

"இறந்தாரிறந்தாரனையர்சினத்தைத்
துறந்தார்துறந்தார்துணை" (616)

"பிறர்க்கின்னாமுற்பகற்செய்யிற்றமக்கின்னா
பிற்பகற்றாமேவரும்" (617)

"அறவினையாதெனிற்கொல்லாமைகோறல்
பிறவினையெல்லாந்தரும்" (618)

"ஒருபொழுதும்வாழ்வதறியார்கருதுப
கோடியுமல்லபல" (619)

"இயல்பாகுநோன்பிற்கொன்றின்மையுடைமை
மயலாகுமற்றும்பெயர்த்து" (620)

"ஐயுணர்வெய்தியக்கண்ணும்பயமின்றே
மெய்யுணர்வில்லாதவர்க்கு" (621)

"வேண்டாமையன்னவிழுச்செல்வமீண்டில்லை
யாண்டுமஃதொப்பதில்" (622)

"நுண்ணிய நூல்பலகற்பினுமற்றுந்தன்
னுண்மையறிவேமிகும்" (623)

என்பனவும், இவைபோல்வனவாகிய பொருட்பால் காமத்துப்பால்களுள் வரும் குணங்களும், பிறகாப்பியங்களுள்வரும் குணங்களும், காப்பியக் குணங்களாமென்றுகொள்க. ௧௧௬)

௩௩௪-வது பாவிகம் முற்றும்.

---

பொருளணியியல் ஒருவகையான் முடிந்தது.

(கவிராசகேசரியான *பேரைக் காரிரத்தினகவிராயர்
உரையெழுதினதென் றறிக.)

தருகாளமேகங்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலங்காரங்குவலயத்தே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாரிரத்தினகவிராயனபேரைவரோதயனே.



* 'பெரியரத்தினகவிராயர்' என்பது பிரதிபேதம்.

ஸ்ரீ:

மூன்றாவது

# சொல்லணியியலுரை

———:(○):———

## மடக்கு.

252. குறித்துரையெழுத்தின் கூட்டமுதன்மொழி
மறித்துமோர்பொருடரமடக்குதன்மடக்கே.

என்பது சூத்திரம். இவ்வோத் தென்னபெயர்த்தோவெனின், சொல்லானுமணிகளினியல்புணர்த்தின்றுதலாற் சொல்லணியியலென்னும் பெயர்த்து. அஃதாக, இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின், பொது வகையான் மடக்கென்னுமலங்கார முணர்-ற்று.

(இ-ள்) புலவனொருபொருள்குறிக்கப்பட்டுச் செய்யுளினிடத்துத் தொடரெழுத்தாற்சொல்லப்பட்ட முதன்மொழி, வருமொழியுமாய்ப் பெயர்த்துமொருபொருடருவதாகமடக்குவதூஉம் மடக்கென்னும் அலங்காரமா மென்றவாறு.

உம்மையாற் றொடரெழுத்துமொழியன்றி ஓரெழுத்தே பெயர்த்து மடக்குவதும் மடக்கேயா மென்றவாறு. புலவன், பொருள், செய்யுள், வருமொழியென்பன சொல்லெச்சம். எழுத்தின் கூட்டமெனவே இரண்டு முதலாகிய வெல்லாவெழுத்துமெனக் கொள்க. (க)

253. அதுவே,
தொடர்பிடைவிடாதுந்தொடர்பிடைவிட்டு
மடைவினிவிருமையுமமைவனவாகியு
நடைபெறுமுப்பாற்றெனநவின்றனரே.

(எ-ன்) அம் மடக்கினதுபாகுபாடுணர்-ற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்டமடக்கு, தம்மிற்றொடருத லிடைவிடாது மிடைவிட்டு முறையே யிரண்டுதன்மையும்பொருந்துவனவாகியு மொருசெய்யுளகத்துநடக்கு மூன்றுபகுதியையுடைத்தென்று முதனூலாசிரியர்கூறின ரென்றவாறு.

எனவே இது வழிநூலென்பதூஉந் தமக்கு மதவேகருத்தென்பதூஉங் கூறினாரெனக் கொள்க, (உ)

254. ஒன்றுதியவாவொருநான்களவுஞ்
சென்றுநடைபெறுஞ்சீர்த்ததற்கடியே.

(எ-ன்) இதுவும் அதனையே வகுத்துணர்—ற்று.

(இ-ள்) அதற்கு (அம்மடக்கிற்கு) அடிவரையறை நான்கடிச் செய்யுளுள்ளே நடக்குங்கால் ஓரடிமுதலாக வீரடிக்கண்ணு மூன்றடிக் கண்ணு நான்கடிக்கண்ணு முன்னர்க்கூறியபடியே சென்று நடக்கு மழகினையுடைத் தென்றவாறு.

ஒருநான்களவுமென்றதனல் நான்கடிச்செய்யுளென்ப தாற்றலாற் போந்தபொருள். ஒருநான்களவுமென்னு மும்மை முற்றும்மையெனக் கொள்க. அவற்றிற்கெல்லாஞ் செய்யுண் மேற்காட்டுதும். (௩)

255. முதலிடைகடையேமுதலொடிடைகடை
யிடையொடுகடைமுழுதென வெழுவகைத்தே.

(எ-ன்) இதுவு மதனையே வகுத்துணர்—ற்று.

(இ-ள்) அம்மடக்கு முதன்மடக்கும், இடைமடக்கும், கடைமடக்கும், முதலொடிடைமடக்கும், முதலொடுகடைமடக்கும், இடையொடுகடைமடக்கும், முற்றுமடக்கும் என முறையே எழுவகைப்படு மென்றவாறு. அம்மடக்கென்பது அதிகாரம்பற்றிவிரிந்தது. (ச

256. அவற்றுள்,
அடிமுதன்மடக்கோரைம்மூன்றாகும். ((

257. இடைகடையவுமதனெண்ணிலபெறுமே. (சு

258. உணர்வுறின்மடக்கிவையோரிடத்தனவே.

(எ-ன்) இவைமூன்றுசூத்திரமு மடிதோறு மோரிடத்தா மடக் கினது தானமு மெண்ணும் வரையறுத் துணர்—ற்று.

(இ-ள்) அங்ஙனங்கூறப்பட்ட வெழுவகைத்தானத்தினுள்ளும் அடிமுதன்மடக்குப் பதினைந்தாம்; இடைமடக்குங் கடைமடக்கு மென்னப்பட்ட விரண்டு மொரோவொன்று முன்னர்க்கூறிய அடிமுதன் மடக்குப்போலப் பதினைந்து பதினைந்தென்னு மெண்ணினதுவரையறை யிலபெறு மென்றவாறு; ஆராயுமிடத் திவைநாற்பத்தைந்து மோரிடத்து மடக்கென்பனவா மென்றவாறு.

அவையாவன:—முதலடிமுதன்மடக்கு, இரண்டாமடிமுதன்மடக்கு மூன்றாமடி முதன்மடக்கு, நாலாமடிமுதன்மடக்கு இவைநாலு மோரடி யோரிடத்து முதன்மடக்கு; இனி, முதலிரண்டடியுமுதன்மடக்கு, முதலடியுமூன்றாமடியுமுதன்மடக்கு, முதலடியுநாலாமடியுமுதன்மடக்கு, கடையிரண்டடியுமுதன்மடக்கு, இடையிரண்டடியுமு த ன் ம ட க் கு, இரண்டாமடியுமீற்றடியுமுதன்மடக்கு இவையாறுமீரடிமுதன்மடக்கு, ஈற்றடியொழித் தேனைமூன்றடியுமுதன்மடக்கு, முதலயலடியொழித் தேனைமூன்றடியுமுதன்மடக்கு, ஈற்றயலடியொழித் தேனைமூன்றடியு முதன்மடக்கு முதலடி யொழித்தேனைமூன்றடியும் முதன்மடக்கு இவைநாலு மூன்றடிமுதன்மடக்கு; நாலடிமுதன்முற்று மடக்கு; ஆக விவைபதினைந்தும் அடிமுதன்மடக்கு. இனி, அடியிடை மடக்கும், அடியிறுதிமடக்குமிவ்வண்ணமே பதினைந்து பதினைந்தாம். இவை நாற்பத்தைந்திற்கு முதாரண முன்னர்க்காட்டுதும். (எ)

259. அடிதொறுமீரிடத்தனவாய்முதலொ
டிடைகடையிடைகடைகளினியன்றனவுந்
திதமுறநான்கறுபானெனச்சிவணி
யதனெடுமடக்கொருநூற்றைந்தாகும்.

(எ-ன்) அடிதொறு மீரிடத்தனவாமடக்கிற்கும், மூவிடத்தனவா மடக்கிற்குந் தானமும் வரையறையு முணர்—ற்று.

(இ-ள்) செய்புளினடிதொறும் ஆதியொடிடை, ஆதியொடுகடை, இடையொடுகடை யென்றுசொல்லப்பட்டதானங்களி னீரிடத்தனவாய் நடந்தனவும், முத லிடை கடையென மூன்றிடத்து மடக்குவனவுமான நாலுதானத்திலு முண்மையாக வறுபதென்று கூறும்படிக்குப்பொருந்தி முன்னர்க்கூறப்பட்ட வோரிடத்துமடக்கு நாற்பத்தைந்தொடு மடக்கு நூற்றைந்தா மென்றவாறு.

இச்சூத்திரத்துண் முதலேவந்த முதலொடென்பதனை முதனிலைத் தீபகமாக்கி யிடைகடையென்னு மிரண்டினு மேற்றுக. (அ)

260. அவற்றுள்
முதற்றொடைவிகற்பமேழொடுநான்கொடுந்
திதப்படவோரடியொழிந்தனவிவணும்.

(எ-ன்) இதுவு மத்தானங்களைத் தொடைவிகற்பங்களாற் கூறு படுத்தி விரித்துணர்—ற்று.

(இ-ள்) அவற்றுள், (அங்ஙனங்கூறப்பட்ட வோரிடத்தனவு மீரிடத்தனவு மூவிடத்தனவுமாக மடக்குமவற்றுள்) அடியொடு பொருந்தின முதற்றொடைவிகற்பமென்னு மிணைமுதலாகிய வேழொடுங் கடையிணை, யிடையிணை, முதற்கூழை, இரண்டாஞ்சீர் நான்காஞ்சீரொடு புணர்ந்த பின்னென்னு நான்கொடுங்கூடிப் பதினொருதொடைவிகற்பங்களொடுந் தெளிவுபெற வோரடியொழிந்தமடக்குகள் வருதலைப்பொருந்து மென்றவாறு. (கூ)

261. இடைவிடாமடக்கிவையெனமொழிப.

(எ-ன்) இது தொடர்பிடைவிடாதுமென்றசூத்திரத்தினுள் மூன்று பாகுபடு மடக் கென்றவற்றுள், முதலேகூறியபாகுபா டுணர்-ற்று.

(இ-ள்) இங்ஙனங்கூறப்பட்ட ஆறைந்துமே யிடைவிடாமடக் கென்றுகூறுவர் புலவரென்றவாறு.

இவற்றிற்கெல்லாஞ் செய்யுள வருமாறு:—

மதியார்மதியார்வணவேணியினான்
விதியாவிரந்ததனைமீட்ட — முதியானை
மாதவனையல்லான்மதிப்பரோபேரின்பத்
தாதரவுபூண்டவுளத்தால். (624)

இது முதலடி முதன்மடக்கு.

(இ-ள்) அறிவுடையோர், பிறையையும் ஆத்தித்தாரையுஞ்சூடின சடையையுடையான் பிரமசிரத்தையறுத்தகாரணத்தாற் பிரமசிரத்தி விரந்ததனைப்போக்கின முதன்மையுடையோனைப் பெரியபிராட்டிகொழு நனை யுள்ளத்தாற்றியானிப்பதன்றிப் பரமபதத் தின்பத்தின்மே லாசை பற்றினவுள்ளத்தால் வேறொருகடவுளைத் தியானிப்பதில்லை யென்றவாறு.

வேறொருகடவுளரையென்பது சொல்லெச்சம். ஓகாரம்-எதிர்மறை. இதறகுப் புலவிர்காளென்னு முன்னிலையெழுவாய் தோன்றாது நின்றதாக விரித்துரைக்க. மதிப்பரே யெனினுமாம். அதற்கு ஏகார மெதிர்மறை திணை - பாடாண். துறை - செவியறிவுறூஉ; கடவுள்வாழ்த்துமாம்.

அமுதமடப்பாவையாடகப்போதல்கக்
குமுதங்குமுதங்கொளுந்தீத்—தமியராய்த்
தாழ்ந்தார்தமையன்றித்தண்ணளிமாலன்னளிற்பொய்
சூழ்ந்தார்தமைவருத்தாதோ. (625)

இஃதிரண்டாமடி முதன்மடக்கு.

(இ-ள்) அமுதமடப்பாவை - திருமகள். ஆடகப்போது—பொற்றாமரை. அல்கல்—குவிதல்; வறுமைமெய்தலெனினுமாம். குமுதம்—ஆம்பல். குமுதங்கொளுந்தீ — மகிழ்ச்சியெய்துந்தீ. தீ - சந்திரன், தன்னைச்சுடுதலாற் றீயென்றாள்., தமியராய்த்தாழ்ந்தார் - புமான்களை நீங்கி மெலிந்தார். பொய்சூழ்ந்தார் - பொய்சொல்லவு நினைந்தார். தமை வருத்தாதோ - அவர்தமை வருத்தாதோ வருத்திற்றாகில் நமது தலை வரும் வருவர். வாராமையால் வருத்தாதொழிந்த தென்றவாறு.

பகுதி — பொருள்வயிற்பிரிதல். துறை — நிலவுகண்டழுங்கல். இதற்குந் தோழியென்பதனைத் தோன்றாநிறைதாக விரிக்க. ஓகாரம் வினா.

சிட்டர்பாவுந்திருமால்செழும்பொழில்சூ
†ழட்டபுயகரத்துளாயிழையார்க்—கிட்டிடைதான்
சித்திரமோசித்திரமோதெவ்வர்முரண்முருக்கு
மத்திரமோகண்ணென்பவை. (626)

இது மூன்றாமடிமுதன்மடக்கு.

(இ-ள்) சிட்டர் - தொண்டர். அட்டபுயகரம் - திருப்பதி. இட்டிடை - சிறியவிடை. சித்திரமோ என்னுமிரண்டனுள், ஒன்று வெளி; ஒன்று பொய். பகுதி - இயற்கை. துறை - தகையணங்குறுத்தல்.

நன்காரிமாறனெனுநாவீறன்வண்குருகூர்
மன்கார்வரைமயிற்குமன்னவா—மென்கோங்
கரும்பாங்கரும்பாங்களபமுலையின்சொற்
சுரும்பாநயனத்துணை. (627)

---

கள்வன் - திருக்கள்வனூர்.

இது அட்டபுயங்கமெனப்படும்.

இதுவுமது. பகுதி-பாங்கற்கூட்டம். துறை - பாங்கன் செவ்வி செப்பல்.

தெண்டிரைப்பார்போற்றுந்திருவெள்ளியங்குடியார்
தண்டுளபமார்பந்தழுவாநாள்—வண்டுளர்பூந்
தேனிலாய்நீண்டகுழற்சேயிழைதன்னாருயிரும்
வானிலாவானிலாவாம். (628)

இது நாலாமடிமுதன்மடக்கு.

(இ-ள்) வண்டுளர்—வண்டுகுடையும். பூந்தேனிலாய்நீண்டகுழல்-பூவிற்றேனிலைபெற்று நீண்ட குழல்., சேயிழைதன்னாருயிரும் - சிவந்த பூணினையுடையாள்கேடில்லாவுயிரும். வானிலாவானிலாவாம்—விசும்பின் கண்ணுதிக்குமதியா லுடம்பின் கண் நில்லாததன்மையையுடைத்தாமென்றவாறு.

உயிரும வானிலாவா னிலாவாம் என்பது நீருந் தன்பாலிருந்தன என்பதுபோல ஒருமையிற்பன்மை மயக்கம். திணை - பெருந்திணை. துறை - கண்டுகைசோர்தல். இவை நான்கும் ஓரடி முதன்மடக்கு.

நிலமனிலமன்னெடுவெளிதீநீரா
யலமனலமன்னமலன்—புலனைந்தும்
வென்றார்தொழுமால்விளங்குதிருவிண்ணகர
மென்றார்க்குமுண்டோவிடர். (629)

இது முதலிரண்டடியும் முதன்மடக்கு.

(இ-ள்) நிலமனிலமன்னெடுவெளிதீநீராய்—நிலமும் வாயுவும் நிலைபெற்றபெரிய ஆகாயமுந் தீயு நீருமாகி. அலமனலமன்னமலன்—நிறைவு பொருந்தின ஆனந்தமாக்கம்பெற்ற அழுக்கற்றவ னென்றவாறு. திணை-பாடாண். துறை - கடவுள்வாழ்த்து ; நகரவாழ்த்துமாம்.

மாதவனின்மாதவனின்வன்றாட்டுகளணவு
போதவண்மெய்ச்சாபமதைப்போக்கினளப்—பாதமலர்ப்
பொற்போதிப்பொற்போதிப்பூதலத்திட்டஞ்சலிப்பா
ரிற்போதமிக்கவர்யார்யார். (630)

இது முதலடியும் மூன்றாமடியும் முதன்மடக்கு.

(இ-ள்) மாதவனில் - கௌதமபாரியையாகிய அகலிகை. மாதவனின் - திருமகள்காந்தனே! நினது. வன்றாள்...............போக்கினள் - வலியதாளிற்பூழியைப் பரிசித்தகாலத்தக் கௌதமனுற் றனதுமேனிக் கெய்திய கற்படிவத்தைப்போக்கின ளாகையால். அப்பாதமலர்............ பூ த ல த் தி ட் டு - அந்தத்திருவடித்தாமரைசெய்தபொலிவையேத்திப் பொன்போலுநிறத்தையுடையபூக்களை யிப்பூமியிலிருந் தத்திருவடிகளிற் சாத்தி. அஞ்சலிப்பாரிற்போதமிக்கவர்யார்யார்-தியானித்து வணங்குவாரினும் ஞானமிகுந்தவரில்லை யென்றவாறு.

இன் — நீக்கம். அடுக்கு, துணிவின்கண்வந்தது. மாதவனில் "மென்மைவரினேளலணனவா"மென்பதனுல் லகாரந்திரிந்து னகாரமாயிற்று. மாதவன் - படர்க்கைமுன்னிலையாகிய இடமயக்கத்துவந்த அண்மைவிளி. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

மறுகுமறுகுமலைவார்சடையான்விற்போன்
றிறுகுமுலைமேற்பசலையேறு—முறுதேந்
தெகிழ்மலர்ப்பாணத்தான்செருக்கடந்தமாறன்
மகிழ்மகிழ்த்தார்வேட்டாண்மனம். (631)

இது முதலடியும் நாலாமடியும் முதன்மடக்கு.

(இ-ள்) உறுதேம் - பரிமளமிகுந்ததேன். தெகிழ்மலர்......... மாறன் - வழியாநின்ற பூவாளிகளையுடையானுகிய காமனதுபோரை வென்ற காரிமாறப்பிரான். மகிழ்........... மனம் - சூடுதற்குவிரும்பின வகுளமாலிகையைவிரும்பின விவளுடையமனமானது. மறுகு......... யேறும் - ஊசலாடாநிற்கும்; அதுவுமன்றி, அறுகிணைப்புனைந்த நீண்ட சடையான்வில்லாகிய விமவானைப்போலத் திண்ணிதாயமுலைமேற் பசலையும் பரவாநிற்கும்; ஆதலா லெங்ஙன முயிர்வாழும், யாதோசெய லென்றவாறு. திணை - பெருந்திணை. துறை - கண்டுகைசோர்தல்.

ஆயிரம்பெற்றுனொருமுன்றைந்து ற்றுனுதியர்க்கு
மேயமுதல்வனெனுமெய்வேதம்—பாய்திரைப்பா
லாழியானுழியானஞ்சிறைப்புட்பாகனெனுங்
கோழியான்கோழியான்கோ. (632)

இது கடையிரண்டடியும் முதன்மடக்கு.

(இ-ள்) உண்மைவேதமானது, பாற்றிரையோடுங்கூடியபாற்கடலையுஞ் சக்கிராயுதத்தையுமுடையனுகி யழகியசிறைமையயுடைய புட்பாகனெனுந் திருவுறையூர்மாதவனைக் கோழிக்கொடியானையும், கண்ணாயிரம் பெற்றானையும், ஒருமூன்றுபெற்றானையும், மூன்றுமைந்தும்பெற்றானையுமாதியாகவுடையார்க்கெல்லா மந்தர்யாமியாக வுள்ளேபொருந்திய முதல்வனென்றுகூறுநிற்கு மென்றவாறு.

மெய்வேதங்கூறுமெனக் கூட்டுக. கோ - கண். கண்ணென்பதனையாயிரமென்பதுமுதலாயவற்றிற்கு முதனிலைத்தீபகமாக்கியும், மூன்றென்பதனை மூன்று, மூன்றுமைந்துமென்னு மிரண்டிற்கு முதனிலைத் தீபகமாக்கியும், மூன்று மைந்துமென வும்மை தொக்கதாக விரித்தும் உரைக்க. கோழி - உறையூர். திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து.

*சலராசிமண்மேற்றவறிழைபாஞான*
*மிலராயிலராயினுமா—மலரா*
*னனத்தானனத்தானருட்குருகூர்மாற*
*னெனத்தானணுகாதிடர்.* (633)

இஃதிடையிரண்டடியும் முதன்மடக்கு

(இ-ள்) தவறிழையாஞானம் - தீங்கிழைப்பயவா வுண்மைஞானம். இலராயிலராயினுமா மென்பது — ஞானமில்லாதவரா யில்லின்கண்வாழ்வாரேயாயினுமாக வென்றவாறு. உம்மை - இழிவுசிறப்பும்மை. மலரானனத்தானனத்தா னென்பது - தாமரைமலர்போன்ற திருமுகமண்டலத்தையுடையான்; அன்னவாகனத்தையுடையா னென்றவாறு. அருட்குருகூர்மாறனெனத்தானணுகாதிடர் என்பது அருளோடுகூடிய திருக்குருகூர்க் காரிமாறப்பிரானென் றுருக்காற்கூறினவரிடத்துத் துன்பமென்பது சிறிதுமணுகா தென்றவாறு. எனவே யணுகுவது பேரின்பமென்பது பயன். துறை - இதுவுமது.

*மாசரதந்தன்னைவழுத்தலெனுமன்பெனக்குத்*
*தாசரதிதாசரதிதன்னுமர்—தேசுபெறப்*
*பாடா ரிணைக்கிடார்பல்காலிவர்க்கெளிதோ*
*வீடாதவிடாதன்மேல்.* (634)

இஃதிரண்டாமடியும் நான்காமடியும் முதன்மடக்கு.

(இ-ள்) மாசாதந்தன்னை........தாசரதி - பரதெய்வங்களைத் அதி யாத் தன்னைத்துதிப்பரிதெ ஆன்மலாபமாகிய பெரிய சதிர்ப்பாடென் றறிந்து தன்னிடத் தன்புறுதலைப் பேதையேனாகிய எனக்குந் தரப்பட்ட சதிர்ப்பாட்டையுடையவன். தாசரதிநன்னாமம் - தசரதன் பிள்ளையினது திருநாமமாகிய ராம வென்பதனை தேசுபெற........பல்கால் - நாவும் மனதும் விளக்கமெய்தப் பலகாலுஞ்சொல்லார், சிந்திப்பதுஞ்செய்யார். இவர்க்கெளிதோ விடாதவீடாதனமேல் - இவ்வறியாமையுடைய வித் தன்மையோர்க்குச் சரீரம்விட்டகாலத் தழிவில்லாத பரமபதத்தின்கட் சென்று பேரின்பமெய்துத லெளிதொன்றாகா தென்றவாறு.

உம்மை இழிவுசிறப்பு. ஓகார மெதிர்மறை. துறை - இதுவுமது. இவையாறு மீரடிமுதன்மடக்கு. இனி மூவடி முதன்மடக்கு வருமாறு:-

வேலைவேலைக்கடைவைவென்றவிழிநீர்ததும்பு
மாலைமாலைப்பணிவார்வண்குருகூர்ச்—சோலைக்
கயலேகயலேகவர்குருகேகீக்க
முயலேமென்றார்க்கேமொழி. (635)

இஃதீற்றடியொழித் தேனைமூன்றடியும் முதன்மடக்கு.

(இ-ள்) வேலினை, கடலுட்பிறந்த நஞ்சினை வென்றதாமென்று அவர் பாராட்டின விழிகளானவை துன்பநீர்துளிக்கும் மயக்கத்தினை, திருமாலடிகளைவணங்குவார் வளவிய குருகாபுரியின்கட் சோலைப்பக்கத்து நீரின்கட் கயலைப்பருகாநின்றகுருகே! நின்னைவிட்டுநீங்குதல் உள்ளத் தாலும் முயலுதல்செய்யேமென்று வஞ்சமொழிகூறிப் பிரிந்தவருடன் கூறுவாயாக வென்றவாறு. பகுதி - ஒருவழித்தணத்தல். துறை பறவையொடு பரிவுற்றுரைத்தல்.

பொதகமுன்போதகமுன்புட்பாகன்பூங்கமல
மாதகலாதெய்து மணிமார்பன்—சீத
மலர்மலர்சேர்பொன்னிமதிளரங்கன்பேர்க்கற்
கலர்கலருள்வன்பாதகர். (636)

இது முதலயலடியொழித் தேனைமூன்றடியும் முதன்மடக்கு.

(இ-ள்) பொதகமுன்பு - கசேந்திரன்முற்காலத்து. ஒருகாமுன் மூவமையென்றுகூறப்பட்டவாவியினிடத்தெதிர்ப்பட்ட புட்பாகன் [illegible]ன். பூங்கமல........மணிமார்பன் - பொலிவினையுடைய

தாமரையா ளொருபொழுதும் நீங்காதேதழுவுமணமுடைய மார்பு கூடிய திருமார்பினையுடையான். சேமலர்......பொன்னி - குளிர் மலர்கள்விரியப்பட்ட திருக்காவிரிநீரையுமுடைய. மதிளரங்கன் - மதி லணத்தையுடைய திருவரங்கேசன். பேர்கற்கலர் கலருள் வன்பாதகர் - திரு நாமத்தைக்கல்லாதவர் பாதகருள் வலியபாதகரா மென்றவாறு. இனை ப்பட்டான். துறை - பழிச்சினர்ப்பணிதல் முன்னோர்கூறியவை விது பாவார்ப்பழித்தல்; கடவுள்வாழ்த்துமாம்.

பானலங்கண்பானலங்கண்பான்மைப்பணிமொழியாய்
கானடுங்கற்கானடுங்கற்காய்சாக்கான் —போனதினி
மண்காத்தருள்பெருமான்மாநீர்வளவயல்சூழ்
தண்காத்தண்காவுதுபோய்த்தான். (637

இஃது ஈற்றயலடியொழித் தேனைமூன்றடியும் முதன்மடக்கு.

(இ-ள்) செங்கழுநீர்போலுங் கண்ணினையும், பானினதினிமையை யுவமையாகக்கருதப்படும்பகுதியையுடைய மெல்லியமொழியினை யுடையாய்! கடக்குங்கானடுங்குதல்செய்யுங் காட்டிடத்துப் பாதத்தை வைத்தாற்போலு முள்வாய்ப்பாலையுடைய வெம்மையொடுங்கூடியசுரம் போனது, இனி யாஞ்செல்லாநிற்பதோன்றும் ஊர், உலகத்துயிர்களைக் காத்துக் கருணைசெய்யும்பெருமையையுடைய திருமாலது மிக்கநீர் யுடைய வளப்பத்தோடுங்கூடிய வயல்கள்சூழ்ந்த தண்ணென்றசோலை யுடைய திருத்தண்காவா மென்றவாறு. செல்லாநிற்பதோன்றுமென்பது சொல்லெச்சம். பகுதி - உடன்போக்கு. துறை - நகர்காட்டல்.

கள்ளவிழ்பூங்காவுங்கடிதடமுஞ்செய்யுமல்லா
தெள்ளிடையவெள்ளிடையதில்லாத—வெள்ளைக்
குளத்தான்குளத்தான்குழுவளர்ப்பான்மூழிக்
களத்தான்களத்தான்கலர்க்கு. (638

இது முதலடியொழித் தேனைமூன்றடியும் முதன்மடக்கு.

(இ-ள்) தேனையொழுக்கும் பூவினையுடையசோலையும், பரிமளிக்கும் வாவிகளும், வயலுமல்லாதே எள்ளும்பொதேற்கு மிடத்தையுடைய வெளியென்பதில்லாத வெள்ளைக்குளமென்னுந் திருப்பதியையுடையான்

குளம்பிறைசேர்க்கூடிய ஆவினது கூட்டத்தைவளர்ப்பான், திருமூழிக்களமென்னும் திருப்பதியையுமுடையான் நீயமக்களுக் கொளிக்குங் கள்ளத்தையுடையனு மென்றவாறு. எனவே, நன்மக்களை வெளிவந்து காப்பானென்பது பயன். துறை - கடவுள்வாழ்த்து.

பணியும்பணியும்பனிமாமதியா
மணியுமணியுமாற்கும்—பிணிசெய்
தலைதலைதீர்த்தான்சரணமல்லாதேதம்ப
மிலையிலைத்தாரீந்துபுலவீர். (639)

இது நாலடியும் முதன்முற்றுமடக்கு.

(இ-ள்) புலவீர்காள்! பாமலையுங் குளிர்ந்தபெரியமதியாய் மேடுலாக்கஞ்செய்யு மாலையையுஞ் சடைமேற்புனைந்த சிவனாகியபெரியோனுக்குந் துன்பத்தைச்செய் தறிவைகடுங்குவித்த பிரமசிரமானதைக் கையைவிட்டு நீங்குவித்தானாகிய ஸ்ரீமந்நாராயணனதிருவடிகளல்லாதே, அந்தியகாலத் தறிவுநிலைகலங்கிச்சாய்ந்து பிறவியாகியகுழியிலே நீர் விழும்பொழுது விழாதே நும்மைத் தாங்குந்துணை வேறில்லையாதலாலவன்றிருவடிகளிற் றுளபமாலிகையைச்சூட்டி வணங்குவீராக வென்றவாறு.

அரற்கு மென்னு மும்மை சிறப்பும்மை. இலைத்தார் - இலைமாலையாதலால், துளவமாலிகையென்றாயிற்று. புலவீர் பணியு மெனக் கூட்டுக. திணை - பாடாண். துறை - ஓம்படை; கடவுள்வாழ்த்துமாம். இவை பதினைந்தும் அடிமுதன்மடக்கு. இனி இடைமடக்கு வருமாறு:—

கயிலாயம்பொன்னுலகம்புரந்தானும்புரந்தானுங்
களிக்கமேனு
னெயிலார்தென்னிலங்கைபர்கோனைபஃறலைக்கோர்கணைவழங்கு
மிந்தனூரான்
மயிலாய்மைமலரையணங்கேந்தினதுயிராமேவல்புரி
மயிலைக்காவல்
பயிலாயத்தெழுந்தருளித்துணைவிழியாதுணர்த்தியருள்
பாரிப்பாரே. (640)

இது முதலடியிடைமடக்கு.

(இ-ள்) கயிலாயம் பொன்னுலகம் புரந்தானும் புரந்தானுங் களிக்க என்பது வெள்ளிமலையையுஞ் சுவர்க்கத்தையுந் தமதாகப்புரந்து அரனும்

புரந்தானுங் களிப்பெய்த என்பதாம். எயிலார்......ளென்-கோட்டையாற் பொருந்த தெற்கின்கண்ணுண்டாய இலங்கையிலுள்ளார்க்கு அரசனாகிய இராவணன். பஃறலைக்கோர்........ளூரான். பல தலைகளும் அறும்படிக் கொருவாளிதொட்ட திருவிக்கனூரான். மயிலாய்...........பாரிப்பாயே-மயில்களாடப்பட்ட மேகந்தவழும் மலையிலுறையுந் தெய்வமனையாய்! நின துயிர்போன்றவளாய் நினதேவல்விரும்புமவளாம் மயில்போலுஞ்சாயலை யுடையாளை நின்னைக்காப்பவரா யிடைவிடாத ஆயவெள்ளத்தார்கூட்டத் தடைந்து திருக்கண்பார்வையாற் குறிப்பினுணர்த்திக் கருணையைவிரிப் பாயாக வென்றவாறு. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - தோழியைக் காட்டென்றல்.

புண்டரிகப்பொகுட்டணங்கெழும்மதமாவிருமருப்பிற்
புழைக்கைநீட்டி
யொண்டிறலாஞெருவனைநம் மகிழ்மாறன்மகிழ்மாற
னுறந்தைபோங்கற
கொண்டலுணின்றிருபிறைகளினிடைவருபாம்பெனவளைத்துக்
கொணடகாலை
மண்டமர்க்கூற்றுவன் கணிச்சியெனத்தடிந்ததனையவன்
வாகைவேலே. (641)

இஃ திரண்டாமடியிடைமடக்கு.

இதனுள், மகிழ்மாற னமகிழ்மாற னுறந்தைபோங்கல் எ ன ப து வகுளமாலிகையையுடைய காரிமாறப்பிரானை மகிழ்ந்துபோற்றும மாயோனுறைவது திருவுறையூர்வரையிடத்தென்பதாம். ஒழிந்தன வுரை யிற்கொள்க. பகுதி - இடங்கபாட்டம். துறையு மது.

பாவெழுதும்படிக்கெழுதாமறைமொழியைத்தமிழ்மொழியாய்ப்
பகர்ந்தமாற
னீரெழுதெண்டிரைப்பொருனைத்திருநாடன்வரையணங்கி
னீரமைகுன்றுச்
சீரெழுதிப்பின்னெழுதிக்களபமுலைக்களபமுலைத்
தேமென்கோதை
யூரெழுதிப்பொழுதிக்கிழிகொடுசீறூர்மறுகே
யுலாவுவேனே. (642)

இது மூன்றாமடியிடைமடக்கு.

இதனுள், களப்முலைக்களபமுலைத்தேமெய்க்கோதை என்பது மான் மதக்குழம்பையுடைய முலையாகிய யானையையும், முல்லைமாலிகையினது தேனொடுங்கூடிய குழலையுமுடையாளென்றவாறு. பார் என்பது உலகின் கண் ணுயர்ந்தோ ரென்றவாறு. நீர்மைகுன்றாச் சீரெழுதியென்பது பெண்ணினிலக்கணங்குன்றாத அவயவ அவயவிகளின்பொலிவினை யெழுதி யென்றவாறு. பகுதி - சேட்படை. துறை - மடலேறும்வகை யுரைத்தல்.

மறைபடுசொற்பொருளினைத்தெற்றெனத்தமிழ்செய்நாவீறன்
மழைதோய்செவ்வி
யுறைபடுதெள்ளறலருவித்தடவரையாமகளிர்க்
குவமையாவீர்
நறைபடுசந்தனப்பொழில்சூழ்புனத்திடைவந்தடைந்ததெனி
னவில்வீரானனா
கறைபடுவன்பகழியொடுமன்னனமன்னனங்
கதிகற்றாங்கே. (643)

இது நான்காமடியிடைமடக்கு.

(இ-ள்) மறையிடத்துண்டானசொல்லின்கண் மறைந்தபொருளினைத் தெளியும்படிக்குத் தமிழ்மொழியாகச்செய்த நாவீறரது மேகம் படிந்த பருவத்துப்பெய்யுந் துளிகளாலுண்டான தெளிந்தநீராய்வரு மருவியையுடைய தடவரையில் அரமகளிர்க் குவமையாகப்பட்ட மங்கைமீர்! முகையவிழ்ந்தபூவிற்றேன் றுளித் தாரவாரிக்குஞ் சந்தனப் பொழில்சூழ்ந்த நுமது புனத்தின்கண் சத்துருக்களைக் கொலைசெய் துண்டான குருதியின முழுகிய பகழியைத்தொடும ஒரு அரசவா ழுக்கம்பெறற மலை நடைகற்றதுபோல வந்தடைந்த துண்டெனிற் கூறு வீராகவென்றவாறு.

உவமையாவீரென்றதனாலவர்கள் காந்தியை யுயர்த்திக்கூறினும். ஆங்கு என்ற துவமவுருபு. கதி - நடை. பகுதி - மதியுடன்படுத்தல். துறை — வேழம்வினாதல். இவைநாலு மோரடியிடைமடக்கு. இனி யீரடியிடைமடக்கு வருமாறு:—

அந்தரத்தாருவியுவாவடமலைமன்வடமலைமன்
னந்தண்சாரற்
சந்தனப்பூந்துணர்மலிந்தவண்டறையவண்டறைய
தனைக்கொண்டுற்றேன்

சிந்துரவாணுதற்களபப் புளகமுலைத்துவரிதழ்வாய்ச்
செவ்வேலுண்கட்
கொந்தவிழ்பூங்குழலீர்நைக்கொள்வீர்மாறனையடிமை
கொள்வீரமாதோ. (644)

இது முதலிரண்டடியும் இடைமடக்கு.

இதனுள், அந்தாத்தாருவியுவாவடமலைமன்வடமலைமன் னந்தன் சாரலென்பது-விசும்பின் உச்சியினின்றுமிழிந் தாரவாரிக்கு நீரருவியும், யானைத்திரளும் ஆலமாத்தினையலைக்கும் நிலைபெற்ற வடவெங்கட மென்னும் மலைக்கு மன்னன், அவனதாம் அழகிய குளிர்ந்த மலைப்பக்கத் தின்கண் ணென்றவாறு. பூந்துணர்மலிந்த வண்டமைய வண்டமை யதனைக்கொண்டுற்றே னென்பது — பூங்கொத்துக்கள் பரிமளத்தினுற் கூட்டமானவண்டுகளைத் தன்னிடத்தழைக்கப்பட்ட அழகியவளப் பத்தையுடைய சந்தனத்தழையதனைக் கையுறையாகக் கைக்கொண்டு நும்மிடத்துவந்தே னென்றவாறு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. பகுதி - இதுவுமது. துறை - கருத்தறிவித்தல்.

கதியேபற்றுனர்ஞானக்கண்ணகலாக்கண்ணகலா
காயங்காண்பா
னதியெமுற்றியவரங்கத்திடைதுயிலும்புயல்வரைமே
னயந்துவாழ்நும்
பதியேதிங்குரைத்திடுமென்றனனறையீர்நறையீர்மென்
பதுமைபோல்வீர்
மதியேதிங்கினியெனவுந்தெளிகிலனேகுதற்குமொரு
வழிசொல்வீரே. (645)

இது முதலடியும் மூன்றாமடியும் இடைமடக்கு.

(இ-ள்) பேரின்பத்தையுட்கொண்டாருள்ளக்கண்ணைவிட்டு நீங்காத இடமகன்ற பரமாகாயத்தைச் சென்றுகாணவேண்டித் திருக் காவிரியாகிய விரண்டாறுசூழ்ந்த அரங்கத்தினடுவே கண்வளரும் காளமேகம்போன்ற திருமேனியையுடைய அரங்கநாதன்வரையினிடத்து விருப்பத்துடன்வாழுந்தேனுடன்கூடிய குளிர்ந்ததாமரையாளையொப்பீர்! இவ்விடத்து நும்முடையபதி யேதென்று கூறவென்றனன் கூறு கின்றிலீர், இனிமேன் மதி யாதென்றுந் துணிகிலன்; மீண்டுபோவதற் கொருவழியுங் காண்கின்றில னென்றவாறு.

னறையீர்நறையீரென்பதனைப் பாடமாற்றி ஒற்றைப் பெயர்த்து அறையீரெனக்கூட்டுக. இதனுள், கதிபெயற்றினர்ஞானக்கண்ணகலாக் கண்ணகலாகாயமென்பனமுதலாக அரங்கத்திடைதுயிலும்புயல்வரைமே னயந்துவாழ்நும் பதியேதிங்குரைத்திடுமென்றனனறையீ ரென்பன விருக நோக்கென்னும் யாப்புக்காலெனக்கொள்க; என்னை "மாத்திரை முதலாவடிநிலைகாறு, நோக்குதற்காரணநோக்கெனப்படுமே" என்றாராகலின். அஃதே லிதனுள் நோக்கிக்கொள்ளக்கிடந்தமை யாதோவெனின், பேரின்பத்தைவிரும்பினோர் ஞானக்கண்ணை விட்டுநீங்காத பரமாகாயத்தை யவர்சென்றுகாணவேண்டிப் பரமகிருபையால் வெளிவந் தரங்கத்திடைக் கண்வளரும் அவன்வரையிடத்து விருப்பத்துடன்வாழுந் தாமரை யாளைப்போல்வீரென்றதனால், அவ்வன்வரையிலிருந்தும் யான்விரும்பிய நுமது சீறூரை யெனக் குரைக்கின்றிலீ ரென்னதறுகண்மையோ என்பது நோக்கிக்கொள்ளக்கிடந்தமையா மெனக்கொள்க. ஏகாரமிரண்டனுள், முன்னையது பிரிநிலை. ஏனைய தீற்றசை. ஒழிந்தனவுமுரையிற் கொள்க. பகுதி - இதுவுமது. துறை - பதிவினாதல்.

வயற்கழுநீர்க்கழிகவின்மாண்கொழுநனையேகொழுநனையே
மகிழ்நன்மாதர்
கயற்கருங்கண்ணனமலராமுனங்கனைகட்டெறிதிருக்காட்
கரைமால்வெற்பிற்
செயற்கரியதிருவுருவா லுயிர்கொல்லிப்பாவையாய்ச்
சிறந்தீருங்க
ளியற்பெயர்யாதெனவினவியதைமொழியுமொழியுமிகழ்
வதனைமன்னே. (646)

இது முதலடியும் ஈற்றடியும் இடைமடக்கு.

இதனுள், கழுநீர்க்கழிகவின்மாண்கொழுநனையேகொழுநனையே மகிழ் நன்மாதர் என்பது செங்கழுநீரினது மிக்க அழகினையுடைய மாட்சிமைப் பட்ட கொழுவியபூமுகையைத் தங்கள்புமான்களை விரும்பு நல்ல கடைசிய ரென்றவாறு. கொழுநனையேயென்பது தேற்றேகாரம்; பிரி நிலையுமாம். கொழுநனையேவிரும்பும்மாதர் கொழுவியபனிமலராமுன்னங் கனைகட்டெறியென்றது இறைச்சி. என்னை? முகையாய்நிற்பதன்றி

மலர்ந்தா விலை யெமது கண்ணுக் குவுமையா யெமது சொழுநற்கு விருப் பத்தைக்கொடுக்குமென்னு மாற்சரியத்தாற் களைகட்டெறிந்தா ரென்னுங் குறிப்புப் பொருட்புறத்ததாய்நிற்றலானெனக்கொள்க. அதன்றெனில், கண்ணெனமலராமுன்னங் களைகட்டெறிந்தாரென்பது பயனில்கூற்றாம். சிறப்புப்பெயர் சொல்லிப்பாவையென்பது செய்தற்கரிய வுமது அழகிய வடிவினாலறிந்தேம். அறியாத இயற்பெயரை மொழியும்; எம்மையிகழ் வதனை யொழிவீராக வென்றவாறு. செயற்கரியதிருவுரு - எழுதுதற் கரியதிருவுரு. பகுதி - இதுவுமது. துறை - பெடர்வினாதல்.

பூந்துளபப்புனை திருமால்பொன்னியுநினுட்பொறியரவிற்
   புயல்போல்வண்ணத்
தோய்ந்துயில்பயிலரங்கேசனைததொழுமாறன்றுடரித்
   தோகைபோல்வீர்
வாய்ந்தவனப்பல் குலுக்குத்தனக்குவடுதனக்குவடு
   வகிராமுங்க
ளேந்தெழிற்கட்புலங்கொளநின்றிடையேதங்கிடையேதங்
   கியம்புவீரே.                                                                                          (647)

இது கடையிரண்டடியும் இடைமடக்கு.

(இ-ள்) வாய்ந்தவனப்பல்குலுக்குத் தனக்குவடுதனக்குவடு வகிரா முங்கள் என்பது வனப்புவாய்ந்தவெனப் பாடமாற்றி அழகுவாய்ந்த அல்குலுக்குந் தனமாகிய மலைதனக்கும் வடுவகிர் நிகராகியவுங்கள் என்ற வாறு. ஏந்தெழிற்கட்புலங்கொள என்பது உயர்ந்த அழகினையுடைய கட்புலனாக என்றவாறு இடையேதங்கிடையேதங்கியம்புவீரே என்பது இரண்டிற்குநடுவே குடியிருக்கும் மருங்கான தெது தானவ்விடத்தென்று வினவுவேற் கிதுவென்றசொல்லுவீராக வென்றவாறு. எனவே, எனது கண்ணிற்குப் புலப்படுவதின்றென்பது போந்தபொருள், பகுதி-இதுவு மது. துறை - இடைவினாதல்.

உரையார்ந்தொகைப்பநுவன்முழுதுணர்ந்துமுலமெய்யோன்
   றுணராதார்போல்
பரபதுமறைபுரிசொமாளிகையுமாளிகையு
   மனத்துறுடி.

*விரையார்நன்பசுந்துளபத்திருமாலைத்திருமாலை*
*வில்லிபுத்தூர்த்*
*திரையாடைப்புவிமகடன்கோமானைவணங்கலரிற்*
*றிகைக்கின்றேனே.* (648)

இஃ திடையிரண்டடியு மிடைமடக்கு.

*இதனுள், கோமானினைவுமானினைவுமனத்துறைடி என்பது தலைவனே ! உனதுள்ளத்து நினைவும், எனது மான்போலும்விழியினை யுடையாண்மனத்துணினைவும் எனது மனத்தட்குறித்து என்றவாறு. துளபத்திருமாலைத்திருமாலை வணங்கலரிற் றிகைக்கின்றேனே என்பது துளபமாகிய அழகியமாலையையுடைய திருமகளோடுங்கூடிய மாயோனை வணங்காத் தீயமக்களைப்போல யான் மனமறுகாநின்றே னென்றவாறு. உலகியலொன்றுணராமை—உலகநடை சிறிதுமறியாமை. மறைபுரிதல்—வரைந்துகொள்ளாது களவொழுக்கத்தை நீட்டிக்கவிரும்புதல். பகுதி-பகற்குறி. துறை - வருத்தங்கூறி வரைவுகடாதல்.*

*மீனமாதிபவாயவவதாரம்புரிந்தருண்மால்விண்ணோர்போற்றும்*
*வானமாமலைவளர்சிவரமங்கைவரமங்கைமார்நீரென்றான்*
*மோனமாயிருந்ததனாற்பயனேதுவிருந்தினர்க்குமுகமன்கூறி*
*யீனமாகியவுறுநோய்களைகண்ணாங்களைகண்ணாங்கியற்றிலீரே.*(649)

இஃ திரண்டாமடியு மீற்றடியு மிடைமடக்கு.

*இதனுள், சிவரமங்கை வரமங்கைமார் நீரென்றாலென்பது சிவர மங்கையென்னுந்திருப்பதியிற் சேட்டமாகிய மங்கைப்பருவத்து மடந்தையரையொப்பீரென் றுலகினுள்ளா ரும்மைக் கூறுவராயின் என்பதாம். பருவம் பெதும்பையாயினும் வியப்பினான் மங்கைப்பருவத் துள்ளாரையொப்பீ ரென்றான். மோனம்—மௌனம். நோய்களைகண் ணாங்களைகண்ணாங்கியற்றிலீ ரென்பது காமமாகியபிணியைக்களையுங் கருணைபால் காவலை நீர் செய்கிலீ ரென்றவாறு. ஒழிந்தனவு முரையிற் கொள்க. பகுதி-மதியுடன்படுதல். துறை - மொழிபெறாதுவருந்தல். இவையாறு மீரடியிடைமடக்கு. இனி மூன்றடியிடைமடக்குவருமாறு:—*

இருங்கலையின் றிவணுறிவார் தனுவேட்டைத் தனுவேட்டை
யிசையார்தெவ்வுள்
வருந்திருமால்பணிவரைமேற் காவியங்கண் காவியங்கண்
மதியுட்கொண்டோ
ரொருங்குபுகழ்வதற்கரிதாமா தினைமா தினைக்காவ
லுவந்தாளென்கை
பொருந்துவதன் றிருவருந்தம்முட்கா தன்மதர்நோக்கிற்
புகல்கின்றாரே. (650)

இஃ தீற்றடியொழிந்த வேனைமூன்றடியு மிடைமடக்கு

(இ-ள்) இவ்விடத் திப்புனத்துற்றவிவர்கையிற் பெருமையுடைய கலையு மில்லை, இவர்யாக்கையுந் தளர்ச்சியுடையது, ஆகையா லிவர் வில்வேட்டையும் பொருந்துவதன்று; இஃதன்றி, இந்த மாதராளைப் பெரியதினைக்காவல்வரும்பினாளென்கையு முண்மையன்று, இவள் நீலோற்பலம்போன்றகண்களைப் பலகாப்பியங்களையு முணர்வினுட் கொண்டோரெல்லாங்கூடியும் புகழ்தற்கரிதாம்; இருவருமொருவ ரொருவர்மேலுள்ளவுள்ளக்காதலைக் கண்களாலுரைக்கின்றனரென்றவாறு. பகுதி—குறையுறவுணர்தல். துறை-இருவர்நினைவுமொருவழியுணர்தல்.

சுனையுணீனிறநாண்மலர்நாண்மலர்தொறுந்துணர்நெகிழ்ந்துக்க
நனையுண்மூழ்கியபலவினின சுளையினைநாங்கைமால்வரைக்கிளி
யனையபேடைவாயருத்தியினருத்தியின்புறுநிலையது கண்டோர்
நினைகலானழுங்காற்றலையாற்றலினது கண்ணுறின்மானே. (651)

இது முதலயலடியொழித் தேனைமூன்றடியும் இடைமடக்கு.

(இ-ள்) சுனையுணீனிற..........தொறும் என்பது சுனையின்கண் ணுண்டாவதாய நீலமணியினொளியு முவமைக்குவளையும் நீலோற்பலம் பக்குவம்வந்து மலருந்தொறும் என்றவாறு. துணர்நெகிழ்ந்து........ மின்னே என்பது அலர்தழ்நிறைந்தொழுகிய தேனின்கண், கனைசார்ந்த சோலைப்புறத்து விசுகொம்பர்நின்று மலிந்துவீழ்ந்து கனிந்த பலவி னினியசுளையைத் திருமங்கைமணவாளன்வரையிற் சேவற்கிளியானது என்றவாறு. அனையபேடைவாய்..........கண்டு என்பது தன துயிரனைய பெடைவாயி லன்பினொருத்தி யின்பமெய்து[illegible]நிலையைக் கண்டு என்றவாறு.

ஓர்நிலைகலாள்..........மானே என்பது ஒருவராலுநினைத்தற்கரிய பெருமையாரொருவ னிரக்குமிரக்கத்தின்மிகுதியை நினையுங் காணீ ருற்றவாயல்லீ, மான்போலுங்கண்ணினையுடையா யென்றவாறு. ஒருவ ராலுமென்பதும், உயிரென்பதும், பேடையென்பதனுற் சேவலென்பதும் வருவிக்கப்பட்டன. பகுதி - குறையயப்பித்தல். துறை—கிரவிக்கூறல்.

மாமடந்தைகுடிபுகுந்தவன்பிலுறுமன்பிலுறுமாயோன்வெற்பிற்
காமருவண்டினமேநீர்தாந்தாந்தாந்தாமெனவாழ்கமலவைப்பிற்
பூமடந்தைமுகமலர்போலொருகமலத்திருகுவளைபூத்தவாகத்
தாமருவிக்குமுதமும்வெண்முல்லையுமுல்லையுமுளவோசாற்றுவீரே. (652)

இஃது ஈற்றயலடியொழித் தேனைமூன்றடியும் இடைமடக்கு.

(இ-ள்) மாமடந்தைகுடிபுகுந்த வன்பிலுறுமன்பிலுறு மாயோன் வெற்பில் என்பது பெரியபிராட்டிகுடிகொண்ட அன்பிலென்னுந்திருப் பதியின் மிக்கஅன்பிலெய்திய மாயவனதுவெற்பில்வந்த என்றவாறு. காமருவண்டினமே........கமலவைப்பின் என்பது அழகிய வண்டுகாள்! நீங்கடாம் தாநதாந்தாமென்றபாட்டோடும்வைகும் மருதநிலத்தின் கண்ணேயுள்ள தாமரையோடையின்கண் என்றவாறு. பூமடந்தை........ சாற்றுவீரே என்பது இந்தப் பூமகள் முகத்தாமரையையொப்பதா யொருதாமரையினிடத் திரண்டுகுவளைபூத்தனவாக நிலைபெற்று மலற் றடனொருசேதாம்பலும் முல்லையரும்பும் முல்லையாகியபண்ணுங் கண்ணிற்கண்டனவுஞ் செவியாற்கேட்டனவு முளவாகிற் சொல்லுவீராக வென்றவாறு. பகுதி - இயற்கை. துறை - வண்டொடுசென்னய முரைத்தல்.

குவளைமாத்திணமகலத்துமறிறத்திற்பயோதரங்க
ளொருங்குதோய்ந்து
பொருவருகன்பரிமளங்கூர்வனமாலைவனமாலை
பொருந்திச்செய்ய
பருதியுடன்பனிமதியமிருபாலுமிருபாலும்
பயின்றுதோன்றுந்
திருநெடுமால்பொருவருமிவ்வடமலையும்வடமலையு
[illegible]னே. (653)

இது முதலடியொழித் தேனைமூன்றடியும் இடைமடக்கு.

(இ-ள்) முத்துவடங்கிடந்தசையுமுலையொடுங்கூடிய தேன்போலு மொழியினையுடையாய்! ஒளிதழையாநின்ற பெரியபிராட்டி நாளுந் திரு மார்பிற் குடிகொண்ட கூறுபாட்டால் அவளது திருமுலைச்சுவடுகளைத் தழீஇயதுடன், ஒப்பில்லாமணத்தைப்பெருப்பித்துக் காடாகியவியல்பை யுடைய துளபமாலையையும் பொருந்தி, செம்மையுடையநேமியாகிய ஆதித்தனுடன் பாஞ்சசன்னியமாகிய குளிர்ந்த மதியையும் வலமிட மென்று மிரண்டுபக்கமுந் தரித்திருக்குமுறையும் இடைவிடாத தோற்றப்பொலிவுண்டாந் திருவொடுங்கூடிய மாயோனையொக்கும்; சினை யொடும்வளாநிறமாமரததின்கூட்டங் தன்னிடத்துற்ற கூறுபாட் டோடுங் காளமேகங்க ளொக்கததவழ்தல்பொருந்தியும ஒப்பில்லாத நல்ல மணத்தைப்பெருக்குங் காடாகியவியல்பையுடைய துளபமாலைபொருந்தி யும், ஆதித்தனுடன் சந்திரனும் இரண்டுபக்கமுமிருக்குமுறையும் பொருந்தியுந்தோன்றுமிவ் வடவேங்கடமாகிய மலையு மென்றவாறு. இத னுள் வனமாலைவனமாலையென்பது அத்தச்சிலேடை. பருதியும் பனி மதியுமெனபது மாட்டேறில்லாவுருவகம. ஒழிந்தன சததச்சிலேடை. பருதி—குறைநயப்பித்தல். துறை - அரியாள்போறல்.

முளைநிலாவினைநேர்நுதனேர்நுதன முகிணகையணைமென்றோ
ளிளையளாமிவட்கேமமெமது றவேதிலாரணிவானற்
கிளையினீண்டினர்கேளினிக்கேளினிக்கெழுதகையுறல்வேண்டிற்
களைகணுனிறைகடிநகர்ககடிநகாகாணமன்னிரைவாயே. (654)

இது நானகடியும் இடைமுற்றுமடக்கு.

(இ-ள்) இளம்பிறையையுவமைகுறிக்கப்பட்ட சிறியநுதலினையும், முல்லைமுகைபோன்ற பல்லினையும், அணைபோன்ற மெல்லிய தோளினை யும், இளமைத்தன்மையையுமுடையளாமிவளுக்குப் பொன்னையின்ப முறவணிவான் அயலவர் மகட்பேசித் தமரொடுமெமதுமனையிடத்துக் குழுமினராகையாலினிக் கேட்பாயாக மன்னனே! உனதுசுற்றத் தோடும் எம்மோடுண்டாகிய இந்த நட்புமிகுதல்வேண்டினையே யுலகத் துயிர்கட்குக் காவலாகிய இறைவனும் மாயோன் திருக்கடிநகரிடத்துத் திருமணம் நகரிலுள்ளார்காண அயலவர்க்குமுன்னே யிவளை வரைந்து கொள்வாய் விரைவாயாக வென்றவாறு.

சேர்நுதல்-சிறுநுதல். "சிறுநுதற்போமர்க்கட்செய்யவர்"லென்றார் பிறரும். பகுதி - உடன்போக்கு. துறை - மகட்பேச்சுரைத்தல். இவை கடு-ம் இடைமடக்கு.

இனி அடியிறுதிமடக்கு வருமாறு:—

கூன்பிறையவெண்கோட்டிற்கொன்னுகங்கொன்னுகந்
தான்பதைத்துமூலமெனத்தாழா துதவியமால்
வானபுகழுந்தென்னுகைமானவனயிர்வண்டமைழயிங்
கேன்புரிநதுகொள்ளா திருப்பதிசைப்பிரே. (655)

இது முதலடியிறுதிமடக்கு.

இதனுள், கூன்பிறைய வெண்கோட்டிற் கொன்னுகங் கொன்னுகந் தான்பதைதசென்பது வளைந்த பிறைபோன்ற வெண்கோட்டினாற் கொல்லும் யானை பெரியவுடம்பு நடுக்கமுற்று என்பதாம். தான்—அசை. மூல........மால் என்பது மூலமெனறுகூறத் தாமதியாது தவிய மாயோனென்றவாறு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. பகுதி - சேட்படை. துறை - தழைகொண்டுசேறல்.

தோலாதநேமிமுதலைம்படையுஞ்சூழ்நதிறைஞ்சப்
பாலாழியுட்டுயில்கூர்பன்னகத்தானபன்னகத்தான்
மேலாமவுணனுரங்கிழித்தவிண்ணைகரான
காலானதென்றலைமேல்வைத்துக்களித்தேனே. (656)

இஃ திரண்டாமடியிறுதிமடக்கு.

இதனுள், பன்னகத்தான் - பாம்பணையான். பன்னகத்தான் மேலாமவுணனுரங்கிழித்தான் என்பது பலநகங்களால் வெற்றியான் மேம்பட்ட விரணியனுரத்தமார்பைப் பிளந்தானென்றவாறு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

சூழித்தறுகட்கடாயானைதோலாத
பாழிப்பருவாயிடக்கரின்கைப்பட்டகா
ளாழிப்படையுடன்சென்றுளனிலையாளரிலைப்
காழித்திருமாலைக்கண்டுட்களித்தேனே. (657)

இது மூன்றாமடியிறுதிமடக்கு.

இதனுள், ஆளரியையாளரியை..................ளிந்திறந்தே னென்பது ஆண்ட அரியென்னுந் திருநாமத்தையுடையானை, காரணத்து நிக்கழு யானை, சோழியில்வாழுந் திருமாலைக் கண்களாற்கண் டொளிந்திறந்தே னென்றவாறு. துறை - கடவுள்வாழ்த்து.

புண்ணுங்கெழுந்ததுணைமுலையார்க்காருயிர்தங்
கண்ணுங்கொழுநரெனுங்கட்டுரைகேட்டுற்றுணர்ந்துந்
தண்ணார்வகுளத்தமிழ்மாறர்க்கன்பிலர்போன்
றெண்ணாதகன்றனராலென்சுகமேயென்சுகமே. (658)

இது நாலாமடியிறுதிமடக்கு.

இதனுள், என்சுகமேயென்சுகமே என்பது எனக்கு என்னுடைய கிளியே! என்னமகிழ்ச்சியுள்ள தென்றவாறு. பகுதி — பொருள்வயிற் பிரிதல். துறை - பறவையொடுபரிவுற்றுரைத்தல. இவை நாலும் ஓரடி யிறுதிமடக்கு. இனி ஈரடியிறுதிமடக்கு வருமாறு:—

மூன்றுயமைத்தொழின்முன்னோனைமுன்னோனை
தான்சூழ்தடத்தழைத்தசங்கரியைச்சங்கரியைத்
தோனூறிடத்தமைத்தசூழ்ச்சியனைத்தொல்லுலகா
ளீன்றானையீன்றானையென்னுளத்தேவைத்தேனே. (659)

இது முதலிரண்டடியும இறுதிமடக்கு.

(இ-ள்) சிருட்டி திதி சங்காரமென்று தன்னாலமைக்கப்பட்ட மூன்றிற்குமங்கங்கு முன்னாயிருக்கப்பட்டவனை, முதலைமுன்னாயானை தாஞ்சூழ்ந்ததடத்துநின்று மூலமெனறழைத்த சங்கினையுடைய அரி யென்னுந் திருநாமத்தையுடையானை, உமையை வேறுபடுத்தோன் றாது தனதிடப்பாகத்தடக்கின விகாரத்தையுடைய அரனை முற்காலத் தீன்ற பிரமனையீன்றவனை முத்தியளிக்கவல்ல பிரமமென வுட்கொண்டே னென்றவாறு. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

கோதறவில்வாங்கியுடக்குஞ்சரத்தாற்குஞ்சரத்தாற்
கேதமிழைத்தவிராவணியையன்றுதவ
சூதனைத்தாற்கொன்றபிரான்றம்முன்னைத்தம்முன்னைப்
பாதகந்தீரப்புகழ்வார்பாதம்பணிவேனே. (660)

இது முதலடியும் மூன்றாமடியும இறுதி

(இ-ள்) குற்றந்தீரத் தனுவைக் கைக்கொண்டு [illegible] அம்பி னால் ஐராவதப்பாகனை இந்திரனுக்கு மானப்பங்கத்தைப் பண்ணின இந்திரசெயித்தை, மூன்று காலத்துந் தவசரிதையாற்கொண்ட இலக்குமண னென்னு மௌனதுசவாமிக்குத் தமையனை, யாவரேயாயினும் தங்கள் கழிபிறப்பிற் பாவந்தீரப் புகழாநின்றார் அவர்பாதத்தை யெனதுபிறவித் துன்பம்நீக்க வணங்கினே னென்றவாறு. திணை - பாடாண். துறை— பழிச்சினர்ப்பணிதல்.

பொன்பொற்றிலங்குமலர்ப்பூவையேபூவையே
மன்பொற்றிருமேனிமாயோன்வடமலைமேன்
மின்பொற்றொடித்தடக்கைகூப்பாதவிறென்னோ
நின்பொற்றிருநுதற்குநேர்மதிக்குநேர்மதிக்கும். (661)

இது முதலடியும ஈற்றடியும் இறுதிமடக்கு.

இதனுள், மலர்ப்பூவையேபூவையே மன்பொற்றிருமேனி என்பது தாமரையிலிருக்குந் திருமகளையொப்பாய்! காயாம்பூவையொத்த மிக்க பொலிவினையுடைய திருமேனி என்றவாறு. நின்பொற்றிருநுதற்கு நேர்மதிக்கும் நேர்மதிக்கும் என்பது உனது அழகியநெற்றிக் குவமை குறிக்கும் நேரிய பிறைக்கு மென்றவாறு ஒழிந்தனவு முறையிற்கொள்க. பகுதி - நாணநாட்டம. துறை - பிறைதொழுகென்றல்.

அந்தமுதலாயமைந்தானையெம்மனோர்
பந்தமறுத்தாள்பரனைச்சுமித்திரைதன்
மைந்தனெனுங்கோன்போந்மாதவனைமாதவனை
யெந்தையையல்லாதிறையுண்டென்றுவேயென்றுவே. (662)

இது கடையிரண்டடியும் இறுதிமடக்கு

இதனுள், மாதவனைமாதவனை என்பது திருமகள்காந்தனை, பெரிய தவசரிதையுடையானை யென்றவாறு. எந்தையை - எம்முடைய சுவாமியை. அல்லாதிறையுண்டென்றுவேயென்றுவே என்பது அவனை யன்றி வேறு பரப்பிரமமுண்டென்று [illegible] என்றவாறு. [illegible] [illegible] துறை - [illegible].

[illegible]ரவாறுபேரின்பஞ்சார்வதற்குச்சிற்றின்ப[illegible]
[illegible]

மாவாதனைமறந்து வாமனனேவாமனனே
தேவாதிதேவனெனச்சந்ததமுஞ்சிந்தித்தே (663)

இஃ திடையிரண்டடியும் இறுதிமடக்கு.

(இ-ள்) என்னைமதனெய்யாமையெய்யாமை என்பது என்னைக் காமன் சிற்றின்பத்திலேவேண்டிமூட்ட எய்யாமே மற் பஞ்சபாணங்களை யிடைவிடாமைத்தொடுத்திடாமல் என்றவாறு. வாமனனே............... வாமனனே என்பது வாமனாவதாரமாகியநாராயணனே தேவர்க்கெல்லாம் முதலான தேவனென அனவரதமுஞ் சிந்தித்துக் கழிந்தபிறப்பினு மிப் பிறப்பினு முண்டான பொல்லாத வாதனைகள்யாவும் மறந்து என்னோ டொத்துவா என்னுடையமனனே! என்றவாறு. திணை - காஞ்சியைச் சார்ந்த பொதுவியல். துறை-பொருண்மொழிக்காஞ்சி. திணை-பாடாண். துறை-கடவுள்வாழ்த்தெனினு மாம்.

கொண்டகுபொற்பூமடந்தைநற்பாரிகண்ணன்பே
ராண்டபழம்பதியுமந்தாமமந்தாமங்
கூண்டளிபண்பாடுதுழாய்கூராழிகைவலத்தே
பூண்டவன்சீருளத்தேபூரியார்பூரியார். (664)

இது நாலாமடியும இரண்டாமடியும இறுதிமடக்கு

இதனுள், ஆண்டபழம்பதியும்........துழாய் என்பது அவன்புரந்த தொன்மைப்பதமாவது பரமபதம், அழகிய மாலையாவதும் வண்டுகள் தேனையுண்டு பண்களைப்பாடும் வனமாலையாம் என்றவாறு. அவன்சீ ருளத்தேபூரியார் பூரியார் என்பது அவனதாக் திருமேனியிற்காந்தியைத் தீயமக்கள் உள்ளத்தாற் றியானித்து அகத்தே நிறையா ரென்றவாறு. எனவே யெப்படியிடேறுவ ரென்பது குறிப்பு. திணை-பாடாண். துறை-புகழார்ப்பழித்தல்; கடவுள்வாழ்த்தெனினு மாம். இவையாறும் ஈரடி யிறுதிமடக்கு. இனி மூன்றடியிறுதிமடக்கு வருமாறு:—

முன்னிலஞ்சொன்னாதபிலமுன்பரையுமுன்பரையுந்
தன்னாளுனீர்த்தவாத்தாவுறவேதாவுறவே
மன்னிலங்கேசன்முதலாமைந்தரையுமைந்தரையு
மின்னுயிருண்டான்குணக்கற்றின்பம்பயின்றேனே. (665)

இஃ தீற்றடியொழித் தேனைமூன்றடியும் இறுதிமடக்கு.

(இ-ள்) முன்னிலங்கைசென்முதலா மைந்தரையு மைந்தரையும் என்பது இராவணன்முதலாய மிடுக்குள்ளாரையும், அவர்கள்புதல்வரையும் என்றவாறு; முன் னிலங்கொள்ளாத பிலமுன்பரையு முன் பரையுந் தன்னாலுலீந்தவார் ...வுற வேதா வுறவே என்பது முன்னாளிற் பூமியிடங்கொள்ளாத பாதாலத்தின முரபெலப்படையாய்வந்த வலியுடையாரையும் முன்னு ஞமை ...துபுமானுன சிவனுற்கொடுப்பித்தவரமும், பிறர்கொடுத்தவரமும் அழிவுறப் பிரமாவும் பேராண்மையிருந்தபடியோவென்று மனத்திலே விசாரிக்க என்றவாறு; இன்னுயிருண்டான்........ ....... பயின்றேனே என்பது அவர்க ளினியவுயிரையுண்ட தெசரதராமன் கலியாணகுணங்களைக்கூறிப் பேரின்பமெய்தினேன் என்றவாறு. திணை–இதுவுமது. துறை - கடவுள்வாழ்த்து.

கண்படையுண்கண்சிறிதுங்கண்ணகன்றகண்ணகன்றவ்
வொண்பொருள்செய்வார்பிரிவினுண்ணிறையுமுண்ணிறையும்
பண்புறநில்லா தினியீங்கென்செய்வேன்பாமாறன்
றண்பொருளைத்தண்டுறைவாழ்தாராவேதாராவே. (666)

இது கடையயலடியொழிந்த வேனைமூன்றடியும் இறுதிமடக்கு.

(இ-ள்) பாமாறன்றண்பொருளை...........தாராவே! என்பது திருவாய்மொழியாகிய பனுவலைச்செய்த காரிமாறப்பிரான்பொருனைத் தண்டுறையினிடத்துத் தாராவாகியபறவையே! என்றவாறு. கண்ணகன்ற...................பிரிவின் என்பது இடம்விரிந்தநாட்டின்கணிங்கிச் சுத்ததிரவியத்தை யீட்டவேண்டிப் பிரிந்தார்பிரிவினுல் என்றவாறு; உண்ணிறையுமுண்ணிறையும் பண்புறநில்லாது என்பது எனதுள்ளத்து னிறைந்ததொன்றாய மகளிர்க்குச்சிறந்ததென வுலகும் விசாரிக்கப்பட்ட எனது நிறையானதும் எனது குணத்தின்வழிநில்லாது அதுவேயுமன்றி என்றவாறு; கண்படை யுண்கண் சிறிதுந் தாரா என்பது எனது மையுண்கண்களானவை யெப்பொழுது முறக்கமுஞ் செய்கின்றில என்றவாறு. இனி யீங்கென்செய்வேன் என்பது மேலிவ்விடத் தியான்செய்வது யாதுதா னென்றவாறு. இது கொண்டு கூட்டுப்பொருள்கோள். பகுதி–பொருள்வயிற்பிரிதல். துறை–பறவை யொடுவருந்திரங்கல்.

பாழிமருப்பேனமதாய்ப்பாரிடந்தான்பாரிடஞ்சூ
ழியல்புற்றபுலித்தோலுடையான்றோற்றஞ்சால்
காழ்வயிரக்குன்றெடுத்தகண்டகனைக்கண்டகனை
யூழறக்கொன்றனகர்பூந்தேனிலுறையூரா (667)

இது முதலயலடியொழித் தேனையிரண்டடியும இறுதிமடக்கு.

(இ-ள்) ஏனமதாய்ப் பாரிடந்தான் - வராகமாகிப் பூமியையுழுதெடுத்தான்; பாரிடந்தான்..............தோற்றஞ்சால் - பூதகணங்கள் சூழுமியல்புபொருந்தச் சுடுகாடரங்காக நடஞ்செய்யும் புலித்தோலுடையுடையானது தோற்றஞ்சான்ற; காழ்வயிரக்குன்றெடுத்தகண்டகனைக் கண்டகனை யூழறக்கொன்றனகர் - மிகவுந்திண்ணியகயிலையையெடுத்த விராவணனாகியபாதகனைச் செருக்களத்துக்கண்டு திருவுள்ளத் திரக்கத்தின் முறையின்றிக்கொன்றவனது நகரமானது; பூந்தேனிலுறையூருறையூர் கோட்டிலும் கொடியிலு நீரிலுமுண்டாகிய பூவிற்றேன்றனி திசைதிசைபரக்குந் திருவுறையூரா மென்றவாறு. இனை - பாடாண், துறை - நகரவாழ்த்து; கடவுள்வாழ்த்துமாம்.

ஏற்றமாம்வெள்ளோதிமத்தான்மழவிடையூர்
தோற்றமார்வெய்யபுலித்தோலுடையான்றோலுடையான்
போற்றவாழ்வுற்றவிருப்புள்ளேறுபுள்ளேறு
மாற்றலானன்பிலார்க்கன்பிலானன்பிலான். (668)

இது முதலடியொழித் தேனைமூன்றடியும் இறுதிமடக்கு.

இதனுள், புலித்தோலுடையான் றோலுடையா னென்பது புலியினதுதோலை யுடையாகவுடையானும், ஐராவதத்தையுடையானும் என்பதாம். விருப்புள்ளேறுபுள்ளேறு என்பது தன்னிடத்தன் புள்ளத்து மிகும் கருடனிலேறும் என்பதாம்; அன்பிலார்க்கன்பிலானன்பிலான் என்பது தன்னிடத் தன்பிலாரிடத் தன்பிலாதா னவன்யாவனெனி னன்பிலென்னும்திருப்பதியின் மாயோ னென்பதாம்.

எனவே அயனும் அரனும் இந்திரனும் பரவும்படிக்கு வாழ்வுபெற்ற கருடனைத்திரியும் பெருமையையுடையான் அவன் யாவனெனி லன்பிலாதாரிடத் தன்பிலாதான், அன்பிலென்னும் திருப்பதியின்

## விஷயசூசிகைமுதலியவற்றின் அகராதி.

மாயோன்; அவனுக்கன்புசெய்வீராயிற் புலவீர்காள்! நுமக்கு முத்தி பெறலாமென்பது கருத்து. திணை - வாகை. துறை - பொருளொடு புணர்தல்.

வாமனைவிந்திர மண்டிலமண்டில
காமனேமியினுக்கிறைநான்மறைப்
பூமன்றந்தைதண்பொற்கழற்பொற்கழற்
காமன்பாடிப்பின்தன்றலைத்தலை. (669)

இது நான்கடியும் இறுதிமடக்கு.

(இ-ள்) ஆதித்தன்மண்டிலத்தை வட்டத்திருவாழியான் மறைக்கப்பட்டவன், நாலுவேதத்தையு மோதியுணர்ந்தவனாந் தாமரைப்போதிற் பிறந்த பிரமனுக்குப் பிதா, அவனதாம் பொன்னினின்வீரக் கழல்புனைந்த பொலிவினையுடைய திருவடிகளிடத்துண்டாம் அன்புடையார் திருவடித் தாமரைப்பூவை எனது சிரத்தின்கட்புனைகதே யென்றவாறு.

கழற்கு என்பது ஏழாவது நான்காவதாயிற்று. மண்டிலம் ஆதித்தன்மண்டலத்திற்கும், வட்டத்திற்கும் பேர். திணை - இதுவுமது. துறை - பழிச்சினர்ப்பணிதல்.

இவை பதினைந்தும் அடியிறுதிமடக்கு. ஆகமடக்கு-சரு. இவை நாற்பத்தைந்து மோரடியு மீரடியு மூவடியு நாலடியுமாகி யடிதோறு மோரிடத்தைமடக்கியது.

இனி யடிதோறு மீரிடத்தனவா மூவகைமடக்கினுள் முதலொடிடைமடக்கு வருமாறு:—

கட்காவிகட்காவினைவதும்வண்டியிர்காமன்காமன்வாளிக்
குட்காவைவுறுநிறையுமுற்றுணர்ந்துமுறுதியெனக்குறுவீரேற்
புட்காமன்வடமதுரைப்புரிகுழலீர்காமவலைபுள்புக்காழ்ந்து
மட்காநின்றதற்குறுதிப்புணைமடலென்றேயுளத்தேமதிக்கின்றேனே.

இது முதலடி முதலொடிடைமடக்கு.

இதனுள், கட்காவிகட்காவினைவதும் என்பது கண்ணுடையசெங்கழு நீர்களுக்கெனதாவி வருந்துவதும் என்பதாம். காமன் காமன்வாளிக்கு என்பது காவினிடத்துநிலைபெற்ற காமன்பஞ்சபாணங்களுக்கு என்பதாம். ஒழிந்தனவு முரையிற்கொள்க. பருதி-மடல். துறை-தன்றுணிவுரைத்தல்.

அலையோவேர்யாற்கடலைக்கடைந்தானன்பிலனையிர் நிறுவயிறு
விலையோவிலையோவிடை நினைவிக்கென்னோவென்னுவநியிர்போன்
மலையோமுலைவாணுதல்சிலையோமையுண்கருங்க..னையுள்வன்
கொலையோகுடிகொண்டதுசிறிதுங்குடிகொண்டிலவோகருணையுமே.

இஃதிரண்டாமடி முதலோடிடைமடக்கு.

இதனுள், வயிறுவிலையோ விலையோவிடையென்பது நுமது அழகிய வயிறுனிலையோ இடையென்னுமுறப் புமக்கில்லையோ என்பதாம். நினைவிக்கென்னோ வென்னுவறியீ ரெனபது இவ்விடத்து நுமது விசாரம் யாதோ? எனது காமப்பிணியையுந் தெளிகிலீர என்பதாம். ஒழிந்தனவு முரையிற்கொள்க. பகுதி-...........துறை-இடைவினுதல்.

இரவிற்குப்படருமழந்திவ்விரவொழிப்பாயென விரங்கியிட்டது பாகம்
புரவிற்குக்களிவரவன்றிரப்பொழித்ததுநிலாககபொருணீயன்றே
காவெற்புக்காவெற்புக்கவினணியான்கங்கையங்கங்கையனுமந்த
வாவெற்பனமலாயனுமகிழ்கநிடச்சென்றுதவியதூஉமதிக்குங்காலே.

இது மூன்றுமடி முதலோடிடைமடக்கு.

(இ-ள்) பிரமசிரத்தினிரந்ததற்குத் தன்பாலிருக் தவ்விரப்பினைத் தவிர்ப்பாயாக வென்று சிவன்வேண்டற்குக் கருணைகூர்ந்து, அவனதிடப் பாகத்தை யச்சிவன்கொடுப்பத் தனதாகவாண்ட அவன் பாரியா முமைக்கும் மனத்துட்களிப்புண்டாக முற்காலத் தவ்விரப்பைத தவிர்த்த கருணையை விசாரிப்பாருண்டாகி லப்பாப்பிரமம் அரங்க நாதனே! நீயேயாம்; அதுவுமன்றி, கைபடைத்தமலையெனபதாங் கெசேந்திரன் மூலமேயென்ன அதற்கும், அரவும் எலும்பும் அழகுசெய்பு மாபரணமாகப் புனைந்தான், பிரமசிரத்தைக் கையிலேந்தினன், கங்கை யாற்றை வேணியிற்கட்டினன், அந்தச் சேட்டமான வெள்ளிமலையானும் மலருளானும் பிரமனுமகிழும்படிக் குச்சென்றுதவியதூஉம் விசாரிக்கி லென்றவாறு.

ஒழித்ததும் என்னும் மும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது. வெற்பன் மலாயனும் என்பது "எஞ்சுபொருட்கிளவிசெஞ்சொலாயிற், பிற்படக்கிளவாமுற்படக்கிளத்தல்" என்பதனல் வெற்பனும் என்னுஞ் சொல் வெறபனென வும்மையில்சொல்லாயிற்று. திணை — பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

*அருண்மாலையபின் றகெழுதகையிருளைவேண்டலிற்சென்
றன்றயாண்மாரன்*
*பொருமாலைக்கிசெருப்புச்சிலைவளைத்தித் துயர்க்கடற்கோர்
புணையுங்காணேன்*
*மருண்மாலைவரும்வருமென் றிடைவேற்காயெவன்செயன்மேன்
மனனேமல்லைத்*
*திருமாலைத்திருமாலைக்கண்டளியாயளியாய்நின்
றிருத்தாரென்றே.* (673)

இது நாலாமடி முதலோடிடைமடக்கு.

(இ-ள்) மனனே! இருண்ட மாலை வரும்வருமென் றண்டியு முறக்கமுந்தவிர்ந் துடம்புமுயிரு மெலியாநின்றவெனக் குடலு முயிரு மாக்கமெய்த என்னிடத்து வைத்தகருணை யியல்பாக இடைவிடாத உரிமையையுடைய எனதுயிர்த்தோழியானவள், திருக்கடன்மல்லை மாயோனைச் சென்றுகண்டு, நினது தாமத்தைவிருப்புற்றமையாலென் றுயிரானபொலிவினையுடையாள் பொலிவிழப்ப அவளிடத் துண்டான மயக்கத்தை நினது திருவுளத்தாற்கண்டு நினது திருமார்பிற் புனைவதாய வண்டுகள் நல்லதென்றாராயும் அழகியதிருமாலிகையைத் திருவருள் புரிந்துதாராயென்று வேண்டிக்கோடலோடுங் கூறுள்; அஃதறிந்து காமனவன் ஆலையிலிடத்திடுமபடிக்குண்டானகரும்பைச் சிலையாக வளைத்துப் பூப்பாணங்களையுடக்கிப் போர்செய்யாநின்றான்; ஆதலால் இத்துன்பமாகியகடலைக் கடக்க அவன்றூமமாகியபுணையேயன்றி வேறு புணையுங் காணேன், இனிமேல் யாதுசெய்வதென்றவாறு.

இதனுள், திருமாலைத் திருமாலையென்பது திருவிளைதங்கூடிய மாலை, பொலிவினையுடையாண்மயக்கத்தை யென்பதாம். கண்டென்பதனைத் தோழி சென்றுகண்டு, திருவுளத்தாற்கண்டு என இரண்டிடத்துங் கூட்டுக. அளியாயளியாயென்பவற்றுள் முன்னையது ஒருதொழிலினை மேற் செய்யாயென்னு மெதிர்மறையாகியமுன்னிலைவினைச்சொல், அத் தொழிலைச்செய்யென்ன எடுத்தலோசையாற்கூறி வேண்டிக்கோடற்கண் ணுடம்பாட்டுமுன்னிலைவினைச்சொல்லாயிற்று; என்னை "செய்யாயென்னு முன்னிலைவினைச்சொல், செய்யென்னேவலியல்பிற்றுடைத்தே" என்றாராகலி னறிக. பின்னையது வண்டுகள் நல்லதென்றாராயும் என்பதாம். திருமாலையென்பது பிறள்போற்கூறியதாம். தலைவிகூற்று. முன்னிலை

ளோடுங்கூடிச் செல்வமெய்தும் என்பதாம்; கலையர்க......போதும் என்பது அவர்களைத் தனதுசென்னியிற்கொண்டுநிற்கும் இவ்விடத் திந்த மலையை யெடாதேகொள்வாயென நந்திசொன்னகாலத்தும் என்பதாம்; அமையாதன்...............அரக்கன் என்பது அவனுரைக்குமடங்காதே உன்னமாமும் மூங்கிலும் ஆச்சாவும் நெருங்கின அந்தக் கயிலையைக் கிண்டியெடுத்த விருபதாகியகைகளையுடைய விராவணன் என்பதாம்; ஆதி...........யாரே என்பது ஆதிகாலத்து இந்திரியங்களையடக்கின பொறையாலெய்தியவரங்களைத் திருக்காட்கரையாய்! அழித்து அவனைக் கொன்றிலையெனி னுலகுயிர்கட் கியாவர் காவலரென்றவாறு. துறை-இதுவுமது.

இமையவரையிமையவரைமகிழ்விப்பான்பொருவில்பொரு
　　வில்லாயேந்திச்
சமையவுடக்குபுசாந்தொட்டெயிலொருமூன்றெரிகதுவத்
　　தலைநாள்வென்ற
வுமையவருமதிப்பவெயிலேழுடையான்பஃறலைக்கு
　　முறையூராயா
டமையமைவில்லினைவளைத்தன்றேவினையேவினைநினைப்போன்
　　றனியார்யாரே. (676)

இது முதலடியும் நாலாமடியும் முதலோடிடைமடக்கு.

(இ-ள்) இமையவரை யிமையவரைமகிழ்விப்பா னென்பது இமவானென்னுமலையைத் தேவர்களைக் களிப்பிக்கவேண்டி யென்பதாம்; பொருவில் பொருவில்லாயேந்தி என்பது ஒப்பற்ற போர்பொருதற்குரிய வில்லாகவெடுத் தென்பதாம்; சமையவுடக்குபு...............மதிப்ப என்பது குறைவறவுடக்கி யம்பைத்தார்ந்து மூன்றுகோட்டையிலும் அனல்பற்ற முன்னாளன் முப்புராதிகளைவென்ற வுமைபாகரும் மதிப்பதாக என்பதாம்; எயிலேழுடையான்.......உறையூராய் என்பது ஏழுகோட்டையோனுமெ விராவணன்பத்துத்தலைக்குந் திருவுறையூராய்! என்பதாம்; ஆடமை யமைவில்லினை...........யேவினை என்பது வெற்றிபொருந்தின மூங்கில்வில்லைவளைத்து முன்னாள் அம்பினைவிட்டனை என்பதாம்; நினைப் போன்றனியார்யாரே என்பது ஆதலால் நின்னைப்போ லுலகுயிர்களைக் காக்குந் திருவருளுடைய படைவளர் இல்லை யென்றவாறு. துறை-இதுவுமது.

சுந்தரத்தோளிணையழகர் துணையடிசேர்மகிழ்மாறன்
றடமிசையோங்கு
சந்தனச்சோலையுளுறைவார்க்கிறைவாசங்கா
ளுதற்கட்டழலான்மேனாள்
வெந்திறல்வெந்திறல்வேளுமிரதியிரதியுமாண்மை
விழைமென்கொங்கை
மந்தரமந்தரமிடைவிற்கரும்புருவங்கரும்புருவ
மதிக்குங்காலே. (677)

இது கடையிரண்டடியும் முதலோடிடைமடக்கு.

(இ-ள்) இறைவனே! அழகியதிருத்தோளிணையையுடைய அழக ருடையதிருவடிகளை மனோவாக்குக்காயங்களாற்பொருந்தின வகுளாபரண மாறன்றடமிசையினிடத் தோங்கின சந்தனச்சோலையுளுறைவார் கொங்கைக் குவமைகுறிக்குங்கால் மந்தரபருவதமேயாம், இடை ஆகாய மாம், கரியபுருவம் காமனுக்குவில்லாகிய கரும்பினதுருவமா மென்ற வாறு.

சிவனுடைய நெற்றிக்கண்ணினுண்டாகியதழலினால் முன்னைக் காலத்து வெவ்வியவீரம் வெந்ததனோடும் உருவமுமிழந்த காமனும் விரும்புவதா மிரதியும் ஆணுந்தன்மையையுவப்பதாங் காந்தியையுடைய கொங்கைக்கெனக் கூட்டுக. பகுதி - பாங்கற்கூட்டம். துறை—செவ்வி செப்பல்.

பொய்யாதபேரின்பம்வேண்டினர்கள்போனண்டம்பூத்தவுந்திச்
செய்யாசெய்யாள்விரும்பியுறையுறையூராவெனவேதினைப்பக்கண்டு
மெய்யாமைமெய்யாமையேத்திலாஞ்சிலர்சிலரவ்வியமதண்ட
மெய்யாகமதிக்கிலாரந்தோவந்தோநரகத்தேவீழ்கின்றாரே. (678)

இஃதிடையிரண்டடியும் முதலோடிடைமடக்கு.

(இ-ள்) அழிவில்லாதபேரின்பத்தைவிரும்பின அறிவுடை யோர்கள், எண்ணில்பல்கோடியண்டங்களைப்பெற்ற திருவுந்தியாகிய செறுவையுடையவனே! திருமகள்விரும்புற்றுக்குடியிருக்குந் திருவுறை யூரையுடையவனே யென றொழிவில்லாது கூறிப் போகணர்ந்தமெய்த்துவ தினைக் கண்டுங் கேட்டும், விட்டுநீங்காத அறியாமையாற் சிலர் அவன்றிரு வடிகளை யேத்துகின்றிலர், அவ்வியமதண்டத்தைசிலர் நெஞ்சவருஞ் செய்கின்றிலர், அதனை மெய்யென்பதாத் தெளிகின்றிலர், ஐயோ ஐயோ நரகின்கண்வீழாநின்றன ரென்றவாறு.

நமக்குமுன்னே [illegible] தேனைக்கட்டியுண்டு [illegible] [illegible] [illegible] [illegible] காதலும்பெற்றமுறைமையும் புமான்களை [illegible] தங்கினார் பலருமுண் டென்பதாம். மின்னு - உகரவிகுதி [illegible] பிக்கது, இயல்புகணம்வரலாலென்றறிக. மன் - அண்மைவிளி. நீ யென்னும் முன்னிலைப்பெயரெஞ்சிநின்று விரித்தது. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. பகுதி - உடன்போக்கு. துறை - நெறிவிலக்கல். பிருந்துவிலக்கென்பது மிது.

தோலாததோலாதபனைநோக்குநோக்குடையசுடரைக்கட்டி
மேலாகமூன றுடையசிவனயன்கேட்பவுமழைப்புவிரைந்துமேனு
பாலாழிப்பாலாழிப்படையுடனேவந்துவந்துபடிறுதீர்நீ
யாலாலநுண்டுளைப்பற்பணியணையாயணையாயென்னனந்தையானே. (682)

இது முதலயலடியொழித் தேனைமூன்றடியும் முதலொடிடை மடக்கு.

இதனுள், தோலாத தோல் - சிங்கவேற்றிற்குத் தோற்றிடாத கஜேசந்திரன். நோக்குநோக்கு - அழகியகண்கள்; பார்க்குங்கண்க ளென்றுமாம். ஆதபன் - சூரியன். உபயசுடர் - ஒழிந்த இந்துவும் அக்கினியும். மேலாக மூன்றுடைய வென்பதனை ஆகமேன் மூன் றுடைய என மாறி, சொரூபத்தின்மேல் நோக்கு மூன்றுவுடைய வென வியைக்க. சிவனயன் கேட்பவும் என்பது சிவனும் அயனும் கேட்கும் படிக்கும் (உம்மையால்) யாவருங் கேட்பவும் என்பதாம். அழைப்ப - மூலமேயென் றோருகாற் கூப்பிட. மேனாள் - பண்டு. பாலாழிப்பால் - திருப்பாற்கடலுட் கடவுள்; "பாலதானைப்பி" னென்பதா லறிக. வந்து வந்தென்பதை வந்துவந்து என மாறுக. படிறுதீர்நீ - இடுக்கண் டவிர்த்த நீ. ஆலால நுண்டுளைப்பற் பணியணையாய் - [illegible] சிறுக்குஞ் சிறியதுளைப்பற் பாம்பணையையுடையாய். அணையாயென் னனந்தையானே யென்பது - என்னை அனந்தபுரத்தானே! அணைவாயாக வென்பதாம்.

(இ-ள்) பாலாழியுட்கடவுளாகிய அனந்தபுரத்து மைந்தனே! கஜேந்திரன், [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] நீ; [illegible] [illegible] [illegible]

இதன் பொருளிப்பு; செய்யுளென்பது தொல்லாசிரியருள்ளுறுபதின் வெண்பா வாசிரியமென்னப் பகுத்த விருத்தவகையின் வரும் கலி வஞ்சி மருட்பா பரிபாடலென்று நான்கினு மரபோடு விரித்து அவற்றைத் தெரியும்படிக்குப் பொருள்பெறும் வகையென்றபகுத்த முத்தகம் குளகம் தொகை தொடர்நிலையென்னுஞ் செய்யுள்களும், வைதருப்பம் கௌடம் பாஞ்சாலமென்னு மூன்றுபாகமும், அவற்றுண்மேம்படுவதான இன்பம் தெளிவு செறிவு சமனிலை இன்னிசை உதாரம் வலி காந்தம் உய்த்தலில் பொருண்மை சமாதி யெனக்கூறப்பட்ட பத்துவகைக்குணமும், தன்மை முதற் பாவிகமீறாக வருமறுபத்துநாலென்னு மெண்ணினையுடைய பொருளலங்காரமும், அடியினுஞ் சொல்லினு மெழுத்தினு மடக்கப்பட்டன வாகி முற்றுப்பெறவகுத்த மூன்றுவகை மடக்கலங்காரமும், வல்லின மெல்லின மிடையினமென்னு மூவினப்பாடன்முதலாக முறையினும் பொருந்திய விருபத்தாறின்மேலு மாறுகூட்டி முப்பத்திரண்டென விழுமிதாய சித்திரக்கவிகளும் விரித்தபின்னர்க் குறைபாடின்றனவாய வழுவும், வழுவமைதியு மிவையிவையென விரண்டுகூறாக்கிக்கூறிய பதினொன்றெனு மணியிலக்கணநிரம்பாம லொழிந்தனவாய்வருவனவுள வெனினு மவற்றையு மிவற்றினகத்தடக்கித் தமிழ்க்கோடல் கற்றறிந்த வுத்தமர்கடனு மென்றவாறு.

அஃதேல் முற்கூறியனவல்லவோ மீண்டுங்கூறிற்று; புனருத்தியாம் பிறவெனின், ஆகாது; தொகுத்துமுடித்தலென்பது தந்திரவுத்தியாகலா னிவ்வாறுரைக்கப்பட்டதென்றறிக. அஃதாக, "குறித்துரைபெழுத் தொடுகூற்றவைசெய்யுளி"னென்றமுறையானே எழுத்து மொழி படி யென்று நீண்டு அடி மொழி யெழுத்தென்று முறைபிறழக்கூறியவா றென்னையெனின் முந்துமொழிந்ததன்றலைதடுமாற்றென்னு முத்தி வகையான் அடிமடக்கென்பதும் சொன்மடக்கென்பதும் எழுத்தின் கூட்டமென்ப தறிவித்தற்கும் ஓரெழுத்தானும் ஓரினத்தானும் வரு வனவு மதன்பாற்படுமென்றற்கும் என்க. நிரோட்டிய மோட்டியமுத லாகக்கூறப்பட்ட மிறைக்கவிகளும் நோக்கியாராயுங்காற் பெரும்பான் மையும் எழுத்தின்பாற்படுமாயினு மவை வேறுவேறு சிறப்புப்பெய ருடையவா யுலகி னுண்டாகுகின்றனவாகலாற் சொல்லின்முடியுமிலக் கணத்தா லவ்வாறு சொல்லப்பட்டது. சொல்லின்முடியுமிலக்கணத்தான்

## ௧௭. நாலடியார்.



## ௧௮. பத்துப்பாட்டு.



## ௧௯. பரிபாடல்.



## ௨௦. புறநானூறு.



## ௨௧. புறப்பொருள்வெண்பாமாலை.

யாதோவெனின் ஒப்பினுகியபெயருங் காரணமாகியபெயருங் குறித் துரைக்கப்படுதலா னவற்றினானே யுணர்ந்துகொள்க. அஃதேல் மாலை மாற்றுஞ் சுழிகுளமும் சருப்பதோபத்திரமுங் கோமூத்திரியுமென நான்குமேயன்றே யாண்டாசிரியனால் வடநூலுளுரைக்கப்பட்டன. ஒழிந்த மிறைக்கவி யீண்டுரைத்தல் மிகைபடக்கூறிற்றாம்பிறவெனின், ஆகா; ஒழிந்தன ஒன்றினமுடித்த றன்னினமுடித்தலென்னுந் தந்திர வுத்தியானுரைக்கப்பட்டது. அல்லதூஉம், வடமொழி முதனூலாதலாற் றனக்கொருவிகற்பம்படக்கூறுதலிலக்கணமென்பது; "முனனோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன்வேண்டும் விகற்பங்கூறி, யழியாமரபி னதுவழிநூலாகும்" என்பவாகலின். (௨௪)

எச்சவியலுரை முற்றும்.

தருகாளமேகங்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலங்காரக்குவலயத்தே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கருங்காடவிபோல்
வருகாரிரத்னகவிராயன்பேரைவரோதயனே.

மாறனலங்காரம் முற்றும்.



# மாறனலங்காரத்தின் சித்திரபந்தங்கள்.

## க. நான்காரச்சக்கரபெந்தம்.

௬௱௭-ஆம்பக்கத்திலுள்ளது.

வானமாதிபவானவா
வான்வாமனுவானவா
வானவாமனமானவா
வானமானிறமானவா.



இது, நடுவுநின்று கீழாரின்வழி யிறங்கி யிடஞ்சென்று அடுத்
ஆரின்வழி நடுவடைந்து முதலடிமுற்றி, மறித்தும் நடுவுநின்று அவ்வ
ரின்வழி திரும்பி யிடஞ்சென்று அடுத்தஆரின்வழி நடுவுசென்று இரண்
டாமடிமுற்றி, அவ்வாறே மூன்றாமடி நான்காமடிகளுஞ்சென்று மு
றிபவாறு காண்க.

## ௨. இதுவும் நான்காரச்சக்கரபெந்தம்.

௪௭௮-ஆம்பக்கத்திலுள்ளது.

---

தேவாமோகூராதிதமகிபாமாபோக
பூவாளிஓபொருதலைக்க—வோவாது
துங்கமுராசாடதேதுன்பமெனும்பூமகட்கு
வெங்கனலாவானேன்விது.



இது, மேலாரின்முனைதொடங்கியிறங்கிக் கீழாரின்முனையிறுதி சென்று முதலடி முற்றி, இடப்பக்கத்தாரின்முனைதொடங்கி வலப் பக்கத்தாரின்முனையிறுதிசென்று தனிச்சொல்லாகப்பட விரண்டாமடி முற்றி, மறித்தும் அம்முனைநின்ற அகரந்தொடங்கி வட்டைவழியே யிடஞ்சுற்றி மூன்றாமடியும் நான்காமடியுஞ்சென்று, தொடங்கிய அகரத் தை மறித்துங் கொண்டுமுற்றிக் குறட்டினிடமே திருமலை யென நின்ற வாறு காண்க. ஒகார அளபெடை யறிகுறியொழிய நின்றது.

---

## ௩. ஆறாரச்சக்கரபெந்தம்.

௪௱௯-ஆம்பக்கத்திலுள்ளது.

---

மாதவனேதென்னரங்கேசமாண்மருளாகமிகு
போதனுமன்பிற்றொழுகேசவபுரைகூர்பவமே
வாதிதமாகுதற்கிங்கேயெனருயிர்காபொதுவே
வேதநமாநமபோதனைவார்க்குள்ளமேதகவே.



இது, இடப்பக்கத்தாரின்முனைநின்றுதொடங்கி வலப்பக்கத்தாரின் முனையிறுதிமேலேறி ஓரடிமுற்றி, அடுத்த கீழாரின்முனைநின்று மேலாரின்முனையிறுதிமேலேறி இரண்டாமடிமுற்றி, அடுத்த வலப் பக்கத்தாரின்முனைநின்று இடப்பக்கத்தாரின்முனையிறுதிமேலேறி மூன் றாமடிமுற்றி, முற்றிய வெகாரத்தினின்று மறித்துத் தொடங்கி வட்டை வழி யிடஞ்சுற்றிச்சென்று மறித்தும் அவ்வெகாரத்தைக்கொண்டு நான் காமடிமுற்றியவாறு காண்க.

---

## ௪. எட்டாரச்சக்கரபெந்தம்.

௪௮-ஆம்பக்கத்திலுள்ளது.

தண்மதிநிகர்வதயங்கியவதனம்
பொன்னணிமுலைநிடதப்புரைவரைநிகர்
மடிசேர்தருதாமதபத்தர்க்கெட்டா
மாறன்றுடரிமலைதன்மின்போன்றொளிர்
தண்ணென்பொற்கலைமன்னியமாமல
ரம்மடவார்மையுண்டாட்டமர்கண்ணே.



இது, இடக்குறுக்காரின்முனை தொடங்கி வலக்குறுக்காரின்முனை பிறிதிசென்று முதலடிமுற்றி, அதனையடுத்த இடக்கீழாரின்முனை

தொடங்கி அதனெதிர் மேலாரின்முனையிறுதி இரண்டாமடிமுற்றி, அதனையடுத்த கீழாரின்முனைதொடங்கி யதனெதிர்நின்ற மேலாரின் முனையிறுதிசென்று மூன்றாமடிமுற்றி, அதனையடுத்த வலக்கீழாரின் முனைதொடங்கி யெதிர்நின்ற மேலாரின்முனையிறுதிசென்று நான்காமடி முற்றி, முதலடிதொடங்கியதகரத்தினின்று வட்டைவழியே யிடஞ் சுற்றி ஐந்தாமடியாறாமடிகள் முற்றியவாறு காண்க.

இதனுள், முதலடிதொடங்கிவந்த குறட்டெழுத்துக்களை யிடஞ் சுற்றிப்படிக்க வடமலையப்பன் என்னுந் திருநாமம்வருமாறு காண்க.



## ௫. இதுவும் எட்டாரச்சக்கரபெந்தம்.

௪௮௧-ஆம்பக்கத்திலுள்ளது.

---

சேடுறுதட்பச்சிரிமகிரிக்கைவிலின்
போர்பொருவீரபுராரிசெற்றத்தடர்த்
திண்பமதுறவமரியலருணிருதனேர்
மூண்புமேத்தமாசரிம்பர்கம்பாலுறு
சேர்மழைபோனிறத்திருவுறைமுதல்வன்
தாரிணைத்தாளெதிர்தாளுற்றுன்னெஞ்சே.



இது, இடக்குறுக்காரின்முனையின்றதொடங்கி அதனெதிராரின் முனையிறுதிசென்று முதலடிமுற்றி, அடுத்தஇடக்கீழாரின்முனையின்று

அதனெதிழாரின்முனையிறுதிசென் றிரண்டாமடிமுற்றி, அடுத்தகீழாரின் முனைநின்று எதிர்த்தமேலாரின்முனையிறுதிசென்று மூன்றாமடிமுற்றி, அடுத்தவலக்கீழாரின்முனைநின்று அதன் எதிராரின்முனையிறுதிசென்று நான்காமடிமுற்றி, முதலடிதொடங்கிய சேகாரம்தொட்டு வட்டைவழி யிடஞ்சென்று எதிராரினிறுதியில் ஐந்தாமடிமுற்றி, அதனடுத்த அறை தொடங்கி அம்முறைசென்று முன்னடிதொடங்கிய சேகாரத்தைக் கொண்டு ஆறாமடிமுற்றியவாறு காண்க.

முதலடிதொடங்கிக் குறட்டில்விழுமெழுத்துக்களை யிடஞ்சுற்றிப் படிக்கச் சீராமராமசேயம் என்னும் ராமதோத்திரம்வருதலும், குறட்டினின்றும் ஐந்தாமறைகளில் இடஞ்சுற்றிப்படிக்கத் தருமமேழைகதரும் என வருதலுங் காண்க.

---

## ௬௱. பதுமபெந்தம்.

௬௮௨ - ஆம்பக்கத்திலுள்ளது.

---

மாறுமாலாலேமாறுமா
மாறுமாவேளேமாறுமா
மாறுமாகோவாமாறுமா
மாறுமாவாதேமாறுமா.




இது, நடுப்பொகுட்டினின்றும் மேல் வலக்கோணத்துள்ள அகவிதழ் புறவிதழ்சென்று வலமே அடுத்த புறவித ழகவிதழ்வழியே பொகுட்டினிழிந்து அடுத்த அகவிதழ்வழி புறவிதழ்சென்று முதலடிமுற்றி, மறித்தும் பொகுட்டினின்றும் கீழ் வலக்கோணத்துள்ள அகவிதழ் புறவிதழ்வழி அடுத்த கீழ்க்கோணத்துள்ள புறவித ழகவிதழ்சென்று பொகுட்டினிழிந்து கீ ழிடக்கோணத்துள்ள அகவிதழ்வழி யதன்புறவிதழ்சென்று இரண்டாமடிமுற்றி, மறித்தும் பொகுட்டினின்று கீ ழிடக்கோணத்துள்ள அகவிதழ் புறவிதழ்வழி இடக்கோணத்துள்ள புறவித ழகவிதழ் சென்று பொகுட்டினிழிந்து மே லிடக்கோணத்துள்ள அகவிதழ்வழி அதன் புறவிதழ்சென்று மூன்றாமடிமுற்றி, மறித்தும் பொகுட்டினின்று மே லிடக்கோணத் தகவிதழ் புறவிதழ்வழி மேற்கோணத்துள்ள புறவித ழகவிதழ்சென்று பொகுட்டினிழிந்து முதலடிதொடங்கிச் சென்றகோணத்திதழ்களிற்சென்று நான்காமடிமுற்றியவாறு காண்க.

---

தொடங்கி அதனெதிர் மேலாரின்முனையிறுதி இரண்டாமடிமுற்றி, அதனையடுத்த கீழாரின்முனைதொடங்கி யதனெதிர்நின்ற மேலாரின் முனையிறுதிசென்று மூன்றாமடிமுற்றி, அதனையடுத்த வலக்கீழாரின் முனைதொடங்கி யெதிர்நின்ற மேலாரின்முனையிறுதிசென்று நான்காமடி முற்றி, முதலடிதொடங்கியதகரத்தினின்று வட்டைவழியே யிடஞ் சுற்றி ஐந்தாமடியாறாமடிகள் முற்றியவாறு காண்க.

இதனுள், முதலடிதொடங்கிவந்த குறட்டெழுத்துக்களை யிடஞ் சுற்றிப்படிக்க வடமலையப்பன் என்னுந் திருநாமம்வருமாறு காண்க.



# ௭. முரசபெந்தம்.

௩௮௩, ௩௮௪-ஆம்பக்கங்களிலுள்ளது.

---

போதவானதுவாதரா
மாதவாதணவாதநா
நாதவாணதவாரவா
வேதவானதுவாரகா




இது, செவ்வெவணைக்கான்கடியுள்ளும் முதலடியு மீற்றடியும் நான்கடிகளிலும் மாறுடிக் கோமூத்திரிபோல மடங்கிச்சென்று முற்றியும், இரண்டாமடி முற்சுராத்தின்வலஞ்சென்று நான்கடியிலும் மாறுடி மூன்றாமடிமுதலெழுத்தான்முடிந்தும், மூன்றாமடி, பிற்சுராத்தின் இரண்டாமடியினிறுதியெழுத்தினின்றுதொடங்கி இடஞ்சென்று நான்கடியினு மாறுடி மூன்றாமடியினிறுதியெழுத்தான் முடியுமாறு காண்க. அன்றியும், இரண்டுமூன்றாமடிகள் முறையே முற்பாதி பிற்பாதிகளில் வலமிடமாகத் தம்முண் மாறுடிமுடிவதுங் காண்க.

---

# ௮. உபயநாகபெந்தம்.

**௪௮௪, ௪௮௫-ஆம்பக்கங்களிலுள்ளது.**

---



**(இதன் விவரணம் மறுபக்கம் பார்க்க.)**

மாறன்சடகோபன்வண்குருகூர்வாழ்பொருளை
யாறனளிமெய்வன்னமே—பேறுத்
தமனுமாமாசாதன்றூண்மொழிதற்பாமன்
னெமர்யாவெனமையாளிறை.

அறமுமறமமைமர்தவன்பென்பதவும்
பெறனன்னலமதுன்மைபோ—துறபாற்கோர்
மானமனமேநினைமாண்மாமேகத்தந்தமே
வெனமெமையாளிமை.

இவ் விரண்டுபாட்டும், இரண்டுலோகங்களின் தலைநின்றுதொடங்கி வான்முனைகளிறுதியாக இடையிடையே தத்தம்முடலினும், பிறிது பிறிதுடலினும் மாறுடி முடியுமாறு காண்க.



# ௯. இரதபெந்தம்.

௮௫, ௪௮௯-ஆம்பக்கங்களிலுள்ளது.

---




(இதன் விவரணம் மறுபக்கம் பார்க்க)

நாராராரபகயனயணாணின்ன்
ணாரமணாயனிலமாயவா—சீரய
நன்காநமநமநன்காநமநம
மன்காமன்றாதாய்நம.

மாயவனேவேதமதியேவயநாக
பாயவனேதநளினபாதாபாரபார
தூயவனேகாரணாபூரணாதோணிலமா
ணாயகனேசீரகநாராயணாயநம

இவற்றுள், முதற்பாட்டு, மேற்பாதியின்சிகரத்தினின்றும் இரு மருங்கினு மிடையினும் நாராயணாயநமவென்னும் மந்திரம்நிற்க வலமிடமாக மடக்கியிறங்கிமுடியுமாறும், பிற்பாட்டு, கீழ்ப்பாதியின் மேற்றளத்தின்முதலறைதொடங்கி வலமிடமாகமடக்கியிறங்கி அடியறையினின்று நடுப்பத்தியில் நாராயணாயநமவென் றெழுத்தும் மாறுடியேறி முடியுமாறுங் காண்க. இதனுள் ணின்ன் என்னு மொற்றளபெடை யோரெழுத்தாதலால் அறிகுறியொழிய வோரறையுள்நின்றது.

---

# ௧௦. சருப்பதோபத்திரம்.

௨௯௦, ௪௯௧-ஆம்பக்கங்களிலுள்ளது.

——(௦)——

தேமாபூமாமாபூமாதே
மாதாகாவாவாகாதாமா
பூகாவாலாலாவாகாபூ
மாவாலாநீநீலாவாமா.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தே | மா | பூ | மா | மா | பூ | மா | தே |
| மா | தா | கா | வா | வா | கா | தா | மா |
| பூ | கா | வா | லா | லா | வா | கா | பூ |
| மா | வா | லா | நீ | நீ | லா | வா | மா |
| மா | வா | லா | நீ | நீ | லா | வா | மா |
| பூ | கா | வா | லா | லா | வா | கா | பூ |
| மா | தா | கா | வா | வா | கா | தா | மா |
| தே | மா | பூ | மா | மா | பூ | மா | தே |

இது, நாற்புறமும் தலைப்பாகவைத்து வரிசையாய்ப்படித்தாலும், மடக்கிப்படித்தாலும், நாலடியையும் மேனின்று கீழிறக்கியும் கீழ்நின்று மேலேற்றியும் படித்தாலும் சொரூபங்கெடாமல் மாலைமாற்றாய் முடியுமாறு காண்க.

# கக. கூடசதுர்த்தம்.

சஅக, சஅஉ-ஆம்பக்கங்களிலுள்ளது.

நாதாமானதா தூயதாருளா
ணீதா னுவாசிராமனுமனு
போதாசிமானுதாரவிராமா
தாதாதாணீவாமனுசிதரா.

இப்பாட்டின் நான்காமடியானது, முதன்மூன்றடியையும் கீழேகாட்டியவாறு மேனின்றுகீழுங் கீழ்நின்று மேலுமாக வெழுதத்தோன்றிய பத்தெழுத்துவரி மூன்றினுள் இடைவரியாய் மறைந்துகிடப்பது காண்க.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| தா | தூ | ய | தா | னு | னு | ம | மா | னு | மா |
| தா | தா | தா. | ணீ | வா | ம | னு | சி | த | ரா |
| மா | ன | ரு | ளா | சி | ரா | போ | தா | ர | வி |

## கஉ. கோமூத்திரி

சகூஉ. <u>ஆம்பக்கத்திலுள்ளது</u>

மாயாமாயாநாதாமாவா
வேயாநாதாகோதாவேதா
காயாகாயாபோதாகாவா
பாயாமீதாபேதாபேதா.

மா யா மா யா நா தா மா வா வே யா நா தா கோ தா வே தா

கா யா கா யா போ தா கா வா பா யா மீ தா பே தா பே தா

இது, முன்னிரண்டடி மேல்வரியாகவும், பின்னிரண்டடி கீழ்வரியாகவு மெழுதி, அவ்வரியிரண்டையும் கோமூத்திரரேகைவழிபடிக்க ஒன்றுவிட்டொன்று மாறுமடிமுடியுமாறு காண்க.

# கரு. சுழிகுளம்.

௩௯௩-ஆம் பக்கத்திலுள்ளது

---

சதிதகனடறுடீ
திததிதிகாண்ஞாறு
ததிதாகார்கண்ட
கதிகாகிளர்கான.




இது, செவ்வேயெழுதிய நாலடிநான்குவரியுள், முதலடிமுத லெழுத்தினின்றும் சுழிரேகைவழியே இடஞ்சுற்றிப்படிக்க நாலடியு முடியுமாறுகாண்க.

---

## ௧௪. எழுகூற்றிருக்கை.

௪௯௪-௪௯௯ ஆம் பக்கங்களிலுள்ளது.

---

ஒருதனித்திகிரியினிருவிசும்பொழுகத்
தொருஞான்றொருபகலொடியாவுழப்பிற்
பதமிரண்டுமிலாப்பாகுடையூர்தியின்
முந்நீர்வரைப்பினிருபால்விடப்பா
னொருபிணர்த்தடக்கையொன்றியவிருகவுண்
மும்மதநால்வாய்க்கரியுரிமுக்கட்
செம்மலினிருகணுமிமையாத்தேவர்க
ளொருபோழ்தகலாதொருவழிப்படநின்
றிருகையுங்கூப்பிமுப்போதுமிறைஞ்ச
நான்முகமுதல்வனினசைஇயநல்கு
மைந்தருநீழலினறமுதனான்கினுண்
முந்தியமுப்பான்முழுநலமெதிர்கொள
விருமருங்கினுமின்னொருமருங்கரம்பைய
ரொருதிறத்திருபதநடநவின்றெழுக
மும்முரசானுமுன்றிலினிரட்டத்
தெயமுரண்முருக்கித்திசைபலவநான்கினு
மைம்பொறியதனகத்தாறைந்தவித்துச்
செம்பொருணன்மறைதெற்றெனத்தேர்ந்த
முக்கோற்பகவர்முறைமுறைபிறழா
விருவினையொருங்குவென்றிறைநிலையிஃதென
வொருதலைபற்றினரிருமையும்புணர்ந்தோர்
முக்குணமவற்றுண்முற்குணனமைந்தவருட
ளுவாக்கடவுளிற்றிருக்குநற்றிசைவரு
மினக்கதிரகலத்தினுயிரஞ்ச
வாழ்நாளறுதியில்வவ்வுதற்கமைந்த
நமன்றிசையெழுதிறனிரம்புதென்ன
வறநாலஞ்சினறவளிக்குலமன்குணர்
முருகவிழ்நறுந்தார்முந்நூன்மார்பத்
திருபிறப்பாளனேரிடத்தேதிருபு



# ௧௫. சதுரங்கபெந்தம்.

## ௫௦௨-ஆம்பக்கத்திலுள்ளது.

'மானவனுமேவலாமாறனித்தமாமாலை
யானதவபோதனுமாயாய்ந்தகோ—மானவடி
வாதனின்மேனன்கலன்பூணென்றுணரீவர்தேவனென்
றுதயமாவன்புலமாய.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |
| | | | | | | | |

இச்செய்யுளை இச்சதுரங்க அரங்கின் நாலுபக்கமும் மையங்களி னொன்கு பதினுமறையிலும் நடுவி னாலறையிலும் மாதவன் என்னுந் திருநாமநிற்குமாறு ஆராய்ந்து அமைத்துக்கொள்க.

## ௧௬. கடகபந்தம்.

௫௦௧-ஆம்பக்கத்திலுள்ளது.

கோலநிலமேலழகுகூடுசெவிவீடுறமா
மூலமெனச்சென்றுதவுமுன்றோனே—நீலமணி
வண்ணாவடமலைபாமாதவாகஞ்சமலர்க்
கண்ணாசரணாகதி.



இது, முகப்பின்பூட்டுவாய்தொடங்கி வலமே இரண்டாமறை சென்று கீழறையினிறங்கி, மறித்து மவ்வறையின்வழியே மேலறையிலேறி நடுவறையிலிறங்கி யாறுமறைவரைசென்று, அதன்கீழறையிறங்கி மறித்தும் முன்போலவேயேறியிறங்கி ஏழுமறையின்றும் வலமேசுற்றி யிறுதியறைசென்று முடியுமாறு காண்க.

---

# ௧௭. கடகபெந்தம். (வேறு)

௫௦௬-ஆம்பக்கத்திலுள்ளது.

---

நாகநகராகநிதிநாகரிகராகநிறை
யேகநகராசியிணையில்லா—தார்கணிகழ்
தென்னரங்கனுளாயசீராளாஞான
நன்னரங்கர்க்கேயடியேனன்.



இது, பூட்டுவாய்நின்று வலப்பக்கமிரண்டாமறைசென்று கீழறையினிறங்கி பல்வழியே மேலறையிலேறியிறங்கி வலஞ்சென்று இடையிடையேயுள்ளகுண்டுகளாகிய நான்கறைகளிலுஞ்சென்றுமீண்டு மிறுதியறைசென்று முடியுமாறு காண்க. இப்பாட்டிற்கு உரையெழுதப்படாமையாலும் சுத்தபாடந்தோன்றாமையாலும் பெந்தத்திற்குப் பொருந்துமாறு இங்குச் சிறிது வேறுபடுத்தியெழுதப்பட்டிருக்கிறது.

---

ஸ்ரீ:

# சூத்திரமுதற்குறிப்பகராதி.

# சூத்திரமுதற்குறிப்பகராதி

# சூத்திரமுதற்குறிப்பகராதி

ஸ்ரீ

# உதாரணசமசெய்யுண்முதற்குறிப்பகராதி

# உதாரணச்செய்யுண்முதற்குறிப்பகராதி

ஸ்ரீ:

# மாறனலங்காரம்.

## தற்சிறப்புப்பாயிரம்.

தேனாருமகிழ்த்தொடையலுமௌலியுந்
திருக்கிளர்குழைக்காதுங்
கானாருமலர்த்திருமுகச்சோதியுங்
கயிரவத்துவர்வாயு
மோனமாகியவடிவும்மார்பமு
முத்திரைத்திருக்கையு
ஞானதேசிகன்சரணதாமரையுமென்
னயனம்விட்டகலவே. (௧)

பூமாதுமன்னும்புகழ்க்குருகூர்வாழ்புலவர்
கோமானியற்பெயராற்கூறுமணிப் — பாமாலைக்
காரணனுஞ்செஞ்சொலலங்காரன்சோலைமலைக்
காரணனாரணனேகாப்பு. (௨)

ஆக்கமுறக்காக்கபுகழ்மாறனலங்காரத்தைப்
பூக்கமலத்தாண்மெய்புளகமெழ — நோக்குங்
குழகனெழிற்சோலைமலைக்கொற்றவனுஞ்சங்கத்
தழகனருண்மாலலங்காரன். (௩)

அழுக்காறிலாயழுக்கறுக்குங்கல்வி
யொழுக்காருலகத்துளரா — விழுக்கிலா
முற்பனுவல்கண்டுரைத்தேன்மொய்யிழாய்புன்மொழியு
நற்பனுவலாமெனவேநான். (௪)

வாய்ந்ததிருப்பதிநூற்றெட்டினையும்வாழ்த்தியே
யாய்ந்ததமிழ்மாறனணியெனப்பேர் — தோய்ந்துளதாற்
காண்டகுசீர்மற்றோரணியுங்கவின்புணர்க்க
வேண்டுமேயீங்கிதற்குமேல். (௫)

# உதாரணச்செய்யுண்முதற்குறிப்பகராதி

ஸ்ரீ:

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௩. | ௨௬ | சார்பெனலாய்" | சார்பென" |
| ௨௧ | ௯ | வந்தார். | சென்றார். |
| ௩௧ | ௧௬ | குணத்திக்குக் | குணத்திற்குக் |
| ௧௨. | ௨௫ | ணகாவிறு | ணகாவிறு |
| ௧௩. | ௨௫ | அகத்தினும் | அகத்தினுள் |
| ௧௬ | ௧௮ ⎫ ௧௯ ⎭ | "அஃதாவது மாத்திரை வகையு | அஃதாவது "மாத்திரையளவு |
| ௧௫ | ௬ | தொகுத்தல் விரித்தல் | "தொகுத்தல் விரித்தல்" |
| ,, | ௧௯ | அளையளவு | அளையளபு |
| ௧௯ | ௧௫ | வேற்றுமைதானே | வேற்றுமைதாமே |
| ,, | ௨௬ | மறத்தைக் | மரத்தைக் |
| ,, | ௨௧ | லாசிரியர்க்குமுரித்து. | லாசிரியர்க்குரித்து. |
| ௧௭ | ௬ | அதற்குந் | அதற்குத் |
| ௪௮ | ௨௨ | கிடப்பினும் மாட்டென | கிடப்பினும்........மாட்டென |
| ,, | ௨௯ | கினியா | கினிய |
| ௧௯ | ௧௨ | கவினபெற | கவின்பெற |
| ,, | ௧௬ | தீபகச் | தீபகஞ் |
| ,, | ௨௯ | தாகவுநோக்கி மித | தாகநோக்கியு மித |
| ௨௧ | ௧௯ | பாட்டுரைநூலே | "பாட்டுரைநூலே" |
| ௨௩. | ௧௯ | மூவவை | மூவமை |
| ௨௫ | ௨௯ | கோட்போ | கேட்போ |
| ௩௦ | ௧௨ | மாணவன் | மாணவன் |
| ௩௧ | ௫ | துடங்கிய | தொடங்கிய |
| ௩௬ | ௧௮ | கோடல் | கோடலால் |
| ௩௯ | ௨௩. | மே "லென்பவும் | மேல் "என்பவும் |
| ௪௦ | ௨௬ | யுடம்பே, பால் | யுடம்பே,...........பால் |
| ௪௨ | ௧௨ | விதந்தன்று" | விந்தன்று" |
| ,, | ௨௦ | பாட்டாக்கியதும் | பாட்டாக்கியது |
| ௫௨ | ௧௬ | டாக்கதுதினைக் | டாக்கத்தினைக் |
| ௫௯ | ௨௯ | நிலையினு, மாட்டென | நிலையினும்,........மாட்டெ |

| | | | |
|---|---|---|---|
| ௫௪ | ௨௧ | ர்திருவழ். | கந்துருவட் |
| ௬௫ | ௧௧ | பெயர் | "பெயர் |
| ௭௮ | ௧௫ | னைவா | னைவார் |
| ௭௯ | ௧௭ | விதர்ப்பகாடு. | விதர்ப்பநாட்டது. |
| ௮௪ | ௧௭ | பொருளுஞ் | பொருள் |
| ,, | ௨௪ | சமாதியும் | சமாதி |
| ௮௯ | ௧௧ | ஆவிவு | ஆவியு |
| ௯௩ | ௨௫ | சமனிலை | சமநிலை |
| ௯௯ | ௫ | மகடிதகெடித | மகடிதகெட |
| ௧௨௮ | ௧௩ | நடைப் | நடை |
| ,, | ௧௯ | தலைவன் | தலைவனை |
| ௧௩௩ | ௨௧ | மாமிற் | மாயிற் |
| ௧௩௮ | ௩ | றசப்பிணுட்கே" | றசப்பிணுளை" |
| ௧௪௨ | ௩௧ | யுடைளாள் | யுடையாள் |
| ௧௬௩ | ௭ | றளியோடு | றளியொடு |
| ௧௬௯ | ௨௩ | (113) | 113. |
| ௧௭௮ | ௧௫ | "பவள | "பவழ |
| ,, | ௧௭ | "அஞ்சவரு | "அஞ்சுவரு |
| ௧௮௨ | ௧௬ | யடையாய்! | யுடையாய்! |
| ௧௮௪ | ௨௬ | கூறப்படும். | கூறவும். |
| ,, | ௨௮ | வாயுவதாம் | வாயுவாம் |
| ௧௮௭ | ௪ | யாங் கயிலை. | யங்கயிலை. |
| ௧௯௦ | ௭ | வழுதே | வயிழ்தே |
| ௧௯௩ | ௨௮ | மானில | மாநில |
| ௧௯௭ | ௮ | இயற்பரத்தை | இற்பரத்தை |
| ௨௩௪ | ௧௧ | புண்பு | பண்பு |
| ௨௫௫ | ௧௩ | ஞெண்மேற் | ஞேண்மேற் |
| ௨௬௩ | ௨௪ | பெயரோடு பெயர் நிரனிறை. | பெயரோடு பெயரே நிரனிறை. |
| ௨௭௧ | ௧௫ | அமுகு | அழகு |
| ௨௭௭ | ௨௫ | றண்காறுள் | றங்காறுள் |
| ௩௦௮ | ௧௧ | மன் யிர் | மன்னுயிர் |
| ௩௧௨ | ௧௦ | தேலாத | தோலாத |
| ௩௧௫ | ௩ | பிறருடம்ப | பிறனுடம்பட்டது |
| ௩௧௭ | ௨௧ | பென்பார் | வென்பார் |
| ௩௩௩ | ௪ | சாரியமும் | காரியமும் |

| | | | |
|---|---|---|---|
| ௩௩௮ | ௩ | யடியார்க் | யடியார்க் |
| ௩௫௨ | ௧௧ | ணித | புனித |
| ௩௫௩ | ௧௧ | தெழில் | தொழில் |
| ,, | ௨௭ | அழிந்த | ஒழிந்த |
| ௩௫௭ | ௯ | வதாத்த | வுதாத்த |
| ௪0௨ | ௮ | யொழித் தேனே் | யொழித் தேனை |
| ௪0௪ | ௩0 | இனவா | இனவார் |
| ௪௫௧ | ௨௭ | னுள்ளாராய | னுள்ளாராய |
| ,, | ௫௫ | இனவா | இனவார் |
| ௪௫௨ | ௧௮ | பாகவர் | பாகவதர் |
| ௪௭௭ | ௧0 | மூன்றிரு | மூன்றிரு |
| ,, | ௨௧ | சச்கரம். | சக்கரம். |
| ௪௯௨ | ௧௩ | சக்கவர்த்தி | சக்கரவர்த்தி |
| ௪௯௭ | ௩௩ | திக்கனி | திக்கினி |
| ௪௯௯ | ௨ | இதனுள | இதனுள் |
| ௫௧௩ | ௧௮, ௧௭ | மருங்கினியற்கை | மருங்கின்மிகற்கை |

எழுகூற்றிருக்கைச் சித்திரம் கிலம் ௪ இடப்பக்கம் அறை ௩ மூங்கட் மூக்கட்





ஸ்ரீ:

# மாறனலங்காரம்



## சிறப்புப்பாயிரம்.

உலகம்யாவையுமுற்றுபயன்விளைப்பா
னலகில்சோதியணிகிளர்திருவுரு
வுணர்வுயிரெனக்கலந்துத்தமர்நித்தர்
கணமகலாதபொற்கவின்பதிநின்று
றுரவுநீர்வளைத்தவொன்பானுட்டென்புலப்
பாரதகண்டத்துட்பழம்பதியெனப்புகும்
விண்டொடநிவந்தபொழில்வடவேங்கடந்
தெண்டிரைகறங்குதென்குமரியென்றாயிடை
யமிழ்தினும்வான்சுவைத்தாகியமும்மைத்
தமிழ்தெரிபுலமைச்சான்றோர்மதிக்கு
முதுமொழித்தண்டிமுதனூலணியொடும்
புதுமொழிப்புலவர்புணர்த்தியவணியையுந்
தனதுநுண்ணுணர்வாற்றருபலவணியையு
மனதுறத்தொகுத்தும்வகுத்தும்விரித்துப்
பொதுவியல்பொருள்சொல்லணியெச்சவியலெனச்
சதுர்பெறவிரண்டிடந்தழீஇயசார்பெனலாய்க்
காரிதந்தருள்கலைக்கடலியற்பெயர்புனைந்
தாரியர்துவன்றவைக்களத்துரைத்தனன்
சிற்குணச்சிறிவாதனின்னருளா
னற்பொருண்மூன்றையுநலனுறவுணர்வோன்
பெருநிலம்புகழ்திருக்குருகைப்பெருமா
ளருள்குருகூர்வருமனகன்செழுந்தேன்
மருக்கமழ்சீரத்தார்வணிகன்புகழ்த்

# பாயிரவுரை

திருக்குருகைப்பெருமாள்கவிராய
னருட்டுணைத்துடன்வளர்சடையன்
பொருட்டொடர்நவம்புணர்புலமையோனே.

என்பது பாயிரம்:—என்றானுரைப்பினுமந்நூற்குப் பாயிரமுரைத்தே நூலுரைக்கவென்பதுமரபு. என்னை? "ஆயிரமுகத்தாலகன்றதாயினும், பாயிரமில்லதுபனுவலன்றே." என முன்னோர்கூறிய முறைமையானும், இந்நூலுடையாரும் "பொற்புறவிழுமியபொருள்பல புணர்க்கினுந், தற்சிறப்புளதேதந்திரமென்ப." என்பதனானுமுணர்க. இப் பாயிரத்துக்குப்பொருண் மேற்காட்டுதும்.

1. புறவுரைமுகவுரைபுனைந்துரைதந்துரை
பதிகநூன்முகமணிந்துரைபாயிரம்.

(இதன்பொருள்) இவையேழும் பாயிரத்திற்குக் காரணப்பெயரா மென்றவாறு. (க)

2. புறவுரையேயதுகேட்டென்னைபயனெனின்
மாயிருஞாலத்தவர்மதித்தமைத்த
பாயிரமில்லாப்பனுவல்கேட்கிற்
கானுக்கடலிடைக்கலைஞரில்கலத்தரின்
மாணுக்கன்றன்மதிபெரிதிடர்ப்படும்.

(என்னுதலிற்றோவெனின்) பாயிரமில்லாப்பனுவல்கேட்போன் மதியிடர்ப்படுதற் குவமையுணர்த்துதனுதலிற்று.

(இதன்பொருள்) மூந்துநூல்செய்தற்காசிரியர் மனத்தினுட் கொண்டுவிதித்ததாம் பாயிரமில்லாதநூல்கேட்பானுளிற் கேட்ட மாணுக்கன்மதி முன்புகண்டறியாத கடலிடத்து மீகாமனில்லா வங்கத்திற் செல்பவர் மதிபோல மிகவுமயக்கமெய்து மென்றவாறு; என்பதாற் பாயிரங் கேட்டல் பயனுடைத்தாயிற்று. (உ)

3. பொதுச்சிறப்பெனவதுபகரிருவகைத்தே.
(என்) பாயிரத்தினதுகூறுபாடுணர்த்து

(இ-ள்) பாயிரமென்ன வொன்றாய்நின்றவது பொதுவுஞ் சிறப்பு மென மூந்நூல் கூறியதா யிரண்டுகூறுபாடுடைத்தென்றவாறு. (௩)

4. அவற்றுள்,

போக்கறுபனுவலுட்புகல்பொருளல்லா
தாக்கமுற்றனைத்தினுமமைவது பொதுவே.

(எ-ன்) முறையானே பொதுப்பாயிரத்தியல்புணர்-ற்று.

(இ-ள்) அவ்விரண்டனுட் புலவராற் கூறப்பட்ட குற்றமற்ற நூல்களுட் கூறப்படும்பொருளல்லாத புறப்பொருளாயெல்லா நூன் முகத்து மின்றியமையா தாக்கம்பெற்றமைவது பொதுப்பாயிரமா மென்றவாறு. அமைதல் வெளிப்படாது மறைந்துமறைந்து நடத்தல். எல்லா நூன்முகத்தும் பொதுவாக மறைந்துநடத்தலிற் பொதுவெனக் காரணப்பெயராயிற்று. (௪)

5. அதுவே,

நூண்ணூனுவல்வோனுவல்வதனியற்கை
கொள்வோன்குறிப்பிற்கொள்கடன்றன்னொடுந்
தெள்ளிதினைந்தெனச்செப்பினர்புலவர்.

(எ-ன்) பொதுப்பாயிரத்தின் கூறுபாடுணர்-ற்று.

(இ-ள்) அப்பொதுப்பாயிரம் நுண்ணியநூலின்மரபும், நுவல் வோன்மரபும், நூல்நுவல்வதன்மரபும், கொள்வோன்மரபும், அம்மாணாக் கனுள்ளக்குறிப்பினாற் கொள்வதன்மரபுதன்னொடு மைந்தென்று தெள் ளியதாய்க்கூறினர் மூந்நூலாசிரியரென்றவாறு. ஏகாரமீற்றசை. தெள் ளிதினைந்தெனச் செப்பினரென்று சிறப்பித்தவதனால் "ஈரிரண்டென்ப பொதுவின்றொகையே" என்போர் சுருங்கக்கூறிய நோக்கமேநீக்கி யைந் தென்போர் நோக்கமே யுட்கொண்டாரென்பதாயிற்று. (௫)

6. அவற்றுள்,

உத்தமநூன்மரபுணர்த்துங்காலை
முத்திறத்தொன்றாய்ப்பாயிரமுதலுப்
நாற்பொருளையுறநவில்வனவாகிச்

சூத்திரமோத்துப்படலமென்றுரைபெறு
முறுப்புடைப்பிண்டத்தொடுமமைந்தலிகாக்
காண்டிகைவிருத்தியிற்காட்சிதந்தீரைங்
குற்றமொன்றின்றிக்குழகொடுமெண்ணான்
குத்தியிற்சிறந்ததென்றுரைத்தனர்புலவர்.

(எ-ன்) வைத்தமுறையானே நூன்மாபுணர்-ற்று.

(இ-ள்) அங்ஙனங்கூறப்பட்ட வைந்தனுள்ளு முத்தமநூலின திலக்கணத்தை யறிவிக்குமிடத்து முத்திறத்தொன்றென்பது முதலாக வெண்ணான்குத்தியீருகப் பன்னிரண்டுகூற்றதாய்ச் சிறந்ததென்று மேனாட்கற்றுவல்லோருரைத்தனரென்றவாறு. எனவே, இந்நூலுடையார்க்குமங்ஙனமுரைப்பதே கருத்தென்பதாயிற்று. பிண்டத்தொடு மமைந்தெனவே மகாபிண்டமு மொன்றுளதாகப் பன்மூன்றுண்டென வுணர்க. இவை பன்மூன்றும் மேற்காட்டும் வகைச்சூத்திரங்களா லுணர்க. (௬)

7. முத்திறத்தொன்றென்பனமுதல்வழிசார்பே.

(எ-ன்) தொகைச்சூத்திரத்தினுண் முதலே நூல்கண் மூன்று கூற்றினுளொன்றுமென்று ரவையிவையென் றவற்றின் பெயரு முறையுந் தொகையுமுணர்-ற்று.

(இ-ள்) நூல்கண்மூன்றுகூற்றினுளொன்றென்பன முதனூல் வழிநூல் சார்புநூலென மூன்றுகூற்றனவாமென்றவாறு. நூலென்பதனை யதிகாரமுறையான் மூன்றினும்விரித்துரைக்க. (எ)

8. முதல்வனிற்சிறந்தது முதனூலாகும்.

(எ-ன்) முறையானே முதனூலாமாறுணர்-ற்று.

(இ-ள்) முதல்வனுன்மொழிவதா யழிவிலாதே சிறப்பெய்தியது முந்து நூலாமென்றவாறு. அன்றியும் முதல்வன் றனதில்லாளுக்குரைத் ததாய்ச்சிறப்பெய்திவருவதெனினுமாம். அதற்கு அரி அயன் அரன் எனுமிவர் பூமிதேவி காயத்திரி உமாதேவி என்பவர்க்குரைத்ததாய் எனக்கூறுக. இன்னும் அவ்விலேசானே இல்லென்பதனையுவமவுரு

பாக்கி முதல்வனைப்போலப் பழமைத்தா யழிவில்லாதே சிறப்பெய்தி வருவதெனினுமாம். அது சுருதியேயாம். (அ)

9. விழுமியமுதனூல்விதித்தவற்றினொடும்
பழுதறச்சான்றோர்படைத்தவுந்தழீஇ
வழுவின்றாய்வரல்வழிநூலாகும்.

(எ-ன்) வழிநூலாமாறுணர்-ற்று.

(இ-ள்) முக்கியமான முதனூல்கூறிய விலக்கணங்களோடுங் குற்றமறக்கற்றுவல்லோரால் விதித்து வழங்கிவருமிலக்கணங்களோடும் பொருந்தி முறைவழுவுதலின்றிப் புலவராலமைக்கப்பட்டுவருவது வழிநூலாமென்றவாறு. வழி-பின். (௯)

10. இவ்வகைப்பனுவலோடொத்திழுக்கின்றாய்ச்
செவ்விதிற்சிறிது திரிவதுசார்பே.

(எ-ன்) சார்புநூலாமாறுணர்-ற்று.

(இ-ள்) இங்ஙனமிரண்டுதிறத்தவாகப் பகுத்துக்கூறப்பட்டநூல்களிரண்டோடுமொருதன்மைத்தாகவொத்து அவற்றோடு மூன்றாவதோர் புலவ னிலக்கணமிழுக்கா தழகிதாகச் சிறிது வேறுபட விரிப்பது சார்புநூலாமென்றவாறு. இம் மூன்றனுளொன்றாய்வருவது நூலென்றறிக. (௧0)

11. அதன்வழிநடைபெறுமது நால்வகைத்தே.

(எ-ன்) வழிநூ லினைத்தெனவுணர்-ற்று.

(இ-ள்) இறந்ததுபோற்ற லென்னுமுத்தியான், முதல்வனிற் சிறந்த முதனூலின்வழியொழுகலாறுடைய வழிநூலானது நால்வகைப் படுமென்றவாறு. அதை முன்னர்க்காட்டுதும். (௧௧)

12. தொகுத்தலும்விரித்தலுந்தொகைவகைவிரியிற்
பகுத்தலுமொழிபெயர்த்தலுமெனும்பான்மைய.

(எ-ன்) மேற்காட்டப்படுமென்ற நால்வகையாப்பிற்கும் பெயரு முறையுந் தொகையு முணர்-ற்று.

(இ-ள்) மூதனூலாசிரியன் விரித்துச்செய்ததனைத் தொகுத்துச் செய்தலுந் தொகுத்துச்செய்ததனை விரித்துச்செய்தலு மிருவகையையுந் தொகைவகைவிரியாகப் பகுத்துச்செய்தலும் வடமொழியைத் தமிழ் மொழியாகப்பெயர்த்துச்செய்தலுமெனப் பெரியோராற்கூறப்படும் பான்மையையுடைய அந்நால்வகையுமென்றவாறு. (கஉ)

13. பாயிரமுன்பின்பகர்நெறியினிலுறும்.

(எ-ன்) தொகைச்சூத்திரத்துட் பாயிரமுதலுபுவென்று ரவை யிரண்டு முணருமாறுணர்-ற்று.

(இ-ள்) பொதுவுஞ்சிறப்புமெனக் கூறிய பாயிரங்களினிலக் கணங்க ளிந்நூன்முகத்து முன்னரும் பின்னருங் கூறு மிருவகைச்சூத் திரங்களா னறியப்பெறு மென்றவாறு. எனவே வேறெடுத்துக் கூறப் படுவதில்லை யென்பதாம். (கங)

14. அறம்பொருளின்பம்வீடவைபகர்நாற்பொருள்.

(எ-ன்) நாற்பொருணலனுறவில்லனவாகியென்று ரவையிவை யென்பதுணர்-ற்று.

(இ-ள்) அந்நூல்கள் பகருநாற்பொருள் அறனும் பொருளு மின்பமும் வீடுபேறுமாமென்றவாறு. (கச)

15. நூலினொருபொருணுதலியதொன்றாய்ச்
சில்வகையெழுத்திற்செறிந்திடும்யாப்பாய்ப்
பலதிறப்பயன்றெரிவுடையதோர்பண்பாய்ப்
படிமக்கலத்துட்படிநிழல்பொருவ
வொண்மைபுநுண்மைபுமுறுவதுசூத்திரம்.

(எ-ன்) நூல்கட்கங்கமாகிய சூத்திரங்களினிலக்கணமுணர்-ற்று.

(இ-ள்) மேற்சொற்றதன்முதலாய நால்வகையாப்பிற்றும் நூலினு ளொருபொருளைக் குறித்ததொன்றாகிச் சில்வகையெழுத்தினு லகல் வின்றியடங்கியயாப்பா யுரைக்குங்காற் பலவகைத்தாய பொருள்க ளெல்லாந் தன்னகத்தடக்கி யாராயப்படுவதோர் பண்படைத்தாகி யாடி

சிறிதாயினும் அகன்றபொருள்களின்வடிவை யகத்தடக்கியறிவித்தாற் போல நுண்ணியபொருண்மையோடு விளக்கமுமுடைத்தாய் மிருவது சூத்திரமாமென்றவாறு. (கரு)

16. அதுவே,
மாட்டுறுப்பரிமாநோக்கந்தவளைப்
பாய்த்தாற்றொழுக்குப்பருந்தின்வீழ்வொடு
நிரனிறைவிளக்கெனைம்பொருள்கோணிலைத்தே.

(எ-ன்) சூத்திரங்களின்பொருள்கோணிலையுணர்-ற்று.

(இ-ள்) அச்சூத்திரம் மாட்டுறுப்புமுதலாகத் தீபகமீறாகக் கூறப்பட்ட வேழு பொருள்கோணிலையை யுடைத்தென்றவாறு. நிலைமை யுடைத்தென்றதனு லொழிந்தபொருள்கோளான்வருவனவுங்கொள்க ()

17. ஒத்தெனப்படுவதோரினப்பொருளைக்
கோத்தொருநெறிபடக்கூறுவதாகும்.

(எ-ன்) இஃதோத்திலக்கணமுணர்-ற்று.

(இ-ள்) மேலோத்தெனக்கூறப்பட்டது ஓரினமாகியபொருள் களையிதற்கிஃதியைபுடைத்தென்ன நேரினமணிகளை வடத்திற்கோத்தாற் போல அடைவிலேசேர்த்தோரியலாகியநடைபெறக் கூறுவதாமென்ற வாறு. அது வேற்றுமையோத்து, வேற்றுமைமயங்கியல், விளிமா பெனமுறையே வேற்றுமையாயினும் வேறுவேறியலாக்கி யொரோரின மாகவுரைத்தவாற்றானுணர்க, (கஎ)

18. படலமென்பது பன்னெறிப்பொருளாற்
புடைபடவிரவியபொதுமொழித்தொடர்பே.

(எ-ன்) படலமென்பதனிலக்கணமுணர்-ற்று.

(இ-ள்) படலமென்றுகூறப்படுவது பலவேறு நடைபெற்று வரு பொருளா னிடம்பெற்றுவிரவிய பொதுமொழித்தாய்வருந் தொடர் புடைத்தாமென்றவாறு. (கஅ)

19. அவையொருமூன்றுமடக்குதல்பிண்டம்.

(எ-ன்) பிண்டமாமாறுணர்-ற்று.

(இ-ள்) மேற்கூறிய சூத்திர மோத்துப் படல மென்னுமூன் றுறுப்பையு மகத்தடக்குவது பிண்டமாமென்றவாறு. அம்மூன்றினையு முறுப்பெனவே பிண்டமென்ப துறுப்புடையவயவியென்பதுபெற்றாம். அவையாவன: தொல்காப்பியமென்பது பிண்டம். அதனுள் எழுத் ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என்பன படலம். ஒழிந்த விரண்டும் ஓத்தும் சூத்திரமுமாம். (கசு)

20. மிகத்தெளிவுடையவகத்தியமதுபோன்
முத்தமிழுட்கொளுமூன்றுபிண்டமுமுறுப்
பொத்தொருங்குட்கொளலுறின்மகாபிண்டம்.

(எ-ன்) மகாபிண்டமாமாறுணர்-ற்று.

(இ-ள்) மிகவுமுந்துநூல்களையாராய்ந்து தெளிந்த கேள்வியை யுடைய அகத்தியனாற்கூறப்பட்ட வகத்தியமென்னு நூல்போல இயற் றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னு மூன்று பிண்டத்தினையுந் தனக்குறுப்பாகப் பொருந்தும்படி முழுதுமுட்கொண் டொருநூலாக நிற்றல்பொருந்தின் மகாபிண்டமாமென்றவாறு. (உ0)

21. உற்றதுபதப்பொருளுதாரணமூன்றுடன்
கற்றவர்வினுவிடைகாட்டுதல்காண்டிகை.

(எ-ன்) வைத்தமுறையானே காண்டிகையாமாறுணர்-ற்று.

(இ-ள்) நூல்களைக்கற்றுணர்ந்த வாசிரியர் சூத்திரத்துட்கூறக் கருதியதுணர்த்தலுஞ் சூத்திரத்துட்சொற்றொறும் பொருளுணர்த்தலு மதற்குதாரணமுணர்த்தலு மென்னுமிம்மூன்றுடன் கடாவுங் கடாயதற் கெதிர்மொழியுங் காட்டுதல் காண்டிகையாமென்றவாறு. வினுவல்-கடா வல், விடை-அதற்கெதிர்மொழி. (உக)

22. ஒன்றியசூத்திரத்துட்பொருளன்றியு
மின்றியமையாதனபுணர்த்திசைத்தவைர்

விரிந்தவையிவையெனவிழுமிதிற்கூட்டலென்பது, தொகுத்தும் வகுத்துங்காட்டியவற்றை யிறப்பவிரியாமல் விழுமியவாக விரித்து முடித்தல். அஃதாவது "உயிர்மெய்யாய்தமுயிரளபொற்றளபஃகிய இ உ ஐ ஒள மஃகான், றனிநிலைபத்துஞ்சார்பெழுத்தாகும்" என்னு மதனுட் சார்பெழுத்தெனத் தொகையாலொன்றும் வகையாற்பத்து மாகியவற்றை "உயிர்மெய்யிரட்டுநூற்றெட்டு" என்னுஞ்சூத்திரத்தான் "ஒன்றொழிமுந்நூற்றெழுபானென்ப" என விரித்ததன்மேலும் உயிர் மெய்க்குறில் உயிர்மெய்ந்நெடில் உயிர்மெய்யகரமெனவும் வல்லினம் மெல் லினம் இடையினம் எனவும் இறப்பவிரியாமல் விழுமிதாய்க்கூட்டல்.

தொகுத்த.......கோடலென்பது "நெட்டெழுத்திம்பரும............ வல்லாறார்ந்தே" என்னுஞ்சூத்திரத்தாற் பிறிதுமோர்பொருள் வகுத் துக் காட்டல். அஃதாவது "குற்றியலுகரமுறைப்பெயர்............ முதலும்" என்னுஞ் சூத்திரத்தான் மொழிமுதற் குற்றுகரமுங்கோடல். சொல்லின்முடிவி னப்பொருண்முடித்த லென்பது மது.

முந்துமொழிந்ததன்றலைதடுமாற்றே யென்பது முற்படவதிகரித்த பொருளை யம்முறையிற்கூறாது முறைபிறழக்கூறுதல். அதனை யங்ஙனங் கூறுங்கால் ஒருபயனோக்கிக் கூறல்வேண்டும். அது புள்ளிமயங்கியலுள் "ஞகாரையொற்றிய" என்ற சூத்திரத்தினுள் ஞகார வீறுகூறி யதன் பின்னர் ணகாரவீறுகூறாதே வருஞ்சூத்திரத்தினுள் "நகாரவிறுதியுமத னோரற்றே" என முடிபொப்புமைநோக்கிக் கூறியதாற் கண்டுகொள்க.

பலபொருட்....கோடலென்பது ஒருவகைப்பொருள் பலபொருட் கேற்குமாயினு மவற்றுணல்லதனைக்கோடல். அஃதாவது மெய்ப்பாட் டியலுள் அகத்திற்குரியவாகப் புகுமுகம்புரிதன்முதலாகக் கையற வுரைத்தலீறாகக் கூறிய அறுநான்குமெய்ப்பாடும் அகத்தினும் இரு வகைக் கைகோளுள்ளுங் களவினுள் முறையேவந்து கற்பினுள்ளும் முறையே வரப்பெறுமையி னவைகளவிற்கே யுரித்தென விதந்துகூறலா னறிக. அன்றியும் ஒருசூத்திரம் பலபொருட்கேற்குமாயினு மதற் குணல்லதனைப் பொருளாகக்கோடலுமாம். அஃதாவது "வேண்டிய கல்வியாண்டுமூன்றிறவாது" என்பதற்குக் கல்விவேண்டிய ஆண்டிற

வாது அக் கல்வியெல்லா மூன்றுபாதத்தைக் கடவாதென்றதனாலறிக. அன்றி ஓதற்பிரிதற் காண்டிமூன்றென்பது பொருந்தாது. அன்றியும் "இலனென்னுமெவ்வமுரையாமையீதல், குலனுடையான்கண்ணேயுள" என்பதனுட் பலபொருடோன்றியவிடத்து முதலேகண்ட விரண்டு கிரிகையுமன்றி யிரப்போனின்னு மொருவர்பால் யானென்று மில னென்னு மானபங்கங்கூறும விரக்கப்படுவோ னீகையெனப் பொருள் கோடலுமாம்.

மொழிந்தபொருளோடொன்றவைத்த லென்பது சூத்திரத்துப் பொருள் பலபடத்தோன்றுமாயினு மூற்பட்ட சூத்திரயாப்பிற்கேற்பப் பொருளுரைத்தல். அஃதாவது "இலனென்னுமெவ்வமுரையாமை" என்னுங் குறளுக்கு முன்னருத்திக்கேற்பக்கூறியபொருளன்றி "நல்லா றெனினுங்கொளறீதுமேலுலக, மில்லெனினுமீதலேநன்று" என்று மேலிற்குறளிற் பொருள்கட்கொன்ற வும்மையைவிரித்து இலனென்னு மெவ்வமுரையாமையு மீகையுங் குலனுடையான்கண்ணேயுள எனவுரைத் தல் கொள்க.

மொழிந்தனமென்றலென்பது பலபொருள்களையும் அதிகரித்த வற்றுட் சிலபொருளை மேற்கூறப்பட்டனவென்றல். "அஃதாவது மாத் திரைவகையுமெழுத்தியல்வகையு, மேற்கிளந்தன்ன" வென்றதனாற் கொள்க.

மொழிவாமென்றலென்பது சிலபொருளைக்கூறியவற்றுள் ஒன்றனை யின்னவிடத்துக் கூறுவாமென்றல். அஃதாவது "குற்றியலிகரநிற்றல் வேண்டும்" என்ற சூத்திரத்தில் ஒருமொழிக்குற்றியலிகரங்கூறி அதன் பின்னர் இருமொழிக்கண்ணுங் குற்றியலிகரம் வருமென்பதற்கு "புணரியனிலையிடைக்குறுகலுமுரித்தே" என்னுஞ்சூத்திரத்தின் "உணரக் கூறின்முன்னர்த்தோன்றும்" மெனக்குற்றியலுகரப்புணரியலுள்ளே கூறப் படுமென்றதனானுணர்க.

இறந்ததுகாத்தலென்பது மேற்கூறப்பட்ட சூத்திரத்தாற் கூறப் படாதபொருளைப் பின்வருஞ்சூத்திரத்தானமைத்தலாம். அஃதாவது முதனூலுக்குச் சூத்திரங்கூறியபின்னர் "வழியெனப்படுவததன்வழித் தாகும்" என்று வழிநூற்குக்கூறிய சூத்திரத்தில் வழிநூலானுபபயன்

கூறுது மேல்வருஞ் சூத்திரங்களாயவவற்றின்கண் "வழியினெறியே நால்வகைத்தாகும்" என்றபின்னர் அதனுலாயபய னதனிற்கூறுது தொகுத்தல் விரித்தல் என்னுஞ்சூத்திரத்தா லதனுலாயபயன் கூறல் இறந்ததுகாத்தலாயிற்று.

எதிரதுபோற்றலென்பது முன்புகூறிய சூத்திரத்தானே மேல் வருஞ் சூத்திரப்பொருளேயும் பாதுகாத்தமைத்தல். அஃதாவது நூன் மாபினுள் "உட்பெறுபுள்ளியுருவாகும்மே" எனப்பகரத்தோடு மகரத் திடை வரிவடிவிற்கிலக்கணங்கூறப்புகுந்து மேல்வருஞ்சூத்திரத்தின் "மெய்யினியற்கைபுள்ளியொடுநிலேயல்" என்றதனுல் மெய்களிற்கூடிப் புறத்திற் பெறும்புள்ளியோடுள்ளாற்பெறும்புள்ளியும் மகரத்திற்கு வரிவடிவாமெனக் கோடல் எதிரது போற்றலாயவாறு காண்க. "அற் புதஞ்சிலேடை" யென்னும் பொருளணியியற்சூத்திரமுமிது.

மொழியாததனைமுட்டின்றிமுடித்தலென்பது சூத்திரத்தின் கண்ணேயெடுத்தோதாதபொருளே முட்டுப்படாம லுரையினுன் முடித் தல். அஃதாவது "அரையளவுகுறுகன்மகரமுடைத்தே, யிசையிட னருகுந்தெரியுங்காலே" என்பதனுற்கொள்க. என்னே? அரையளவாகிய வெல்லேயிற்குறுகிக் கான்மாத்திரையவாதலே மகரமெய்யுடைத் தஃதி யாண்டோவெனின் வேறேரெழுத்தின தோசையின் கண்ணது தான் சிறுபான்மைபவாகிவரு மாராயுங்காலத்தென்பதனுலாயிற்று. என்னே? கான்மாத்திரையென்பது சூத்திரத்தின் கண்ணவாய்ச்சொல்லி முடியா ததனை யுரையினுன் முட்டின்றி முடித்தலாமெனக்கொள்க. இக் கருத்தி னுனே "சூத்திரத்திற்பொருளன்றியும்யாப்புற, வின்றியமையா தியைப வையெல்லா, மொன்றவுரைப்பதுரையெனப்படுமே" யென்ருேதுவா ராயிற்று.

வந்ததுகொண்டுவாராததுமுடித்தல் என்பதும், வாராதது கொண்டுவந்ததுமுடித்தலென்பதுமான ஒருங்கெண்ணப்பட்டவிரண்டிற் கும் ஒரோவொன்ருகப்பகுத்து இலக்கணங்கூறியவிரண்டனுள் பின் னர்க்கூறிய சூத்திரத்தினுள் வந்ததனைக்கொண்டு முன்னர்க்கூறியசூத்தி ரத்துள் வருமிலக்கணத்திற்கு வாராததனைக்கூட்டிமுடித்தலும், முன் னர்க்கூறிய சூத்திரத்தினுள் வாராததனைக்கொண்டு பின்னர்க்கூறிய

சூத்திரத்துள்வருமிலக்கணத்திற்கு வந்ததனைக்கூட்டி முடித்தலுமாம். அவையாவன: “கூறியவுறுப்பிற்சிலகுறைந்தியலினும், வேறுபாடின்றெனவிளம்பினர்புலவர்” எனவும், “அறமுதனான்கினுங்குறைபாடுடையது, காப்பியமென்றுகருதப்படுமே” எனவும் பொதுவியலுட் கூறிய சூத்திரங்களானுணர்க. என்னை? அறமுதனான்கினுங்குறைபாடுடையது காப்பியமெனவே, பின்னர்க்கூறிய சூத்திரத்தினுள்வந்தது கொண்டு அறமுதனான்குமொழித் தல்லாதவுறுப்பிற்குறைவதே பெருங்காப்பியமென்று முடித்தலானுங், கூறியவுறுப்பிற் சிலகுறைந்தியலினுமெனவே முன்னர்க்கூறியசூத்திரத்தினுள்வாராத அறமுதனான்கின் ஒன்றும் பலவுங்குறைபாடுடையது முறுப்பிற் சில குறைதலுங் காப்பியமென்று வாராததனைக்கொண்டு வந்ததனோடு முடித்தலானுமென அடைவே கண்டுகொள்க. இவை தம்மிற்றுமாறுடினுமிழுக்காது.

பிறன்கோட்கூறலென்பது பிறநூலாசிரியன்கொண்ட கோட்பாட்டைக்கூறுதல். அஃதாவது “வேற்றுமைதானேயேழெனமொழிப” என்றல். எனவே, தன் கோட்பாடன்றென்பதாயிற்று.

தன்கோட்கூறலென்பது பிறநூலாசிரியன் கூறியவாறு கூறாது தன் கோட்பாட்டாற்கூறுதல். அஃதாவது “விளிகொள்வதன்கண் விளியோடெட்டே” என்றல்.

பிறனுடம்பட்டது தானுடம்படுதலென்பது பிறநூலாசிரியனுடம்பட்டதற்குத் தானுமுடம்படல். அஃதாவது இரண்டாம்வேற்றுமை செயப்படுபொருட்கண்வருமென்றார்பாணினியாரஃதிவர்க்குமுடம்பாடு என்றல். அஃது இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவதும் எய்தப்படுவதுமாம். அதற்குதாரணம்—எயிலையிழைத்தான், மறத்தைக் குறைத்தான், நூலைக்கற்கும் என அடைவேகாண்க.

அறியாதுடம்படல் என்பது தானறியாதவற்றைப் பிறபெரியோர் கூறியவாற்றானுடம்படல். அஃதாவது ஏழாகாயத்தன்மைத்தெனச் சான்றோர்கூறியவழித் தனக்கது புலப்படாததாயினுந் தானதற்குடம்படல். இது வழிநூலாசிரியர்க்குமுரித்து.

துறுப்புடனிருதிறத் துரையிடனுகமெய்ந்
நிறுத்தியதொன்றெனநிகழ்த்துதல்விருத்தி.

(எ-ன்) முறையானேவிருத்தியாமாறுணர்-ற்று.

(இ-ள்) புலவனாற்கூறக்கருதிய பொருளினைக் கூறுதற்குப்பொரு ருந்திய சூத்திரத்துட் சொல்லோடும்பொருளன்றி யெஞ்சிநின்றவற் றையு மிவ்விடத்திற்கின்றியமையாதென்பனவற்றையு மவ்விடத்திற் கொணர்ந்துபொருத்திச் சொல்லப்பட்ட காண்டிகையுறுப்பாகியவைந் தோடுங்கூட்டி யதற்குத் தன்னூலிடனுகவும், பிறநூலிடனுகவு முண்மை நிலைநிறுத்தப்படுவதொன்றாய் நடத்துதல் விருத்தியாமென்ற வாறு. உறுப்பைந்தாவன. கருத்துமுதல் விடையீறுகக்கூறியவைந் தென்றறிக. இருதிறத்துரையிடனுகவென்பது தன்னூல் பிறநூ லென்னுமிரண்டிடனுகவென்றறிக. (௨௨)

23. பொருளிலகூறன்மருணிலைத்தாத
லின்னுச்சொற்பெறல்வெளிறுபட்டிழிதன்
மொழிந்ததைமொழிதன்முரண்கொளமொழிதல்
குறைபடக்கூறன்மிகைபடவிளம்பல்
சந்தவின்பந்தழுவுதலின்மை
யெதிர்மறுத்துணர்த்தலென்றிவை புளப்படக்
கூறினரீரைங்குற்றநூற்கே.

(எ-ன்) மேலதிகாரப்பட்டமுறையேயீரைங்குற்றமுமுணர்-ற்று.

(இ-ள்) பொருளிலகூறலென்பது முன்னும் பின்னும் வருகின்ற பொருண்மைக்கொப்பின்றிப் பயனில்லாதன கூறல். மருணிலைத்தாத லென்பது கேட்போர்க்குப் பொருள்விளங்காமன் மருளுதற்கிடனுதல். இன்னுச்சொற்பெறலென்பது கேட்போர்க்கின்னுபாப்பிற்றுயிருத்தல். வெளிறுபட்டிழிதலென்பது குறிப்புமொழிசிறிதுமின்றி வெளிப்படக் கூறல், மொழிந்ததைமொழிதலென்பது ஒருகாற்கூறியதனைப்பின்னுங் கூறல். முரண்கொளமொழிதலென்பது முதலே கூறியபொருளோடு மாறுகொள்ளுமாறுபின்னர்க்கூறல் குறைபடக்கூறலென்பது முதலே யதிகரித்தபொருள்களுட்சிலவற்றைக்கூறுதொழிதல். மிகைபடவிளம்ப

லென்பது அதிகரித்தபொருளன்றிப் பிறபொருளுங்கூறல். சந்தவின் பந் தழுவுதலின்மையென்பது எடுத்த யாப்பிற்கிணங்குமோசையின்றிக் கூறுதல். எதிர்மறுத்துணர்த்தலென்பது எதிர்மறுத்துணர்த்தலுங் குற்றமாமென்றவாறு. அஃதாவது பாவஞ்செய்தானிரயம்புகுமெனக் கருதிக்கூறுவான் தவஞ்செய்தான் சுவர்க்கம்புகுமென்றல். இவ்வாறு கூறிற் சுவர்க்கம்புகுமென்னும் பொருடோன்றி நிரயம்புகுமென்னும் பொருடோன்றாமையிற் குற்றமாயிற்று. என்னை? "எதிர்மறுத்துண ரினித்திறத்தவுமவையே" என்னுமாபியற்சூத்திரத்தானுணர்க. (உ௩)

24. அழகெனத்தருவதரிறபநாடி
ணகலாநடைத்தாயாழமதுடைத்தாய்ப்
பொருள்புலப்பாட்டிற்பொருணலஞ்சொன்னல
னோசையினிமையோடியம்பயத்த
லுலகமலையாமையுதாரணம்புணர்த்த
னவிறொறும்புதுவதுவாய்நயனளிப்பதி
னீரைந்தாமெனவியம்பினர்புலவர்.

(எ-ன்) ஈரைந்தழகுமுணர்-ற்று.

(இ-ள்) நூலுக்கழகெனும்படிக்குத் தருவது குற்றமற வாராயிற் சூத்திரஞ்சில்வகையெழுத்தாற்செறிந் திறப்பவகலாதநடைத்தா யாழ்ந்த பொருளுடைத்தா யிலக்கணவரங்களுக்குப் பொருள் புலப்படுவதாய்ப் பொருணலனுஞ் சொன்னலனு மோசையினிமையுமுடைத்தாய்க் கற்றோர்க்குப் பயன்றருவதா யுலகத்தோடு மாறுபடுதலின்றியுதாரணம் புணர்ப்பதாய்க் கற்குந்தொறும் புதுவதா யின்பமளிப்பதோடு மீரைந் தென்றுகூறினர் புலவரென்றவாறு. (உ௪)

25. உள்ளுறுத்தமைத்தவுத்திவகையுணர்த்தி
னுள்ளியதுணர்த்தலுமாமுறைவைப்பே
தொகைபெறநாட்டல்வகைபெறக்காட்டல்
விரிந்தவையிவையெனவிழுமிதிற்கூட்டல்
தொகுத்தமொழியின்வகுத்தனகோடன்
முந்துமொழிந்ததன்றலைதடுமாற்றே

பலபொருட்கேற்பினல்லவைகோடன்
மொழிந்தபொருளோடொன்றவைத்தன்
மொழிந்தனமென்றன்மொழிவாமென்ற
லிறந்ததுகாத்தலெதிரதுபோற்றன்
மொழியாததனைமுட்டின்றிமுடித்தல்
வந்ததுகொண்டுவாராததுமுடித்தல்
வாராததுகொண்டுவந்ததுமுடித்தல்
பிறன்கோட்கூறறன்கோட்கூறல்
பிறனுடம்பட்டதுதானுடம்படுத
லறியாதுடன்படலாணைகூற
றன்குறியிடுதறந்துகொணர்ந்துரைத்தன்
மறுதலைசிதைத்துத்தன்றுணிபுரைத்தன்
மாட்டெறிந்தொழிதலிரட்டுறமொழித
லொன்றினமுடித்தறன்னினமுடித்தன்
மாட்டுறுப்பினவாமனக்கொளக்கூற
லுய்த்துக்கொண்டுணர்தலினுரனுடைபனவாய்த்
தீபகவகையாற்சிறப்புறக்கூறல்
சொல்லினெச்சஞ்சொல்லியாங்குணர்த்தலென்
றமைத்ததினகப்படவமையாதனவுஞ்
சுருங்கக்கூறியதொடர்பினைநாடி
யொருங்கமைத்துணர்த்துதலுரவோர்கடனே.

(எ-ன்) மேலதிகாரம்பாரித்த பன்னிரண்டினு ளிறுதிநின்ற தந்திரவுத்தியாமாறுணர்-ற்று.

(இ-ள்) உள்ளியதுணர்த்தன் முதலாகச் சொல்லினெச்சஞ் சொல்லியாங்குணர்த்தலீறாகச்சொல்லப்பட்ட முப்பத்திரண்டு மத்தன்மையபிறவுந் தந்திரவுத்திகளாம். அவற்றையு மிதனுட்கூறியதாகப்பிறர்க் குணர்த்துத லறிவுடையோர்க்கு முறைமையாமென்றவாறு. தந்திரமெனினு நூலெனினுமொக்குமென்றவாறு உத்தியென்பது வடமொழிச் சிதைவு. அஃதாவது சூத்திரத்தின்பாற் கிடப்பதோர் பொருள் வேறுபாடுகாட்டுவது. உள்ளூறு................புணர்த்திமனன்பது மூர்த்து நூல்செய்த ஆசிரியர் நூற் கின்றியமையாச்சிறப்பென்பதாகக்

கருதியமைக்கப்பட்ட தந்திரவுத்தியினது கூறுபாடுணர்த்தினென்ற வாறு.

உள்ளியதுணர்த்தலென்பது சூத்திரத்திற்சொற்றசொற்குக்கூறிய வடைவே பொருளுணர்த்துவதன்றி யிதன்கருத் திஃதெனவுணர்த்தல். அஃதாவது எழுத்தெனப்படுப என்னுஞ்சூத்திரத்தினுள் எழுத்தினைத் தென்றறிவித்தலை றுதலிற்றென்றல்.

உரைமுறைவைப் பென்பது நூலுண் முன்னம் பலபொருளை யதிகரித்தவழிப் பின்னுமவற்றை யம்முறையேவிரித்தல். அஃதாவது உயர்திணை யஃறிணையென வதிகரித்து ஆடூஉவறிசொன் மகடூஉவறி சொல் என்னுஞ்சூத்திரங்களா னிறுத்தமுறைபிறழா துயர்திணையை முற்கூறல். இன்னுமிதனானே ஒரு சூத்திரத்திலே கருதின பொருளை வைத்து வருகின்ற சூத்திரத்துளோதாததன் காரியமாயின வழியதனைச் சூத்திரந்தோறுங் கொணர்ந்துரைத்தலுமாம். அஃதாவது வழாவ துயிர்மயங்கியலில் "அகரவிறுதிப்பெயர்நிலைமுன்ன" ரென்னுஞ் சூத்திரத்திற் கசதபத் தோன்றினெனக்கூறி, வினையெஞ்சுகிளவியுமென்னுஞ் சூத்திரத்திற் கூறிற்றிலரேனும் அதிகாரமுறைமையினால் வல்லெழுத்து வரும்வழி யெனவுரைத்தல்.

தொகைபெறநாட்டலென்பது வகைபெறக்கூறல் வேண்டுமாயினு மதனைத் தொகுத்துக்கூறல். அஃதாவது "அகரமுதனகரவிறுவாய் முப்பஃதென்ப" என்றாற்போல்வன. இன்னும் பலசூத்திரத்தாற்கூறிய பொருளை யித்துணையுங்கூறப்பட்ட திஃதெனக் கூறலுமாம். அஃதா வது "ஆக்கியல்வகையேயாங்கெனமொழிப" என்பதனாற்கொள்க.

வகைபெறக்காட்டலென்பது தொகைபெறக்கூறியவற்றை வகை பெறக்கூறல். அஃதாவது "அகரமுதனகரவிறுவாய்முப்பஃதென்ப" எனத்தொகுத்தவற்றை அ இ உ எ ஒ என்றும் ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்றும் வகுத்தல். அன்றியும் "ஔகாரவிறுவாய்ப், பன்னீ ரெழுத்து முயிரெனமொழிப" "னகாரவிறுவாய்ப், பதினெண்ணெ ழுத்துமெய்யெனமொழிப" என்பனவுமாம்.

ஆணைகூறலென்பது ஒருபொருளைக் கூறும்வழி யேதுவின்றிக் கூற லன்றித் தன்னாணையாற்கூறல். அது வேற்றுமை யேழெனப் பாணினி யார்கூறியவழி அவர் விளியை முதல்வேற்றுமையிலடக்கினார். அதற்குத் திரிபுகூறாதே யதனையெட்டாம்வேற்றுமை யென்றலும் ஆண்டுக் கடாவப் படாமை.

தன்குறியிடுத லென்பது உலகின்கண் வழக்கின்றி யாசிரியன்றன் குறியிடல். அஃதாவது உயர்திணை அஃறிணையென்பன.

தந்துகொணர்ந்துரைத்த லென்பது முன்னாராயினும் பின்னாரா யினு நின்ற சூத்திரச்சொல்லை யிடைநின்றசூத்திரத்திற் கொணர்ந்து புணர்த்துரைத்தல். அஃதாவது "நெட்டெழுத்திம்பருந்தொடர்மொழி யீற்றுங், குற்றியலுகரம்வல்லாறூர்ந்தே" என்பதனில் முன்னின்ற சூத் திரத்தில் நிற்றல்வேண்டுமென்றசொல்லைக் கொணர்ந்து புணர்த் துரைத்தல்.

மறுதலைசிதைத்துத்தன் றுணிபுரைத்த லென்பது நெட்டெழுத் தேழளபெடையென்பன குற்றெழுத்தின் விகாரமென்பாரை மறுத்தது. அது அஅஅ என நின்றதல்லவென அவர் மறுதலையைச் சிதைத்து வேறோரெழுத்தென்று கூறல்.

மாட்டெறிந்தொழுத லென்பது முன் னொருபொருட்கிலக்கணங் கூறிப் பின்னர்வருவது மதுபோலுமென்றல். அஃதாவது ஏழாவ துயிர்மயங்கியலில் "உகரவிறுதியகரவியற்றே" என்றல்.

இரட்டுறமொழித லென்பது ஒருவகையானின்ற தொடர்ச்சொல் லாதல் ஒருசொல்லாதல் ஒரு செய்யுளகத்துப் பலபொருளைமொழிவதா மென்றவாறு. அஃதாவது "வந்தவாவென்னையெனவாட்கண்மடவாய் கேள், சிந்தைநலிகின்றதிருநீர்க்குமரியாட, வந்திலதனுயபயனென்னை மொழிகென்றான், மூந்திநலிகின்றமுதுமூப்பொழியுமென்றான்" என்ப தனாலறிக. என்னை ? திருநீர்க்குமரியாடவெனவே அழகிய நீர்மையை யுடைய கன்னியாகிய நின்னைப் புணரவந்தேனென்பதனை மறைத்தன னாகவும், பொலிந்த தீர்த்தநீராகிய குமரியாற்றை யாடவந்தேனென

வெளிப்படையர்கவுஞ் செம்மொழியாக விரட்டுறமொழிதலானும், அதனு லாய பயன்யாதென அக்காலத் திம்ழுப்பு நீங்குமென அத்தச்சிலேடை யாகவுங் கொள்ளக்கிடந்தமையானு மெனக்கொள்க.

ஒன்றினமுடித்த லென்பது ஒன்றற்கிலக்கணங்கூறியவிடத்துக் கூறுது தொக்குநின்ற ஒழிபிற்கு மதுதானே விதியாகமுடித்தல். அஃதாவது "புள்ளியீற்றுமுன் னுயிர்தனித்தியலாது, மெய்யொடுஞ் சிவணுமவ்வியல்கெடுத்தே" என்னுஞ் சூத்திரத்தா னுணர்க. என்னே? இயல்பல்லாத புள்ளிமுன் னுயிர்வந்தாலும் அவ்விதி கொள்கவென முடித்தல் உதாரணம்:—ஆலடை, ஆலாடை எனவும், அதனை எனவும், நாடுரி எனவும் வரும்.

தன்னினமுடித்த லென்பது ஒருவகையுட்சிலவற்றிற் கிலக்கணங் கூறியவிடத்துச் சொல்லாதொழிந்தனவாய்த்தொக்கதற்கும் ஆட்சியுங் காரணமும்பற்றி யச்சூத்திரத்தினிடத் ததற்கும் வேறோரிலக்கணங் கூறிமுடித்தல். அஃதாவது "அ இ உ அம்மூன்றுஞ்சுட்டு" என்னுஞ் சூத்திரத்தா னுணர்க. என்னே? குற்றெழுத்தென்றவற்றுண் மூன்றனைச் சுட்டென்னுங் குறியவென்று கூறியவிடத்து எகாரமும் வினுப்பொரு ளுணர்த்துமென முடித்தல்.

மாட்டுறப்பினவாமனக்கொளக் கூறலென்பது ஒரு சூத்திரத்துப் பொருள்கொள்ளுங்கா லகன்று பொருள்கிடப்பனவும், அணுகிக்கிடப் பனவுமான விருவகையையும் பொருண்முடியுமாற்றாற் கொணர்ந்துரைப் பச்செய்தல். என்னே? "அகன்று பொருள்கிடப்பினும் மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்" என்முராகலின். மனக்கொளவென்பது கேட்டோர் மனத்துட் கொளவென்பதாம். இதற்குச் சூத்திரம் "வடவேங்கடந்தென்குமரி ..............................படிமையோனே" என்பதெனக்கொள்க. அதற் கிளம்பூரணருரையன்றி நச்சினார்க்கினியா ரெழுதின வுரையைக் கண்டுகொள்க. அவற்றை யீண்டுரைப்பிற் பெருகும்.

உய்த்துக்கொண்டுணர்த லென்பது ஒரு சூத்திரத்தானென்றற் கிலக்கணங்கூறியவழி யாதற்குப்பொருந்தாமையுளதாகத் தோன்றின் அதனையு மதற்குப் பொருந்தினவழியாகக் கூட்டுதல். அஃதாவது

ஏழாவ தாயிரம்பங்கியலிற் "பனியெனவருஉங்காலவேற்றுமைக், கத்து மின்னுஞ் சாரியையாகும்" என்பதனகண்ணுணர்க. என்னை? பனி யத்துக்கொண்டான், பனியின்கட்சென்றான், பனியிற்சென்றான் என வரும். அவற்றுள் இன்பெற்றுழி முன்னர்க்கூறிய நாழிக்காயம், உரியக் காயம் என்பதுபோல வல்லெழுத்து மிகாது வீழ்க்க என்பதற்குப் பொருந்த வுய்த்துணர்தல்.

தீபகவகைபாற் சிறப்புறக்கூறலென்பது குணந் தொழில் சாதி பொருள் என்னு நான்கனுள் ஒன்றைக்குறித்தவொருசெல் செய்யு ளிடத்து முதலிடைகடையென்னு மூன்றிடத்தினுள் ஓரிடத்தாகி யாதியினின்ற தந்தத்தளவுமோடவும் இடைநின்றது முன்னும்பின்னு மோடவும், இறுதிநின்ற திடையு முதலு மோடவுங் கவினபெறக்கூறுதல். என்னை? "குணந் தொழில் சாதி பொருள்குறித்தொருசொல், லொரு வயினின்றும் பலவயிற்பொருடரிற், றீபகச்செய்யுண்முவிடத்தியலும்" என்பது அணியியலாகலினுணர்க. அவற்றிறகெல்லா முதாரண மீண் டுரைப்பிற் பெருகும்.

சொல்லினெச்சஞ்சொல்லியாங்குணர்த்த லென்பது "பெயர்வினை யும்மைசொற்பிரிப்பெனவொழியிசை, யெதிர்மறையிசையெனுஞ்சொல் லொழிபொன்பது" மென்னுஞ் செல்லெச்சங்களைக்கண்டு ஆங்காங்குச் சொல்லியவாற்றாற் பொருளகோடலாம். அன்றியும் தொல்காப்பியர் நோக்கம்பற்றிப் பிரிநிலை முதலாகச்சொல்லப்பட்டவெனினுமாம். அவற்றிற்கெல்லா முதாரண மீண்டுரைப்பிற் பெருகும். அவையும் வந் துழிக் கண்டுகொள்க.

"என், றமைத்ததினகப்படவமையாதனவுஞ், சுருங்கக்கூறிய தொடர்பினைநாடி, யொருங்கமைத்துணர்த்துதலுரவோர்கடனே" என் பது, (என்றென்பது — எண்ணிடைச்சொல்.) ஆதலா லங்ஙனங்கூறிய முப்பத்திரண்டாக அமைத்ததி னமையாதனவாமவற்றையுஞ் சுருங்கக் கூறலென்னு மழகுநோக்கியும், முன்னோர் தந்திரவுத்தி முப்பத்திரண் டெனக்கொண்ட வரையறை யிகவாமைக்கூறியதாகவுநோக்கி யிதனகத் தமைந்தனவாகவுணர்த்துதல் அறிவுடையோர்க்கு முறைமை யென்ற வாறு. அமையாதனவாவன பலவுள. அவற்றுள்ளுஞ் சில வருமாறு. வேண்டாதுகூறிவேண்டியதுமுடித்தல், எய்திபதிலக்கிப் பிறிதுவிதி

வகுத்தல், பொருளிடையிடுதல் என்பன. அவையாவன:— "ஏனையுயிரே யுயர்திணைமருங்கிற், றாம்விளிகொள்ளாவென்மனார்புலவர்" என்னுஞ் சூத்திரத்தானும், "அளபெடைமிகூஉமிகரவிறுபெய, ரியற்கையவாகுஞ் செயற்கையவென்ப" என்னுஞ்சூத்திரத்தானும், "ஒருமைசுட்டியபெயர் நிலைக்கிளவி, பன்மைக்காகுமிடனுமாருண்டே" என்னுஞ்சூத்திரத்தானு முணர்க.

இவற்றுள் முன்னைய விரண்டும் விளிமரபு. மற்றையது எச்சவியல். அவற்றொடும் "ஆற்றொழுக்கரிமாநோக்கந்தவளைப், பாய்த்துப்பருந் தின்வீழ்ச்சிநிரனிறை" யென்பனவு மொருசாராசிரிய ருத்தியுளமைத்தா ரெனக்குறித்ததாம். அன்றியும், ஒன்றற்கிலக்கணங்கூறும்வழி யொருசூத்திரத்துட் பலவுத்திவருவனவு முளவென்னுநோக்கத்தாற் கூறியதூஉமாம். அதற்குதாரணம்:—"எல்லாமொழிக்குமுயிர்வரு வழியே, யுடம்படுமெய்யினுருவுகொளல்வரையார்" என்பதனானுமுணர்க. என்னை? மூவகைப்பட்டமொழிக்கு முயிர்முதன்மொழிவருமிடத்து இடை யுடம்படுமெய்யாகிய வடிவுகோடல் நீக்காரென்புழி யுடம்படுமெய் யென்றாரல்ல தவை யிவையெனக் கூறா ரவற்றை யுரையிற்கோடலென்று மவை யகரமும், வகரமும் எனவும், அவற்றுள் இ ஈ ஐ வழியவ்வும் அல்லனவருவழி வகரமும் வரும் எனக்கோடலானும் ஒன்றினமுடித்த லென்னுமுத்தியான் விகாரப்பட்ட மொழிக்கண்ணு முடம்படுமெய் கொள்ளப்படுமெனக்கூறியதற் குதாரணம் மாவடி, ஆயிருதிணையெனவும் இரண்டுத்திவந்தவாற்றானறிக. தந்திரவுத்திமுற்றும். (௨௫)

26. அடிவரையுளவாயடிவரையிலவாம்
பாட்டினும்பாவின்றெழுகிளவியினுங்
காட்டியவெழுநிலத்தனவாய்க்கழறிய
பொருளொடுகலந்துபுரைதீரொலிசெறிந்

பண்ணத்தியினும்பயில்வனவாகும்.

(எ-ன்) இதுவும் அந்நூலிற்கோரொழிபுகூறுதனுதலிற்று.

(இ-ள்) குறளடிமுதலாய வைவகையடியானும் வரையறைய வாம்பாட்டினும், அடிவரையறையிலவாம் பாட்டினும் பாவின்றி

யொழுகலாறுடைய பலசொற்றொடராலுங் கற்றோர்காட்டப்பட்ட வெழு நிலத்தெழுந்த செய்புணடைத்தாயும் அவற்றுட்பாட்டிற்குக் கூறிய பொருளோடுங்கூடிக் குற்றமற்ற ஓசைசெறியப்பட்டுப் புலவரானெண் ணும்படிக்குத் தலைமைசான்ற பன்னிரண்டெனலாய நாற்சீரடியின் மிகுந்துங் குறைந்தும் வரும் பாவினத்தோடும் பயில்வனவாம் நூல்க ளென்றவாறு. எழுநிலமாவன:—பாட்டும், நூலும், உரையும், பிசியும், முதுமொழியும், மந்திரமும், குறிப்புமொழியும். அவற்றுள் அடிவரை யுளபாட்டாவன:—வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா, பரி பாடல் என்பன. அடிவரையிலவாவன:—நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்புமொழி யெனக்கொள்க என்னை? "எழுநிலத்தெழுந்த செய்யுட்டெரியி, னடிவரையில்லனவாறெனமொழிப" எனவும், "அவை தாம், நூலினான உரையினான, நொடியொடு புணர்ந்த பிசியினான, வேறு றுதலியமுதுமொழியான, மறைமொழிகிளந்தமந்திரத்தான, கூற்றிடை வைத்த குறிப்பினான" என்பவற்றானு முணர்க. அன்றியும் இவற்றிற்கு முன்னர்ப் பாட்டுரைநூலேயென்னுஞ் சூத்திரத்தானுமுணர்க. எழு நிலத்தெழுந்தவென்பது வரையறைப் பண்புப்பெயர். பண்ணத்தி யென பது பாவினம். பண்ணைத்தோற்றுவிக்கையாற் பண்ணத்தியென்று பெயராயிற்று. இவை இளம்பூரணர் முதலாயினோரொருசா ராசிரியர் நோக்கம். நச்சினார்க்கினியர் நோக்கமுமுணர்ந்துகொள்க. (௨௬)

27. விதியாச்செய்யுளின்மிகுத்திலக்கணமு
மதியானுரைத்ததும்வழங்கன்னூபகமா
விரிந்தநூல்களுள்வேறுவேறினமாய்த்
தெரிந்தவியல்களைச்செம்மையிற்றமிழ்தடி
வெள்ளையினகவலின்விளம்பலுமாபே.

(எ-ன்) இதுவும் அந்நூற்குக் கூறிக் கூறாத வொழிபு பெதிரது போற்றலென்னுமுத்திபாற் கூறுதலுதலிற்று.

(இ-ள்) இங்ஙனங் கூறப்பட்ட விலக்கணநூல்களை அகவலின் வெள்ளையி னறைகவென்று முந்துநூல் விதித்தமையுளவாகவும், விதி யாதுநீக்கிய கட்டளைக்கலித்துறை, ஆசிரியவிருத்தமென்னும் பாவினத் தாற் பின் பிலக்கணநூல்செய்தோ ரிலக்கணங்களைக்கூறியதுங் கற்றோரா

லெடுக்கப்பட்டுலகின்கண்ணே வழங்குதஃஞாபகமாக விரிந்த நூல்களுள்ளும் புலவேறினமாக வாராய்ந்து பிரிக்கப்படும் பலவியல்களுள்ளு மோரியலே முதலே வெண்பாவிற்கூறி, யதன்பின்னர்வரு மேனையியல்களை யகவலானு மழகிதாய்த் தமிதமிகூறுவது மரபாமென்றவாறு. அவை யாப்பருங்கலக்காரிகை, கயாகரநிகண்டு, சூடாமணிநிகண்டெனக. இலக்கணமு மென்றவும்மை யெச்சவும்மையாதலாற் கதைதொடர்ந்த விலக்கியங்களுள்ளும் வேறுவேறு பாவாகத் தமிதமிகூறலு மரபென்றவாறு. அவை சிலப்பதிகாரத்துள் மங்கலவாழ்த்துக்காதை மயங்கிசைக் கொச்சகக்கலியினும், அந்திமாலைச் சிறப்புச்செய்காதை, இந்திரவிழவூ ரெடுத்தகாதை, கடலாடுகாதை இவை நிலைமண்டிலவாசிரியத்தும், கனாத்திறமுரைத்தகாதை கலிவெண்பாவிலும் வந்தவாறுகாண்க. ஒழிந்தனவு மிவ்வாறுவந்தமை யாங்காங்குக் காண்க. (உஎ)

28 இருவகைநூன்மரபிவையெனமொழிப

(எ-ன்) இதுவும் அந்நூலினைத் தொகைவகைவிரிப்படுத்தி யொழிபுகூறுதனுதலிற்று.

(இ-ள்) நூலெனத் தொகையானொன்றுப்நின்றவது இலக்கண விலக்கியமென வகையானிரண்டாம். நூலினது விரியின்மரபிவை யெனக்கூறுவர் அகத்தியன் முதலிய தொல்லாசிரியரென்றவாறு. நூன் மரபு முற்றும். (உஅ)

29. புரப்போன்மரபினைப்புகலுங்காலைக்
குலனுங்குணனுங்குரவரைப்பேணு
நலனுங்கடவுளைநயத்தலுங்கருணையும்
புலனவித்தொழுகலும்பொறையுந்தோற்றமு
முலகியலறிந்துயிர்க்குறுதிகோடலுங்
கற்றவர்காமுறவாழ்தலுங்காந்திபு
மதிநிகர்கல்வியுங்கதிர்நிகர்வனவாம்
வாய்மையுந்தூய்மையும்வழுவுதலின்றாய்
வாடாக்கற்பகமணமலிபொற்பூக்
கோடாச்செங்கேற்கொற்றவனிதியறை
வான்சுவைமருந்தாயிரவாய்ச்சேடனிற்

கற்றனயாவுங்கழகத்து தவும்
பெற்றியன்மறந்தும்பிறன்பழிகூறான்
சதிருடையேனெனத்தற்புகழ்ந்தறியான்
முதுமொழியிலக்கணவிலக்கியமுறையே
புதுமொழிபுணர்க்கும்புலமையோனே.

(எ-ன்) வைத்தமுறையானே நுவல்வோன்றன்மையுணர்-ற்று.

(இ-ள்) நுவல்வோன் - நூனுவல்வோன், எனவே ஆசிரியனும், நூனுவல்வோனிலக்கணத்தைக் கூறுமிடத்துக் குலமுதல் தூய்மை யீறாகவெண்ணப்பட்ட பதினொன்றும் வழுவுதலிலனு மாகிக், கற்பகமணமலிபொற்பூமுதலிய மூன்றனையுஞ் சேடனையுமொப்ப வனுமாகிக், கற்றனகழகத்துதவும்பெற்றி, பிறன்பழிகூறாமை, தற் புகழாமை மூன்றுமுடையனுமாகி, முந்துநூல்கூறியபடியே யிலக்கண விலக்கியமிரண்டும் புதுமொழியாகப் புணர்க்கும் புலமையுமுடையோனு மென்றவாறு. முதுமொழி-முந்துநூல். கற்பகமணமலி பொற்பூமுதலிய மூன்றுஞ், சேடனு மவையாதற்கேதுமுறையே மேற்காட்டுதும். இது பொழிப்புரை. ஒழிந்தவகல முரையிற் கொள்க. (உகூ)

30. ஆய்ந்தமைவுடையகல்வியுங்கவியும்
வாய்ந்ததற்குவமைமணமலிபொற்பூ.

(எ-ன்) முறையே மேற்காட்டுதுமென்ற நான்கனுள் மணமலி பொற்பூவை யொத்ததற்கேதுவுணர்-ற்று.

(இ-ள்) வாடாதபொற்பூ முந்துநூல்களை யாராய்ந்தமைவுடைய கல்வியுங் கவியுமெய்தியதற் குவமையாமென்றவாறு. வாடாக்கற்பக மென்பது சூத்திரத்திலையாலோவெனின், தந்துகொணர்ந்துரைத்த லென்னுமுத்தியாற் கூறப்பட்டது. அமைவு—நிறைவு. பொற்பூ—கல்வி. மணம்—கவியெனக்கொள்க. (௩0)

31. அறன்றருபலபொருளான்றமைவுடைமையும்
பிறர்நிதியறையிற்பெறுகியசெல்வமு
மளப்பருந்தன்மையுமவாவர்தாந்தினங்
கொளக்குறைவில்லதுகொற்றீவனிதியறை.

(எ-ன்) கொற்றவனிதியறையொத்தற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) அறத்தினாலுண்டாக்கப்பட்ட பலபொருள்களுநிறைவெய்து தலும், பிறர்நிதியறையினும்பெருகிய செல்வவளனு, மொருவராலளத் தற்கரிய பெற்றியும், வறியோர்தாமே தினமும்வேண்டுவன தினமுங் கொள்ளாநிற்கக் குறைவில்லாமையுஞ் செங்கோற்கொற்றவனிதியறைக் குண்டாய குறியென்றவாறு. எனவே, இவனுளத்து அறமுதலிய நாற் பொருளாங்கல்விநிறைவுடைமை பிற ராராய்வின் மேம்பட்டகல்விநிறை வுடைமை யெனவும், இவன் கல்விநிறைவுடைமை யளத்தற்கரியதென்ப தூஉம், பிறரிவனிடத்து வித்தையைக் கொள்ளக்கொள்ளக் குறையா தென்பதூஉ முய்த்துவமைகொள்ள நின்றமையுணர்க. இவை குறிப் புவமை. (௩௧)

32. உண்ணத்தெவிட்டாவரிசையுமஃகா
வண்மையுந்தண்மையும்பயப்பதுமருந்தே.

(எ-ன்) வான்சுவைமருந்தொத்தற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) அமிர்தமானது தன்னையுண்பவ ருண்ணவுண்ணத் தெ விட்டாவினிமையும், வற்றாவளமையும், குளிர்ச்சியும் பயப்பதாமென்ற வாறு. எனவே, அவன் கல்வியுங் கவியுங் கேட்போர் செவியானுட் கொள்ள வுவட்டாதென்பது மக்கல்விகவி கொள்வார்கொள்ளுந்தோறுங் குறைவின்றி நிறைவெய்துந்தன்மையாயிருக்குமென்பது முவமையா னுய்த்துக்கொள்ளநின்றவா றுணர்க. அலங்கார மிதுவு மது. (௩௨)

33. பாயிரந்தோய்ந்த பருப்பொருளின்றி
நுண்பொருள்பயக்குநூல்பலவாங்காங்
குலப்பின்மாணாக்கர்க்கோர்பகன்மயர்வறச்
செலச்சொலற்குவமையாயிரவாய்ச்சேடன்.

(எ-ன்) ஆயிரவாய்ச்சேட னுவமையென்பதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) சிறப்புப்பாயிரத்தோடுங்கூடிப் பருப்பொருளின்றி நுண்ணியபொருள்களைக் கூறுவனவாம் பல நூற்பொருள்களைக் குறை வில்லாத மாணாக்கர்பலர்க்கு மொருகாலத் தொருங் கிருமாச் செலச்

சொல்லுதற் காயிரவாய்ச்சேட னுவமையா மென்றவாறு. இவர் கற்கப் படுவோர். (௩௩)

34. மடியமுக்காறுவஞ்சகம்வெகுளி
யுணராதனைபுணர்ந்தநின்மேற்கோட
றம்மைப்புகழ்வதிற்றன்பிறரிகழ்தல்
கற்றவர்புனைந்தகவியினுட்சார்ந்த
குற்றமொன்றுளதேற்குணனமைத்தறியான்
செவ்வியின்மலர்ந் துநாறுச்செம்மலர்
வெவ்விடவரவுதன்வாய்க்கொள்விழுமணி
பொதுமகள்பாற்கொளீப்பொருந்தியபோகஞ்
சிறியவன்றன்பாற்செறிதருபொருளொனுங்
கல்வியனறியனுங்கடனிலனே.

(எ-ன்) கற்கப்படாதோர்குண முணர்-ற்று.

(இ-ள்) மடிமுதலாகக் கூறப்பட்ட நான்குங் கல்லாமைமேற் கொண்டொழுகலுந் தம்மைப்புகழ்வதோடும் பிறர் குற்றமற்ற கல்வி யையுங் கவியையு மிகழ்தலுங் கற்றோராற்புணர்க்கப்பட்ட செய்யுட்கண் ணுஞ்சார்ந்தகுற்றஞ் சிறிதுளவாமெனி லதனைக் குணனாகவமையாதது முடையனுகி யவற்றோடு நாறுச்செம்மலர் முதலிய நான்கும் போலுங் கல்வியையுடையவ னறியனுங்கடனில னென்றவாறு. கடன் – முறை. நாறுச்செம்மலர்முதலிய நான்குமொப்பென்பதற்கேது மேற்காட்டுதும். தம்மையென்னும்பன்மை யிழிபின்கண்மயங்கிற்று. (௩௪)

35. பல்காற்சொல்லியுந்தெற்றெனப்பயன்கொள
நல்காவாக்கது நாறுமலரே.

(எ-ன்) நாறுச்செம்மல ரொப்பென்பதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) ஒருசெய்யுளுக்குப்பொருள் பலகாற்கூறியுங் கோட்பொ ருள்ளத்துத் துணிவுறச் செலச்சொல்லாவாக்கிற்குப் பருவத்துமலர்ந் தும் பரிமளமெய்தாத மல ருவமையாமென்றவாறு. பருவத்தின் மலர்ந்து பரிமளமெய்தாத மலர் - முருக்கமலர். (௩௫)

36. உக்குமெனிற்கோடலல்ல துவந்துகொள்
பதியின்றுகும்பாம்பின்வாய்மணியே.

(எ-ன்) பாம்பின்வாய்மணி யொப்பென்பதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) பாம்பின்வாய்மணி பாம்பு தானேயுகுக்குமெனிற்கொள்வ தல்லது இப்பொழுது வேண்டுமென விரும்பினோர் விரும்பினபடியே யக்காலத்திற் கொள்ளும்பகுதி யில்லையாமென்றவாறு. எனவே, அதுபோ லவ்வாசிரியரிடத்திற் கல்வியுமவர்தாமேதரிற்கொள்வதல்லது கற்கவிரும்புமாணுக்கர்க்கு விரும்பியகாலத்து விரும்பினபடியே கொள்ளும் பகுதியின்றென்ப தய்த்துணர்நின்றவாறுகாண்க. (௩௬)

37. பொருளளவையில்வரும்பொது மகணலனே.

(எ-ன்) பொதுமகளிடத்துநல மொப்பென்பதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) பொருட்பரத்தையரிடத் துண்டானநலன் புமான்கள் கொடுத்த பொருளினதளவெவ்வள வவ்வளவைக்கொப்ப வெய்துமென்ற வாறு. எனவே, அவ்வின்பம்போல வவ்வாசிரியனிடத்துண்டான கல்வியு மாணுக்கர்கொடுத்த பொருளளவைக்கொப்பக் கொள்ளப்படுமென வுய்த்துணர நின்றவாறுகாண்க. (௩௭)

38. அறத்தமர்பசித்துழந்தலமரவுலகிற்
பிறர்க்குணவெதிர்செலும்பேதைகைப்பொருளே.

(எ-ன்) சிறியவன்பாற் செறிதருபொரு ளொப்பென்பதற்கேது வுணர்-ற்று.

(இ-ள்) பேதையரிடத்துண்டானபெரும்பொரு ளின்பதுன்பத் திற்குரியரா யுதவுந் தமராயுள்ளார் மிகவும்பசித்துத் துன்பமுற்று மறுக்கமெய்தவும் அவர்க்குதவாது துன்பமுறுகாலத்துச் சிறிது முதவுதலில்லாத வேதிலாருண்ணும்படிக் கவர்பசிக் கவர்கேட்குமுன் னெதிர்கொள்ளுமென்றவாறு. எனவே, அப்பொருள்போல வவ் வாசிரியரிடத்துக்கல்வியுந் தம்மை வழிபடு மாணுக்கர்க்கெய்தாது வழி படாமாணுக்கர்க் கெய்துவதொன்றுமென வுய்த்துணரநின்றவாறு

காண்க. இவை மூன்றுசூத்திரமுங் குறிப்புவமை. இவர் கற்கப் படாதோர். (௩௮)

39. புரத்தலினியல்பேபுகலுங்காலை
யதற்கமையாண்டின்மாணாக்கனையெதிருபு
கடவுளைவாழ்த்திக்காலமுமிடனுந்
திடனுறக்குறித்துமங்கலத்திசைநோக்கி
யிருந்துனக்கிவையியல்பெனவுள்ளுறுத்தித்
திருந்தியசிந்தையிற்செம்முகமலர்ந்து
நுவலத்தகுநூனுதலியதிறத்தினைத்
தவலருஞ்சிறப்பிற்றன்முதற்கொளுத்திப்
பொழிப்பாதியவாய்ப்புகன்றவாய்மையின்
விடத்தருவெருளியின்விரைவிலணுகி
நாளுநாளுநவிற்றுறுநவிற்றுறு
மஞ்சிறைப்பறவையினணைந்துறத்தழுவியும்
வெஞ்சிறைப்படுபுனன்மீன்போனோக்கியு
மகன்றனனுமெனினுமைபோன்றுன்னியும்
புனிற்றாவெனவவன்புலந்தனின்முன்னியுங்
கொளத்தகுமுணர்வின்குறியறிந்தனனுத்
தானெனலாக்கியதன்மைகண்டுலகம்
வேட்டைவாளியின்விழுமியனெனமனக்
கோட்டமொன்றின்றிக்கொடுக்குமதென்ப.

(எ-ன்) நூனுவல்வத னியல்புணர்-ற்று.

(இ-ள்) நூனுவல்வத னிலக்கணத்தைக் கூறுமிடத்துக் கல்வி தொடங்க நூலமைத்தவையாண் டேழாண்டென்னும் பருவத்தினற் காலத்தோடு மதி திதி முதலிய நாற்காலமுங் கழகமுந் திடனாகக் குறித்துக் குணதிசை வடதிசையென்னு மங்கலத்திசைகளைநோக்கி யிருந்து வழிபடுகடவுளை வாழ்த்தி வித்தைகொள்ளுமிடத்தியல்பு நினக் கிவையென வவன்கருத்துறப்படுத்தித் தன்னோடொன்றியசிந்தையொடு முகமலர்ந்து முதலே கூறத்தகு நூல்கருதிய கூறுபாட்டைக் கெடுத லில்லாத சிறப்புவிதியாற் கருத்துறப்படுத்தி விடத்தகும் வெருளிபோல விரைவினிலணைக் கொளத்தகுமுணர்வின் குறிப்பறிந்து பொழிப்பகல

நுட்ப மென்னு மூரைநடையா ளுளுநாளும் நவிலுந்தோறு நவிலுந் தோறும் புறவைபோலணைத்துத்தழுவியு மீன்போனோக்கியும் விட்டு நீங்கியகாலத்தும் ஆமைபோன் முளத்தானினைந்து மீன்றணிமைப் போதினி லாபோ லவனிருக்கும் புலத்துச் சென்றுந் தானென்றுஞ் சொல்லப்படுவதாகிய பெற்றிமையைக்கண்டு பெரியோர் வேட்டைவாளி யின் விழுமியனென்று கூறும்படிக் கழுக்காறின்றிக் கொடுப்பதாமென்ற வாறு. இச்சூத்திரத்திற்கிங்ஙன மாட்டுறுப்பாகப்புணர்த்த லிந்நூ லாசிரியர்கருத்தென்றுணர்க. (௩௯)

40. ஆரியன்றிருமகனையுறல்கடிந்த
கூரியமுதன்மைமாணுக்கன்குலமகன்
றன்மகன்மன்மகன்மந்திரத்தலைவ
னன்மகனிருநிதிநனிதமிபுரப்போ
னருத்தியின்வழிபடுபவனுரைநுழைந்துகொள்
கருத்தினனிவர்கள்கற்கப்படுவோர்.

(எ-ன்) இனிக்கொள்வோர் கற்பிக்கப்படுவோருங் கற்பிக்கப்படா தோருமென விருவகையர். அவருள்ளுங் கற்பிக்கப்படுவோரெண்மர். அவ ரிவரென்பதுணர்-ற்று.

எண்மருட் கூரியமுதன்மைமாணுக்கனுவான்-தன்னொடு மொருங்கு கற்ற வொருபுடைமாணுக்கருட்சேட்டன். இருநிதிநனிதமிபுரப்போன்-பிறமாணுக்கர்க்குப் பங்கென்னாது தனியே கொடுப்போன் (௪௦)

41. பளிங்குடனேதிமம்பாவைகொண்மூவெனத்
தெளிந்தநுண்ணுணர்வுறுந்தெள்ளியோரே.

(எ-ன்) அவர்தன்மையுணர்-ற்று.

(இ-ள்) இதற்குரை வேண்டுவதில்லை. இவைநாலு மவர்க் குவமை யாதற் கேது மேற்காட்டுதும். (௪௧)

42. அழுக்கின்றுதலடுத்தவைதனதாக்
கோடலென்றிரண்டும்பளிங்கின்குணமே.

(எ-ன்) பளிங் கவர்குணத்திற் குவமையாதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) நின்மலமாய் விளங்குதலுடன் அடுத்த பொருள்களின் குணங்களைத் தனதுகுணமாகக் கொண்டிருத்த லென்னுமிரண்டும் பளிங்கின்குணமா மென்றவாறு. எனவே, அதுபோலக் களங்கமற்று விளங்கிய நுண்ணுணர்வா லாசிரியன்கொடுத்த பலவேறுவகைப்பட்ட கல்விகளையெல்லா முணர்விலூட்டிக் கற்றகல்வியைப் புறத்தே தோற்று விப்பனென் றுவமை யுய்த்துணாநின்றவாறு காண்க. (சஉ)

43. நீர்தெரித்தமிர்து னுநீர்மையிறேதிம
மோரிருபான்மைக்குவமையதாகும்.

(எ-ன்) அன்னம் அவரறிவிற் குவமையாதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) பாலையும் புனலையுங் கலந்துவைத்தாற் புனலை நீக்கிப் பாலைப்பருகுந்தன்மை யிரண்டினு லோதிம மவரிடத்துண்டானவோ ரிரண்டுபகுதிக் குவமையாமென்றவாறு. எனவே, அதுபோல வவரும பலவேறுவகைப்பட்ட கல்வியுள் அசாரத்தை நீக்கிச் சாரமானகல்வியை யுட்கொள்வரென் றுவமையுய்த்துணாநின்றவாறுகாண்க. (சங)

44. பகிரதிமுதலியபன்னதியுட்புக
வுகுதலின்றுய்த்தன்னுட்கொளுமுவாவே.

(எ-ன்) பரவை யுவமைபென்பதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) கடல், கங்கைமுதலாகிய பல நதிகளுந் தன்னுட்புகா நிற்பவு மவற்றைப் புறத்தே கக்குதலின்றித் தன்னகத் தடக்கிக்கொள்ளு மென்றவாறு. எனவே, அக்கடல்போல வவருணர்வும் ஆசிரியன் அறிவிக்க வுட்கொண்ட வெல்லாக்கல்வியையும் புறத்தே தப்பவிடா துட் கொள்ளுமென் றுவமை யுய்த்துணாநின்றவாறு காண்க. (சச)

45. படிந்துவாறுத்துணைப்படுபுனல்யாண்டும்
படர்ந்துபஃறுளியிற்பயன்றருமுகிலே.

(எ-ன்) கொண்மூ வுவமையென்பதற் கேது வுணர்-ற்று.

(இ-ள்) மேகஞ் சமுத்திரத்திற்படிந்து உவாறுத்துண்டு விளைவெய் தியபுனலை யுலகமெங்கு மாங்காங்குச்சென்று பலதுளியாகப் பெய்

துலகத்திற்குப் பயனுமென்றவாறு. உலகம் சொல்லெச்சம். எனவே, அதுபோல அவர் தம்மாசிரியனிடத்து அதிகரிக்கப்பட்ட வவற்றுள் அசாரமீக்கிச் சாரமுட்கொண்டு பரிபாலிக்கப்பட்ட தம்மிடத்துக் கல்வி யையு முலகின்கண் வரைதலின்றி யாவர்மாட்டுங்கொடுப்பரென வுவமை யுய்த்துணரநின்றவாறு காண்க. இவை நான்கிற்கும் குறிப்புவமை முன்புபோலக்கொள்க. (௪௫)

இனிக் கற்பிக்கப்படாதோ ரொருபன்மூவர். அவர்தாம்,

46. காமுகன்களியன்கடுஞ்சொலன்சினத்தன்
மடியன்றடுமாறுளத்தன்மற்றவியன்
றுயில்வோன்பிணக்கன்சோரன்பொய்யன்
மாணவன்பிணியின்மரீஇயவனிவர்க்குநற்
றுனமதாயினுஞ்சாற்றார்நூலே.

ர-ன்) கற்பிக்கப்படாதோர்க்கு வரையறைகூறுதனுதலிற்று.

(இ-ள்) காமுகன்முதலாகப் பிணியின்மரீஇயவ னீறாகப் பதின் மூன்றுபெயர்க்குங் கல்வியீத னற்றனமென்று நூல்கள் கூறிற்றாயினுஞ் சான்றோர் பெருநூ லுணர்த்தாரென்றவாறு. பெருநூலென்ப தாட்சி பற்றியசொல்லெச்சம். இவர் தன்மையாவன:— (௪௬)

47. ஆடுபந்துறுசுவாளந்தறிமுகவை
கோடின்றுங்குளனெனுங்குறியோரே.

(எ-ன்) கற்பிக்கப்படாதோர்க் குவமை யுணர்-ற்று.

(இ-ள்) ஆடும் பந்துருசுவரு மொருபதார்த்தத்தை யளந்தறி முகவையுங் கரையில்லாத வேரியு முவமையா மிலக்கணத்தை யுடையா மென்றவாறு. இவைநான்கு முவமைபாதற் கேது மேற்காட்டுதும்.(௪௭)

48. ஓரிடத்துறுகுளகமைத்தறவுண்ணு
தவணவணிறைவற்றலமருமாடே.

(எ-ன்) ஆடுவமையாதற் கேது வுணர்-ற்று.

(இ-ள்) ஆடு நுகரிடத்து மிகுதியாகவுண்டான குழையை நிறைய வுண்ணாது சிறிதருந்தியதனாற் பசியடங்கா தாங்காங்குத் தெருமந்து திரியுமென்றவாறு. எனவே, அதுபோல வவரு மொருசா ரசாரிய னிடத்துக் கற்கத்துடங்கிய முக்கியமான வொருநூலையாயினு மவ னிடத்துத் தெற்றென முற்றக்கல்லாது பலநூல்களையும் பலரிடத்துங் கற்கத்தொடங்கிச் சிறிதுசிறிது கற்றுக் கல்விமுற்றா துழல்வரென் றுவமையுய்த்துணரநின்றவாறு காண்க. (சஅ)

49. எற்றியபந்தினையெதிர்செலவிடுத்தொரு
பற்றறநிற்பதுசுவரின்பண்பே.

(எ-ன்) பந்துநுசுவ ரொப்பென்பதற் கேதுவுணர்-ற்று.

(இ-ள்) ஒருவர் கையாலெற்றியபந்தினைத் தன்மெய்யிற்பரிசித் ததனை யெற்றியவரெதிர்செலவிடுத்துத் தானப்பந்தோடு பரிசித் திருக்கும்பற்றின்றி நிற்பது சுவரின்குணமாமென்றவாறு. எனவே, அதுபோ லவரு மாசாரியன் றமது மனத்திலே பற்றவுரைக்கப்பட்ட கல்வியையு மனப்பற்றின்றி வறியமனத்தாயிருப்பரென் றுவமை யுய்த் துணரநின்றவாறு காண்க. (சகூ)

50. அளந்துகத்தடக்கியபொருள்களையாங்கவண்
முற்றப்புறத்துகன்முகவையின்குணமே.

(எ-ன்) முகவை யொப்பென்பதற் கேது வுணர்-ற்று.

(இ-ள்) அளந்தறிவதாகிய பதார்த்தங்களை யொருவர்பெய்யத் தன்னகத் தடங்கியபொருள்களை முழுதும் புறத்தே யுகுவது முக வையின்குணமா மென்றவாறு. முகவை நாழிமுதலியனவாம். முற்ற வும், புறத்துகலும் என்பனவாய்த் தொக்கவும்மை யெச்சவும்மை யாதலாற் சில பொருள்களா யகத்தடக்கப்பட்டவற்று ளொருசிறி துள்ளே பற்றுவனவு முளவென்றாயிற்று. அவை எள் பயறு உழுந்து நெல் அரிசி முதலியனவன்றிப் பால் தயிர் நெய் முதலியவாம். எனவே, அவரிடத்துஞ் சிறி தாசாரியனுரைத்தவற் றுட் பற்றுவ துளதென் றுவமை யுய்த்துணரநின்றவாறு காண்க. (ரு0)

51. பயஞ்சிறிதடக்கலிற்பயனிரம்பாதாங்
கொழும்புனல்புகுந்தகோடின்றாங்குளனே.

(எ-ன்) கோடின்றாங்குள னுவமையாதற் கேது வுணர்-ற்று.

(இ-ள்) கோடின்றாங்குள மாரியாற்பெய்யப்பட்டுப் புகுந்தபுனலைப் புறம்போகவிட்டுச் சிறிது புனலடக்குவதா'லுண்பார்க்கும் போகங்கொள் வார்க்கும் பயனிரம்பாவாமென்றவாறு. எனவே, அதுபோ லவருந் தம்மிடத் தாசாரிய னளிக்கப்பட்ட கல்வியை முற்றப்பற்று துணர்வு சிறிதாகலின், புறம்போகவிட்டுக் கல்வியிற்சிறியரெனப்பட்டாராய்த் தமக்கும் பிறர்க்கு மினிமைப்பயனிரம்பாத புன்புலவராவரென் றுவமை யுய்த்துணரநின்றவாறு காண்க. இவை நான்கு சூத்திரத்தானு முன்பு போலக் குறிப்புவமைகொள்க. இவ்விருவர்க்கும் "அன்னங்கிளியே நன்னிறநெய்யரி, யானையானேறென்றிவைபோலக், கூறிக்கொள்பகுண னுடையோரே" எனவும், "அன்னமாவேமண்ணொடுகிளியே, யில்லிக்குட மாடெருமைநெய்யரி, யன்னர்தலையிடைகடைமாணாக்கர்" எனவும் முன் னோர் கூறிய சூத்திரங்களானு முவமை யுய்த்துணர்ந்துகொள்க. (நக)

52. குரங்கெறிவிளங்காய்கொள்பவர்போல்வார்
பழம்பகைமறைத்துப்பணிபவராகிக்
கூடாவொழுக்கிற்கொள்பவர்கல்விச்
சால்பிலராகித்தலைமைவந்தடுத்தோர்
காந்தங்கொருவரைக்கற்கவிட்டுணர்வான்
வருபவர்தமக்கும்வழங்கார்நூலே.

(எ-ன்) இதுவுங் கற்பிக்கப்படாதோருட் கூறுதொழிந்தோரை யுணர்-ற்று.

(இ-ள்) கொள்வதற்கரிய விளங்கனியை யுண்ணவிரும்பி, அவ் விளவி லிருக்குங் குரங்கைக் கற்கொண்டெறிந்து அக்குரங்கெறியும் விளங்கனியைக் கொள்பவரைப்போல வுபாயத்தாற் கல்விகோடற்கு வருவார்க்கும், பழம்பகையைத் தோன்றாமறைத்ததற்குக் கூடா வொழுக்கத்திரேடும் புறத்துற்ற நட்பினராகியும் நிலத்தில் வீழ்ந்து

பணிதன்முதலியனசெய்து முபாயமாகக் கல்விகோடற்கு வருவார்க்கும், கல்வியாற் பூரணமிலராயும் அறிவிலாதாராற் சிறப்பெய்தினோர் பிற சான்றோருழை யுடையார்முன் னில்லார்போ லேக்கற்றும் வெளிப்பட வந்துநின்று கல்லாது மாண்பிறந்தமானத்தாற் பிறரை யவரிடத்துக் கரந்துவிட்டவரேவலால் வருவார்க்கும் சான்றோர் நூற்பொருள் வழங்காரென்றவாறு. வழங்குதல் வித்தைகொடுத்தல். நூல்-ஆகுபெயர். அவை இலக்கண விலக்கியம் (௫௨)

இனிக் களங்கடியப்படுவார் பலர். அவ ரிவரெனல்,

53. ஆசாரமில்லாரழுக்காறுள்ளார்நகுவார்
கூசாதுமற்றொன்றுகூறுவார்—தேசிகன்சொற்
கற்றொன்றுறாதார்கழகத்துறிலிருந்தா
ரெற்றென்றுரையாதிரார்.

என்பதனா லுணர்க. எற்றென்பது கையாற்புடைத்தலுங் காலா லுதைத்தலுமாம். (௫௩)

இனிக் கோடன்மரபு வருமாறு:—

54. கொள்வோன்கொள்கடன்கூறுங்காலைக்
கடையாமத்திடையெழுந்துளகடன்கழித்
தாரியன்மாளிகைவாயில்சென்றெய்திக்
காலமுமிடனுங்கருதுபுநின்றாங்
கெவனெவனோக்கினனவனுளனாகி
வணக்கமுமொடுக்கமும்வாய்ந்தயனிற்ப
வருகவென்றழைத்தலுமருகுசென்றிறைஞ்சலு
மருத்தியினிருத்தியென்றறைதலுமிருந்தாங்
குரையெனவுரைத்துரைத்தானுறத்தோய்தரப்
பொழிப்பெயகலநுட்பமெச்சமெனப்
பழிப்பின்றாமுரைபகர்தலுந்தெற்றென
வுணர்ந்தபின்பொழிகெனவொழிதலுமவன்றிறத்
தோவாதுதவுவதொல்லும்வகையா
னோவாதியற்றியவின்பமெய்தியபின்
பகலினுமிரவினும்பயின்றுபின்முன்ன

ரகலாருகியவன்பினருதலுந்
துயில்வுழித்தைவருந்துணைத்தாளிணைத்துறந்
தொல்லையிற்றயின்றெழுந்தொழுகுதலன்றே.

இவற்றானுணர்க. இதற் குரை வேண்டுவதில்லை. "எத்திறனுசானுவக்கு மத்திற, மறத்திற்றிரியாப்படர்ச்சிவழிபாடே" என்பதுங் கூட்டியுணர்க.

55. கேட்டவைகேட்டவைநிரந்தரம்பாடம்
போற்றலினொட்டிற்றனெபொறித்தலு
முரைநுழைந்துணர்ந்தவொண்பொருளையுள்ளுறுத்த
மயலற்றெருபுடைபயின்மாணுக்கரி
னையமெய்தியதையமகற்றலு
மெய்யுணர்வினிலுறப்பிறர்க்கவைவிளம்பலு
மெய்தியதிழவாததற்கிலக்கணமே.

(எ-ன்) கற்றகல்வி யிழவாததற் குபாயமுணர்-ற்று.

இதன்பொருள் வெளிப்படை. இதனுள் உரைநுழைதலென்பது உரைமுகத்து நுண்ணிதா யாசிரியன்காட்டக்கண்ட அரும்பதங்களை மனத்தான் மறவாது தரித்தல். இவ்வாறுகோடல் மாணுக்கன் முற்றவுணர்ந்தானுமாறு. "ஆசானுரைத்ததமைவரக்கொளினுங்-காற்கூறல்லது பற்றிலனுகும்," "அவ்வினையாளரொடுபயில்வகையொருகால்-செவ்விதினுரைப்பவவ்விருகாலு-மையறுபுலமை மாண்புநனி யுடைத்தே" என்னுஞ் சூத்திரங்களானு முணர்க. (ருரு)

56. தோய்ந்தவையன்றியுந்தோயாதவற்றை
யாய்ந்தெழுகாலத்ததன்பயனெனலாய்
விழுமியதிறத்தினுள்விழுமியதொன்றுஞ்
சொல்லொடுசொல்வினைத்தொடுத்தலுந்தொலையாக்
கல்வியிற்பயிறலுங்கடனுகும்மே.

(எ-ன்) முன்னர் நூதுவல்லோனுகிய வாசிரியன் வாடாக்கற்பக மணமலிபொற்பூப்போல வாய்ந்தமைவுடைய கல்வியுங் கவியுமுடைய

றுதல்வேண்டுமென்று ரவ்வாரியன்போல மாணுக்கனுங் கல்வியுங் கவியு முடையனுதற் குபாய முணர்-ற்று.

(இ-ள்) கற்றநூலன்றிக் கல்லாதவற்றையு மாராயுங்காலத்துக் கல்வியாலாய விழுமிய கூறுபாட்டையுடைய கலை பலவற்றுள்ளும் விழுமிய பயனென் றுலகங்கூறப்படுவதாஞ் சத்தங்களைத்தொடுத்துச் சாதிப்பதூஉம் தொலையாக் கல்வியுடன் சாதித்துவருவதூஉ முறையா மென்றவாறு. (௫௬)

57\. பாவினையொலிபெறப்படனஞ்செய்திடு
காவினனுகிநாற்கவிப்புலவோர்
புதுமொழிபுணர்ப்புழிப்பொறிப்பவனுகியு
மனப்படுமொருபொருண்மதித்தவரொருமொழி
யெடுத்ததற்கியைபுறவெதிரெதிர்பன்மொழி
தொடுப்பதும்பெயர்வினைகோப்புணப்பிறிதடி
தொடுப்பதுந்தொடைபலதொடர்ந்தொருபாவாய்
முடிப்பதுங்குறிக்கொளல்முதற்காரணமே.

(எ-ன்) சத்தஞ்சாதித்தற்கு முதற்காரண முணர்-ற்று.

(இ-ள்) புலவர்பலரும் பாடிய பாப் பாவினங்களை யவ்வவபாவிற் கமைத்த வொலிமுறையே படனஞ்செய்திடும் வாக்கினனுகியும், அந் நாற்கவிப்புலவர் புதுமொழிபுணர்ப்புழி யவர்க்குப் பட்டோலைபொறிப் பவனுகியும், ஒருபொருளைக்குறித் தவர் முதலே யோர்சொல்லையெடுத்தலு மதன்மேற் பன்மொழி யவ்வடிக்குப் பொருந்தக் கொளுவுதலும், அதன் மேற் பலவடியையுந் தொடுத்தலும், அடிதொடர்ந்தா லொருதொடையி னுதல் பலதொடையினுதல் ஒருபாவாக்கிப் பெயராதல் வினையாதல் கோப்புண முற்றமுடிப்பது முதலாயினவற்றை மனத்துட்குறிக்கொள லுஞ் சத்தந்தொடுத்தற்கு முதற்காரணமா மென்றவாறு. ஒழிந்த வகல முரையிற்கொள்க. (௫௭)

58\. சொற்பொருளணிநலன்றேயாதாயினு
மடியாதெடுத்தடிமடக்குதலின்று
யாப்பினதுறுப்பிழுக்காதிறுதியில்வினை
கோப்புணமுடித்தலதன்முதற்குறியே.

ரகலானுகியவன்பினனுதலுந்
துயில்வுழித்தைவருந்துணைத்தாளினைத்துறந்
தொல்லையிற்றயின்றெழுந்தொழுகுதலன்றே.

இவற்றானுணர்க. இதற் குரை வேண்டுவதில்லை. "எத்திறனுசானுவக்கு மத்திற, மறத்திற்றிரியாப்பட்சிவழிபாடே" என்பதுங் கூட்டி யுணர்க. (௫௪)

55. கேட்டவைகேட்டவைநிரந்தரம்பாடம்
போற்றலினேட்டிற்றனேபொறித்தலு
முறைநுழைந்துணர்ந்தவொண்பொருளையுள்ளுறுத்தலு
மயலற்றெருபுடைபயின்மாணுக்கரி
னையமெய்தியதையகற்றலு
மெய்யுணர்வினிலுறப்பிறர்க்கவைவிளம்பலு
மெய்தியதிழவாததற்கிலக்கணமே.

(எ-ன்) கற்றகல்வி யிழவாததற் குபாயமுணர்-ற்று.

இதன்பொருள் வெளிப்படை. இதனுள் உரைநுழைதலென்பது உரைமுகத்து நுண்ணிதா யாசிரியன்காட்டக்கண்ட அரும்பதங்களை மனத்தான் மறவாது தரித்தல். இவ்வாறுகோடல் மாணக்கன் முற்ற வுணர்ந்தானுமாறு. "ஆசானுரைத்ததமைவரக்கொளினுங்-காற்கூறல் லது பற்றிலனாகும்," "அவ்வினையாளரொடுபயில்வகையொருகால்-செவ் வினுரைப்பவவ்விருகாலு-மையறுபுலமை மாண்புநனி யுடைத்தே" என்னுஞ் சூத்திரங்களானு முணர்க. (௫௫)

56, தொய்ந்தவையன்றியுந்தோயாதவற்றை
யாய்ந்தெழுகாலத்ததன்பயனெனலாய்
விழுமியதிறத்தினுள்விழுமியதொன்றுஞ்
சொல்லொடுசொல்வினைத்தொடுத்தலுந்தொலையாக்
கல்வியிற்பயிறலுங்கடனாகும்மே.

(எ-ன்) முன்னர் நூலுவல்லோனாகிய வாசிரியன் வாடாக்கற்பக மணமலிபொற்பூப்போல வாய்ந்தமைவுடைய கல்வியுங் கவியுமுடை

ஞதல்வேண்டுமென்ரு ரவ்வாரியன்போல மாணுக்கனுங் கல்வியங் கவியு முண்டயனுதற் குபாய முணர்-ற்று.

(இ-ள்) கற்றநூலன்றிக் கல்லாதவற்றையு மாராயுங்காலத்துக் கல்வியாலாய விழுமிய கூறுபாட்டையுடைய கலை பலவற்றுள்ளும் விழுமிய பயனென் றுலகங்கூறப்படுவதாஞ் சத்தங்களைத்தொடுத்துச் சாதிப்பதூஉம் தொலைபாக் கல்வியுடன் சாதித்துவருவதூஉ முறையா மென்றவாறு. (ருசு)

57. பாவினையொலிபெறப்படனஞ்செய்திடு
நாவினனுகிநாற்கவிப்புலவோர்
புதுமொழிபுணர்ப்புழிப்பொறிப்பவனுகியு
மனப்படுமொருபொருண்மதித்தவரொருமொழி
யெடுத்ததற்கியைபுறவெதிரெதிர்பன்மொழி
தொடுப்பதும்பெயர்வினைகோப்புணப்பிறிதடி
தொடுப்பதுந்தொடைபலதொடர்ந்தொருபாவாய்
முடிப்பதுங்குறிக்கொளவ்முதற்காரணமே.

(எ-ன்) சத்தஞ்சாதித்தற்கு முதற்காரண முணர்-ற்று.

(இ-ள்) புலவர்பலரும் பாடிய பாப் பாவினங்களை யவ்வவபாவிற் கமைந்த வொலிமுறையே படனஞ்செய்திடும் வாக்கினனுகியும், அந் நாற்கவிப்புலவர் புதுமொழிபுணர்ப்புழி யவர்க்குப் பட்டோலைபொறிப் பவனுகியும், ஒருபொருளைக்குறித் தவர் முதலே யோர்சொல்லையெடுத்தலு மதன்மேற் பன்மொழி யவ்வடிக்குப் பொருந்தக் கொளுவுதலும், அதன் மேற் பலவடியையுந் தொடுத்தலும், அடிதொடர்ந்தா லொருதொடையி ஞதல் பலதொடையினுதல் ஒருபாவாக்கிப் பெயராதல் வினையாதல் கோப்புண முற்றமுடிப்பது முதலாயினவற்றை மனத்துட்குறிக்கொள லுஞ் சத்தந்தொடுத்தற்கு முதற்காரணமா மென்றவாறு. ஒழிந்த வகல முரையிற்கொள்க. (ருஎ)

58. சொற்பொருளணிநலன்றேயாதாயினு
மடியாதெடுத்தடிமடக்குதலின்று
யாப்பினதுறப்பிழுக்காதிறுதியில்வினை
கோப்புணமுடித்தலதன்முதற்குறியே.

(எ-ன்) இதுவும் அச் சத்தஞ்சாதித்தற்கு முதற்குறி யுணர்-ற்று.

குறியாவ திலக்கணம். உறுப்பு - எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை யென்னு மாறுறுப்பும். நலனென்பது கேட்டோர்க் கின்பங் கொடுத்தல். தோயாதது-கூடாதது. ஒழிந்த தகல முறையிற்கொள்க. (ருஅ)

59. அருமணிநிரல்வைத்தன்னசொன்னல
னெளியதனுட்சிறந்தன்னபொருணல
னழகதற்காங்கமைந்தன்னவணிநல
னூரனுடைப்பழம்பாட்டுணர்வுழியுணர்ந்தோர்
வரனுடைப்பாட்டுணர்வாய்மையின்வருமே.

(எ-ன்) அங்ஙன முன்னர்க்கூறிய முதற்குறியும் குறிக்கொள் பவன்கூறுஞ் சத்தங்களினிடத்துச் சொன்னலனும் பொருணலனு மவ் விரண்டினுமான வணிநலனு மெய்துதற் குபாய முணர்-ற்று.

உரனுடைப்பழம்பாட்டென்பன சங்கச்செய்யுள். ஒழிந்த தகல முறையிற்கொள்க. (ருகூ)

பொதுப்பாயிர முற்றும்.

## சிறப்புப்பாயிரம்.

இனிச் சிறப்புப்பாயிரமாவது பதினொருவகைத்தாம். அவை வருமாறு.

60. எல்லைவழிநுதலியபொருள்யாப்பே
நூற்பெயர்நுவல்வோன்பெயர்காரணம்பயன்
காலங்கேட்போர்களனெனப்பதினொரு
பால்புணர்த்துரைப்பதுசிறப்புப்பாயிரம்.

(எ-ன்) சிறப்புப்பாயிரத்தினது கூறுபாடுணர்-ற்று.

(இ-ள்) எல்லையும், வழியும், நுதலியபொருளும், யாப்பும், நூற் பெயரும், நூனுவல்வோன்பெயரும், காரணமும், பயனும், காலமும், கேட்போரும், களனும் என்னும் பதினொருபகுதியாகச் சேர்த்துக் கூறுவது சிறப்புப்பாயிரமா மென்றவாறு.

புணர்த்துரைப்பதென்ற விதப்பினால், நூல்செய்தோன் வழிபடு தெய்வத்தினையும், தெய்வமென்பதும் ஒன் றுளதென் றுண்மையுணர்த் திய அவனது ஞானாசாரியனையும், அவன்றந்தையையும், குலத்தினையும்

பதியினையும், அப்பாயிரத்துட் கூறுவதும் வரலாற்றுமுறைமையினுன் மரபெனக்கொள்க. எனவே பதினுறென்ப துட்கோள். (௬0)

இனிச் சிறப்புப்பாயிரத்தினதிலக்கணஞ் செப்புமாறு:—

61. சிறப்பினதியல்பேதெரியினூனுதலிய
திறப்படுபொருளைத்தன்னகத்தடக்கி
யகவலின்வெள்ளையினறைவதொன்றாகும்.

(எ-ன்) சிறப்புப்பாயிரத்தி னிலக்கண முணர்-ற்று.

(இ-ள்) சிறப்புப்பாயிரத்திலக்கணத்தையாராயுமிடத்துப் புலவனு லுரைக்கப்படும் நூனுதலியபொருளையெல்லாங் குறிப்புரையானன்றி வெளிப்படையாக அடக்குவாய்செய்து ஆசிரியத்தானுதல் வெண்பாவா னுதல் கூறத்தகுவதொன்று மென்றவாறு. சிறப்பென்ற தீண் டொன்றற் குரியதென்பதாம். (௬௧)

62. கலைகள்யாவையுங்கற்றுரைதெளிந்து
துலைநாச்சமனிற்றுணிநிலைபுரியும்
வாய்மையும்பிறர்க்கவைமயர்வறவளிக்குந்
தூய்மையுஞ்சான்றதுணையிலனெனினு
மொல்காப்பதினெண்ணுறுப்புடைநாற்பொருட்
பல்காப்பியம்பழிப்பறநவம்புணர்க்கவு
முத்தமிழ்க்கல்வியுமுத்தமவாக்கின்
வித்தகக்கவிதையும்வேண்டினனாகினுந்
தற்புகழ்தலும்பிறன்றன்னையிகழ்தலும்
பொற்பலவாகும்புலனுடையோர்க்கே.

(எ-ன்) நூல்செய்தான் பாயிரஞ்செய்வானல்லனென்பதுணர்-ற்று.

(இ-ள்) இலக்கண இலக்கியங்களை முற்றப் பாடம்போற்றி யுரையைச் சந்தயமறத் தெளிந்து துலைநாப்போன்றும் துலாக்கோற்சமன் போன்று மையமுற்றபொருளை ஐயமறக் கேட்டோர்க்குணர்த்து

மொழியிலாதானு மெனினும் எழுத்தாதிய வைந்திலக்கணங்களோயு *பதினெட்டுறுப்போடு நாற்பொருள் பயப்பதாய பெருங்காப்பிய களையுங் குற்றமறப் புதிதாய்ப் பாடல்சான்றவனு மெனினுந் தன்னை புகழ்தலும் பிறனொருவனை யிகழ்தலு முணர்வுடையோர்க் கழகல் லென்றவாறு. இன்னும், "தோன்றுதோற்றித் துறைபலமுடிப்பினு தான்றற்புகழ்தற்குரித்தியன்றே" என்பதனானுங் கொள்க. (௬௨

63. பன்னருஞ்சிறப்புப்பாயிரம்பகர்வோர்
தன்னுயிர்பேணுஞ்சதிராசிரிய
னொருபுடைகற்றவுயர்மாணக்கன்
றன்னொடுகற்றதலைமாணாக்க
னுரைகாரணனெனுமூரனுடையோரே.

(எ-ன்) பாயிரஞ் செய்தற்குரியோரை யுணர்-ற்று.

(இ-ள்.) கூறுதற்கரிய சிறப்புப்பாயிரங் கூறுதற்குரியோரி நால்வருளொருவராமென்பது.

அந்நால்வருள்ளு மிப்பாயிரஞ்செய்தா ரிந்நூற் குரைசெய்த திரு மேனி யிரத்தினகவிராயனென்றுணர்க. நூலாசிரியர்க்கு மாணாக்க னென் பதனுலுமாம். (௬௩

'உலகம்.........................புலமையோனே

(எ-ன்) அலங்காரத்தினது பெருந்தன்மையு மிந்நூற்குச் சிறப்புப் பாயிரமு முணர்-ற்று.

உலகம்யாவையு மென்பதுமுதல் வடவேங்கட மென்னு மத்துணையு மொருதொடர். இதனுள், உலகமென்பது "மூன்றுதலையிட்ட முப்பதிற் றெழுத்தி, னிரண்டுதலையிட்டமுதலா........................மெய்யேயுயிரென் றுயீரியல" என்பதனால் உயிர்முதன் மெய்யீற்றுமொழியாயிற்று.

உலகம் யாவையு மென்பது "உயிரிறுசொன்முன்னுயிர்வருவழியு, முயிரிறுசொன்முன்மெய்வருவழியும்........................மென், றுயீரியல புணர்நிலைச்சுட்டே" என்பதனாலும், "அவற்றுள், நிறுத்தசொல்லினீறா கெழுத்தொடு, குறித்துவருகிளவிமுதலெழுத்தியையப், பெயரொடு

பெயரைப் புணர்க்குங்காலு.........................முன்றேதிரிபிடனென்றே யியல்பென, வாங்கந்நான்கேமொழிபுணரியல்பே" என்பதனுலும் இவை உயிர்முதன் மெய்யீற்றுமொழி நிற்ப யெய்ம்முதன் மெய்யீற்றுமொழி வருமொழியாய்ப் பெயரொடுபெயரைப் புணர்ப்பதாய் "வேற்றுமைமப்போய் வலிமெலியுறழ்வு, மல்வழியுயிரிடைவரினியல்பும்முள" என்பதனுல் அல்வழிக்கண் ணிலைமொழியீற்று மகரம் வருமொழி முதல் யகரத்தோடு புணர்ந் தியல்பாயது.

யாணவயுமுறு வென்பது "புள்ளியில்லாவெல்லாமெய்யும், ........ .......................... ஆயீரியலவுயிர்த்தலாறே" என்பதனுல் அல்வழிக் கண் ணேனையுயிரோ டுருவுதிரிந்துயிர்த்தது. இது எட்டிறந்த பல வகையுடகூடடம்.

உறுபய னென்பது "மூன்றுறுருபெண்வினைத்தொகைசுட்டீ, றுகுமுகரமுன்னரியல்பாம்" என்பதனுல் வினைத்தொகை வாய்பாட்டு மூற்றுகரத்தின்மேல் வருபகர மியல்பாயது.

பயன்விளையென்பது "ணனவல்லினம்வரட்டறவும்பிறவரி, னியல்புமாகும்வேற்றுமைக்" கென்பதனுல் வேற்றுமைப்புணர்ச்சிக்கண் ணிடையினம்வர ளகார மியல்பாயது.

விளைப்பானென்பது "பெயரெச்ச வினையெச்ச வாய்பாடுகளும் பொருண்முடியுமாறறிந்து பகுதி விகுதியாக்கி யிடைநிலையும் வேண்டுழித் தந்துமுடிக்க" வென்பதனுல் விளைக்கவேண்டி யென்னும் பொருண்மைதோன்ற விளையென்னும் பகுதியை முதல்வைத்து அதன்மேல் "லென்பவும்பிறவும், வினையின்விகுதி" யென்பவற்றுல் பானென்னும் விகுதியை நிறுவிப் "பவ்வமூவிடத்தைம்பாலெதிர்பொழு, தினைவினையிடைநிலை" என்பதனுற் பகரவிடைநிலையை மிகுத்து முடிக்க

விளைப்பானல வென்பது "புள்ளியீற்றுமுன் னுயிர்தனித்தியலாது, மெய்யொடுஞ்சிவணுமவ்வியல்கெடுத்தே" என்பதனுல் னகரவொற்றியல் பாய்நிற்க வதன்மேல் அகரமேறி முடிந்தது. இதுவுங் கூட்டம்.

அலகிலென்பது "குற்றியலுகாரமுமற்றெனமொழிப" என்பதனால் நிலைமொழியீற்றுக் குற்றியலுகாரம் புள்ளியீறுபோல வருமொழிமுத லிகரவுயிரேற இடங்கொடுத்தது. இம்மாட்டேற் றொருபுடைச்சேற லென்றுணர்க. அன்றிக் குற்றியலுகா மழிந்ததெனிற் பொருள் வேறு படும். அஃ தொையன்றென்க. இது குறைவுங் கூட்டமு முடனென் றியது. கருவி-அகக்கருவி. என்னை? நிலைமொழியீற்றுகரம் வரு மொழிமுத லிகரமேற இடங்கொடுத்தலா லென்றுணர்க.

அலகில்சோதியென்பது "அல்வழியெல்லாமுறழெனமொழிப" என்றாரகலின் லகாரம் அல்வழிக்கண் வல்லினம்வா வியல்பாயது.

சோதியணி யென்பது "இ ஈ ஐ வழியவ்வு" மென்பதனால் யகா வுடம்படுமெய் பெற்றது. இது புறப்புறச் செய்கை.

அணிகிள ரென்பது "அல்வழி இ ஐ முன்னராயி, னியல்பு மிகலும் விகற்பமுமாகும்" என்பதனால் இகாவீற்று வருமொழி முதல் வல்லினம் அல்வழிக்கண் ணியல்பாயது.

கிளர்திரு வென்பது "ஆவியாழவிறுதிமுன்னிலைவினை, யேவன் முன்வல்லினமியல்" பென்பதனால் வினைத்தொகைவாய்பாடு மேவல் வினைபோறலின் அல்வழிக்கண் ரகாரமுன் வல்லின மியல்பாயது.

திருவுரு வென்பது "ஏனையுயிர்வழிவவ்வு" மென்பதனால் வகா வுடம்படுமெய் பெற்றது. செய்கை - இதுவும் புறப்புறச்செய்கை.

இனி உலகம் என்பது பலபொருள்குறித்த ஒருசொல்லாயினு மீண்டுச் சிறப்புடையுயிர்கண்மே னின்றது.

உலகம் யாவையு மென்பது "பெயரினாகியதொகையுமாருளவே" என்பதனாலும், "காலமுலகமுயிரேயுடம்பே, பால்பிரிந்திசையா வுயர் திணைமேன" என்பதனாலும் ஆபுல என்பதுபோலப் பிறிதோர்பயனோக் காது உயிர்களோ டமைந்து ஆகிய வென்னும் பண்புத்தொகைவாய் பாட்டோடும் எல்லாமென்று மஃறிணைப் பன்மைமுற்றுப் பெயர்ப் பயனிலைகொண்டது. யாவையு மென்னும் பயனில் தானே யெழுவா யுருபாகி யிருந்த வென்னும் வினைத்தொகை முதனிலையாய்த் தன்னெச்ச மான ஆதியமென்னும் பெயரோடும் வினையெச்சவாய்பா டேற்றது,

அலகில் சோதியென எண்ணையுணர்த்தும்பெயரொடும்புணர்ந் தாகிய வென்னும் பண்புத்தொகைவாய்பாட்டான் வினையெதிர்மறுத்த பெயரெச்சவினைக்குறிப்பு, தன்னெச்சமாகிய சோதியென்னும் பெயரொடு முடிந்தது. "கோளில்பொறியில்", "கோட்டமில்கட்டுரை" என்பனவுமிது.

சோதியணிகிளர் திருவுரு வென்பது உவமைத்தொகை, உம்மைத் தொகை, வினைத்தொகையொற்றுமைநயம்பெற்று மூன்றாவதன்றொகைப் புறத் தும்மைத்தொகையுமுற் றன்மொழித்தொகைப் பெயர்ப்பயனிலை கொண்டது.

உறுபய னென்பது உரிச்சொல்லடையோடுங் கூடிய பண்புப்பெய ரெனினுமாம்; 'நள்ளிருட்கிடந்தேன்' என்பதுபோலும். உறுபயன்-முத்தி. அணி-கௌத்துவமணி. இவை ஆகுபெயர்; என்னை? "அவை தாம், தத்தம்பொருள்வயிற் றம்மொடுசிவணலும்" என்பதனா லறிக. இனி, "எல்லாத்தொகையுமொருசொன்னடைய" என்பதனால் இம்முத லீரடியுள் உலகம் யாவையு மென்பது இருமொழித்தொடர்த்தொகைச் சொல். உலகம்யாவையு மென்பதுமுதல் திருவுருவென்ப தீறாயின பன்மொழித்தொடர்த் தொகைச்சொல். அவற்றுள்ளும் அலகில் சோதி யணிகிளர்திருவுரு வென்பன அறுவகைத்தொகையு மோரள வடிக்கண்ணே யொருங்குதொக்கன. என்னை? அலகிலவாகிய சோதி களி னொளியைப்போலு மொளியையுடைய வணியையுந் தழையாநின்ற திருவோடுங்கூடிய திருமேனியையுமுடையானெனத் தொகைதொடர்ந்து நிகழ்ந்தமையா னெனக் கொள்க. அன்றியும், விளைப்பானென்பதனை யெடுத்தலோசையால் வினைப்பெயராக்கி யிருபெயரொட்டுப்பண்புத் தொகைவாய்பாட்டான் உறுபயன் விளைப்பானாகிய திருவுருவெனினு மாம். வினைப்பெயர் முற்றாய்ப் பெயர்ப்பெயரேபோல வுருபேற்றலி னெனக் கொள்க. இவ்விரண்டிற்கும் விளைப்பான்றிருவுருக் குடிபுகு வட வேங்கட மெனவும், விளைப்பானாகிய திருவுருக் குடிபுகும் வடவேங்கட மெனவும் முறையே தொடர்ப்படுத்து முடிக்க. இச்செய்யுட்குப் புலவர்கோ னென்னுந் தோன்றாவெழுவாயை முதலேவிரித் துரைகடை யொட்டுக. இவை யிரண்டுமன்றி விளைப்பான் என்பதனைப் பிரித்து

லோசையால் 'விளைப்பதமாக்கி, உயிர்களெல்லா முத்தியை விளைக்கட பிவா னென்றவ னலகில்சோதி யணிகிளர்திருவுருவெனத் தன்னெச்ச மான பெயர்கொண்ட மூற்றுக்குதல் இச் சிறப்புப்பாயிரஞ் செய்தா கருத்து. இம் முற்றிற்கு அதன்பின்னர் அவன் என்னுஞ் சுட்டுட் பெய ரெஞ்சியதாக விரித்து மேல்வரும் உணர்வுயிரென்பவற்றோடு புணர்த்து அவன்குடிபுகும் வடவேங்கடமென முடிக்க.

இம் முதலீரடிக்கு மித்துணையும் எழுத்துச்சந்திமுடிவுஞ் சொன் முடிவும் விரித்தனம். இங்ஙனம் வீருத்தவற்றுள் இம்முற்றிற்குட் பொருள்கோள் - ஆற்றுநீர். பொருள் - புறப்புறம். திணை - வாகை துறை - அருளொடு நீங்கல். என்னை? "ஒலிகடல்வையகத்து, நலிவு கண்டுகயப்பவிதந்தன்று" என்னும் வெண்பாமாலையுள் வாகைத்திணையு ளிறுதிச்சூத்திரத்தா னுணர்க. யாப்பு - குறள்வெண்செந்துறை. அலங் காரம் - ஒருபொருட் கொன்றுபலகுழீஇய பல்பொருளுவமை. மெய்ப் பாடு - கல்விபற்றிய பெருமிதம். பயன் - ஆதலான் முத்திவேண்டுகில் இக்காயமிருக்கப்பெற்றபொழுதே இந்திரியங்களையடக்கி, மண் பெண் பொன் என்னும் பற்றினைவிட்டு, மனோ வாக்குக் காயங்களா லவனைச் சிந்தித்தும் வாழ்த்தியும் வணங்குமின்; பேரின்பம்பெறலாம் என்பதாம்.

இப்பாயிரச்செய்யுண்முதலீரடியையு மிங்ஙனம் பிரித்துச் சொல் லணிக்கட்காட்டிய பிறிதுபடுபாட்டாக்கியதும் பஞ்சாதிகாரவிலக்கண நடைதழீஇய ஒருவகை விரித்துரைகாட்டுதற் கெனக் கொள்க. இனி ஏனையடிகட்கெல்லாம் இவ்வாறு விரித்துரைப்பி னுரைபெருகுமாதலான் அவற்றிற் கிவற்றிற் சுருங்கக்கூறுவதையுங் கற்றபெற்றி நற்குணனுடை யோர் தெற்றென முற்ற வுய்த்துணர்க.

உணர்வுயிர்......................கவின்பதிநின்று மென்பது அவன் ஆயுவும், ஞானமும்போலத் தன்னுடன் அளவளா யுத்தமாகிய நித்தர் கூட்டம் விட்டுநீங்காத அழகிய சுவணமயமாம் அந்தாமத்தின்கண்ணு மவ்வுருவிலபெற்றிருப்பதோடும் என்றவாறு. உணர்வுயிர்-உம்மைத் தொகை. கணமகலாத வென்பதற்குக் கணப்பொழுதும் விட்டுநீங்கா வெனினுமாம். என்னை? "ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையா ரென்றாகலின், நித்தர் - அநந்த கெருட சேனாபதிமுதலியோர், அக

லாதபொற்கவின்பதி என்பது "உருபும்வினையுமெதிர்மறுத்துரைப் பினும், திரியாதத்தமீற்றுருபினென்ப" என்பதனால் எச்சப்பெயர் திரி பின்றி முடிந்தது.

உரவுநீர்வளைத்தவொன்பானுள்..............................வடவேங்கட மென்பது கடல்சூழ்ந்த பூமியினிடத்துக் கண்டமொன்பதினுள்ளுந் தென்றிசைக்கட் பாதகண்டத்துள் அந்தரமமாகிய அப் பழம்பதி பூலோகவைகுண்டமானதென் றுயர்ந்தோர் கூறும்படிக்குக் குடிகொண் டுறையும் விசும்பைத் தொடவுயர்ந்த சோலையையுடைய வடக்கின்கண் வேங்கடமு மென்றவாறு. உரவுநீர் வளைத்த வொன்பானென்பது அடிப்பட்டபெய ரெஞ்சாது முதனின்றுதொடர்ந்த பெயரெச்சவாய்பாடு தன்னெச்சமான பெயர்கொண்டுமுற்றியது. அடிப்பட்டபெயரெஞ்சிய தாவது உண்டசாத்தன் என்பதற்கு அமுதுண்டசாத்தன் என்றும், உண்டவமுதென்பதற்குச் சாத்தனுண்ட வமுதென்றும் முதலே நின்ற பெயராகிய அமிர்துஞ் சாத்தனும் எஞ்சிநிற்பது. அஃ தீண்டு யாண்டு விரிந்ததெனின்? உரவுநீர் அடிப்பட்டபெயர்; வளைத்த வென்பது பெயரெச்சவாய்பாடு; ஒன்பான் என்றது தன்னெச்சமானபெயர். ஆதலால் உரவுநீர்வளைத்த என முதலே எஞ்சாது விரிந்தமை காண்க. இவை வினையெச்சத்திற்குமுள. அவையும் இம்முறையே காண்க. உரவு நீர்-போக்குவரவுநீர். ஒன்பானுள் என்பது "ஒன்றுமுதலாகப் பத்தூர்ந்துவரூஉ, மெல்லாவெண்ணுஞ்சொல்லுங்காலை, யானிடைவரினு மானமில்லை, யஃதென்கிளவியாவயிற்கெடுமே, யுய்தல்வேண்டும்பஃகான் மெய்யே" என்றாராகலின், அஃதென்னுஞ் சொற் கெட்டுப் பகரமெய்நிற்ப வுருபுபுணர்ச்சிக்கண் ணிடை ஆன்சாரியை பெற்றது. ஒன்பானுட் டென்புல என்பது எட்டிறந்த பலவகையுட் டிரிந்ததன்றிரிபு. கண் டத்துள் என்பது "மஃகான்புள்ளிமுன்னத்தேசாரியை" என்பதனால் அத்துச்சாரியை பெற்று, "அத்தேவற்றேயாயிருமொழிமே, லொற்று மெய்கெடுதறெற்றென்றற்றே" என்பதனான் மகரங்கெட்டு "அத்தின காமகாமுனையில்லை" என்பதனால் அத்துச்சாரியை அகரங் கெட்டது. அப்பழம்பதி என்பது "வினையெஞ்சுகிளவியு..............................சுட்டி

னிறுதியு, 'மாங்கவென் றுமுரையசைக்கிளவியு, ஞாங்கர்க்கிளந்தவல் லெழுத்துமிருமே" என்பதனாற்பகாமிக்கது. வடவேங்கடம்வேற்றுமைத் தொகை..

இதன் பொழிப்புரை புலவீர்காள் உயிர்கண்முழுதும் பெறுதற் கரிய முத்தியை விளைக்கப்படுவான் எண்ணிறந்த பலகோடியவா யிள ஞாயிறுபோன் றொளியையுடைய கௌத்துவமணியையுந் தழையா நின்ற திருவோடுங்கூடிய திருமேனியையு முடையான் அவனுயுவும், ஞானமும்போலத் தன்னொடு மளவளாய வுத்தமராகிய நித்தர்கூட்டந் தனது காந்தியையுங் கருணையையுங்கண்டுங் கருத்துட்கொண்டும் விட்டு நீங்கா தழுகிய சுவணமயமாகிய அந்தாமத்தின்கண்ணும், அகிலபூரண னாகி நிலைபெற்றிருப்பதோடும் கடல்சூழ்ந்த பூமியின்கண்ணவாங் கண்ட மொன்ப தென்றவற்றுள்ளும் பரதனாற்பெயர்பெற்ற கண்டத்தினுட் பழம்பதி பூலோக வைகுண்டமானதென வுயர்ந்தோர்கூறும்படிக்குக் குடிகொண்டுறையும் வடக்கின்கண் வேங்கடமும் என்பதாம். அவன் குடிகொண்டுறையும் வடக்கின்கண் வேங்கடமும் எனக்கூட்டுக. அற்றேல் விளைப்பான்...........திருவுரு என்பது முதலாய வவற்றினிடையிடை பிறபல சொற்றொடர்ந்தவாறென்னையெனின், நன்று சொன்னாய்! "தத்தமெச்சமொடுசிவணுங்குறிப்பி, னெச்சொல்லாயினுமிடைநிலைவரை யார்" என்பதனால் இடையிடையேற்பன அடைச்சொல்லாய்வந்தன. அஃ தாக இங்ஙனந்தொடர்ந்த வவற்றி னிடையிடை பெறுதற்கரியவென் பது முதலாய சொற்கள் கூட்டியுரைத்த வுரைநடை யாதோவெனின், "சொல்லொடுங்குறிப்பொடுமுடிவுகொளியற்கை, புல்லிய கிளவி யெச்ச மாகும்" என்றாராகலின், கூட்டியுரைக்கப்பட்டது. ஆனாற் சொல்லெச் சங்களேயன்றிக் குறிப்பெச்சமு மிதனுள்ளன வுளவோவெனின், உள. அஃ தியாண்டுக்குறித்ததெனின், பரமவைகுண்டத்திருப்பவன் அவ னனைத்துலகத்துயிர்கடோறும் அந்தரியாமியாயிருப்பதோடுங் கைம்மா றின்றியு மிவ்வுலகத்துயிர்கள் பெறுதற்கரிய முத்தியை யெளிதின் விளைப்பவனாகிப் பரதகண்டத்துட் பழம்பதியெனக்குடிபுகுந்துறையும் வடவேங்கடமெனவே அவன் பரமகிருபையிருந்தபடியோவெனவும், பரமவைகுண்டத்தினுந் திருமாமணிமண்டபத்தினும் நித்தர் முத்த ரோடுங்கூடிய திருவோலக்கத்திற் குறைவின்றி யிருப்பதோடும், வட வேங்கடத்தினுந் தெய்வத்திருமேனியோடுந் தொண்டக்குழாங்கள்

கைதொழுக் குடிபுகுந்து நின்ற தென்ன அகுடிதகெடித சாமர்த்திய குணமோ வெனவு மீ ரி ட த் து ங் குறிப்பெஞ்சிநின்றதெனக் கொள்க. மெய்ப்பாடு—மருட்கையைச்சார்ந்த பெருமிதம். இவ் வுரைநடையுட் பொழிப்புரை தலைதடுமாறியும், பொழிப் பகல நுட்ப மெச்ச மென்னும் நால்வகையுரைநடையும் நிகழ்ந்தமையுங் காண்க.

தெண்டிரை....................ஆயிடை என்பது தெளிந்த திரையார வாரிக்குந் தெறகின்கட் குமரியும் எல்லையாகவுடையதென்று கூ ற ப் படுவனவாம் அவற்றி னடுவிருந்து என்றவாறு. ஆயிடை என்பது "நீடவருதல்செய்யுளுளுரித்தே" என்பதனாலும், "சுட்டு, நீளின்யகாரமுந் தோன்றுதனெறியே" என்பதனாலும் யகாரவுடம்படுமெய் தோன்றியது.

அமிழ்தினும்....................மதிக்கும் என்பது தேவர்பானமாகிய வமிர்தினும் பெருத்தசுவையுடைத்தாம் எழுத்துச் சொற்பொருளென மூன்றுதன்மைத்தாகிய தமிழை யாராயாதிற்கும் அறிவின்றன்மையை யுடைய பெரியார் நன்குமதிக்கும் என்றவாறு.

முதுமொழித்தெண்டி............புணர்த்தியலணியையும் எ ன் ப து மூந்துநூல்களையாராயுந் தெண்டியாசிரியர் கூறப்பட்ட முதனூலணிக ளோடுந் தினமு ந வ ம ா ன பாடலேபாடும் புலவராற்கூறப்பட்டனவா யுலகின்கண்ணே வழங்குவனவா மணிகள் பலவற்றையும் என்றவாறு.

தனது நுண்ணுணர்........................விரித்தும் என்பது தனது நுண்ணிய வறிவுகாரணமாகக் கண்டளித்த பலவணிகளையுங் கற்றோர் மனத்துட்கொள்ளத் தொகுத்தும், தொகுத்ததனை வகுத்தும், வகுத்த வற்றை விரித்தும் என்பதாம். தனது, மனது எ ன் ப ன "ஆற னொருமைக்கதுவுமாதுவும்" என்பதனால் அதுவென்னு மாறனுருபு ஒருமையிடத்து ஆது ஆயிற்று.

பொதுவியல்........................எச்சவியலென வென்பது பொது வியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியலென்று கூறும் படிக்கு என்றவாறு. இவற்றுள், இயல் என்பதனை நான்கினுங்கூட்டி அணி என்பதனைப் பொருண்முத லிரண்டினுங் கூட்டியுரைக்க.

சதுர்பெற.................சார்பெனலாய் என்பது நால்வகைபெற்றுச் செய்யுளிடம் வழக்கிடமென்னு மீரிடந்தழுவின சார்புநூலென்பதாக வென்றவாறு.

காரிதந்தருள்.....................உரைத்தனன் என்பது அந்நூற்குக் காரியா ருலகின்மன்னுயிர்க ளீடேறப் பெற்றருள்செய்த நூற்கடவி னியற்பெயரால் மாறனலங்கார மென வத் திருநாமத்தினை யவ்வணிக் கணியாகவே யலங்கரித்து ஞானாசாரியர் குழீஇயதாம் அவையின்கண் ணரங்கேற்றினன் என்றவாறு.

சிற்குணச் சீநிவாதன்.....................உணர்வோன் என்பது அவன் யாரெனில், சாத்துவிககுணத்தையுடைய சீநிவாதனென்னும் ஞானா சாரிய னினியகருணையால் நன்பொருளாகிய சித் தசித் தீச்சுரமென்னும் மூன்றினையும் உணர்த்தும் ஞான நூல்களை நாடோறும் பேரானந்த மிகும்படி யாராய்வோன் என்றவாறு. "வேண்டியகல்வியாண்டுமூன் றிறவா" தென்பதனால் உணர்வோனென நிகழ்வு மெதிர்வும் பெறக் கூறினா ரென்றறிக.

பெருநிலம்.................வருமனகன் என்பது பெரியவுலகினிடத் துடர்ந்தோர் கீர்த்திக்குந் திருக்குருகைப்பெருமாள் பெற்றருளும் அழுக் கற்றவன் ; புண்ணியன். என்றவாறு.

செழுந்தேன், மருக்கமழ்சீரகத்தார் வணிகன் என்பது வளமையை யுடைய தேனினது பரிமளம் பரிமளிக்குஞ் சீரகத்தார்புனைந்த வணிகர் குலத்துள்ளான் என்றவாறு.

புகழ்த் திருக்குருகைப்பெருமாள்கவிராயன் என்பது கீர்த்தியை யுடைய திருக்குருகைப்பெருமாள்கவிராயனென்னுஞ் சிறப்புப்பெயரை யுடையோன் என்றவாறு.

அருட்குணத்துடன்வளர்சடையன் என்பது கருணைக்குணத் துடன் வளராநின்ற சடையன் என்னு மியற்பெயருடையோன் என்ப தாம்.

பொருட்டொடர் நவம்புணர் புலமையோன் என்பது பெருங் காப்பியம் புதிதாகப் பாடல்சான்ற அறிவின்றன்மையையுடையோன் என்றவாறு. ஏகார மீற்றசை.

வடக்கின்கண் வேங்கடமுந் தெற்கின்கட் குமரியுமென்னக் கூறப் படுவனவா மவற்றினடுவிருந்து தமிழை யாராயு முணர்வுடையோர் நன்குமதிக்குந் தெண்டிமுதனூலணியொடும் புலவர் புணர்த்துவழங்கு மணியையுந் தனது நுண்ணுணர்வாற் கண்டளித்த பலவணியையுங் கற்றோர்மனத்துட்கொளத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் நால்வகை யியலா னிரிடம்பொருந்தின சார்புநூலென்பதாகவும், அந்நூற்குக் காரி யார்பெற்றருள் கலைக்கடலியற்பெயரை யணியாகப் புனைந் தாரியர்சூழிஇய வவையின்க ணரங்கேற்றினன்; அவன் யாரெனிற் சிற்குணச் சிறிவாதனின்னருளால் நற்பொருண் மூன்றையு மாராய்வோன் திருக் குருகைப்பெருமாள்கவிராயன் சடையன் பொருட்டொடர்நவம்புணர் புலமையோ னென்க.

அஃதாக முன்னர்ச் சிறப்புப்பாயிரம் பதினொருவகைப்படுமெனக் கூறிய வப்பதினொன்றும் இப்பாயிரத்துட்பெற்றவா றெங்ஙனேயோ வெனின்? வடவேங்கடந் தென்குமரியெனவே எல்லையும், முதனூலணி யொடு மெனவே வழியும் நுதலிய பொருளும், தனது நுண்ணுணர்வாற் றருபல வணியையு மெனவே காரணமும், பயனும், பொதுவியல் பொருள்சொல் லணியெச்ச வியலென வெனவே யாப்பும், காரிபெற்றருள் கலைக்கடலியற்பெயர்புனைந் தெனவே நூற்பெயரும், ஆரியர் சூழ்இய வவைக்களத்துரைத்தன னெனவே கேட்டோரும், களனுங் குருகைப்பெருமாள்கவிராயன் சடையனெனவே நூல்செய்தோன்பெயரும், காலமும் ஆகப் பதினொன்றும் இப்பாயிரத்துள்ளே பெற்றவாறு காண்க. அன்றியும், நூல்செய்தோன் வழிபடுதெய்வமும் தெய்வத்தினதுவே பாத்துவமென்ன வறிவித்த ஞானாசிரியனும், நூல்செய்தோன்பிதாவும், குலனும், பதியும் கூட்டிப் பதினாறென்னுமவையும் இப்பாயிரத்துட் பெற்றவாறு காண்க.

இஃது இருபத்தாறடியான் வந்த நேரிசையாசிரியப்பா. என்னை? "ஈற் றயலடியேயாசிரியமருங்கிற், றோற்றமுச்சீர்த்தாகுமென்ப" என்றாராக

வின். இவ்வாசிரியப்பா முதலீரடியையுங் குறள்வெண்செந்துறை யாக்குதலாற் சொல்லணியுட் சித்திரப்பாவினுட் பிறிதுபடுபாட்டாயது.

64\. பாவிற்கணிபோற்பனுவற்றெளிவுணர்ந்தோர்
நாவிற்குவாய்மைபோனூரணனூந்—தேவிற்கு
வாய்ந்தவருள்போலவாய்ந்ததேநூலகத்தா
யேய்ந்தபொருட்பாயிரம்.

(எ-ன்) சிறப்புப்பாயிரத்தினது சிறப்பிற் குவமையுணர்த்து.

இதனுள், வாய்மை - சத்தியவசனம். கற்றகல்வியைப் பிறர்க்குச் செலச்சொல்லுதலுமாம். நூலகத்தா யேய்ந்தபொருட்பாயிரம் என்பதனாற் சிறப்புப்பாயிரம். நூலகத்தா யேய்ந்தபொருள் புலவன்கூறிய வவ்வவநூலுக்குச் சிறந்தபொருள்களா மெனவுணர்க. (சுச)

பாயிரவுரை முற்றும்.

---

தருகாளமேகக்கவிராயராயன்சடையனன்பாற்
குருகாபுரேசர்புனையலங்காரங்குவலயத்தே
கருகாதசெஞ்சொலுரைவிரித்தான்கற்பகாடவிபோல்
வருகாசிரத்னகவிராயுங்பேரைவரோதயனே.



ஸ்ரீ

# மாறனலங்காரம்

## முதலாவது

## பொதுவியலுரை.



65. திருப்பாவையென்னத்திருந்தியற்பாத்தந்த
திருப்பாவைவில்லிபுத்தூர்ச்செல்வி—யருட்பார்வை
வாய்ந்ததனாற்செய்யுள்வழக்கென்றிரண்டிடத்தா
லாய்ந்துரைப்பல்செய்யுளணி.

என்பது சூத்திரம். இவ் வதிகார மென்னுதலிய வெடுத்துக்கொள்ளப் பட்டதோவெனின், அதிகார நுதலியதூஉ முன்னர்க்கூறிப்போந்த சிறப்புப்பாயிரத்தானே யுணரப்படும். என்னை? "தனாது நுண்ணுணர் வாற்றருபலவணியையும்" என்பதனானுணர்க. ஆயின், இவ் வணி யதிகாரத்து ளணியிலக்கண மெனைவகையோத்தினானுணர்த்தினாரோ வெனின், இனைவகையோத்தினானுணர்த்தினா ரென்பதூஉம் அச்சிறப்புப் பாயிரத்தானே விளங்கும். என்னை? "பொதுவியல்பொருள்சொல்லணி யெச்சவியலென" எனக்கூறியதனானுணர்க. அஃதாக, இவ் வதிகாரத்தின் முதற்கணோத்தினைப் பொதுவிய லென்ற தென்னையெனின், அணி பெறுஞ் செய்யுள்கட்கும், பொதுவான வொருசாரணிகட்கும் பொது விலக்கண முணர்த்தினமையாற் பொதுவியலென்னும் பெயர்த்தாயிற்று. இவ்வோத்தினு ளிச்சூத்திர மென்னுதலிற்றோவெனின், ஒருசாராசிரியர் வேண்டுஞ் சிறப்புப்பாயிர முணர்-ற்று. என்னை? "தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளு, மெய்தவுரைப்பதுந்தற்சிறப்பாகும்." என முன்னை யோர்கூறிய முறையானும், "கடவுள்வணக்கமுங்கருதியபொருளும், இடையுறப்புகல்வதுஞ்சிறப்பென்றாகும்." என இந்நூலுடையாருங் கூறிய முறையானு முணர்க. உண்மை இறந்ததுதழீஇயிற்று. அன்னவாறுத

விச்சூத்திரத்திற்குப் பொருளுரைப்பவே விளங்கும். ஆனா லிச் சூத்திரச் சொற்பொருள் யாதோவெனின், அப் பொருளுரை நான்குவகைப்படும்; கருத்துரைத்தலும், கண்ணழித்துரைத்தலும், பொழிப்புத்திரட்டலும், அகலங்கூறலும் என. என்னை ? "உட்கோள்கண்ணழிப்புடன்பொழிப் பகலஞ், சுட்டிக்கூறல்சூத்திரச்சொற்றுரை" எனவரும். அவற்றுள்ளும், கருத் துரைத்தலாவது சூத்திரத்தி னுட்கோளுரைத்தல். என்னை ? "கருத்துரைசூத்திரத்துட்கோள்கழறல்" எனவும், கண்ணழித் துரைத்தலாவது சூத்திரத்திற் சொற்றொறுஞ் சொற்பொருளுரைத்தல். என்னை ? "தொகுத்தசொற்றொறுஞ்சொற்பொருளுணர்த்த, லடுத்த கண்ணழிப்பென்பர்கற்றவரே" எனவும், பொழிப்புத்திரட்டலாவது சூத்திரத்திற் பொருளையெல்லாந் தொகுத்துரைத்தல். என்னை ? "ஒலி கெழுசொற்பொருள்களைத்தொகுத்தொருங்கே, பொலிவுறத் திரட்டி யுரைப்பதுபொழிப்பே" எனவும், அகலமாவது சூத்திரத்திற் பொருளைச் செம்மைசெய்தற்குக் கடாவும் விடையு முள்ளுறுத்தி விரித்தல். என்னை? "மறைதுறப்யாப்பின்மரீஇயசொற்பொருளை, வினாவினும்விடையினும் விழுப்பொருளாக்கி, யகற்றுபுவிரித்துரைப்பதுவேயகலம்" எனவும் இந் நூலுடையார் கூறிய சூத்திரங்களானு முணர்க.

இவ்வகையெல்லா மிச்சூத்திரத்தினுட் பெறுமுறை யெங்ஙனேயோ வெனின், "திருப்பாவை...............யருட்பார்வைவாய்ந்தனு" லெனவே கடவுள்வணக்கஞ் சொன்னவாறு. "செய்யுளணி" யெனவே அதிகா ரத்துட் கருதியது சொன்னவாறு. அதிகாரம்—முறைமை. இதனாற் கருத்துரை முற்கூறப்பட்டது.

இனிக் கண்ணழித்துரைக்குமாறு:—திருப்பாவையென்ன வென்பது அழகையுடைய நோன்பென்று சொல்லுவதாக என்றவாறு. திருந்தியப் பாத்தந்த வென்பது நிரம்பிய இலக்கணத்தையுடைய பாட்டை யுலக மீடேறப் பாடித்தந்த என்றவாறு. திருப்பாவை வில்லிபுத்தூர்ச்செல்வி யென்பது திருப்பாவையென்னுந் திருநாமத்தையுடைய ஸ்ரீவில்லி புத்தூர்த் திருவுடையாள் என்றவாறு. அருட்பார்வை வாய்ந்தனு லென்பது அவளது கருணையோடுங் கூடிய திருக்கண்ணோக்கம் எனக்கே பலித்ததனுல் என்றவாறு. செய்யுள் வழக்கென் றிரண்டிடத்தா லென்

பது செய்யுளென்றும், வழக்கென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டிடங்களானு மென்றவாறு. ஆய்ந்துரைப்பல் செய்யுளணி யென்பது (செய்யுளணி யாய்ந்துரைப்பலெனப் பாடமாற்றி) முன்னோர்கூறிய செய்யுளிடனாகத் தோன்று மணியிலக்கணங்களை யாராய்ந்துகூறுவ லென்றவாறு.

அணியென்ப தீண் டணியிலக்கணங்களை. செய்யுட் கழகு கொடுத்தலின் அணியென்றாயிற்று.

இனிப் பொழிப்புத்திரட்டுமாறு:—அழகையுடைய நோன்பென்று சொல்லுவதாக நிரம்பிய இலக்கணத்தையுடைய பாட்டை யுலக மீடேறப் பாடித்தந்த திருப்பாவையென்னுந் திருநாமத்தையுடைய ஸ்ரீவில்லிபுத்தூர்த் திருவுடையாளது பரம கருணையோடுங் கூடிய திருக்கண்ணோக்கஞ் சிறிது மறிவிலனா மெனக்கே பலித்ததனாற் செய்யுளென்றும் வழக்கென்றுங் கூறிய விரண்டிடங்களானு முன்னோர்கூறிய செய்யுளிடனாகத் தோன்று மணியிலக்கணங்களை யாராய்ந்துகூறுவ லென்றவாறு.

இனி, அகலமாவது விரித்துரையாதலால் இதற்கும் விரித்துரை யீண்டுக்கூறின் உரைபெருகுமாதலா லதனை யுள்ளுறுத் தாய்த் துணர்ந்துகொள்க. அஃதாக; முன்னோர்கூறிய இலக்கணநூல்களெனை வகையோத்தினானுணர்த்தினரெனினு முற்று மொருபாவினாற் கூறவும், இந்நூலுடையார் பொதுவியலொன்றையும் வெண்பாவாற்கூறி யேனையியல்கண் மூன்றினையும் ஆசிரியத்தாற்கூறிய தென்னையோவெனின், நன்றுசொன்னாய்! இக் கடாவிற்கு, எதிரதுபோற்றலென்னு மூத்தியாற் பாயிரத்துள், “விதியாச்செய்யுளின்மிகுத்திலக்கணமு, மதியாலுரைத்தலும் வழங்கன்ஞாபகமா” எனக்கூறிய சூத்திரத்தா லுணர்க. (க)

66\. வெண்பாவகவல்விரிகலிப்பாவஞ்சிப்பா
பண்பார்மருட்பாபரிபாட—லொண்பா
வினமென்றுலித்திரண்டாறீராறவாய்ச்சென்
றனமூந்து நூல்கற்றது.

(எ-ன்) முன்னர்ச் செய்யுளிடனாகத் தோன்று மணியிலக்கண முணரப்பலென்றார்; செய்யுளுணர்ந்தே அணி யுணரப்படுமாகலான், அணிபெறுஞ்செய்யுளின் பெயரும், முறையும், தொகையு முணர்-ற்று.

(இ-ள்) 'செய்யுளெனத் தொகையா னொன்றாய்நின்ற அது, வெண்பா அகவல் என வகைவகையானிறை யிரண்டாய் அவற்றின் மரபு மிக்க கலி, வஞ்சி, மருட்பா, பரிபாடல் என நான்கினோடும் விரிவகை யறை யாறாய்ச் செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் என்ற வோசை யுடைத்தாய் விரியொடுநின்ற வாறனுள் வெண்பா முதலாய நான்கென்னு மொள்ளிய பா இன மெனப் பன்னிரண்டாய் முந்துநூல் கூறப்பட்டு நிகழ்ந்தன வென்றவாறு.

ஏன்றென்பது எண்ணிடைச்சொல். அதனைப் பா, பாவின மென்னு மெல்லாவற்றிலும் பிரித் தேற்றுக. என்னை? "என்று மெனவு மொடுவு மொரோவழி, நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்" என்ப வாகலின். அது "வினைபகையென்றிரண்டி னெச்ச" மென்பதுபோலக் கொள்க. இரண்டாறீராறென்பன நிரனிறை ஆமென்ப திறுதிவிளக்கா யீண் டாக்கத்தினைக் காட்டியது. ஒலித்தாவென்ப துடைமைவினைக் குறிப்பு. "மருட்பாவேனையிருசாரல்லது, தானிது வென்னுந்தனிநிலை யின்றே" என்பதனால் அதற்குச் செப்பலும் அகவலுங் கொள்க. "பரி பாடல்லேதொகைநிலைவிரிபி, னிது பாவென்னுமியனெறியின்றிப், பொது வாய்நிற்றற்குரித்தெனமொழிப" என்பதனால் அதற்கு முழுது மிசையாய்க்கொள்க இப்பெயர் பெயர்; இம்முறை முறை; இத்தொகை தொகை எனக்கொள்க. இவற்றுள் வெண்பா முதல்வைத்தது தலை தடுமாற்றமெனினு மாம். ஆயின் முதலே யணியிலக்கணங் கூறுவ லெனப்புகுந் தீண்டுச் செய்யுளிலக்கணங்கூறிய முறையான் மற்றொன்று விரித்தலென்னுங் குற்றமாமெனின, ஆகாது. என்னை? எழுத் தசை சீர் தளை யடி தொடை யென்னு மாறுறுப்பினதிலக்கணங்களைக் கூறி யவற்றானுப பாவினைத் தளையானும், அடியானும், தொடையானும், ஓசையானும், பொருளானும் வேறுபட்டமைகூறி யினங்களையு மவ் வகையே கூறு திவ ணீண்டைக்கே வேண்டுஞ் செய்யுட்களது தொகை வகைமாத்திரமே கூறினமையா னெனக் கொள்க. (உ)

67. ஆற்றலணிக்கண்ணவைமுத்தகங்குளகந்
தோற்றந்தொகையேதொடர்நிலையென் —றேற்புடைய

வென்றுமவற்றுளெழுவாய்தனிநின்று
சென்றுபொருண்முற்றுந்திடன்.

(எ-ன்) இதுவும் அங்ஙனம் விரிந்தபாக்க ளணிபெறுதற்பொருட்டுச் சிறப்பிலக்கணத்தா லவற்றிற்கு மீட்டு மொருவகைப் பெயரு முறையுந் தொகையு முணர்-ற்று.

(இ-ள்) வகையினும் விரியினுங்கூடி யிரண்டா றீராறென்னுஞ் செய்யுட்களாகிய வவை பெருமையுடைய வணியிலக்கணங்களிடத்து முத்தகம், குளகம், தொகைநிலை, தொடர்நிலையெனச் செய்யு ணான்காகப் பொருணோக்கத்தாற் றொகைபெற்று எக்காலத்திற்கும் பொருந்துத லுடையனவாம். அந்நான்கனுள் ஆதியாகிய முத்தகச்செய்யு ளொன்றாக நின்று திடனாகச்சென்று புலவன் குறிக்கப்பட்ட பொருளைப் பயந்து முற்றுப்பெறு மென்றவாறு. இவற்றுள் முத்தகம், குளகம் என்பன வடமொழிப்பெயர். ஏனையவிரண்டுந் தமிழ்மொழிப்பெயர். அவை யங்ஙனமாமாறு மேலறியப்பெறும். நிலையென்பதனை யிரண்டிடத்துங் கூட்டியுரைக்க. ஆற்றல்-பெருமை. தோற்றுதல்-உண்டாதல். சென்றென்பதனாற் செய்யுளின்கண் ணிகழ்ந்த சொற்பொருளொடு முற்றாது எஞ்சிநின்ற சொல்லேயாயினும் பொருளேயாயினும் கொணர்ந்து முற்றுவிக்க முற்றுமென்பதூஉங் கொள்க. எழுவாயென்ப தீண் டிடத்தானாகிய ஆகுபெயர். இச்சூத்திரப் பொருள்கோள் மொழிமாற்றெனக் கொள்க.

இனி முத்தகச்செய்யுட் குதாரணம் வருமாறு:—

பொன்னகர்புகுந்தயாணர்ப்புத்தமிர்தம்
பின்னொருநிலத்துப்பிறிதொருபடிவத்
தொருபகலுறைவதன்றெனவுலகுரைசெய
வருள்புரிகடவுளாணையின்வேட்டமுற்
றிகல்புரிவிலங்கினினந்தொலைத்ததற்பி
னகநகர்புரப்பேனயர்வுயிர்த்தற்குப்
பொலந்தகட்டுருளிப்புரவியூர்தியின்
வலம்பயில்பாகன்வரவுநீஇப்புறநகர்த்
தண்ணிழனாடினன்சார்வுழிமனனே

பெண்ணியல்பெருக்கியப்பேரமிர்தெதிர்தலும்
யாவதிவ்வுருவென விடைவிடாதுயவலுங்
காவகத்திஃதொருகனிலைக்களனென்
றுண்ணிகழுழுவலன்புடனின்றாட்டக்
கண்ணபந்தனவாய்க்காழுறக்காண்டொறும்
புகுமுகம்புரிதலிற்புணர்ச்சிமேற்கொளத்
தொகுபதிறனென்றுந்தொடர்பிற்றோற்றி
யொளியுமூறுமுரிசையும்வாசமுங்
களியதாய்மிழற்றோசையுமைம்பொறி
யேககாலத்திலவிதமொன்றினுண்
டாகயாவருமனுகாதமைநலன்
வண்டுமூசநெகிழ்ந்துமணமலிசெவ்வித்
தண்டுழாயாங்கன்றடந்துறைப்பொன்னித்
திரைவான்றெறிதித்திலத்திரணிலவெழும்
விரைமலர்பாப்பிமெல்லணைவிரிபுன்னையி
னேந்தெழிற்சினைகவியெழினியுள்
வாய்ந்தருண்மறையார்மனக்கொள்பவரே. (1)

என்பது இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தவழித் தலைமகளிவனெக் குலத்தான்கொல்! எவ்விடத்தான்கொல்! இன்னுமிப்புணர்ச்சிகூடுங் கொல்! இவனென்னிடத் தன்புடையான்கொல்! எனக் கூற்றுலையுற் றுரையாளாயினுங் குறிப்பாலையநிகழும்; அவற்றைத் தலைமகனுளத்தா னுட்கொண்டு நால்வகையையுந்தீரக் கூறியது.

(இ-ள்) பொன்னகர்.................................உரைசெய-மனனே சுவர்க்கத்துட் குடிபுகுந்த அழகிய புதிய அமிர்தங் குடிபுகுந்தபின்னர்ப் பொன்மயமல்லாத மற்றொருநிலத்தின்கட் சலமயமல்லாத மற்றொரு வடிவெடுத் தொருகணப்பொழுதுந் தங்குவதன்றென் றுயர்ந்தோர் கூறுநிற்பவும்; அப்பேரமிர்து-அப் பெருமையையுடைய வமிர்தம்; அகநகர் புரப்பேன்-அகநகரின்கண் ணிருந் துலகினைப் புரக்கு மாசுரிமையுடையேன்; அருள்புரிகடவுளாணையின்.........................தொலைத்ததற்பின்-என்னிடத் தினியகருணையைச்செய்யும் பால்வரைதெய்வத்தினைவலான் வேட்டைமேன் மனம்வைத் துலகத்துயிர்கட்கு மாறுபாடிழைக்கும்

ஆளி முதலிய விலங்கின்கூட்டத்தைக் குறைத்தபின்னர் ; அயர்வுயிர்த்தற்கு..........சார்வுழி—அவற்றைத் தொடர்ந் தோடி யாடின வருத்தம் போக்குதற்குப் பொற்றகடுபொதிந்த நேமியையுடைய குதிரைபூண்ட தேரோடும் வென்றி விட்டுநீங்காத பாகன் சுவடுபார்த்துவருவனென வுட்கொண்டு புறநகர்ப்பொதும்பர்க் குளிர்ந்தநிழலைநோக்கி யணுகின காலத்து ; பெண்ணியல் * பெருக்கி யெதிர்தலும்—பெண்ணின திலக்கணத்தைத் தனதாகப் பெருப்பித் தெனதெதிர்நிற்ப ; யாவதிவ்வுருவென...............காண்டொறும்—மலர்மகள் முதலாயினோருருவினுள் யாதுதா னிவ்வுருவமென நின்றெண்ணங்கூடி நீக்கமின்றி யுசாவாநிற்ப வுள்ளேநிகழு மெழுமையுந் தொடர்ந்தவன்பு பால்வரைகடவுளினனுடன்கூடி யிக்காவகத் திவ்வுருவ மலர்மகண்முதலாயோர் காந்திகளெல்லாந் திரண் டேகமாகக் குடியிருப்பதோ ரிடவகைதானென் றுணர்வினு ளொன்றவிப்ப வந்நிலையே கண்க ளிவ்வுருவினை விருப்புற்றுட்கொண்ட விருப்பமிகையானே நோக்குந்தொறும் ; புகுமுகம்புரிதலின் ..................அமைநலன்—எனது நோக்கிடமாகப் புகுந்து தன்கண் விரும்பிநோக்குதலால் யான் புணர்ச்சிமேன் மனம்வைப்பப் புகுமுகம் புரிந்தபின் பொருளிலக்கணந் திரட்டியுரைத்த பொறிநுதல்வெயர்த்தன் முதலிருகையுமெடுத்த வீறுய பதினொருமெய்ப்பாடு மொன்றன்பின் னொன்று தொடர்புடைத்தாகத் தோற்றிக் கண்டுற் றுண் டுயிர்த்தலாகிய நான்கோடு மென்மேல்வைத்த கருணையுடைத்தாய் மிழற்றுமோசையுமெனக் கேட்பதுமாக வைம்புலன்களையு மென வைம்பொறிகளும் ஒருகாலத் திலவமலர்போன்ற வதரமொன்றின்கண் ணுகர்ந் தாக்கமெய்த விருதலையினும் வழிபடும் யாவரு மனுகாதபடிக் கேகாந்தமாக முழுத்த வின்பத்தை ; வண்டிமிழா...............பொன்னி—சுரும்புக ளாறுதாளிறுனூந் துவைப்ப முகைவிண்டு பரிமளத்தை மிகுப்பதாங் குளிர்ந்த துளபமாலிகையையுடைய அரங்கேசனது தடந்துறைவாய்ந்த திருக்காவிரியினிடத்து ; திரைவரன்றெறி ................ .......வாய்ந்தருண்மறை — பெரிய திருமுகத்துறைத்திரைகள் கொழித்தெறியுந் தாளத் திரணில விருளைத்துரந்து நிமிராநிற்பப் பரிமளப்பூவாகிய மெல்லிய அணையைவிரிக்கும் புன்னையின்கீ ழுயர்ந்த வழகொடுந் தாழ்ந்தகிளைகளாகிய திரையினுட் டோன்றி யளித்த விராசியத்தை ; யார் மனக்கொள்புலவரே—யாமேயறிவதல்ல துலகத்துள் யாவ ரறிவரென்றவாறு.

இதனுள்; காடினனென்பது 'வினையெஞ்சுகிளவியும்வேறுபல்குறிய' என்பதனால் வினையெச்சத் தனித்தன்மைத் தெரிநிலைமுற்று. சார்வுழி என்பது கொள்வுழி, செல்வுழி என்பனபோல ஒற்றீற்று வகர வுடம்படு மெய் வந்தது. உயவல்—உசாவல்; "யாஞெண்றுயவுகோவையசிறிது" என்பதனா லறிக. யாவர்மனக்கொள்பவரென்பது யாரென வகரங் கெட்டது. யாதிவ்வுரு என்பது யாவ திவ்வுருவென வகர மிருந்தது. என்னை? "பலரறிசொன்முன்யாவரென்னும், பெயரிடைவகரங்கெடுதலு மேனை, யொன்றறிசொன்முன்யாதென்வினுவிடை, யொன்றியவகரம் வருதலுமிரண்டு, மருவின்பாத்தியிற்றிரியுமன் பயின்றே"என்றாராகலின். அப்போமிர்து என்பது "வினையெஞ்சுகிளவியு முவமக்கிளவியு, மெனவெ னெச்சமுஞ்சுட்டினிறுதியு, மாங்கவென்னுமுரையசைக்கிளவியும், ஞாங் கர்க்கிளந்தவல்லெழுத்துமிகுமே" என்பதனால் வல்லொற்று மிகுந்தது. இச்செய்யுளின்கண் ணகநகர்புரப்பேனெனவே யா னரசனென்னுங் குலனும், புறநகர்சார்வுழியெனவே "ஒன்றேவேறேயென்றிருபால்வயி" னென்பதனால் ஒரு நகருள் அகநகரும் புறநகரும் என்னு மிடமும், உண்ணிகழுழுவலன்புடனின்றாட்ட வெனவே உழுவலன்பாற் பண்டும் பயின்று வருகின்ற நட்பு இப் பிறப்பினுங் கூடிற்று; இதுபோல இன்னு மிடையிடையே கூட்டநிகழு மென்பதூஉம், அப் போமிர்து பெண்ணியல் பெருக்கி யெனவே நலம்பாராட்டலா லவன் தன்மே லன் புடையா னென்பதூஉந் தலைமக னுட்கொண்டுணரு மென்பதாம். இதனுள், பொன்மயமல்லாத சலமயமல்லாத என்பன முதலாய யாமே யறிவதல்ல தென்பதிறுப சொல்லெச்சங்களும், தலைவியுள்ளக்குறிப்பைக் குறித்தானென்னுங் குறிப்பெச்சமும் எஞ்சிநின்று விரிந்து முடிந்த வாறுங் கண்டுகொள்க. இச் செய்யுள் "அகன்றபொருள்கிடப்பினு மணுகியநிலையினு, மாட்டெனமொழிபபாட்டியல்வழக்கின்" என்பதனால் மாட்டென்னு முறைப்பாற் பொருள்கோள் நிகழ்ந்தவாறுங் காண்க. இது மருதநிலத்தலைமகன் பாலதாணையின் ஆயத்தைநீங்கிய மருதநிலப் புறநகர்த்தலைவியை யெதிர்ப்பட்டுக்கூடிய களவொழுக்கக் கந்திருவம். என்னை? "முதலொடும்புணர்ந்தயாழோர்மேன, தவலருஞ்சிறப்பினோர் நிலம்பெறுமே" என்றாராகலின். இனிவருஞ் செய்யுட்கு மிவ்வாறு

விரித்துரையெழுதாததற்குஞ் சொற்றொறும் பொரு ளுய்த்துணர்ந்து கொள்க. பகுதி—இயற்கை. துறை—புணர்ச்சிமகிழ்தல்.

முயற்சியொன் றின்றுய்நெருநன் முழுநல
னியற்றியதெய்வதமிறவாதி ருப்பதொன்
றென்றுணர்ந்து முப்புறினின் றுமாங்கெதிர்தன்
மன்றவென் றுறுதலின் மடந்தையர்குழாமொரீஇ
மடந்தபமாணிழைவண்ணிணைரம்பா
விடந்தலைப்பாட்டினெய்தின்பநன் பனுவலைத்
தேரின்பத்தை புஞ்சிறிது நில்லாதே
பேரின்பமதாய்ப்பெருகவுமன்றே
சிற்றின்பமெனத்தீர்ந்தனராகிச்
சொற்றமிழ்மாறனைத்து திக்குமெய்த்தொண்டர்
பற்றறுத் துணர்த்தியபாசுர
முற்றிடிலாசங்கையதாமொன்றே (2)

என்பது இடந்தலைப்பாட்டின்கூட்டத்திறுதிக்கட் டலைமகன் சொல் லியது.

(இ-ள்) மனனே! நம்மிடத்து முயற்சி சிறிதுமில்லையாகவும் நெரு நற்று நமக்குப் பெருத்தவின்பத்தை யுண்டாக்கித்தந்த தெய்வமான தென்று மிறவாதிருப்பதொன்றுமென்றறிந் தினி நாஞ் சிறிது முயற்சி யுறி னின்று ம த் தி ரு வு ரு முதனுட்கண்டவிடத் தெதிர்தல் சந்தய மில்லையென் றியா முறுதலோடு மிகுளையர்குழாத்தைவிட்டுநீங்கி நம் மிடத்துவைத்த வேட்கையாற் றன்னிடத்தொன்றிய மடமைபுந் தன்னை விட்டுநீங்க மாட்சிமைப்பட்ட அணிகளோடுங் க டை குழ ன் று பூங் கொத்துச்செறிந்த கு ழ லி னை யு டை யா ணம்வரவுபார்த்துநின்ற விடத்துத் தலைப்படுதலாலெய்திய வின்பமானது, நன்பனுவல்களை யா ராய்ந்து நமதுண்ணின்றவின்பத்தைச் சிறிது நிலைபெறாதே பெயர்க்கப் பட்டதா யவ்வின்பநின்றவிடங்கொண் டாராவின்பமாகப் பெருகாநிற்ப இதனைச் சிறியதாகிய வின்பமென விட்டுநீங்கினாராகிச் செஞ்சொற்

றமிழாகிய திருவாய்மொழிபாடிய காரிமாறப்பிரானை வாழ்த்து மூண் மைத்தொண்ட ரிவ்வுலகத்து மகளிரிடத்தெய்து மின்பத்தின்மேல் வைத்த வாசையைவிட்டுப் பரமபதத்தின்பமே தெவிட்டாதவின்பமென முன்னமுணர்த்திய முதுமொழி யிதுபொழுது விசாரிக்கிற் சந்தயமாக தோன் றென்றவாறு.

மனனே என்பது தோன்றுவெழுவாய். நின்றவென்பது முதலாய சொல்லெச்சங்களையு மாங்காங்கு வருவித்துக்கொள்க. மன்—ஆக்கம் ஓ—அசை. பகுதி—இடந்தலை. துன்ற—இதுவும் புணர்ச்சிமகிழ்தல்.

முதல்வனிற்பெறுநூன்முதற்றுயெனலாய்ப்
புதல்வனிற்பிறந்தவழிநூற்பொழிப்புரை
செலச்சொலுங்குரவனிற்றெளிந்தோர்தமக்கவ்
விலக்கணவிலக்கியமீந்தவின்பத்தினு
நயப்படவிரித்துரைநடைதாந்தமது
முயற்சியினுணர்வுழிமுன்னுமின்பத்தினு
முணராநுட்பமுமெச்சமுமொருபுடைப்
புணர்மாணுக்கரிற்புலப்படுமவர்பா
லெய்தியதெவிட்டாவின்பமொன்றெனலாம்
பொய்கையுட்காரமொடுபொருதுனைந்தழைத்த
கடமலைக்குதவியகண்ணன்
வடமலைமடவரல்வாய்ந்தருணலனே. (

என்பது பாங்கற்கூட்டத்திறுதிக்கட் டலைமகன் புணர்ச்சிமகிழ்த

(இ-ள்) மனனே ! முதல்வனு லமைத்தருளப்பட்ட மூந்துநூ நற்றுயாக அதற் கொரு புதல்வனைப்போலப் புலவராலமைக்கப்பட்டெ டான வழிநூலின்பொழிப்புரை முதலே கேட்போ ருணர்வுட்கொள்ள புகலுங் குரவனுற் றெளியப்பட்டோர்க் கவ் விலக்கண விலக்கியங்க புரந்தவின்பத்தினும் நன்குமதிப்பதாக வந்நூல்கட் காசிரியர் விரி துரைப்பதாய வுரையினது ஒழுக்கத்தை யவ்வுரைகோளாளர் தமது வுடன் முயற்சியாலுணர்ந்தவிடத்துண்டான இன்பத்தினும் நூல ளிடத் துணரப்படாத வரும்பதநுட்பமும் எச்சமும் தம்மொடு கற் லொருபுடைமாணுக்கராலாராய்ந் ததிவிற்புலப்பட்ட வவர்பா லெய்தி

தெவிட்டாவின்பம்போலு மொன்றெனலாம், பொற்றாமரையோடையி னிடத்துக் காரமொடுபொருது நொந்தழைத்த கடாத்தொடுகூடிய மலைபோன்றயானைக் கதனுயிர்பிழைப்பான் சென்றுதவிய கண்ணனது வடக்கின்கண் வேங்கடவெற்பினிடத்து மடவால் தோன்றிநின்றருளிய பேரின்ப மென்றவாறு.

மனனே என்பது தோன்றுவெழுவாய். இதனுள், பொழிப்புரை குரவனிற் றெளிந்தோர்க் கந்நூல்களீந்த வின்பத்தினும் என்பது முயற்சியின்றி யியற்கையிற் றெய்வத்திற்கூடிய இன்பமதாம். விரித்துரை தாந் தம் முயற்சியாலுணர்வுழி முன்னுமின்பத்தினு மென்பது சிறிதுமுயற்சியா னிடந்தலைப்பாட்டினெய்திய வின்பத்தினு மென்ப தாம். நட்பமு மெச்சமு மொருபுடைமாணாக்கரி னுணர்ந்தவிடத் தெய்திய தெவிட்டாவின்பமொன்றெனலா மென்பது பாங்கனாற்கூடிய கூட்டத் தெய்திய வின்பமென்பதாம். இவை குறிப்புவமை.

குலனுந்தொன்மையுங்குணனுந்திருவு
நலனும்பருவமுமுருவமுநயந்தோ
ரறம்புரிகொள்கையோடளவளாய்வாழ்நாட்
டிறம்பாக்கற்புடைச்சேயிழைவயிற்றிற்
கருப்பம்வந்தடியிடக்கண்டகண்மலரால்
விருப்பமுற்றதனினுமேம்படுநிலத்துறப்
பிறந்தநன்புதல்வர்பிடுடைமுகமலர்
சிறந்தவர்காண்டொறுஞ்செறிபேருவகை
யாங்கவற்றினுமிகுமரும்புமென்மழலை
யோங்கியசெவிப்புலத்துறவருமுவகை
யுவகையிற்கழிந்தபேருவகையதாகு
மவமதிப்பின்றியேழாண்டமைவெய்தலும்
பொற்புடைக்குரவர்தம்பொன்னடிவணங்குபு
கற்பனயாவையுங்கசடறக்கற்றபின்
கல்வியுங்கவியுங்கவின்பெறச்செலச்சொலு
மெல்லையிற்றாதையின்புமனும்பொருவரும்
பூதலம்புகழப்பொலிந்துநின்றருளிய
சீதரன்குருகாபுரேசன்சிலம்பின்

மதுமலர்ச்சோலையுண்மடவால்
புதுவதுபுதுவதாய்ப்புரிந்தருணலனே. (4)

என்பது பாங்கியிற்கூட்டத் திறுதிக்கட் டலைமகன் கூறியது.

இதனுள், கருப்பம்வந்தடிபிடக்கண்டகண்மலரால் விருப்பமுற்றது என்பது இயற்கையிற்கூடிய வின்பவிருப்பத்தை. அதனினு மேம் படும் புதல்வர்பிடைமுகமலர் சிறந்தவர்காண்டொறுஞ் செறிபேரு வகை என்பது இடந்தலைப்பாட்டிற்கூடிய வின்பமகிழ்ச்சியை. ஆங் கவற்றினுமிகு மழலை யோங்கியசெவிப்புலத் துறவருமுவகை யென்பது பாங்கற்கூட்டத்திறுதிக்கட் கூடிய வின்பமகிழ்ச்சியை. உவகையிற் கழிந்தபேருவகையதாகுங் கல்வியுங் கவியுங் கவின்பெறச் செலச்சொலு மெல்லையிற்றுதையின்புறலும்பொருவரும் என்பது பாங்கியிற்கூட்டத் துக்கூடிய புணர்ச்சியை. பொருவருமென்பதனை நான்கினுங் கூட்டுக. குணம்—அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. திரு - செல்வம். அளவளாய் - கலந்து. திறம்பா—அழியா. அவமதிப்பு - கற்கப்படுநூல்களைக் கற்கநினையாமை—இகழ்தல். இன்றி- இல்லாமை. செலச்சொலல் — கூறும்பொருள்களறிதற்கரியவாயினுங் கேட்போர்க் கெளியவாய் மனத்துட்கொளக் கூறல். கவின்பெற—அழகு பெற. ஒழிந்த அகல முறையிற்கொள்க. இது மாட்டுறுப்பு மெச்சமு மின்றிவந்த முத்தகச்செய்யுள். என்னை? "மாட்டுமெச்சமுநாட்ட லின்றி, யுடனிலைமொழியினுந்தொடர்நிலைபெறுமே" என்றாராகலின். பகுதி - பகற்குறி. துறை - இதுவும் புணர்ச்சிமகிழ்தல்.

தண்டளவுங்கொன்றையும்பைந்தார்தழைப்பவாய்மயிலின்
கண்டழைப்பவண்டுகளிதழைப்ப—நுண்டுளிசேர்
கார்வரவிதென்றயரேல்கண்ணன்குறுங்குடியார்
தேர்வரவிதென்றணங்கேதேர். (5)

இதுவும் மாட்டுறுப்பு மெச்சமுமின்றிவந்து தனிநின்றுமுடிந்த முத்தகச்செய்யுள். தார் - பூ. ஆய்மயில் - ஆடாநின்ற மயில். வரவு என்பது தொழிற்பெயர்போலநின்று நிகழ்காலங்காட்டுவதோர்வாய்

பாடு. நுண்மேனி — அசும்பு. கார் — மழை. வரவு —,வாராநின்றது. அயரேல் - வருந்துவதொழி என்றவாறு. பகுதி—வரைபொருட்பிரிதல். துறை - பருவங்காட்டிவற்புறுத்தல்.

நிறையழிகாமக்கடலைநீந்திச்சலாபத்
துறைமுகமுத்தங்கொளவேசூழ்வார்க்—கிறைவனேயா
யாய்ந்தபுணையென்பவருண்மாறன்வண்குருகூர்
வாய்ந்தபனைமாமடல். (6)

(இ-ள்) அருண்மாறன் வண்குருகூரிறைவனேயாய்! ஆடவர் நிறையாகிய கரையை யழிக்கப்பட்ட காமமாகிய புணரியைக் கடந்து மகளிரிடத்தின்பத்துறையைத் தரும் முகத்தில் அதரபானத்தையுட்கொள வழியேதென்று விசாரிப்பவர்க்கு வாய்ந்த பனைமாமடலே ஆராய்ந்தறிந்த புணையென்றுகூறுவர் பெரியோரென்றவாறு.

இதுவும், ஆடவர்களென்னும் பெயர்ச்சொல்லும், எனக்கு மதுவே குறிப்பென்னுங் குறிப்பும் எஞ்சிநின்று முற்றியதால் இருவகையெச்சமும் மாட்டுறுப்புங்கூடித் தனிநின்று முற்றின முத்தகம். சலாபத்துறைமுகமுத்தங்கொள என்பது சிலேடை. இது, பாங்கியிற்கூட்டத்துச் சேட்படுக்கப்பட்டானுன தலைமகனுண்டுறந்துரைத்தல். பகுதி-மடல். துறை - உலகின்மேல்வைத்துரைத்தல். முத்தகமென்பது காரணப் பெயர். முத்தகம் முற்றும். (௩)

இனிக் குளகம் வருமாறு:—

68. குளகம்பலபாட்டொருவினைபேர்கொண்டு
வளர்முலையாய்மூன்றிடத்துமன்னு—மளவை
யுகளகஞ்சாந்தானிகங்காபாலிகத்தோடைந்தின்
மிகல்வகைத்தாறுல்சொல்விதி.

(எ-ன்) முறையே குளகச்செய்யுளின்கூறுபாடுணர்........ற்று.

(இ-ள்) வளராநின்ற முலையிணையுடையாய்! குளகச்செய்யுளென்பது, பலபாட்டொருவினையேயாதல் ஒருபெயரேயாதல்கொண்டு, எண்ணினதளவு உகளகம், சாந்தானிகம், காபாலிகம் என்று மூன்று திறத்திலேனும், ஐந்தாயும் அவ்வைந்தினுமிகுங் கூறுபாடுடைத்தாயும்

செய்யுளகத்து முதல் இடை கடை யென்னு மூன்றிடத்தும் நூல் சொன்ன விதியாக நிலைபெறுமென்றவாறு.

வினையென்ற விதப்பால் வினையின்வேறல்லவாம் வினைக்குறிப்பும், பெயரென்ற விதப்பாற் பெயர்ப்பெயரேயன்றி வினைப்பெயருங் கொள்ளு மென வுணர்க. வினைமுதலிய நான்கோடுந் தானமூன்றோடு முற்ற வுதாரண மீண்டுரைப்பிற் பெருகும். அவற்றுட் சில வுதாரணங் காட்டுதும்:—

நினைமருவொன் றில்லா தனூ ரனுதிகளைப்
புனைவகுளத் தாமப்புயனை—வினையினையே
வென்றுனைக்கார் தரும்வித்தகனைப் பாவலன்பின்
சென்றுனோ நாதனெனத் தேர்ந்து, (7)

வேதமதனைவிளங்குதமிழ்ப்பாப்படுத்திப்
போதந்தழைக்குபுகழ்புண்ணியனை—நாதமுனி
போற்றும்புனிதனையந்தாமம்புகமனனே
தேற்றம்பயின்றேதினம். (8)

இவையிரண்டும் வினைகொண்டு முற்றிய யுகளகாதிகுளகம். உகளக குளகமென்பது இரண்டுபாட்டு வினைமுதலியவற்று ளொன்றுகொண்டு முற்றுவது.

குன்றமதனைக்குடைகொண்டநீலமணிக்
குன்றமதனைக்குணக்கடலைக்—குன்றமதே
மத்தாகக்கொண்டமிர்தம்வானோர்க்களித்ததரு
மத்தானைத்தேவாய்மதித்து, (9)

வாழ்த்து பரசமபவாதியர்தம்வாய்மதத்தைச்
சாய்த்ததமிழ்மறைப்பாத்தந்தானைக்—கீர்த்திபுனை
பாவேசர்போற்றும்பராங்குசனைமுத்திபெற
நாவேமனத்தானயந்து. (10)

இவையிரண்டும் வினைகொண்டுமுற்றின யுகளகமத்திய குளகம். வாழ்த்து என்பது ஏவல்வினை. இவை நான்கும் திணை - பாடாண்; துறை - ஓம்படை.

காலிருக்கக்கையிருக்கக்கண்ணிருக்கச்சென்னியதன்
மேலிருக்காநடுவேவீற்றிருக்க—நாவிருக்கும்
பொய்யாதிருக்கப்புகழ்மாறனைவலஞ்செய்
துய்யாதுமஞ்சலியாதும், (11)

பூவிற்சிறந்தவவன்பொன்னடியைக்கண்டுமலர்
தூவிவணங்கித்துதியாத—பாவிகளோ
டொன்றாகியவுளமேபோனவைபோட்டேதியமா
யின்றாகினுமுற்றிறைஞ்சு. (12)

இவையிரண்டும் வினைகொண்டு முற்றிய யுகளகாந்தியகுளகம். இதனுள் மாறனையென்பது மால்தனை எனவும் பொருந்தும். இவையாறிற்கும் ஒழிந்த அகல முறையிற் கொள்க. திணையுந் துறைய மிகவமது.

அடித்தகைத்தலம்பிடித்துவன்கனகனுருயிரைக்
குடித்தகோளரியாயகொற்றவனுமாண்குறளாய்
நடித்துமூவுலகன்றளந்தவனுமைந்நாகந்
துடித்துமூலமென்றழைத்ததற்குதவியசுகத்தோன். (13)

அம்பிகாபதியிரப்பொழித்தவனுமாதரவா
லும்பராரமுதருந்தவைத்தவனுமும்பருளார்
தம்பமாந்தசாதன்றிருமகனெனத்தழைத்தே
கம்பவாரிதியடைத்தருளயோத்திகாவலனும். (14)

இவையிரண்டும் வினைக்குறிப்புக்கொண்டு முற்றிய யுகளகடத்திய குளகம். திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

அரியுமயனுமானுமெனமூன்றாய்த்
தெரியுமவருட்டெளிதற்—குரியபொரு
ளர்தாமத்தானென்றுணர்த்தியடியவர்தஞ்
சிந்தாகுலந்தவிர்த்ததே, (15)

மூர்தமதுரகவிக்காரித்தமுதுரைசா
லந்தமலரடியையாதிரைநாள்—வந்த

மன்றபவர்கோன்சென்னியினும்வைத்தமையாள்செங்கோ
னிறைவருளப்பூங்கண்ணியன். (16)

இவையிரண்டும் வினைக்குறிப்புக்கொண்டுமுற்றிய யுகளகாந்திய குளகம். கண்ணியைப் புனைந்தவனென்னும் வினையைக் குறிப்பினாற் கொள்ளக்கிடந்தமையானென்றுணர்க. என்னை ? "காலந்தாமேமூன் றெனமொழிப" "இறப்புநிகழ்வுமெதிர்வுமென்று, வம்மூக்காலமுங் குறிப்பொடுகொள்ளு, மெய்ந்நிலையுடையதோன்றலாறே" என்றாராகலின். ஆதலால் வினைக்குறிப்பிற்குங் காலமுண்டெனக் கொள்க. திணை - இதுவுமது. துறை - பழிச்சினர்ப்பரவல்.

முழுக்கலையற்றரைக்கலையுமிழந்தாய்தோகை
முருந்துறப்பீலியின்முழுதுமுன்றில்சிக்கு
மொழுக்குறநின்றனையுடையுமஃதேயாறு
யுன்விரதமெதுபெயரேதுரைத்தியென்று
வழுக்கறவேயியங்குயிர்கொல்லாமையாசி
வகனுகவிறைவன்யாருகனில்யா
திழுக்கியல்பின்றுந்தனியூர்யாதுசெம்பொ
னெயிலெனவவ்வெயிலெவனெனறிசைத்துமீட்டும்(17)

எப்படிவந்தோன்றியதப்படிவத்தெல்லா
மின்னுயிருண்மையையுணராயியங்கற்பால
வப்படிவத்துயிருளதாயுணர்ந்தாயீசற்

றுப்புரவுண்பதுகடனென்றுள்ளாயாகத்
தொழிலிகழ்ந்தாய்சுடர்சொருபாம்வேதமார்க்கர்
தப்பினையெம்மறைகொடுசாதிப்பதென்றே
சமண்மதத்தைப்பழித்தனராயழித்துச்சாய்த்தார் (18)

இவையிரண்டும் வினைப்பெயர்கொண்டுமுற்றிய யுகளகாந்திய குளகம். திணை—பாடாண். துறை—"அமரர்கண்முடியுமறுவகையானு" மென்றதனால் முனிவர்வாழ்த்து; பார்ப்பனவாழ்த்துமாம்.

முன்புலகமேழினையுந்தாயதுவுமுதுணர்வா
ரின்புறக்கங்காநதியையீன்றதுவு—நன்பாதன்
கண்டிருப்பவைகியதுங்கான்போயதுமமிர்த
முண்டிருப்பாருட்கொண்டதும், (19)

வெந்தகரியதனைமீட்டுமகவாக்கியது
மந்தச்சிலையினைப்பெண்ணாக்கியதுஞ்—செந்தமிழ்தேர்
நாவலன்பின்போந்ததுவுநன்னீர்த்திருவரங்கங்
காவலன்மாவலவன்கால். (20)

இவையிரண்டும் பெயர்ப்பெயர்கொண்டுமுற்றிய யுகளகாந்திய குளகம். என்னை? பெயர்நிலைக்கிளவிகாலந்தோன்றா, தொழினிலையொட்டு மொன்றலங்கடையே" என்றாராகலின், இடுகுறியாய்க் கால் எனக் காலமுந் தொழிலுந் தோன்றாது நின்றவாறு காண்க. திணை—இதுவுமது. துறை—கடவுள்வணக்கம். ஒழிந்த ஆதியினும் இடையினும் யுகளகுளகம் வந்தவழிக் கண்டுகொள்க. யுகளகுளகம் முற்றும்.

தொடுத்துமுத்தலைச்சூலவன்படையினைத்துண்டப்
படுத்துவெஞ்சினத்தாடகையுயிர்நமன்பகுவாய்
மடுத்துவேள்விகாத்தெதிர்ந்தபோர்நிருதர்க்குமரணங்
கொடுத்தநிந்தொழிற்கரன்முதலவர்க்குவிண்கொடுத்தே, (21)

கிளைத்துநாகவன்பிடர்மிசைக்கிளர்மராமரமேழ்
துளைத்துவாலிமார்பமுந்துளைத்தடற்கருஞ்சுடுதீ
விளைத்துவேலையுளுருகெழுகோதண்டமேனாள்
வளைத்துவாய்மையோர்வடிவெடுத்தனையதோர்வாளி, (22)

கும்பனைப்பொருநிகும்பனைக்கும்பகன்னனைநீ
டம்புராசியிற்குரைத்தெழுபலப்படையதனைச்
செம்பொனுலயம்விருப்புறத்தெசக்கிரீவனைக்கொன்
றெம்பிரான்சனகியைமணந்தாடலெய்தியதும். (23)

இவைமூன்றும் வினைகொண்டுமுற்றிய சாந்தானிகாதிகுளகம். திணை - வாகை. துறை - வில்வென்றி.

அருமறையாய்நள்ளிரவிற்கொடுபோய்வசுதேவராயர்பாடித்
திருநகரத்திடைகரப்பவளர்ந்தவனும்வெண்ணெயினைத்திருடிமேனுட்
பொருவறுகைத்தாமரையாற்செங்கனிவாய்வைத்தவனும்போதனேற
னிருவருங்காண்பதற்கரிதாமந்தாமந்தடிபாண்டற்கெளிதினன்பால், (24)

கொடுத்தவனுமானிரைகாத்தருள்காலைக்
கன்மாரிகுடைகுன்றாகத்
தடுத்தவனுநான்முகத்தோன்கொடுபோய
பல்லுருவின்றன்மையாக
மெடுத்தவனுந்தேவகியின்றருள்புதல்வன்
றுரோவதியாமின்பக்கொம்பன்
றடுத்ததுகிலிருஞ்சபையுட்டொலையாமை
யளித்தவனுமுண்மைகூறின், (25)

காண்டகுபொன்முடியுதைத்துக்கஞ்சனைக்கொன்
றறவோர்முன்கடுஞ்சொற்கூறப்
பூண்டதொழிற்சிசுபாலன்பொன்முடிசக்
கரத்தறுத்துப்புவனம்போற்றப்
பாண்டவற்குத்தூதாகிநூற்றுவர்மு
னூருநெடுந்தேர்ப்பாகனாகி
யாண்டகைமைத்தருமன்முதலவர்க்கவனி
யனைத்துமளித்தவனுமன்றே. (26)

இவைமூன்றும் பெயர்ப்பெயர்கொண்டுமுற்றின சாந்தானிக மத்தியகுளகம். துறை - கடவுள்வாழ்த்து.

தெள்ளுநான்மறைப்பனுவலுமயனையாதியரும்
வெள்ளிவெண்மதிக்கடவுளுங்கதிருமீன்கணமுந்
தள்ளரும்பொறைமன்னுயிர்க்கணங்களுந்தழங்கு
கொள்ளைவெண்டிரைப்புணரிமொண்டெழுநிலைகுலையா, (27)

வாக்கும்பாதமும்பாணியுங்காணமுமற்று
நீக்கமுற்றமன்னுயிர்கடாமாயையுண்ணெடுங்கற்
றூக்குமாடகத்துக்கண்மெழுகடைந்தபோற்றயங்கக்
காக்கும்வாய்மையிங்கெனதெனத்திருவருள்கலந்தே, (28)

காலம்யாவையுங்கழிந்தபின்கழிந்தபேருருவின்
ஞாலமுற்றவுண்டுறுபுனனடுவணையர்தோ
ராலநுண்டளிரெனுமனர்தனிலுலகனைத்தும்
பாலனாகியுள்ளடக்குபுதுயின்றனன்புரிப்பான், (29)

இவைமூன்றும் வினைப்பெயர்கொண்டு முற்றின சாந்தானிகாந்திய குளகம். திணை - பாடாண். துறை - கண்படைநிலை. (குருகா மான்மியம்.)

பாத்துவமுதலாப்பஞ்சவுற்பனனும்
பாமனெம்மிறைவனுமெனல்போல்
வாத்தொடும்புகழும்பஞ்சமாத்தொழிலும்
வழங்கலுமிவன்றிறத்தெனல்போற்
றிரத்தவாம்பஞ்சபூதமுஞ்செனித்த
செய்கையுமிவன்றிறத்தெனல்போற்
காத்தினிற்பஞ்சாயுதங்களேதரித்த
கருணையங்கடவுளாமெனல்போல், (30)

ஞானமுமழகும்வீரமுந்திருவுநவையிலானந்தமுமெமவே
யானவேனையவாமுலகமென்பவற்றிற்கவையமைதியவலவெனல்போல்
வானுறநிவந்தவெழுநிலத்தமைந்தமாடகுளிகையின்யாப்புறுத்தைதம்*
பானிறந்தழீஇயதுகிற்கொடிநுடங்குபாங்கரின்வயங்குமெம்மருகும்,(31)

செம்மையின்யாணர்த்திவ்வியமணியாற்
செழும்பொனாற்றிசைதிசையெறிக்கும்
பொம்மலுநிவப்பும்வியலுமேனிடையும்
பொருந்தவின்னொருமருங்கிடைப்புக்
கிம்மருகெவணிங்கிவற்றுளிம்மாட
மெம்மணிமாடமென்றியாருந்
தம்வயிற்செறிந்தோரிமைப்பருநாட்டந்
தாங்கியுமறிவருந்தகைய. (32)

இவைமூன்றும் பண்பிடனாகத்தோன்றினவுடைமைவினைக்குறிப்புக் கொண்டுமுற்றின சாந்தானிகாந்திய குளகம். சாந்தானிகுளகமென்பது மூன்றுபாட்டு வினைமுதலியவற்று ளொன்றுகொண்டு முற்றுவது. திணை - இதுவுமது. துறை - பரமபதவருணனை. இவையும் குருகா மான்மியம். ஒழிந்தனவும் வந்தவழிக்கண்டுகொள்க. சாந்தானிகுளகம் முற்றும்.

ஆதிப்பரப்பிரமநாராயணனென்றுஞ்
சோதிச்சுடர்மயமாந்தோற்றஞ்சா—னீதிச்
சொருபமுடனுருவந்தோய்ந்துளன்காணென்று
மொருபாந்தாமத்தானென்றும், (33)

பாங்குண்டய்மன் னுயிரொன் றல்லபலவென் று
மாங்கவற் றுணீங்காதவனென் று—மோங்கவற்றை
நித்தியமாமென் றுமுடனித்தியமன்றென் றுமதை
யுய்த்த தபூதாதிபதென் றும், (34)

பத்திவிடாதேபயிலென் றுஞ்—சத்தியமாய்ச்
செல்வத்திருப்பதிவாழ்சீநிவாதன்பகர்ந்த
சொல்வித்தகமே துணிந்து, (35)

நாமானிடப்பிறவிநன்றென் றுந்தேர்ந்தனமாற்
காமாதிகளாங்களைகளைந் து—பாமாலை
சாத்தியேநெஞ்சேதருமெமக்குமுத்தியென
வேத்தியேயின்புற்றிரு. (36)

இவைநான்கும் வினைகொண்டு முற்றின காபாலிகாந்தியகுளகம்.
திணை - பாடாண். துறை - குரவனைவாழ்த்தல்.

இச்சிப்போனிட்டவிணைபடிப்போதன்றொருவ
னுச்சிப்போதானதுலகறிந்த—நிச்சபமே
யாய்ந்தாலொருவன்சிரத்தணிந்ததன்றொருவன்
பூந்தாள்கழுவும்புனல், (37)

இளிவந்ததுசெய்திரந்தானொருவன்
வெளிவந்தொருவனதைமீட்டான்—களிவந்த
சித்தமுறத்தன்பெயரேகேளாச்செவியனுக்கு
முத்தியளித்தானோர்முதல், (38)

சேதிப்பதாமொருவன்செய்தொழிலுமேனையவற்
காதிப்புவனமவைகாவல்—கோதற்ற
நற்குணத்தெம்பூமகள்கோனானனந்தாமத்தான்
முற்குணத்தானேயெம்முதல், (39)

என்றுய்ந்துணர்ந்துணர்த்தியிங்கெமையீடேற்றினான்
பொன்றுதசெஞ்சொற்புலவீர்கா—ளொன்றுய
தேவின்புறத்தமிழ்செப்பேதன்குருகூரன்மனம்போல்
வாவுஞ்சிறையோதிமன். (40)

இவைநான்கும் வினைக்குறிப்புக்கொண்டுமுற்றின * காபாலிகாந்திய குளகம். திணை - இதுவுமது. துறை - பழிச்சினர்ப்பரவல்.

மீனமதாயாமையாய்வெள்ளைவராகமதாய்த்
தானவனைக்கொன்றுமறைதந்தானும்—வானவர்க்காய்
வாங்குதிரைகடைநாண்மந்தரமேற்கொண்டானு
மோங்குமகிலங்கொணர்ந்தானும், (41)

ஆளரியாயாடகனைச்செற்றானும்வாமனமாய்த்
தாளிணையான்மூவுலகுந்தாயானுங் —கோளரிபோன்
மாறுதிரட்காவலரைமாய்த்தமழுவாளியா
யூறுதிரத்தேகுளித்தானும், (42)

அன்றுதனுராமனாகியிருபதுகைக்
குன்றினுயிரைக்குடித்தானும்—வென்றியுடன்
பார்திருத்துநாஞ்சிற்படையானும்பாண்டவர்க்கவ்
வூர்திருத்தமுற்றளித்தானும், (43)

புண்டரிகத்தானைப்புரந்தானுமைந்நீல
கண்டனிரப்பொழியக்கண்டானு—மண்டமினி
மேவிலையிங்கென்னவிழுங்கியவேகோதகத்தோ
ராலிலையின்மீதுதுயின்றான். (44)

இவைநான்கும் வினைப்பெயர்கொண்டுமுற்றின காபாலிகாந்திய குளகம். திணை - இதுவுமது. துறை - கடவுள்வாழ்த்து.

மாயோனெடியோன்மதுசூதனன்புவனந்
தாயோன்முகுந்தன்சாரசாங்க—ளாயோ
னாராரியரியச்சுதனுகணையான்
முராரியழியாமுதல், (45)

மாதவன்கேசவன்வாமனன்கோவிந்தன்
சீதரன்பூமகள்கோன்றேவேசன்—பூதலத்தை
யுண்டோன்விரிசிறைப்புள்ளூர்ந்தோன்பகிரண்டங்
கண்டோனிருதாந்தகன் (46)

மந்தாகினிபிறந்தவார்கழலோனெமியோன்
றந்தாவளமுரைத்தசரல்பிறே—னெந்தை
திருமால்வரனுந்திபூத்தோனமரர்
பெருமான்பிரமன்பிதா, (47)

கண்ணன்கருணைகரனமலன்காயாம்பூ
வண்ணன்கடல்வண்ணன்மைவண்ணன்—விண்ணவர்கோன்
றம்பிரானாரணனநந்தாமத்தான்வேதாந்த
னெம்பிரான்முத்தனிறை. (48)

இவைநான்கும் பெயர்ப்பெயர்கொண்டுமுற்றின காபாலிகாந்திய குளகம். துறை - கடவுள்வாழ்த்து. ஒழிந்தவும் வந்தவழிக் கண்டு கொள்க. காபாலிகுளகம் முற்றும்.

செம்பினையுருக்கிவாக்கித்திண்ணிதினகழிதூர்த்திட்
டும்பரின்முதலேயொண்பொனுவானமதமைத்தபின்றைப்
பைம்பொனார்செகதிகண்டம்பட்டிகைவகுத்திட்டோர்சா
ரிம்பர்நின்றேறயாளிச்சுருட்படியியற்றிமன்றோ, (49)

பாங்கர்வேதிகைக்குத்தானம்பகுத்தாங்கினுக்குநாப்ப
ணோங்குபொற்சுவர்நிறீஇ நித்தருமசாளரஞ்செய்தோவா
வீங்கிருடுணிக்குஞ்செய்யவிழுமணியதனுன்மேல்வாய்த்
தாங்குமுத்திரம்வைத்துள்வச்சிரத்துலாந்தகவின்வைத்தே, (50)

பச்சைநன்மணியையீர்ந்தபலகைமேற்பரப்பிமேலத்
தச்சுறுகொடுங்கைமுட்டியதன்புழையகத்தவாக
வச்சிரவளைகளோடிமணிசெய்வேதிகைமாண்டுணைத்
துச்சிமேற்பலகைசிற்றுத்திரத்திறோடொன்றச்சேர்த்தே, (51)

வெள்ளிவெண்பலகைநான்குவிரல்வியனீப்பின்றாக
வள்ளுறநிறைத்துவண்பொன்றுணிகளழுத்திக்கையா
லள்ளுபுதிரளுமொண்பொன்னரதனைஞாங்கர்மேய்ந்து
தெள்ளிதினேழுதாகத்திகழ்நிலம்புணர்த்துமாதோ, (52)

வாரிநீணிலயுமேல்கிழ்மரீஇயகோரன்படியுந்தானும்
கூர்கபாடமுமொன்றாகக்கொளீயமாண்மணிகடம்மாற்

சீர்கெழுதகைம்புசூட்டுஞ்சிமயமோடேயர்ந்துவாணு
ளார்தமக்கமைந்ததச்சார்க்கணங்குசெய்வனபொன்மாடம். (53)

இவை ஐந்தும் பெயர்கொண்டுமுற்றின அந்தியகுளகம். மேலைந்து முதலிய வெலுற்றிற்கும் குளகமென்பன பொதுப்பெயர். திணை - பாடாண். துறை - நகர்வாழ்த்து.

அற்புதமாமன்னுயிரேபிரமமென்று
மலகிலவன்றென்றெனவுமலகில்யாக்கை
நிற்பனயாதெனிற்புனல்பெய்கடங்கடோறு
நிழற்கதிர்தோன்றியநெறித்தாமென்றுமங்ஙன்
பொற்பனவொன்றியுத்தலுமேனையவும்பொன்றப்
பொலிவெவனென்றுலவைபோலெனவுமாறிக்
கற்பனைசெய்பவன்றனைநான்பிரமமென்றே
கழறுமிரண்டெவனெனவேகழற்றிமீட்டும், (54)

நான்பிரமமென்றனைநீபிரமமாகி
ஞான்முகனையுந்தியிற்பெற்றிடுதிபொன்று
வான்பிரமமமைத்தபகிரண்டமெல்லாம்
வயிற்றிடைவைத்திடுதிசதுமுகத்தால்வையந்
தான்புரந்தவ்வுலகினைமூவடியிற்றாய
தனுவினனோனுமயமாந்தனுவுங்கோடி
யூன்பயின்றகுரம்பையைநீத்துலகமெல்லா
மொருங்கெறிக்குஞ்சுடர்மயமாமுருவுங்கோடி, (55)

ஆயிரவாய்ப்பஃறலைப்பாம்பணைமேற்காவ
லறிதுயிலுங்கொண்டிடுதியனந்தனாகி
மாயிருஞாலங்களொருபத்துநானு
மணிமுடிமேற்றரித்திடுதிவழிந்துநாளுந்
தாயதிரைப்பாற்கடலைத்தயிரோயாக்கிச்
சந்திரனைமந்தரமேற்றறியதாக்கித்
தூயகளைத்தெள்ளமிர்தநார்க்குமவிண்மேற்
சார்க்களித்ததெனவளிக்குந்தொழிலுங்கோடி, (56)

எண்ணிறந்தநால்வகைத்தோற்றத்துளாய
வெழுவகைத்தாஞ்செனனமுமீயிசைந்துபின்ன
ரெண்ணிறந்தவிடங்கடோறுநிற்பதோடு
மியங்குதியீங்கிவையன்றியேககாலத்
தெண்ணிறந்ததொழில்புரிதியண்டாண்டத்
திவ்வுலகிற்பாதாளத்தின்பதுன்ப
மெண்ணிறந்தவிவர்க்கிவற்றிற்கிசைந்ததென்றென்
றிசைந்ததிறம்வாய்மையுதாயிசைப்பதோநீ, (57)

இவ்வுடலத்திறத்தியிறந்திடுகாயத்தை
யீமத்தங்கிடுபொழுதிலெரிந்திடாதே
யவ்வுடலத்துடனெழுந்துவருதிகாயத்
தருவருப்பாக்கியமலமுத்திரக்களெய்தாச்
செவ்வியிஃவாழ்ந்திடுதிநரைதிரைமூப்பில்லாச்
சிறப்பி[illegible]டும்வளிமுதலாச்செறிந்தமூன்றும்
வவ்வுதலற்றீறில்சுகானந்தமேய
வச்சிரகாயம்புணர்ந்தவாழ்விளோடும், (58)

மின்னுயிர்க்குங்கனகன்வினவினபொற்றூணம்
வெடிப்பவுதித்தடித்தகரம்பிடித்தபோல
வுன்னுயிர்கொண்டெனதுகரம்பிடித்ததுணைத்
துறுதியிவைமுதலவுனக்குறுவதின்றூன்
மன்னுயிர்தாமலகிலவாம்வகையுமீசன்
வாழ்வகையுமுணர்ந்திலேயுன்மத்தனனூ
யின்னுயிர்வேறின்னுயிர்கட்குயிராய்நின்ற
விறைவனும்வேறெனத்தெளிவித்திதஞ்செய்வாரே. (59)

இவையாறும் வினைப்பெயர்கொண்டுமுற்றின அந்தியகுளகம். திணை - பாடாண். துறை - முனிவர்வாழ்த்து. *"ஆங்கதன்" முதல், "கொண்டமால்வரை" ஈறாக ௯-ம் பானிருப்பான் என வினைமுற்றுக் கொண்டுமுற்றின அந்தியகுளகம். இவற்றின்மிக்குவருவனவு முள; அவையும் பெருங்காப்பியங்களினிடத்துக் கண்டுகொள்க. குளகம் முற்றும். (௬)

* 'ஆங்கதன்' என்பது குருகாமான்மியம் பரமபதவருணனைச்சருக்கத்து [illegible]-ம்செய்யுள், 'கொண்டமால்வரை' என்பது ஷை சருக்கத்து ௧௯-ம் செய்யுள்.

69 உலவாதகேள்வியொருவர்பலராற்
பலவாய்ப்பகர்பாவினமா—யிலகுபொரு
ளெண்பாட்டளவுதொழிலிடங்காலஞ்சினையின்
பண்பாற்றொகைநிலைச்சொற்பா.

(எ-ன்) வைத்தமுறையானே தொகைநிலைச்செய்யுளுமா றுணர்-ற்று.

(இ-ள்) தொகைநிலைச்செய்யுளென்பது குறையாத கேள்வியினை யுடைய வொருவரானுதல் பலரானுத லுரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவாய், அவை பொருளானும் எண்ணானும் பாட்டானும் அளவானும் தொழிலானும் இடத்தானும் காலத்தானும் சினையானும் தொகுத்த பெயர்பெற்ற பண்பினையுடையவாமென்றவாறு.

இன் உருபுமயக்கம். உம்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது. உலவாத கேள்வியென்பதனை யிருவரிடத்துங் கூட்டுக. கேள்வி-கல்வி. ஒருவரானுரைக்கப்பட்டன திருவள்ளுவப்பயன். பலரானுரைக்கப் பட்டன - நெடுந்தொகை. இஃதெல்லாத் தொகைக்கும் பொது. பொ ளாற்றொகுத்தபெயர்பெற்றது புறநானூறு. எண்ணாற்றொகுத்தபெ பெற்றது பதிற்றுப்பத்து. பாட்டாற்றொகுத்தபெயர்பெற்றது
தொகை. அளவாற்றொகுத்தபெயர்பெற்றது குறுந்தொகை. (65)
லாற்றொகுத்தபெயர்பெற்றது ஐந்திணை. இடத்தாற்றொகு காண்க.
பெற்றது களவழிநாற்பது. காலத்தாற்றொகுத்தபெயர்பெற்
நாற்பது. சினையாற்றொகுத்தபெயர்பெற்றது நயனப்பத்து ங்கத்தான் பத்து. உம்மை யெச்சவும்மையாகலா னிவ் வெட்டுவகையானுள்:— பிறவகையானும் பெயர்பெற்றனவுளவேனும் அவையும் அறிந்து தொகைநிலைச்செய்யுண் முற்றும்.

70. சொல்லாற்பொருளாற்றொடருந்தொடர்நிலைக
ளெல்லாமவற்றுளெழுத்தசைசீர்—மல்கு
மடிசொற்றொடர்நிலைகளந்தமுதலாம்
படிவைத்தனர்முன்பகுத்து.

(எ-ன்) தொடர்நிலைச்செய்யுளினது கூறுபாடுணர்-ற்று.

(இ - ள்) தொடர்நிலைச்செய்யுளென்றுகூறப்படுவன வெல்லாஞ் சொல்லானும் பொருளானுந் தொடரப்படுவனவாம். அவ்விரண்டனுள், சொற்றொடர்நிலையைப் பகுத்துக்கூறுமிடத்து நின்றசெய்யுளி னீற்றெழுத்தாதல், அசையாதல், சீராதல், அடியாதல் வருஞ்செய்யுட்கு முதலாகத் தொடுக்கும்படியென வுட்கொண்டனர் முற்காலத்துப் புலவரென்றவாறு.

வைத்தனர் - உட்கொண்டனர். இச்சூத்திரப்பொருள்கோள் மாட்டேறப்பு. எல்லாமென்றதனான் மூன்றுவது சொல்லினானும் பொருளினானுந் தொடர்வதுமுளவெனக்கொள்க. மல்குமென்று சிறப்பித்தவதனால் நான்கும், பலவடியான்வரு மொருசெய்யுளகத்தும் வருவதுள வெனக் கொள்க. இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வருமாறு:—

நாவலன்பின்போந்தநறுநீர்த்திருவரங்கங்
காவலன்பொற்றாளாங்கமலத்தே—பாவலர்தம்
பாமாலைசூட்டாதப்பாமாலையைவனே
தாமானிடர்க்களிக்குஞ்சால்பு. (60)

புரந்தரனாதியாராயபுத்தேளிர்பொற்போதுகடூஉய்
நிரந்தரமேத்தும்படியேதுயின்றதுநெஞ்சத்தன்பு
ரந்தரன்சாபந்துடைத்தோனிருந்ததுதொண்டர்க்கெல்லாம்
அ
ரந்தரநின்றதாங்கநன்காஞ்சிவடமலையே. (61)
வ

லைமுழைவைகலும்வைகினராகியும்
ம
நனிகிழங்கடகுகண்டனமாந்தியு
மூவராயுமுதற்கடவுட்
காவலநீயேகாத்தல்வேண்டுவலே. (62)

வேண்டுவதிங்கின்றெமக்குமெய்க்காவிரியரங்கத்
தாண்டகைதன்வெற்பிலணங்கன்னார்—காண்டகுசீர்ப்
பொன்றுமலர்முகமும்பூண்முலையுங்கண்டனம்யா
மென்றுலினியிதன்மேல்யாது. (63)

என்றுலினியிதன்மேல்யாதுவேண்டுமெனக்குவெள்ளிக்
குன்றனதன்பிடர்மீதேமாகதக்குன்றெனவே

யன்றூடாவிற்றுயிலாங்கேசனருள்புரிந்து
பொன்றூதசெல்வத்திருமாடடனுட்புகுந்தனனே. (64)

இவ்வைந்து பாட்டினும் எழுத்து அசை சீர் அடியென்னும் நாலந்தாதியும் அடைவே வந்தவாறு கண்டுகொள்க. இவற்றுள் "வேண்டுவதிங்" கென்ற வெண்பாவொன்றும் கிளவிவேட்டல். ஒழிந்த நான்குங் கடவுள்வாழ்த்து. இவை நம்பெருமாள்மும்மணிக்கோவை.

இனிப் பலவடியான்வரும் ஒரு செய்யுளகத்து நாலந்தாதியும் வருமாறு:—

நாவேயுரானுறுநலமிகுமுதற்பொருள்
பொருளுரையாய்தரிற்புகலுமற்றுளதே
யுளதேவண்டிமிருறுமலரோடை
யோடைமால்வரைமூலமென்றுரைசெய
வோடைமால்வரைமூலமென்றுரைசெய
வுரைவிசைத்தடங்காவொல்லையிற்குறுகுபு
புனிற்றுவெனவருள்புரிந்திடர்செகுத்த
வறைபுனலரங்கத்தமுதினையன்றியு
மதித்தொருமுதலையேமகிழ்ந்து
துதிப்பதுமுளதோசுரர்பெருநாவே. (65)

இந்நேரிசையாசிரியப்பாவினுள் நாலந்தாதியும் வந்தவாறு காண்க.

இன்னுமவ்விலேசானே இறுதிநின்ற சொற்பொருளுக்கத்தான் ஆகுபெயராற் சொற்றொடர் வருவனவுமுள. அதற்குச் செய்யுள்:—

"பரிவதிலீசனைப்பாடி
விரிவதின்மேவலுறுவீர்
பிரிவகையின்றிநன்னீர்தூஉய்ப்
புரிவதுவும்புகைபூவே." (66)

"மதுவார்தண்ணந்துழாயான்
முதுவேதமுதல்வனுக்
கெதுவேதென்பணியென்னு
கதுவேயாட்செயுமீடே." (67)

இவை முதற்பத்தி லாருந்திருவாய்மொழியின் முதற்பாட்டும் இரண்டாம்பாட்டும். இவற்றுள், பூவென்றசொல்லின் பொருளேக் கத்தாற் பிஃனயைக்கூற முதஃலயறிவிக்கும் ஆகுபெயரால் அந்தாதித்தவா றுணர்க. இவை நாலுவேதத்தையும் ஓதாதுணர்ந்த ஞானபூரண ஞானமுத்திரைக்காரம்புயன் றிருவாக்கு. சொற்றொடர்நிஃலச்செய்யுண் முற்றும். (௬)

71. பெருங்காப்பியங்காப்பியமெனும்பெற்றித்தாற்
சுருங்காப்பொருட்டொடருஞ்சொல்லிற்—பொருந்தவற்று
ளொன்றும்பலவும்பொருளிற்குறைவுறுமே
லென்றுமது காப்பியம்.

(எ • ன்) பொருட்டொடர்நிஃலச்செய்யுளின்கூறுபாடுணர்—ற்று.

(இ • ள்) பொருட்டொடர்நிஃலச்செய்யுளின்கூறுபாடு சொல்லு மிடத்துப் பெருங்காப்பியமென்றும் காப்பியமென்றுங் கூறு மிரண்டியல் பிஃனயுடைத்தாம்; அங்ஙனம் பொருந்தியவற்றுள் அறமுதலிய பொருள்கள் நான்கினுள் ஒன்றாயினு மிரண்டாயினுங் குறைவெய்தவரு மெனில் அதஃன யெக்காலத்திலுங் காப்பியமென்பதேயா மென்றவாறு.

எனவே நாற்பொருளுங் குறைவின்றிவருவதே பெருங்காப்பிய மென்பதாம். சுருங்காப்பொருட்டொடரெனவே பொருட்டொடர் மிகவும் விரிவுடையதென்பதூஉ மாயிற்று. (எ)

72. வைத்தபெருங்காப்பியநிஃலயும்வாழ்த்தியல்பார்
மெய்த்தவவையடக்கம்வீறுசான்—முத்திதருந்
தெய்வவணக்கமுடன்செய்பொருளுமுன்வாவாங்
கெய்தவுரைப்பது தானேய்ந்து. (அ)

73. தப்பிலாநாற்பொருளுஞ்சாற்றுவதாய்த்தாரணிமே
லொப்பிலாதான்சரிதையுட்கொண்ட—செப்பமுற
நன்மணமில்வாழ்க்கைநலம்புதல்வர்ப்பேறுபசும்
பொன்மகுடம்வைத்தின்புறல். (௯)

74. அலையாழிமென்மையருட்புயலின்செய்கை
மலையாறுநாடூரின்வண்மை—தொலையா
விருசுடரின்றோற்றமிருதுவளம்பானம்
பொருபுனல்புக்காடல்பொழில். (க0)

75. மந்திரந்தூதொற்றுடல்வாய்ந்தநிரைகோடல்
புந்தியுறச்சேறல்புறத்திறுத்தல்—வெந்திறல்கூர்
மிக்கவிகல்வென்றிநிலையாமையைமிகுத்தல்
கைக்கிளைகள்கூறுங்கடன். (கக)

76. படலமிலம்பம்பரிச்சேதங்காண்டந்
தொடர்தொடர்பிற்பாடையுரைதோய்ந்து—திடமுறச்சொன்
மூன்றுட்கொளலாமுறையிற்சுவைவிறல்கூர்ந்
தான்றவர்மெய்ப்பான்புகல்வதாம்.

இவ்வைந்து பாட்டும் என்னுதலிற்றோவெனின், மேற்சொன்ன பொருட்டொடர்நிலையிரண்டனுள்ளுங் காப்பியத்தின் மரபுணர்த்திப் பெருங்காப்பியத்தின்மரபுணர்-ற்று.

(இ - ள்) சொல்லுவானுட்கொண்ட பெருங்காப்பியத்தினிலக்கண முலகமதிக்கப்பட்ட வாழ்த்தியலும் அவையடக்கியலும் தெய்வவணக்கமும் செயப்படுபொருளும் என்னும் நான்கும் பாயிரத்தினு ளவ்வவ் விலக்கணமுரைத்தபடியே பொருந்துவனவாய், வழுவுதலில்லாத நான்கு பொருளையுங் குறைவறக் கூறப்பெற்று, உலகத் தொத்தாரு மிக்காருமில்லாத தலைவன்சரிதையுட்கொண்ட வுண்மையுற்று, நன்மணம், இல்வாழ்க்கை, கலவி, புதல்வர்ப்பேறு, பொன்முடிபொறுத்தின்பமுறுதல், கடலை மேகத்தை மலையை யாற்றை நாட்டை நகரத்தை ஆதித்த வுதயத்தைச் சந்திரவுதயத்தைச் சிறுபொழுதைப் பெரும்பொழுதை வருணனைபுரிதல், வீரபானம், காமபானம், புனல்புக்காடல், பொழில்புக் காடல், மந்திரம்பகர்தல், தூதுவிடுதல், ஒற்றுடல், நிரைகோடல், மேற்சேறல், எயிற்புறத்திறுத்தல், செருச்செய்கை, வென்றியெய்தல், வென்றவேந்தன்நிலைபெற்றிருப்ப இறந்தவேந்த னிலையாமையை மிகுத் துரைத்தல், ஆண்பாற்கூற்றுக்கைக்கிளை, பெண்பாற்கூற்றுக்கைக்கிளை யென்னுமிவற்றினையும் பாடாண்பகுதி யென்பதனோடுங் கூறுமுறைமை

யுடன் படலமென்றுதல் இலம்பகமென்றுதல் பரிச்சேதமென்றுதல் பகுதிப்படுமவற்றை யுட்கொண்ட காண்டங்களோடும் பொருட்டொடர் புடைத்தா மொருதிறப்பாட்டு மிருதிறப்பாட்டுமாகிய பாப்பாவினத் தோடும் பாடைவிராயு முரைவிராயு மேற்சொன்ன வுண்மையுடைய முத்தகமுதலிய மூன்று முட்கொள்வனவா முறைமையுடன் எட்டு மெய்ப்பாடும் மெய்ப்பாட்டுக்குறிப்பு மிருந்து கல்வி கவியான்மிக்கோர் மதிக்கும்படியுரைப்பதா மென்றவாறு.

இதனுள், வைத்த என்பது உட்கொண்ட எ-று. நிலை—இலக்கணம். இயலு மது. பார்-உயர்ந்தோர்; இடைநிலைத்தீபகம். முன்வரவு-பாயிரம். என்னை? நூற்குமுன்னேவருதலான் முன்வரவென்றுயிற்று. செய்பொருளு மென்னு மும்மையாற் றழுவப்படும் எஞ்சுபொருட்கிளவி பிற்படக்கிளத்தலாய்நின் றும்மையில்செஞ்சொல்லாய் முற்படக்கிளந்த வாழ்த்தியல் முதலாய மூன்றினுங் கூட்டி விரித்துரைக்கப்பட்டது. என்னை? "எஞ்சுபொருட்கிளவிசெஞ்சொலாயிற், பிற்படக்கிளவா முற்படக்கிளத்தல்" என்றாகலின். நலம்—புணர்ச்சி. இருதுவும் பானமும் சாதியேகவசனம். புக்காடலென்பதனைப் புனல் பொழி லிரண்டினுங் கூட்டுக. செப்பமுற—உண்மையுற; என்பது, செய்து என்பது செய என ஒரு வினையெச்சம் மற்றொருவினையெச்சமாகிநின்றது. வாய்ந்தநிரைகோடல் என்பது முதலாக் 'கைக்கிளைகள் கூறுங்கடன்' என்பதனுல் வெட்சிமுதற் பாடாண்டிணையீறுகப் புறம் புறப்புறம் அகப்புறம் என்னும் மூன்றுகூறுய வெழுதிணையு முறையே கூறியவாறுங் காண்க. இவ்வாறன்றி, இவற்றி னிடையிடை காந்தை நொச்சி என்பவற்றையும், இறுதியிற் பொதுவியல் கைக்கிளை பெருந்திணை என்பவற்றையும் கூட்டிப் பன்னிரு படலமாக்கி யவற்றிற்கு இருபது, பதினுறு, இருபத்தொன்று, இருபத்திரண்டு, ஒன்பது, இருபத்தொன்பது, இருபத்துநாலு, முப்பத்துமூன்று, நாற்பத்தெட்டு, முப்பத்தேழு, பத்தொன்பது, முப்பத்தாறு எனத் திணையுந் துறையுமாக விரித்து வெண்பாமாலையாகிய வழிநூலுள் ஐயனுரிதர் கூறியதூஉம் இவ்வெழுதிணையு ளடங்குமெனக் கொள்க. தப்பிலா நாற்பொருளுஞ் சாற்றுவதாய் என்பதனுற் கூறிய வுறுப்புக்கள் சிலபல குறையினும் நாற்பொருளுங் குறையாதனவெல்லாம் பெருங்காப்பியமெனக் கொள்க. பாடை—திசைச்சொல்; "சிதைந்தனவரினு மியைந்தனவரையார்" என்

பதனால் பாஷை பாடையாயிற்று. உரை — செய்யுளின்றி உரைநடையான்வருவது. அது இளங்கோவடிகள் கூறிய சிலப்பதிகாரத்துட் கண்டுகொள்க. உம்மையால் உரையிடையிரவாது வருவதே சிறப்புடைத்தெனக் கொள்க. (கஉ)

77. மன்னியபேர்யாப்பிற்குவைதருப்பம்வான்கவுடம்
பன்னியபாஞ்சால்மெனப்பகுத்து—மின்னிடையாய்
நன்னூன்முழுதுணர்ந்தோர்நாட்டகத்துநாட்டலுறீஇ
முன்னாலுட்கண்டநெறிமூன்று.

(எ-ன்) இதுவு மேற்சொன்ன செய்யுட் கூறுபடுபாகமுணர்-ற்று.

(இ-ள்) இங்ஙனம் நால்வகைத்தாக நிலைபெற்றபெயரையுடைய செய்யுளினைத்திற்கும் வைதருப்பம் கௌடம் பாஞ்சாலமென்னு மூன்று நாட்டினகத்துள்ளாரால் வழங்கும் பாகத்தான் மூன்றாகப் பகுத்து அவ்வவநாட்டினது பெயரால் நல்ல நூல்களை முற்றவுணர்ந்தோர் தங்களாற் செய்யப்படு முந்து நூலகத்து நாட்டுதலையுற்றுக் கண்டமார்க்க மூன்றுளவாமென்றவாறு.

உறீஇ - உற்று. வைதருப்பம் - விதர்ப்பநாடு. மின்னிடையாய் என்பது மகடூஉமுன்னிலை. (கங)

78. இழுமென்மொழியுமினியபொருளுந்
தழுவுமதுவைதருப்பம்—விழுமியவாஞ்
சொற்கடினத்தோடும்பொருட்கடினந்தோய்ந்தரிதாய்க்
கற்பனசாருங்கவுடங்காண்.

(எ-ன்) வைத்தமுறையானே வைதருப்பபாகமுங் கௌடபாகமும் பாகுபடுமாறுணர்-ற்று.

(இ-ள்) மெல்லென்ற விழுமிய இனியமொழியும், மெல்லென்ற விழுமிய இனிய அறமுதலிய நாற்பொருளும் பொருந்துவன வைதருப்பபாகமாமென்றும், விழுமிய சொற்கடினமும் பொருட்கடினமுந்தோய்ந்தரியநடைத்தாய்ப்[*] புலவனாற்கூறப்படுவது கௌடபாகமாமென்றும் மனத்தாற் கண்டுகொள்க வென்றவாறு.

---

[*] பாஷை - பிரதிபேதம்.

விழுமியது - முக்கியம். இதனுள் விழுமியவாம் என்பதனை இடைநிலைத்தீபகமாக்கியும், காண் என்பதனை யிரண்டிற்கு மிறுதிவிளக் காக்கியும், மனத்தாலென்பதனை யெச்சமாக விரித்தும், மென்மை யினிமை யென்பவற்றை முன்னையதற்கு முதனிலைத்தீபகமாக்கியுங் கொள்க. சொற்கடினம்—வல்லினம் வல்லொற்றடுத்து மிகுதல். பொருட் கடினம் - பயங்கரமாகிய பொருள்பயத்தல். (கஎ)

79. இடையிட்டனவருமின்சொற்பொருளாற்
றடையற்றொழுகுவபாஞ்சால—மடைவடைவே
யக்கவிகள்பாடுமவர்க்கங்கவைபெயராய்
மிக்குலகங்கூறும்விதித்து.

(எ-ன்) ஒழிந்த பாஞ்சாலத்தின்பாகுபாடும் அக்கவிகள் பாடு வோர்க்கெய்துங் காரணப்பெயருமாமாறுணர்—ற்று.

(இ-ள்) மென்மையுங் கடினமுமாகிய வைதருப்பகௌடங்க ளோடுங் கூடாதே யிடைநிலைப்பட்டவா மினியசொல்லானும் பொருளா னுந் தடையின்றி நடைபெற்றொழுகுமது பாஞ்சாலபாகமாம். முறை முறையே அக்குணக்கவிகள் பாடுவோர்க்கு மங்கங் கதுவேபெயராக விதித்து மிக்கபெரியோராற் கூறப்படுமென்றவாறு. அவை வைதருப்ப கவி கவுடகவி பாஞ்சாலகவி என்பனவாம்.

இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வருமாறு:

பதியுமாமுகில்கரிப்படாமுமாய்ப்புன
னதியுமாய்ப்படிகதிர்கான்றவேணியாய்
மதியமாமுளைமதிமதியமாய்த்தமிழ்ப்
பொதியமானதுசிவன்போதுமானதே. (68)

உந்தியங்கமலமேனுதிப்பதாலுாஞ்
சிந்துதெள்ளருவிவெண்ணூலின்செம்மைத்தாய்ப்
பந்திசேர்திசைமுகம்பயிலும்பரன்மையிற்
சந்தமகல்வரைமறைத்தலைவனொத்ததே. (69)

விண்டுவென் றுரைப்பதால்விண் ணிறோங்கிடே
பண்டுலகளந்தமெய்ப்படிவங்கூர்ந்தடிக்
கொண்டநீர்பகிரதிக்கோதையொத்ததால்
வண்டுழாய்மலர்தசெம்மலையுமொத்ததே. (70)

இவைமூன் றும் வைதருப்பபாகம். திணை - பாடாண். துறை - மலைவருணனை.

முப்புரத்தினைச்செருத்தமுக்கணக்கனிற்சிரித்து
முத்தலைக்கணிச்சியுக்கதாற்
றப்பறப்பொருப்பினைக்குலுக்கிடக்கையைச்செருத்
தலத்து றப்புடைத்துருத்தெழா
நெய்ப்புறத்தினிற்குளித்தவச்சிரத்தினைப்பிடித்து
நெட்டுயிர்ப்புயிர்த்தியக்கவே
குப்புறப்புழைக்கைவெற்பின்மத்தகத்தினைத்துளைத்த
கொப்புளித்தபச்சிரத்தமே. (71)

மத்தகத்தழுத்துவச்சிரத்தினைப்பறித்துயர்த்தி
மத்தவெற்புடற்றிநிற்பதா
னத்தகத்தடக்குமைக்கடற்கடைக்கனற்சினத்த
னச்சுளத்தினுற்றெதிர்ப்பவே
பித்தகத்தழைத்தடற்பொறிப்புலிப்புலத்தினுற்ற
பெற்றமொப்பவட்கியுட்குநீ
டுத்தமச்சுவர்க்கமுற்றகொற்றவற்கிமைப்படுத்த
வொத்தபத்துடைச்சதக்கணே. (72)

புற்புதக்கடக்கவுட்பொருப்புவச்சிரத்தினைப்
புழைக்கையிற்புடைத்தியக்கவே
யுற்றதுக்கிரச்சமர்க்குடக்குமிக்குரத்துரத்
துடைத்ததைப்பறித்துருத்திடா
வற்புதத்தெதிர்த்தியக்கநெட்டடிக்குளுற்றதொற்றை
யக்களிற்றைவிட்டுமுட்டவே
தெற்குவெற்பினைத்துளைத்ததப்புறப்புறக்கொடைத்
திசைக்களிற்றினைத்துளைத்ததே. (73)

இவைமூன்றுங் கௌடபாகம். திணை — தும்பை. இவற்றுள், முப்புரத்திணையென்றது ஏமவெருமை. ஏனையிரண்டும் யானைமறமும் ஏமவெருமையுமாம்.

விரைக்கமலமுறக்குடைந்ததகட்டகட்டினடுப்பொகுட்டு
வெண்டோட்டும்பர்
நிரைக்கமலத்தினிதிருந்துருட்டெகினம்பார்ப்பருத்த
நினைத்துநீர்வா
யிரைக்கெழவேசெங்கால்வெள்ளுகிருறுமுன்னிதழுரிஞ்சி
யிழிந்ததீந்தே
னரைக்குடுமிமறைக்கிழவனெருப்பிடைநெய்புகுப்பனபோ
ஒன்றமாதோ. (74)

மாதண்டர்புகழ்ந்திடவாழ்ந்தருள்வாமபாகத்து
மழைதோய்வெள்ளி
வேதண்டமிசைப்பவளவேதண்டம்பகிரண்டம்
விழைவுகூர்வான்
மூதண்டமுகடுதொடும்மதிளின்முரண்முருக்க
முன்கைக்கொண்ட
கோதண்டவடவரைபோற்பணைத்தகெந்தமாதனமாங்
குன்றொன்றுண்டே. (75)

நெய்த்திருண்டுசுருண்டுகடைகுழன்றறலின்கெழுதகைத்தாய்
நெறித்துநீண்டு
மொய்த்திருக்குங்குழற்காட்டின்முகையவிழ்பூந்துணர்விரையு
முற்றுமுன்ன
செய்த்திருக்குமிடைக்கிடர்மேலிடரிழைக்குந்தமர்போலு
மிறுமாந்தொண்பூண்
வைத்திருக்குமுலைமுகட்டிற்பொதிகளபத்தொளிகிரையும்
வளர்ந்தமன்னே. (76)

இவைமூன்றும் பாஞ்சாலபாகம். முதற்பாட்டு நாடுவாழ்த்து. இரண்டாவது மலைவருணனை. மூன்றாவது குழல்வருணனை. இவை யொன்பதுங் குருகாமான்மியம். இவை மூன்றுபாகமும் பலவடி

யான்வரு மொருசெய்யுளின்கண்ணே பலவடிதோறும் விரவியும் பெதித்தும் வருவனவு முள. அவையும் மேற்காட்டுதும். (ரு)

80. இன்பந்தெளிவுசெறிவுசமனின்னிசையே
நன்சொலுதாரநயின்றவலி—மன்காந்தந்
தையலுய்த்தலில்பொருண்மைசாற்றுஞ்சமாதியுட
னையிரண்டும்வைதருப்பமாம்.

(எ·ன்) எடுத்தமுறையானே வைதருப்பத்திற் கெய்துவனவாங் குணவலங்காரங்கட்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்—ற்று.

(இ·ள்) இன்பமுந் தெளிவுஞ் செறிவுஞ் சமனிலையு மின்னிசையு முதாரமும் வலியுங் காந்தமு முய்த்தலில்பொருண்மையுஞ் சமாதி யென்பதோடும் பத்தும் வைதருப்ப குணவலங்காரமாமென்றவாறு. (கசு)

81. ஏனைக்கவுடமிவையீரைந்தொடுங்கூடா
மானைப்பழித்தபதர்விழியாய்—ஞானயந்தி
கெண்ணியபாஞ்சாலமிவைகட்கிடைப்பட்டு
நண்ணியதோர்சால்புடைத்தாநன்கு.

(எ·ண்) ஒழிந்தனவாங் கௌட பாஞ்சாலங்களும் அக்குணவலங்கார மேற்குங் கூறுபாடுணர்—ற்று.

(இ·ள்) ஒழிந்த கௌடமு மிங்ஙன மெண்ணப்பட்ட பத்தினோடுங்கூடாது நடக்கு மிலக்கணத்தவா மென்றவாறு. பத்தினோடுங் கூடாதெனவே யும்மை யெச்சமாதலாற் சிலவற்றோடுங் கூடியும் வரு மென்பதாம். பாஞ்சாலமு மப்பத்தினோடும் வைதருப்ப கௌடங்களோடுங் கூடா திடைப்பட்டுநடத்தலைப்பொருந்து மொழுக்கத்தினை யுடைத்தென்றவாறு. இவைகட்கும் என்னும் உம்மை யிறந்தது தழீஇய எச்சவும்மையாம். (கஎ)

82. சொல்லாற்பொருளாற்சுவையுறலின்பந்தெளிவு
மொல்காய்பொருள்புலப்பாடொண்செறிவு—நல்லா
யெழுத்தோரினஞ்செறிதலெல்லாவெழுத்தும்
வழுத்தீர்ந்தறல்சமனுமாம். (கஅ)

83. இன்னிசைய தின்னிசையாமேய்ந்தவு தாரக்குறிக்கொள்
சொன்னடையால்வேறுபொருடோன்றலா—நன்னுதாஅல்
வாய்ந்ததொகைமிக்குவருதல்வலிகாந்த
மாய்க்தெரன்றனையுயர்த்தலாம். (௧௧)

81. செய்யுட்பொருளைத்தெளியவிரித்தற்குரிச்சொல்
லெய்து நடைத்துய்ந்தவில்பொருண்மை—தையலா
யோங்குஞ்சமா தியுவமேயத்தின்வினையை
யாங்குவமைக்கேற்றுவதொன்றும்.

(இவைமூன்றுசூத்திரமு முடனெழுதப்பட்டன.)

(எ-ன்) இவை யின்பமுதற் சமாதியீறாய பத்து மாமாறுணர்-ற்று.

(இ-ள்) சொல்லினாலும் பொருளினாலு மினிமையுறவருதல் இன்பமாம். தெளிவென்பது கவியாற் கருதப்படும்பொருள் கேட்போர்க்குக் குறிப்புமொழியின்றி வெளிப்படைமொழியாகத் தோன்றுவதாம். ஒள்ளியசேறிவும், மூவினமாகிய எழுத்து ளோரின மிருந்து செறியப் பாடுவதாம். ஒள்ளியசெறிவென்றதனால் எழுத்தானாய சொல்லானுய பொருளுஞ் செறிதலுங் கொள்க. சமனிலை மூவினமும் விரவப் பாடுவதாம். இரட்டை துணிவு. இன்னிசையும் அவ்வவ செய்யுட்கேற்ற சொன்னடையாற் பாடுவதாம். உதாரமும் செய்யுட் சொன்னடையால்வரும் பொருளன்றி யதன் குறிப்பினால் வேறுபொருடோன்றுவதாம். வலியும் தொகைநிலைச்சொன் மிக்குவருவதாம், காந்தமும் ஒன்றனை யுயர்த்திப்புகழுங்கா லுலகநடையிறவாமை யாராய்ந்துயர்த்துவதாம். உய்த்தலில்பொருண்மை கவி தன்னாற் கருதிய செய்யுட்பொருளை விளங்க விரித்துக் கூறுவதற்குப் பிறிது மொழி பெய்துகட்டா ததற்குரியசொற்கள் செய்யுளகத்துளவாம்படி பாடுவதாம். சமாதியும் உவமேயத்தின்வினையை யுவமைக்கேற்றுவதோரிலக்கணத்ததா மென்றவாறு. இதனைச் சாற்றுஞ் சமாதியென்றதனாற் குணவலங்காரங்கள் பத்தினுள்ளு மிதுவே சிறந்த குணவலங்கார மென்பதூஉ மிஃது மூன்றுநெறியார்க்கு மொக்குமென்பதூஉ மாயிற்று,

இவற்றிற்கெல்லாம் எண்ணும்மை யிடையிட்டுவந்தன. ஆம் என்ப தனைச் சூத்திரந்தோறு மிறுதிவிளக்காகக் கூட்டுக. நல்லாய், நன் னுதாஅல், தையலாய் என்பன மகடூஉமுன்னிலை. தையலென்பது அண்மைவிளி.

அவற்றுள், சொல்லின்பமாவது அடை சினை முதலென முறை மூன்று மயங்காமை வரும் வண்ணச்சினைச்சொற்களும் முதலொடு குண மிரண்டடுக்கிவரும் அடைசொற்களுஞ் சினையொடு குணமிரண்டடுக்கி வரும் அடைசொற்களும் வழக்கிடமுஞ் செய்யுளிடமுமாக விரண்டிறந் தனவா யடைபல வேண்டினவழியேயுணர்ந்தசொற்களுடன், வழிமோனை முதலியன வரத்தொடுப்பனவாம். அவற்றாற் கேட்டோர் பெறு மின்பம் சொல்லின்பம். பொருளாவன:—அறம் பொருள் இன்பம் வீடென்பன. அப்பொருளால்வரு மின்பமாவது மலரின் மதுக்காரணமாக மதுகரங் கட்கு வரு மின்பம்போலக் கவிப்பொரு ளுட்கொண்டோர்க்குவரு மின்ப மாம். எனவே யவ்விரண்டினுள், பொருளணியுள்ளு முக்கியமான பொரு ளணி யுடைத்தாய்ப் பாடுவதே பொருளின்பமாம். இனிச் செய்யுள் வருமாறு:—

வெண்டிரைப்புனலறுவியலயல்வயல்விரி
வண்டியிர்பாசடைக்குவளைமென்பனிமலா
புறக்கொடைமதிதரப்பொதியவிழ்ந்ததுபோய்ச்
சிறக்கணித்தனவாஞ்சேயிதழ்க்குமுத
முட்டாட்டாமரைமுறுக்குடைநாண்மலர்க்
கட்காமருகடைவாய்வழிந்திழிதா
மெய்தருகயவாய்மேதிகன்றுள்ளுபு
பணைமுலைசுரந்துபனித்தபாற்றடினி
நெடுவெண்டிங்கணிறைமறுத்துடைத்தொளிர்
செந்தளிர்ப்பூஞ்சுனைத்தேமாத்துகுகனி
மூடப்பரியமைப்பலாமுட்புறக்குடக்கனி
புறக்காழ்மாகதப்பூகமிடற்றி
னிறக்காழ்திரண்டுநீண்டுதிர்பழுக்காய்
நெட்டிலையாம்பையினீடுபொற்கூன்கனி
புதையிருடுரீஇக்கதிர்பொழிரவமணிக்குலை
கழித்தெடுத்திரைத்தவாய்த்தூமலர்பலவொடு

பாற்கடல்பொன்னியுட்படிதிருவுருவங்
காண்பதின்முன்னியகாட்சியொன்றெனலாய்த்
துறைதொறுந்துறைதொறுந்துமுனியின்வலோக்குந்
திருவரங்கேசனைத்திருமறுமார்பனை
மனத்துறநினைந்தும்வாழ்த்தியும்வணங்குந
ரெக்குலத்தவரேயாயினு
மக்குணத்தவர்க்கடியேனடியேனே. (77)

இங்கேரிசையாசிரியப்பாவினுள் நால்வகை யடைசொற்களும் வந்தவாறு சொல்லின்பத்தோடும் பொருளின்பமும் வந்தமையா லிது சொற்பொருளின்பம். இதனு ளீரடை முதலோடுஞ் சினையொடும் புணர்ந்தன வைதருப்பம். இரண்டிறந்த மூவடை புணர்ந்தன பாஞ்சாலம். இரண்டு மூன்று மிறந்த பலவடை புணர்ந்தன கௌடச்சொல்லின்பம். ஆதலாற் சொல்லின்ப மூன்றுபாகமும் அவற்றோடு மூன்றுநெறியார்க்கும் ஒரு தன்மைத்தாம் பொருளின்பமும் பல வடியான்வந்த ஒரு செய்யுளகத்துக் காட்டியவாறு கண்டுகொள்க. இதனுட் பொருளணிபாவது தற்குறிப்பேற்றவுவமை. திணை – பாடாண். துறை – நாடுவாழ்த்து.

பொன்னசலந்திரண்டிரண்டாம்பொருவமர்தோட்கமலக்கட்
பொலிந்துநின்று
ரன்னவயற்குருகூரரணிவரைவாழ்மதர்நெடுங்க
ணாணியிழாய்கேண்
மின்னிடையார்புறந்தருநாண்மிகுகாமக்கடலாழ்ந்த
மிக்கோர்தங்கண்
மன்னுயிரைத்தரும்புணைதான்மலிதிரைநீர்க்கடலிடத்தார்
மடலென்பாரே. (78)

இது வைதருப்பச்சொல்லின்பம். பகுதி–மடல். துறை–உலகின் மேல்வைத்துரைத்தல் இவ்வாறு பொழிப்புமோனையாய்வருத லின்று தெனவேண்டுவர் கௌடர்.

குயிலாருங்குளிர்பொழிற்றென்குருகேசன்குழகனுயர்
குன்றிற்குன்றுக்

கயிலாயன்களத்தணிந்தகடுவிடமுங்காத்துழையுங்
கரந்தகண்ணும்
மயிலாலுமமழைதவழ்நும்மணிவரைக்கெம்மணிவரைநின்
மணிப்பூண்மன்னும்
பயிலாரப்பணைமுலைக்கோர்பணைமுலையெப்படியெனுமப்
படியாம்பண்பே. (79)

இது கௌடச்சொல்லின்பம். பகுதி – வண்புறை. துறை–இட மணித்துக்கூறி வற்புறுத்தல்.

கடுவேகயலெனக்காந்தடுங்கண்ணிணை
காமனுங்காமுறுங்காட்சியகாண்முகங்
கிள்ளையின்கிளையுங்கிளைத்தகைக்கிளையுடைக்
கீரமுங்கீர்த்திக்கீரமுங்கிரே
குவடுடைக்குளிர்பொற்குன்றேகுவிமுலை
கூர்புதற்கூன்சிலைகூற்றுயிர்கூட்டுணுங்
கெடலருங்கெழுதகைகெழுமுபுகெழீஇய
கேகயங்கேளொடுங்கேடுறுங்கேழியல்
கைபுனைகைக்கிசைகைக்கிணைகைத்துணை
கொண்டலுட்கொண்டன்னகொண்டையுங்கொடியிடை
கோடாக்கோவலர்கோற்றொடிகோமான்
கௌரவகௌசிகன்கௌசிகங்கௌத்துவ
மணியெனக்கொண்டுமனவீடளித்தோன்
கண்ணன்குறுங்குடிக்கனவரை
மண்ணகத்துறையுளாய்வளர்நிலமகட்கே. (80)

இது ககர வருக்க முற்றுமோனை. இதுவுங் கௌடச்சொல்லின்பம். பகுதி – பாங்கற்கூட்டம். துறை – இயல்பிடங் கூறல்

கயலெனவேமதர்த்தமர்த்தகருநெடுங்கண்ணிவடனக்கிக்
கன்னிமன்றோ
வயலெனவேயமர்துணையன்றளவளாயமர்துணையென்
றறிந்ததன்பான்

மயலறவேயியற்றமிழ்செய்மகிழ்மாறன் றுடரியின்கண்
மணந்தகாதல்
புயலெனவேபுரைநறுமென்புரிகுழற்குப்புகல்வனினிப்
புகலுமாறே. (81

இது பாஞ்சாலச்சொல்லின்பம். பகுதி-மதியுடன்படுதல். துறை குறையுறத்துணிதல். "குயிலாரு" மென்பதனையும் பாஞ்சாலச்சொல் லின்பமெனினு மாம்.

வண்ணமுலைப்பொற்றாமரைமுகுளம்வீறழிந்து
கண்ணெகிழாவண்ணங்கருதியோ—தண்மதியை
மால்வைத்தமாநிதிவண்கோளூரில்வாணுதாஅன்
மேல்வைத்தான்மேனாள்விதி. (82)

இது பொருளின்பம். இதனுண் முலையாகிய பொற்றாமரைமுகை யவிழாதிருப்ப வதன்மேலாகப் பிரமன் மேனாண் முகமென்று பெயரை யுடைய மதியைவைத்தா னென்னும் பொருளின்பம் வந்தவாறு காண்க. பகுதி - இடந்தலை. துறை - மருங்கணைதல்.

மேலைமலைக்கதிர்மறையக்குவிமரையுட்டேனசையான்மீளாவைகிச்
சோலையில்வண்டினந்திறப்பவயற்கழுநீரிடந்தோய்ந்தசுரும்புமாதோ
மாலையிற்றன்மனைபுகுதுமணமகனைவிறலியொடுமதங்கன்பாடிக்
காலையினிற்றுயிலெழுப்பக்கடைதிறந்துபரத்தையிற்போகியகாட்சித்தே. (83)

இதுவுமது. துறை - நாடுவாழ்த்து.

திரகாயத்திரிகருணைக்கிலக்காகுமுணர்வுடையோர்சித்திகாட்டப்
பரகாயத்திடைபுகுந்துமறித்தொருகாயம்புகுமப்பான்மையேய்ப்ப
வுரகாயத்துரிவையுரீஇயொருபாந்தளொருபாந்தளுரிபுக்கூர்ந்து
வரகாயத்தகடுரிஞ்சும்பஃறலைபமலைமுழைபோய்வைகுமன்றே. (84)

இதுவுமது. மலைவருணனை. இவையிரண்டுங் குருகாமான்மியம்.
இன்பம் முற்றும்.

ஏவொன்றுடக்கியிருபதுகைக்கார்வயிரத்
தூவொன்றுடலந்துளைபடுத்த—காவொன்
றாங்கத்தானல்லாதனைத்துயிருங்காத்தற்
கிரங்கத்தானல்லாரெவர். (85)

இது வைதருப்பத்தெளிவு. இதற்குச் சொல்லின்முடிவாற் பொரு டோன்றும். துறை - கடவுள்வாழ்த்து.

தேனேழுளைமதியஞ்செந்தழல்பாரிப்பவிருந்
தேனேயயலார்சிரிப்பவே—தேனே
யிறைவருளத்தாமரையோவெய்தார்வேளெய்து
குறைவருளத்தாமரையோகூறு. (86)

இது சொல்லாற் கவியருமையும் நோக்குடைப்பொருள்கோளுந் தோன்றத் தொடுத்தமையாற் கௌடத்தெளிவு.

(இ-ள்) தேன்போலும் இனிய மொழியையுடையாய்! இளம்பிறை யானது தழலைவிரிப்பவும் அயலார்சிரிப்பவும் இத்துணைப்போதும் உயி ரைத் தாங்கியிருந்தேனே! இங்ஙனமிருந்த வெனது துன்பமிகுதியும் நாண்டுறந்ததுங் கண்டு தேனையொழுக்காநின்ற வருளத்தாமத்தை யுடையோர் அந்தோ மேவுகிலர்; இனிக் காமனெய்து குறைந்துபோவன குளத்தின்கட் டாமரையொன்றேயோ, ஓடையிற் காவியும் ஆவிவு மல்ல வோ கூறுவாயாக; என்றவாறு.

ஏகார நான்கினுண் முன்னது விளி. இரண்டாவ திரக்கத்தின்கட் குறிப்பு. பின்னைய விரண்டு மீற்றசை. தாமரையோவென்னு மோகாரம் ஒழியிசை. திணை - பெண்பாற்கூற்றுப்பெருந்திணை. துறை - துன்பு மிகுதி தோழிக்குரைத்தல்.

உள்ளத்துணர்வெனுங்கண்ணுட்கொண்டுகாண்பதற்கும்
கள்ளக்கருங்கண்களுழ்வனகண்—டெள்ளிப்
பிரியாரையுந்திருமால்போர்களரார்தூற்றத்
தரியாதென்னுள்ளந்தளர்ந்து. (87)

(இ-ள்) எனதகத்தே யறிவென்னுங் கண்ணானது நங்காதலருட னென்னையு மூட்டொண்டு காணுகிற்பதற்குப் புறத்தே தாமுங்காணுத

விருப்பத்தா லென்னை வஞ்சித்த கள்ளத்தையுடைய விக்கண்களழுவ தனைக்கண்டு எம்மையிகழ்ந்து பிரியாதவரையுந் திருமால் திருப்பேர் நகரின்கணுள்ளார் பிரிந்தாரென்று தூற்றுமதனைக்கேட்டுத் தளர்ந்தவென் னுள்ளம் ஒருவழிப்பட்டுநில்லாதென்றவாறு.

இது பாஞ்சாலத்தெளிவு. என்னை ? வைதருப்பத்தெளிவுபோல் வெளிப்படையுமன்றிக் கௌடத்தெளிவுபோல நுண்ணிதாய்க் குறிப்பி னாற் கொள்வதுமன்றி யிடைப்பட்டநீர்மைத்தாய்வந்தமையா னெனக் கொள்க. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - தலைவி தலைவனை யியற்படமொழிதல். தெளிவுமுற்றும்.

வண்ணமைந்நிறவண்ணன் விண்ணினு
மண்ணினும் முறைவார்
கண்ணன்விண்ணகர்மஞ்ஞைவிம்மிய
கண்ணகன்வரையோ
ரண்ணலிம்மலர்கொண்மினென்னவு
மன்னையங்ஙனம்பா
னெண்ணவொண்ணுதன்முன்னின்முன்னருள்
கென்னமுன்னினளே. (88)

என்பது, அன்னாய்! அழகிய மேகம்போன்ற திருமேனியையுடையான், சுவர்க்கத்தினும் பூமியினு முறைவார் கண்ணினுள்ளான் அவனது திரு விண்ணகரத்து மயில்கள் அகவும் இடமகன்ற மலைப்பக்கத் தொரு பெரியோன் யாங்கள் விளையாடும் வண்டன்மாளிகை முன்றிற் கண் வந்து நமது வண்டலம்பாவைக்கணிய விம்மாலையை வாங்கிக்கொண்மி னென்று கூற, அங்ஙனம் வந்து கூறியதற்குச் செய்யவேண்டுவதென் னென்றியா னெண்ணுநிற்ப, நம தொளிபொருந்தின நுதலினை யுடையாள் முன்னாள் அதனை யருள்கென வவன்முன்னேசென்று அதனை வாங்கினள் ; இஃது தியானநிர்தபடி யென்றவாறு.

முன்னில்-இன்முன் ; அஃது முன்றிலென இலக்கணப்போலி யாயும் வரும். முன்னிலெனவே வண்டன்மாளிகையும் வண்டலம் பாவையுங் கூட்டியுரைக்கப்பட்டன. இது வைதருப்பச்செறிவு. என்னை? மெல்லினமாகியவெழுத்துச்செறிய மெல்லினவண்ணமுற் றவ்வெழுத்தா னாய சொற்கள் செறியச் செறித்தமையி னெனக்கொள்க. பகுதி

உடன்போக்கு. துறை—பூத்தருபுணர்ச்சிக் கறத்தொடுநிற்றல். இவ்வாறு மெல்லிணவண்ணத்தால் மெல்லெழுத்துச் செறிந்துவருதல் விரும்பாது வல்லிணவண்ணத்தால் வல்லெழுத்துச்செறிந்தசொல்லோடும் வற்கெனத் தொடுப்பதே வேண்டுவர் கௌடர்.

புட்குழியுத்தமர்புட்கொடியத்தர்பொருப்பின்மடக்குயிலே
கட்டழல்கக்குகுழிச்சிறுகட்கரடத்ரிகடந்தொருமா
விட்புலமுற்றவிருப்பமிகுத்ததொர்வெற்றியனைக்குறுகா
வுட்குறவெற்றினனற்றதுதிக்கையொடுற்றமருப்பிணையே. (89)

என்பது, புட்குழியென்னுந்திருப்பதியின்கண் ணுத்தமர், கருடக்கொடியுயர்த்த சுவாமியார் பொருப்பிடத்து மடப்பத்தையுடைய குயிலே! மிக்க அழலைக்கக்குங் குழிந்த சிறுகண்களையு முள்ளத்தறுகண்மையையுங் கவுளின்கண் மதத்தினையு முடையதோர் யானை, விண்ணோரை வரும் விருப்பத்தை மிகுப்பதோர் வெற்றியையுடையானொருவனைப் பாயும்படிக்குக் குறுகினகாலத் ததனுள்ளமுட்க வவனதனை வாளாலெறிதலு மதன் றுதிக்கையுந் துதிக்கைபற்றிய விருகோடு முடனே யற்றவென்றவாறு.

இங்ஙனம் வல்லிசைவண்ணத்தால் வந்தவாறு கண்டுகொள்க. அஃதேலிதன் முதனூல்செய்த தெண்டியாசிரியர் "செறிவெனப்படுவது நெகிழிசையின்மை" யென வைதருப்பச் செறிவிற்குக்கூறியதனை விரும்பாது ஒருதிறத்தெழுத்தானே நெகிழத்தொடுப்பதே கௌடச்செறிவெனவேண்டிய திறனுடையாருட்கொண்டு மிங்ஙனம் வற்கெனத் தொடுத்தன் முதனூலோடும் வழிநூன் மாறுகொளக்கூறலென்னுங் குற்றமாமாலோவெனின், நன்றுசொன்னாய்! அவர்தாமே "விரவத் தொடுப்பது சமனிலையாகும்" என்பதற்குச் "சோகமெவன்கொலிதழி பொன்றாக்கின" என்பதனுள் மூவினமும் விரவத்தொடுத்ததனை வைதருப்பச்சமநிலையெனவும், விரவுதலுள்ளும் வல்லெழுத்துச்செறிய 'இடர்த்திறத்தைத்துறபொற்றொடிநீயிடித்துத்தடித்துச், சுடர்க்கொடித்திக்கனைத்துந்தடுமாறத்துளிக்குமைக்கார்' என வற்கெனத் தொடுப்பதே கௌடச்சமநிலையெனவும் காட்டினமையானும் இவ்வண்ணங் கூறுக்கால வைதருப்பச் செறிவிற்கும் வைதருப்பச் சமநிலைக்கும் வேற்றுமையின்மையானு மிச்செறிவிற்கு மோனையே நோக்கமென்பதனு

னும் பாஞ்சாலத்தோடும் பாகமூன்றெனக்கோடலானும் வைதரு
முதலிய மூன்றற்கு மூன்றுவண்ணமுஞ் சித்திரகவியிற் சாரா
செறித்தார்; அன்றியும், பாயிரத்துள்ளும் இரண்டிடத்தாற் செய்
என்பதனு லுலகவழக்கினும் அருமையோடும் வற்கெனத் தொடு
லைக் கௌடகவியென்ப துட்கொண்டமையானுந் தன்கோட்கூறலென்
முத்தியானும் இவர்க் கெழுத்துச் செறிவு மோசையு மவ்வவபாகத்
படியே செறித்த னொக்கமாதலானும் இவ்வண்ணங்கூறுதன் மாறுகொ
கூறலென்னுங் குற்றமாகாதென்றுணர்க.

முல்லைமுகைவெல்லுநகைநொய்யநடையைபவிடை
மொய்யளகவவ்விவிழியா
யொல்லைநடையுள்ளதினிவெள்ளிடையதில்லையென
வுள்ளபொழில்செய்யினயல்சூழ்
மல்லைநகரெல்லையிவணல்லிமலர்வல்லிபுணர்
வள்ளனுறையெல்லையவணே
தொல்லைமறையுள்ளபடிதெள்ளியுணரையநுறை
துய்யபதிசொல்லினுவணே. (

என்பது, முல்லையரும்பைவெல்லும் நகையையும் மெல்லிய நடையை
உளதிலதென் றையமுறு மிடையையும் நெருங்கினகுழலையுமுை
மான்போனோக்கத்தாய்! உனக்கினி யொருகணப்பொழுதே நடை
தஃதியாதென்னில் இவண் வெளியென்பது சிறிதுமில்லையெனவுண்ட
சோலைகள் செய்யினது பக்கமெல்லாஞ் சூழப்பட்ட திருக்கடன்ம
யாம். அவண் தாமரையாளைத்தழுவும் திருமாலாகியவள்ளனுறை தா
உவண் கூறுகிற பழைய மறையின்கணுள்ள துட்பமெல்லா ம
சொன்னபடியே தெள்ளிதாயுணரு மறையோருறையும்பதி யாக
னென்றவாறு.

இது பாஞ்சாலச்செறிவு. என்னை? இடையினமாகிய வெழு
மிகவுஞ்செறிய வியைபுவண்ணமுமுற் றவ்வெழுத்தானுயசொற் செ
வந்தமையானெனக்கொள்க. இங்ஙன மூன்று வண்ணமுமுற வாங்
கவ்வினமிகப்பாடுவதன்றி வேற்றினஞ் சிறிதும் விரவாது தொடுப்
மூவினப்பாட்டானும் விரவாதுபாடுஞ் சித்திரகவியிற் சாருமாத

பிறவினமுஞ் சிறிது விரவுவதே முறையென்றுணர்க. இவற்றுள் முன்னையது பகுதி - நடுங்கநாடல்; துறையுமது. இது பகுதி - உடன்போக்கு. துறை-பதிபரிசுரைத்தல். இவைமூன்றும் எழுத்துச்செறிவு.

மறைமுரசந்தாமமகிழ்வழுதிநாடர்
துறைபொருநைவெற்பூர் துடரி—யுறைகுருகை
யஞ்சம்பராங்குசம்வெள்ளானைகொடியாணைமா
பஞ்சகலியாணன்பரி. (91)

என்பது, வழுதிவளநாடர் துறை - பொருநை; வெற்பும் ஊரும்—துடரியும் உறையுளாங் குருகாபுரியும்; பரி - பஞ்சகலியாணன்; மா - வெள்ளானை; ஆணை - சீபராங்குசம்; கொடி - அன்னம்; தாமம் - மகிழ்; முரசு வேதம் என்றவாறு.

இதனுள் வழுதிவளநாடர் என்பது மத்திமதீபம். அதுவே நாடர் திருநாமமுமாம். வெற்பூர் - நிரனிறை. பரி மா ஆணை கொடி விதலையாப்பும், தாமம் மகிழ், முரசு மறை என மொழிமாற்றுமாகத் தசாங்கமென்னுஞ் சின்னங்களாகிய பல்பொருட் செறிவோடும் பல பொருள்கோளுஞ் செறிதலானிது பொருட்செறிவு. துறை - தசாங்கவாழ்த்து.

மழுந்தாங்கித்தெவ்வடுவைந்நுதிதாங்கியிருட்பிழம்புமடியச்செந்தீ
நிறந்தாங்கியிடங்கரின்வெண்ணிணந்தாங்கியனைத்துலகுநியதிகாக்குந்
திறந்தாங்கியொளிர்திகிரிப்படைதாங்கித்திருவடிபொற்சென்னிதாங்கி
யறந்தாங்கிவளம்புகழ்வாரறந்தாங்கியவரொனுமிவ்வங்கண்ஞாலம். (92)

தழற்பாணிகறைகெழுவச்சிரபாணிமிளிர்படிகத்தாமம்வேய்ந்த
நிழற்பாணிவிழைந்தகமண்டலபாணிமுதலெவர்க்குநிபனேயாய்வேய்ங்
குழற்பாணிகொடுதொறுவின்குழுவழைத்தமழைமுகில்பார்குளிர்ப்பானின்ற
கழற்பாணிதனைப்புகழ்சக்கரபாணியனைத்துயிர்க்குங்களைகணுவான். (93)

இவையிரண்டும் ஒருவகைச் சொற்செறிவு. இங்ஙனம் வந்த சொற்செறிவும் பொருட்செறிவும் மூன்றுநெறியார்க்கு மொக்கும். துறை செந்துறைப்பாடாண் பாட்டு. செறிவு முற்றும்.

விழியுங்களபமுலையும்புன்மூரலும்வேயுமுந்திச்
சுழியும்முரோமவொழுங்குங்கண்டேம்வண்டுசூழ்ந்துசெந்தேன்
வழியுந்திருமகிழ்மாலைப்பிரான்வெற்பில்வல்லிசெவ்வாய்
மொழியுந்துணைநெஞ்சமேசெவிக்கேயென்றுமூழ்குவதே. (94)

இது வைதருப்பச்சமனிலை. துறை - கிளவிவேட்டல்.

பனிப்பிறைப்பற்றுளைக்கட்செவித்துத்திப்பணுடைவிமேற்
குனித்தபொற்சிற்றடிச்சித்திரக்காரருகேசன்வெற்பிற்
றனித்தழற்கட்களிற்றைக்கொடுஞ்சீயந்துரந்திருள்வாய்த்
தனித்துறற்குய்த்துணர்த்துங்கதிர்வேலவன்றாழ்குழலே. (95)

இது கௌடச்சமனிலை. சூத்திரத்துள் நிலையென்பது செய்யுள் விகாரத்தாற் றொக்கதனை விரித்துரைக்க. தனித்துறற்கு - கங்குலின் கட் டனித்துக் குறிவழிவருதற்கு. உய்த்துணர்த்தும்—என்னுள்ளங் கொள்ளச் செலச்சொல்லி யுணர்த்தாநிற்கும். கதிர்வேலவன் - ஒளியை யுடைய வேலவன். தாழ்குழலே - தாழ்ந்தகுழலினையுடையாய். யான் இதற்குச் செய்யவேண்டுவ தென்னென்றவாறு. பணுடைவி - ஆகுபெயர். பகுதி - இரவிற்குறி. துறை - இரவுவரவுணர்த்தல்.

இடிக்குங்கடகளிற்றான்சடகோபனியலிசையாய்
வடிக்குந்தமிழ்மறைபாடியமாறன்மணிவரைமே
னடிக்குங்களிமயிலேவருந்தேனுமர்கல்வரைப்பூங்
கொடிக்குங்கொழுகொம்பராமெமர்மாடக்கொடிக்கழையே. (96)

இது பாஞ்சாலச் சமனிலை. பகுதி - இயற்கை. துறை - இடணித்தக்கூறி வற்புறுத்தல். இவற்றுள் மூவினமும் விரவிவந்தவாறு காண்க. மூன்றனுண் முதற்பாட்டும் மூன்றும் பாட்டும் கிளவிமணி மாலை. சமனிலை முற்றும்.

எழுகாதலின்றவிருகாவியுணி
ரொழுகாமதியாலுலைவாய்—மெழுகா
யுருகாதணையாருயிர்காவலர்பே
ரருளாளருமாமவர். (97)

இதனுள், இருகாவியுணீர் - இரண்டுகண்ணுணீர். ஒழுகா என்றது ஒழுகவென்பத னெதிர்மறை. உருகாதணையாரென்பது வினையெதிர் மறுத்தவினையெச்சம், அணையாரென்னும் வினைகொண்டது. பேரரு ளாளருமாமென்னு மும்மையால் உயிர்காவலருமாம் என்னு மும்மை விரிக்க. உயிர்காவலருமாய்ப் பேரருளாளருமாக, உருகு மென் காதல் கண்டு முருகிஅணைகின்றில ராதலா லிஃ தென்வினையன்றோ வென்றவாறு.

திணை-பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை—நிலவுகண்டழுங்கல். இது தூங்கிசைச்செப்பலோசைத்தாய்வந்தமைபால் வைதருப்ப வின்னிசை. என்னை? "இயற்சீர்வெண்டளையான்வரூஉம்பாப்பைத், தூங்கிசைச்செப்பலென்மனார்புலவர்." என்றதனு லறிக. இவ்வாறு விரும்பா தெந்திசைச்செப்பலோசைத்தாய்த்தொடுப்பதே வேண்டுவர் கௌடர்.

குஞ்சரமாமெய்தது வன்கோதண்டங்கூடாமல்
வெஞ்சரம்பாய்வித்தனரால்வேட்டைதான்—வஞ்சகமே
யாங்கடவார்பூம்புனமீங்காரிவரென்றேயறியேம்
வேங்கடவாணன்சிலம்பின்மேல். (98)

என்பது, வேங்கடவாணன்வரையிடத் திவ ரெய்ததுங் குஞ்சரமாம்; வில்லுமின்றியே தழையே வில்லாக வெம்மையைச்செய்யும்வாளியைப் பாய்வித்தனராகையா லிவர் வேட்டைமேலிட்டுவந்ததுதான் வஞ்சமே யாம்; அதுவுமன்றி, நமது பொலிவையுடைய புனத்தைவிட்டுநீங்கு கின்றிலரால், இவர் யாதொன்றும் வந்தகாரணம் யாதென்றுந் தெளிகில மென்றவாறு.

பகுதி - இருவருமுளவழி யவன்வரவுணர்தல். துறை - ஐயுறுதல். இஃ தேந்திசைச்செப்பலோசைத்தாய்வந்தமையாற் கௌடவின்னிசை. என்னை? "வெண்சீர்வெண்டளையான்வரூஉம்பாப்பை, யேந்திசைச்செப்ப லென்மனார்புலவர்" என்பதனாலறிக.

மானையானீத்தமணியாழிகைக்கொடுத்துச்
சானகிதன்னுவிதளிர்ப்பித்தான்—மீள

நெளிதாங்கவேலைநெறிகடந்துதேவர்
களிபுரந்தசேயெமது கண். (99

என்பது, பெருமையுடைய பரமனாகிய இரகுநாதன் கொடுத்த மாணிக்கத் திருவாழியைக் கொடுத்துச் சனகராசன்புதல்வி திவ்வியான்மாவைத் தழைப்பித்தான்; அவன் யாரெனின், மீன்களையுடைத்தாய் நெளிக்கட் பட்ட திரையையுடைய சமுத்திரத்தி னெல்லையைக்கடந்து தேவர்க் கெல்லாங் களிப்பைக்கொடுத்த அஞ்சனைபெற்ற புதல்வன், எனக்கென் னுறுப்பிற்சிறந்த கண் ணென்றவாறு.

இஃது தொழுகிசைச்செப்பலோசைத்தாயே வந்தமையாற் பாஞ்சால வின்னிசை. என்னை? "வெண்சீரொன்றலுமியற்சீர்விகற்பமு, மொன் றியயாப்பபெயொழுகிசைச்செப்பல்" என்பதனா லறிக. இம்மூன்று விகற்பமு மூன்று நெறியார்க்கு மொக்கு மென்பாரு முளர். திணை-பொது வியல். துறை - தூதுவென்றி.

காட்டங்களிபற்றநாவுநசைபற்ற
வேட்டிற்பலர்கையிணைபற்றத்—தோட்டிலஞ்சிக்
கன்புற்றமுத்தர்பெருமானடிபாவி
யின்புற்றவர்க்கடிமையாம். (100)

இவ்வாறு வரும் பொய்ந்நிலப்பட்ட வின்னவிசை மூன்றுநெறியாரும் வேண்டாரெனக்கொள்க. தெண்டியாசிரியர் ஒழுகிசையென்பது மிது. திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப்பரவல். இன்னிசை முற்றும்.

மண்ணோர்தொழுஞ்சேறைமாயோன்மணிமார்பிற்
பெண்ணோர்மனுகுலமாம்பெற்றியாய்—விண்ணோர்
மருந்துதலைப்பெய்திருப்பமம்மர்கூர்நஞ்ச
மருந்துதலைச்செய்பவரிங்கார். (101)

என்பது, உலகின்கண்ணுள்ளாார்வணங்குஞ் திருச்சேறையின்கண் மாதவன் றிருமார்பிலிருக்குந் திருமகள் மனுகுலத்துட் டோன்றிய தொன்று மியல்பினையுடையாய்! விண்ணிற் றேவர்பானமாகிய அமிர்த முனது தம்மிடத்தே தமதாகவிருப்பு அதனையு மருந்தி மருந்து

பிறிதில்லாப் பெரும்பிணியைத்தரும் நஞ்சையு முண்டுநிற்பவ ரிவ் வுலகின்கண் யாவர்தா மென்றவாறு.

பகுதி - பாத்தையிற்பிரிவு. துறை - நினைவறிகண்புதை. இது வைதருப்பவுதாரம். என்னை? தம்மிடத்திலே பெறுதற்கரிய அமிர்த மெளிதாயெய்தியிருப்ப வதனை யுண்டுநின்றவர் அயலேயிருக்கு நஞ் சினையுஞ் சென்றுண்ண விரும்புவா ருலகின்கணில்லையால், அதுபோல நின்னிடத் துவட்டா வின்பந்துய்க்கின்ற யான் பிறரிடத் துவர்ப் புடைத்தா மின்பந் துய்யேனென்பது குறிப்பினாற் கொள்ளக்கிடந்தமை யினானெனக் கொள்க.

நாதன்மகிழ்மாறனன்பனுவல்கற்றுணர்ந்து
போதந்தழைந்துபுனிதர்தாம் —வேதம்
விதித்தவொருமூன்றின்மெய்ம்மையுணர்வான்
மதித்தொருநூலோதார்மறித்து. (102)

இதுவும் வைதருப்ப வுதாரம். என்னை? மகிழ்மாறன் பனுவல் கற்றுணர்ந்தார் தத்துவங்கண்மூன்றி னுண்மையுணரவேண்டி மறித் தொருநூலோதாரெனவே யத்தத்துவங்கண்மூன்றினையு மது தானே மயக்கமறக் கூறுமென்பது குறிப்பினாற் கொள்ளக்கிடந்தமையானெனக் கொள்க. வேதம்விதித்தவொருமூன்றாவன:- சித் தசித் தீச்சுரம். மெய்ம்மை-உண்மை. உணர்வான்-உணரவேண்டி. மதித்து-உட்கொண்டு. மறித்து-மீண்டும். திணை-பாடாண். துறை-பனுவல்வாழ்த்து.

காழில்கனியுண்கடுவன்களங்கனியை
யூழிற்பருகியுருகுதிரு—மூழிக்
களத்தாதியைமதங்காரமக்குழவி
வளத்தாரிடர்தேடுவாய். (103)

என்பது, காலமங்கலம் பாடவந்த யாழ்ப்பாணனே! பாலில்லாதே முழுது மென்மையு மினிமையுமுடைய அரம்பைக்கனியை யச்சமின்றி யுண்டுநின்ற கடுவன் அகத்துமுழுதும் பாலாய்ச் சிறிது புற மென்மையு மற்பச் சுவையுமுடைய களங்கனியையு முறையேபோலப் பருகி யதன்சுவைக்கு முள்ளமுருகுந் திருமூழிக்களத்து முதல்வனைக்

காமமென்னுங் குழவிச்செல்வத்தையுடைய பாத்தையரிடத்தே தேடி காண்பாராக ; அஃதன்றி யெம்மிடத்துக்காண்ட லரிதென்றவாறு.

காழ் - கொட்டை. ஊழில் - ஊழ்வினையாலேயெனினுமாம். இ கௌடவுதாரம். என்னை? 'காழில் கனியுண் கடுவன் களங்கனிய யூழிற்பருகியு நகு திருமுழிக்கள்' மெனவே யக்கடுவன்போல, உத்த மாகிய விவளோடும் உள்ளும் புறம்பும் ஒருநீர்மைத்தா மென்ன யோடும் உவர்ப்பில்லாத பேரின்பத்தைத் துய்த்த தலைவன், இழிந் வியற்கையை யுடையாராய்ப் புறம்பு பொருணசைககாய்ச் சிறிதுநெகிழ் துண்ணெகிழ்ச்சியற்ற பாத்தையரிடததே யுவர்த்த சிற்றின்பத்தை துய்த் தவ்வின்ப மீட்டுந்துய்ப்பா னவர்சேரிவிட்டு நீங்காறுயினனெ வுள்ளுறையுவமங் குறிப்பிற் கொள்ளக்கிடந்தமையானும், காமக்குழ வளத்தாரிட மெனவே யிஃது எமது காதற்புதல்வன் என்னுஞ் செ வத்தையுடைய மனையென்பதூஉம், யாம் புதல்வற்பயந்த மூப்புடை மென்பதூஉம், இன்னும் அவ்விலேசானே யெம்மிடத் தவர்பெறுமின்ப எமக் கவர்கொளுத்தக்கொண் டியாங்கொடுக்கு மியற்கையின் ப யல்லாது பலரையுந்தோய்ந் தவரவர்கொளுத்தக்கொண்ட பல விக மாகிய செயற்கையின்ப மெம்மிடத்தில்லையே யென்னுங் கூற்று மா குறிப்புங் கூற்றுங் குறிப்பினாற் கொள்ளக் கிடந்தமையானே யிவ்வா வேண்டுவர் கௌடரெனக்கொள்க. பகுதி - இதுவுமது. துறை - பா ணொடு கூறல். கூற்று - தோழிகூற்று.

> நாம்பிரமமென்றேநவில்வாருமன்னுயிர்க
> டாம்பிரமத்தொன்றுமெனுஞ்சார்பாரு—மாம்பிரம
> நாரணனேவென்பாருநாவீறுடையபிரா
> னாரணப்பாக்கற்றுணராதார். (10

என்பது, பேரானந்தச் சிற்குணதிகச் சுடர்ச்சொரூப ரூபப் பரத்து மென்னும் பரமபதநாதன், அநிருத்தனுகி யுந்தியந்தாமரைப் பொரு டிற் பலகோடியண்டங்களைப் படைத்துப் பலகோடி யண்டந்தோறு பலகோடி பிரமாதிகளைப்படைத் தழிவிலதா யலகிறந்த வனுக்கடோறு திவ்வியாத்ம சொரூப வியத்தியுடன் சருவபூத பூரண காரணனுகி மீன தாரமுதலாய வவதாரங்களாலும் அம்சாவதாரங்களாலுங் காவல்பூண்

வாழ்நாளுட் டன்னால், லீலைக்காக அமைத்த வலையினைத்து மகிழ்வுந் தானழியா தேகோதகத்தின்மே லோராவிளந்தளிரு ளடங்கும் பச்சைக்குழவியாகியும் பல்லாயிரகோடி யண்டமாகியவற்றை யகத்திட்டு மறித்தும் புறத்திட்டுக் காவல்பூண்டு விளையாடு மகடிதகெடித சாமர்த்திய குணங்களு ளொருகுணமுமின்றி யிருவினைத் தளைப்பட்டு மல மூத்திராதிகளாலாய பாண்டத்தோடு பிறந்தும் பிறந்து முழலு முத்தியறியா மூடராகி நாம்பிரமமென்றே நாக்குத் தடுமாறாது நவிலு மொருசார்பாரும், கற்றறிநூல் பல கற்றனராகித் தத்துவமுணர்ந்தும் பற்றறச் சாலோகமுதலிய மூன்று மெய்ந்நி யிருவராயிருந் தீறில்பேரின்ப மொருவராமெனத் துய்க்குஞ் சுகாநந்தத்தைக் கெடுத்துக் கூடாததனைக் கூடுவதாக்கிச் சூனியப்படுத்தி மன்னுயிர் பிரமத்தோடு மொன்றுமென்று நாயனடிமைத்திறம் நழுவிய மூடரா மொருசார்பாரும், ஆதியு மந்தமு மருமறை யரியென வோதிய பொருளுரைக் குடையதை யறிந்தும் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகனென முத்திதருவதாம் பிரமம் ஸ்ரீமந் நாராயணனே யென்றையுறு முழுமூடரும் ஒருநான்மறைத்துணி வோதாதுணர்ந்த நாவீறுடையபிரான்கூறிய திருவாய்மொழியைக்கற்றுண்மைப்பொருளுணரா மூவகைமூட ரென்றவாறு.

ஆரணத்தின்வழிவந்தநூலாதலாற் றிருவாய்மொழிக் காரணப்பா வென்ப தாகுபெயர். அல்லதூஉந் தமிழ்வேதமென்றும் அதற்குப் பெயர். ஆரணப்பாக் கற்றுணராதா ரெனவே யதனைக் கற்றுணர்ந்தாரவைகூறுரென்னுங் கூற்று மெஞ்சிநிற்பதூஉங் காண்க. இங்ஙனங் கூறிய மூன்றும் வேதத்தின்வழிவந்த திருவாய்மொழியாகிய பனுவற்றுணிவன்றென்பதூஉம் அதனைக் குரவரா லுணர்ந்தோர்மதமும் அம்மூன்றினையுந் தள்ளின மதமே யென்னுமவையுங் குறிப்பெச்சம். இக்கூற்றுங் குறிப்பும் புலவருலறியலாம். இங்ஙனமாகிய சொன்னடை கொண்டு வேறுபொருடோன்றலா விதுவுங் கௌடவுதாரம். திணை — வாகை. துறை - சால்புமுல்லை.

சினமென்பதையறியாதவர்தினமும்புகழ்மாறன்
செஞ்சொற்றமிழ்மறைபாடியசெல்வன்குருகையுளார்
முனமன்பினதளவொன்றியமுறையான்மலரிணைமேன்
முடுகும்பரிசமொடிங்கிதமொழியென்பதுபெறவே